# ஸ்ரீ ராகவேந்திர குருஸார்வபௌமர்



ஆசிரியர் :

ராஜா ஸ்ரீ S. குருராஜாசார்யா

ஸ்ரீ பரிமள ப்ரகாசனம் - 98 ஸ்ரீ ஸமயமீந்த்ரமாலா - 74



# ஸ்ரீ ராகவேந்திர குருஸார்வபௌமர்


நூலாசிரியர் :

ஸ்ரீ ராகவேந்த்ர குருவம்சபூஷணம் - வித்யாதிராஜ,
ஸரஸ்வதீ கண்டாபரண, வேதாந்தாலங்கார,
வித்யாரத்னம், பண்டிதராஜ
ராஜா ஸ்ரீ S. குருராஜாசார்யா

தமிழாக்கம் :

ஸ்ரீ C.V. வெங்கட்ரமண ராவ்
(ராஷ்ட்ர பாஷா ப்ரவீண)
சென்னை - 87





வெளியிடுவோர் :

ஸ்ரீ பரிமள ஸம்சோதன மற்றும் ப்ரகாசன மந்திர
''பத்மநாபா'' நெ. 1074, 3வது B மெயின்,
கிரி நகர், இரண்டாவது ஃபேஸ்,
பெங்களூர் - 85.

1996] [விலை ரூ. 60/-

ஸ்ரீ குருராஜோ விஜயதே

## நினைவு நூல் வெளியீடு

ஜகத்குரு ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் நான்காவது நூற்றாண்டு, ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்த ஸ்ரீபாதங்களவர்களின் முதலாவது நூற்றாண்டு மற்றும் ஸ்ரீ பரிமள ஸம்சோதன ப்ரகாசன மந்திரத்தின் பொன்விழாவின் ஞாபகார்த்தமாக வெளியிடும் இந்த நூலினை ஹரிகதா வித்வான் ஸ்ரீ V. S. வெங்கட்ரமண ராவ் அவர்களின் குமாரர் ஸ்ரீ V.P. ராகவேந்திர ராவ் அவர்களின் மகத்தான உதவியால் வெளியிட்டுள்ளோம்.

ஸ்ரீ V.S வெங்கட்ரமண ராவ் அவர்கள் ஸ்ரீ குருராஜரின் பரமபக்தர். ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தரின் பரிபூரண அனுக்ரஹத்திற்கும் பாத்ரமானவர். நமது மனமார்ந்த ஆழ்ந்த நட்புக்கும் உரியவர். இவர் சங்கீதக் கலையில் பரம்பரையாக சிறந்து விளங்கி தனக்கென ஒரு சிறப்பான பாணியில் நாடெங்கும் ஹரிகதைகள் செய்து ஹரி வாயு குருகளின் மகிமையை சீரிய முறையில் பரப்பியவர். பக்தி மார்க்கம், தாஸ பத்ததி ஆகியவை மேலும் பிரகாசிக்கச் செய்தவர்.

இவர் ஹரிதாஸ ரத்னம், ஹரிகதா கேஸரி, பாகவத ரத்னம், கானரத்ன, ஹரிகதா துரீணா, தாஸ கேஸரி, ஹரிகதாம்ருத வர்ஷக என்று பல பட்டங்களை பெற்று மிகவும் கீர்த்தி பெற்றார். இவ்வளவு சிறப்பையும், புகழையும் பெற்ற ஸ்ரீ V.S. வெங்கட்ரமண ராவ் அவர்கள் கடந்த 9—12—1996 திங்கட்கிழமையன்று ஹரி வாயு குருராஜரின் திவ்ய நாமத்தை

ஸ்மரணை செய்தவாறு நம்மையெல்லாம் மாளாத் துயரில் ஆழ்த்திவிட்டு வைகுண்ட ப்ராப்தியடைந்தார். அவருடைய இழப்பு நம்முடைய ஆஸ்திக சமூகத்திற்கு தாங்க இயலா மாபெரும் இழப்பாகும்.

அவருடைய நினைவு என்றும் நிலைக்கும்வண்ணம் அவருடைய வைகுண்ட சமாராதனை நடைபெறும் இந்த நாளில் இந் நூலை வெளியிடுகிறோம். பக்தகோடிகள் அனைவரும் இந்நூலைப் படித்து குருராஜரின் பரிபூரண அருளுக்குப் பாத்திரர்களாகுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

தங்கள் விதேயன்,
ராஜா ஸ்ரீ S. குருராஜாசார்யா

முகாம்: சென்னை
22—12—1996, ஞாயிறு

வெளியிடுபவர்
ஸ்ரீ பரிமள வித்யா மந்திர



மந்த்ராலய மடாதீஸர்
பூஜ்ய ஸ்ரீ 1008 ஸ்ரீ சுஷமீந்த்ர தீர்த்த ஸ்ரீபாதங்கள்

।। श्रीः ।।

आचार्य: पवनोऽस्माकं आचार्याणीच भारती ।
देवो नारायणश्रीश: देवीमंगळ देवता ।।

भवति यदनुभावादेड मूकोऽपि वाग्मी
जडमतिरपि जन्तुर्जायते प्राज्ञमौलि: ।
सकल वचन चेतो देवता भारतीशा ।
मम वचसि निधत्तां सन्निधिं मानसेच ।।

पूज्याय राघवेन्द्राय सत्यधर्म रतायच ।
भजतां कल्प वृक्षाय नमतां कामधेनवे ।।

# ஸ்ரீ ராகவேந்திர குருஸார்வ பௌமர்

மனித குலத்தை உய்விக்க வந்த குரு ஸ்ரீகுரு ராகவேந்திர குருஸார்வ பௌமர்.

ராகவேந்திர ! ராகவேந்திர !! ஆஹா எப்படிப்பட்ட அழகான பெயர் ! எவ்வளவு அர்த்தம் நிறைந்துள்ள பெயர் ! பரம மங்களகரமான அந்த நாமத்தை ஒருமுறை உச்சரித்தாலே போதும் ; நாக்கு புனிதமாகும். ஈரமில்லா இதயம் படைத்த நாத்திகனின் மனதில்கூட அமிர்த அலைகள், பக்தி கங்கையின் உயர்ந்த அலைகள் மேலெழும். அந்த திவ்ய நாமத்தை உச்சாரணம் செய்யும் பொழுதெல்லாம் மறுபடியும் மறுபடியும் உச்சரிக்க வேண்டுமென்ற ஆசை மனதில் வளரும். மனிதனுள் தூங்கிக் கொண்டுள்ள, வெளிப்படாத பக்தி உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பி விடும். பக்தியுடன் கூடிய அந்தப் புனித நாமத்தில் எப்பேர்ப்பட்ட

மகிமை அடங்கியுள்ளது! வாயினின்று புறப்படும் அந்தப் புனித நாமம் உள்ளும்புறமும் புனிதமடையச் செய்து அதை பஜிக்கும் பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றி ஆனந்த சாகரத்தில் அவர்களை மூழ்கவைப்பது! "ராகவேந்திர" என்ற பெயரில் இவ்வளவு மகத்துவம் அடங்கியுள்ளதனால் தான் இன்று அந்தப் புனித நாமம் ஸஜ்ஜனர்கள்—தீனர்கள்—(பரம ஏழைகள், சகாய மற்றவர்கள்) ஆன பக்த ஜனங்களின் வாழ்க்கையின் உயிராய் உய்விக்கும் மஹா மந்த்ரமாய் நற்பயன் அருளும் சஞ்சீவியாய் எல்லோருடைய நாவிலும் விளையாடிக் கொண்டிருக்கின்றது.

மங்கள மூர்த்தியான ஸ்ரீ ராமசந்திரரின் புனிதமான "ராகவேந்திர" என்னும் பெயரைப் போற்றத் தகுந்த மந்த்ராலய முனிவருக்கு அவருடைய குருவான ஸ்ரீஸுதீந்திர தீர்த்தர் எந்த ஒரு சுபமுகூர்த்தத்தில் அனுக்ரஹம் செய் தாரோ என்னவோ! அந்த நாமம் இன்று ஸ்ரீராம பத்ரனின் பெயரைப் போலவே பரதக் கண்டத்தில் மாத்திரமல்ல; தேசவிதேசங்களிலும் பத்திரமாக நிலை நின்று சரணடையும் பக்த கோடிகளுக்கு பத்திரம் (ரக்ஷை) அளிக்கும் பெயராக அமைந்து விட்டது.

**எல்லா ஜீவர்களுக்கும் உரியவர் :**

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் இன்று ஒரு மடம், ஒரு மதம், ஜாதி, மார்க்கம், தேசம், மொழி, ராஷ்டிரத்திற்கு மாத்திரம் உரியவராகி இல்லாமல் ப்ரபஞ்சத்திற்கே உரிய வரான ஐச்வர்யவானாக உள்ளார்; விச்வகுருவாக உள்ளார். ஜாதி, மதம், தர்மம் இந்த வித்தியாசங் களில்லாமல் நிர்மலமான பக்தியினால் ஸேவிக்கும், ஸகலரையும் அவர் காப்பாற்றி வருகின்றார் என்பதனால் தான் அவரது மகிமை, அவரது கீர்த்தி, உலகப்ரஸித்தமாகி யுள்ளது. குருவர்யரின் பக்தகோடிகள் கணக்கற்றவர்கள், அபாரம். தீனர்களுக்கும், அனாதைகளுக்கும், சகாய மற்றவர்களுக்கும் அபயமளிக்கும் மஹாப்ரபு. ஆதிவ்யாதி களின் பரிகாரம், வேண்டிக் கொள்பவர்களின் மனோ பீஷ்டத்தை நிறைவேற்றுவது, மற்றும் மனிதகுல நன்மை

சொரூபமே இந்த விச்வகுருவின் குறிக்கோள். அதற்காகவே, பகவந்தனின் ஆக்ஞைப்படி அவர் அவதாரம் செய்துள்ளார். அதன்படியே ஜீவிதராக மந்த்ராலயத்தில் அழகான ப்ருந்தாவனக் கோவிலில் அமர்ந்து பக்தகோடிகளை ரக்ஷித்துக் கொண்டிருந்த போதிலும், அத்துடன் த்ருப்தியடையாமல் எண்ணற்ற ப்ருந்தாவனங்களிலும் குடிகொண்டு பக்த வ்ருந்தாவனராய், நாடெங்கிலும் தமது கணக்கிட முடியாத புண்ய நிதியையும், தவத்தின் பலன்களையும் உலகத்தாரின் நல்லமையின் பொருட்டு அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார். பக்தியுடன் "ஓ குருதேவா" என்று அழைத்தால், கன்றின் குரலைக் கேட்ட பசு எவ்வாறு ஓடி வருகிறதோ அவ்வாறு, அழைத்தால் வந்து மங்கள மழை பொழிந்து கொண்டு "சாமியென்றால் திருப்பதி திம்மப்ப (ஸ்ரீநிவாஸன்), குருவென்றால், மந்த்ராலயராகப்ப" என்னும் சொல்லுக்கு விஷயமான இந்தக் கருணாமூர்த்தியின் பக்தவாத்ஸல்யத்திற்கு ஈடு இணையுண்டோ?

மனிதத் தன்மையே (humanism) உருவெடுத்து வந்துள்ளதைப்போல் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளைக் குருவாக அடைந்துள்ள நாமே போற்றத் தகுந்தவர்கள், புண்ணியம் செய்த பாக்கியசாலிகள்! கலியுகத்தின் கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்காகி கொந்தளிக்கும் மடுவில் மூழ்கித் தத்தளிக்கும் பலவித துக்கங்களில் உழன்று நலிந்துள்ள மனிதரைக் காப்பாற்றி, வேண்டிக்கொள்பவர்களுக்குக் "காமதேனு-கல்பவ்ருக்ஷ"த்திற்குச் சமமாய், இன்று அவரை பஜிக்கும் பக்தர்களின் இதயக் கோவிலில் நிலைத்து நிற்கும் இந்த மகான் யார்? இவருடைய மூல ரூபம் எது? அவரது அவதாரத்தின் ரகஸ்யம் என்ன? மகிமைகளென்ன என்பவைகளையும் தெரிந்து கொள்வதனால் பக்தர்களுக்கு அவரிடம் பக்தி அதிகரிக்கும். அதுபோலவே கன்னட குல கோடிகளுக்கு, பக்தர்கள் கூட்டத்திற்கு இந்தக் கன்னட குருவர்யரின் அமர சரித்திரத்தின் சில பாகங்களை, இந்த மகானின் 300-வது பிறந்த தினத்தின் நினைவுக்காணிக்கையாக இங்கு தொடர்ச்சியாக வர்ணிக்க முயற்சிசெய்

துள்ளோம்.† இதனால் பக்த ஜனங்கள் மகிழ்ச்சியடை வார்களென்று நம்பியுள்ளோம்.

1. குருவர்யரின் மூலரூபம் :

பல யுகங்களுக்கு முன்பு ஸத்ய லோகத்தில் ப்ரம்ம தேவனின் சேவையிலீடுபட்டிருந்த "சங்குகர்ணன்" என்னும் தேவதா சேவகன், ப்ரம்மதேவன் அனுதினமும் செய்துவந்த ஸ்ரீ ஹரியின் தசாவதார பூஜைக்குப் பூ, துளஸிகளைக் கொண்டுவந்து கொடுத்துக்கொண்டு ப்ரம்ம தேவனின் பூஜைக்கு உதவியாக சேவை செய்துகொண் டிருந்தான். ஒரு நாள் ராம ரூபத்தின் ஸ்ரீ ஹரி பூஜைக்குச் சங்கு கர்ணன் துளஸி புஷ்பங்களைக் கொண்டுவர மறந்து போய் ஸ்ரீராமரின் அழகான உருவத்தையே இமை கொட் டாமல் பார்த்துக்கொண்டே மெய்மறந்து நின்றிருந்தான். பூஜைக்குத் துளஸி புஷ்பங்களில்லாமலிருக்கவே பகவத் ஸங்கல்பத்திற்குக் கட்டுப்பட்டு ப்ரம்மதேவன் கோபத்தினால் சங்குகர்ணனுக்கு "அஸுரனாவாய்" எனச் சாபம் கொடுத்துவிட்டார். சங்குகர்ணன் விழிப்படைந்து ப்ரம்ம தேவனை வணங்கி, மன்னிப்புக் கோரவே சந்தோஷமடைந்த அவர், "புத்ரா", நீ அஸுரனாகப் பிறந்தாலும் தேவஸ்வ பாவமுள்ளவனாகவும், ஸ்ரீ ஹரிபக்தனாகவும், வருங் காலத்தில், நீ இப்பொழுது அந்த ராமபூஜைக்கு இடையூறு விளைவித்ததற்காகச் சாபத்திற்குள்ளானாயோ அதே ஸ்ரீ ராமனால் பூஜிக்கப் பட்ட ஸ்ரீ மூலராமனின் பூஜகனாய் ஜகத் கல்யாணம் (உலகத்திற்கே நன்மை) செய்து கீர்த்தி பெற்று ஸ்ரீஹரி பதத்தை அடைவாய்" என்று வரமளித்தார். அந்தச் சங்குகர்ணனே ஸ்ரீ ராகவேந்திரஸ்வாமிகளின் மூல ரூபம் !

---

† பெங்களூர் "சம்யுக்த கர்னாடக" பத்திரிகையில் குருராஜரின் முன்னூறாவது நூற்றாண்டு விழா நினைவாக ஒவ்வொரு திங்கட் கிழமையும் "ஸாரஸ்வதலோக விபாக்' கில் நான் எழுதின இந்த நூல் தொடர்ந்து வெளியிடப்பட்டது இந்த அமர சரித்திரத்தைப் "பரிமள" பத்திரிகையின் "வெள்ளி விழா" வின் காணிக்கையாக இப்பொழுது க்ரந்தரூபமாக வெளியிட்டு பக்தஜனங்களுக்கு அளிப்பதில் மகிழ்ச்சி கொள்ளுகிறோம்.

—நூலாசிரியர்.

## குருவர்யரின் முந்தின அவதாரங்கள் :

### ப்ரஹ்லாதன் :

சங்குகர்ணன் க்ருதயுகத்தில் ஸ்ரீ வாயு பகவானின் விசேஷ ஆவேசத்துடன் கூடியவனாய் அஸுர சக்ரவர்த்தியான ஹிரண்யகச்யபனின் மகனாய்ப் பிறந்து பிரஹலாதன் என்னும் பெயரினால் ப்ரசித்தி அடைந்தான். தாயாரின் கர்பத்திலிருக்கும்போதே நாரத மகரிஷியின் உபதேசத்தினால் ஸ்ரீ ஹரிதத்வங்களை நன்றாக அறிந்து ஞானியானான். ப்ரஹலாதனின் பக்தி உலகப்பிரஸித்தியடைந்துள்ளது. பால்யத்திலிருந்தே ஸாத்வீக ஸ்வபாவத்தினால் எப்பொழுதும் ஸ்ரீ ஹரிஸ்மரணை, பூஜாதிகளிலேயே காலங்கழித்துக்கொண்டு அஸுரச் சிறுவர்களுக்கும் ஹரிபக்தியை உபதேசித்துக்கொண்டு இருந்த ப்ரஹலாதன் தந்தையின் கோபத்திற்கிலக்காகிப் பற்பல இம்சைகளுக்கும் இலக்காக வேண்டியிருந்தது. ஆயினும் மனந்தளராமல் பாலப்ரஹலாதன் தனது ஹரிபக்தியின் செல்வாக்கினால் எல்லா உபத்திரவங்களிலிருந்தும் விடுதலையடைந்து வெற்றியடைந்தான்.

ஸ்ரீஹரி ஸகல கல்யாண குண பரிபூர்ணன், அவன் ஸர்வ வ்யாபி, சிந்தனைக்கு எட்டாத அற்புத சக்தி படைத்தவனும், மோக்ஷமளிப்பவனும் ஆன அந்த ஸ்வாமி ஒருவனே ஸர்வோத்தமன். மற்றவர்களெல்லாம் ‘‘அவனது தாஸர்கள்’’ என்று தந்தைக்கு அறிவுறுத்திவர இறுதியில் தந்தையோ வாளை உறுவிக் கொண்டு, ‘‘அந்த ஹரி எங்கிருக்கிறான், காண்பி’’ என்று ஆர்ப்பாட்டம் செய்த பொழுது, தனது ஸாத்வீக பக்தியின் செல்வாக்கினால் தூணில் ஸ்ரீ நரஸிம்ஹரூபியான ஹரியை நேரில் காண்பித்து உலகத்தின் எதிரியான ஹிரண்யகசிபுவை சம்ஹாரம் செய்வித்து ஜகத்திற்கே மங்களத்தை உண்டுபண்ணினான். ஸ்ரீ ஹரி ப்ரஹலாதனின் பக்திக்கு மெச்சி, ‘‘मद्भक्तास्त्वामनुव्रताः’’ அதாவது—ப்ரஹலாதனே, யார் உனது பக்தராய் உன்னைப் பின்பற்றுவார்களோ அவர்களே எனது பக்தராகத் தகுதியுள்ளவர்கள்’’ என்ற அஸாதாரண

வரத்தைக் கொடுத்தருளினார். ஸ்ரீ ஹரியே நேரில் தரிசனம் அளித்து "மோக்ஷம் அளிக்கிறேன்" என்று சொல்ல அதை விரும்பாமல், "ஸ்வாமி! ஜகத்தில் உன்னைக் காணும் வழி தெரியாமல் தீனர்களாகவும் ஒன்றும் தெரியாதவர்களாகவும் உதவியின்றி உழன்று கொண்டிருக்கின்றனர். இவ்வாறு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் என்னைச் சேர்ந்த இந்த ஜனங்களை விட்டு விட்டு நான் ஒருவனே மோக்ஷத்தில் ஸுகமடைய விரும்பவில்லை ப்ரபோ! என்னை அண்டியுள்ள எல்லோரும் உனது மங்களகரமான பரந்தாமத்தில் சுகமடையும்படி அனுக்கிரஹிப்பாய். எனது வரப்போகும் மூன்று பிறப்புகளிலும் நானும், உனது பக்தனாகும்படியே, உன்னிடம் பக்தி உறுதியாகும்படியும் கருணை புரிய வேண்டும்" என்று வேண்டினான். ஆஹா! எப்படிப்பட்ட கருணைக் கடல் அவன், எப்பேர்பட்ட தியாக மூர்த்தி நம் பிரஹலாத ராஜன்!.

அந்த ப்ரஹலாதனே த்வாபரயுகத்தில் பாஹ்லீக ராஜனாகப் பிறந்து ஸ்ரீ க்ருஷ்ணனைச் சேவித்துப் போற்றப் பட்டான். அவனே மறுபடியும் வைதிக ஸத் தத்துவங்களின் ப்ரசாரம், நூலியற்றுதல், ஹரிதாஸ வர்க்கத்தைப் போஷிப்பதற்காகவும், கர்நாடக சாம்ராஜ்யத்தின் மறு மலர்ச்சிக்காகவும் ஸ்ரீ வ்யாஸராஜ குரு ஸார்வ பௌமராக அவதரித்தான்.

## ஸ்ரீ வ்யாஸராஜ குருஸார்வ பௌமர்

ஸ்ரீ வ்யாஸராஜர் ஸ்ரீமத்வாசார்யரின் மஹா பீடத்தில் ஆரோஹணம் செய்து உலகம் போற்றக்கூடிய "சந்திரிகா", "ந்யாயாம்ருத", "தர்க்கதாண்டவ" முதலான உத்தமமான நூல்களை இயற்றி த்வைத ஸித்தாந்த ஸ்தாபனம் செய்து, கன்னட ரமாரமணனான கிருஷ்ணதேவராயனுக்கு வந்த "குஹயோக"த்தை விலக்கிக் கர்னாடக சிம்ஹாஸனத்தில் ஏறி, தமது தபஸ்ஸின் பலனை நாட்டின் மறு மலர்ச்சிக்காக த்யாகம் செய்து, விஜயநகரத்தின் ஸமஸ்கிருதப் பல்கலைக் கழகத்தின் குலபதி (Chancellor) யாகப் பதவியேற்று ஸமஸ்கிருத மொழி, ஸகல வித்யா

ப்ரசாரம் செய்து, கன்னட ஹரிதாஸகூட போஷகராகவும் தானே பதங்கள், கீர்த்தனைகள், ஸுளாதிகள் இயற்றி, கன்னட மொழிக்குக் காந்தி உண்டாக்கி, உலகம் போற்றும் உத்தம யதிகளான ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தர், ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர், ஸ்ரீ புரந்தரதாஸர், ஸ்ரீ கனகதாஸரைப் போன்ற ஞானிரத்தினங்களைக் கன்னட நாட்டிற்கருளி, பாரததேசம் மொழி, மேலும் மக்களுக்கும் மகோபகாரம் செய்தார்.

ஸ்ரீ வ்யாஸராஜரின் அவதாரமான ஸ்ரீ ப்ரஹலாதரே மறுபடியும் உலக நன்மை, ஸ்ரீ மூலராமனின் பூஜை, தர்ம ஸம்ஸ்தாபனம், தீன, துக்க, அஸஹாய மானிட மக்களின் உயர்விற்காக ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளாக அவதரித்தார். ஜகத்தின் பாக்ய சூரியன் உதித்தான்! அனறே ஆரம்ப மாயிற்று ஜகத் கல்யாண மங்கள கானம்! அன்று புறப்பட்ட ஜகத் கல்யாணத்தின் கல்யாணியின் நாத அலைகள் இன்றும்கூட தொடர்ந்து பாய்ந்து கொண்டேயுள்ளது. 700 வருடங்கள் நிறைவு பெறும் வரை, அதற்கு ஓய்வு எங்கே?

"शंकुकर्णाख्य देवस्तु ब्रह्म शापाच्च भूतले ।
प्रह्लाद इति विख्यातो भूभार क्षपणे रतः ।
स एव राघवेन्द्राख्य यतिरूपेण सर्वदा ।
कलौयुगे रामसेवां कुर्वन् मंत्रालयेऽभवत् ॥"

—என்ற ஸ்ரீ ந்ருஸிம்ஹ புராண வசனம். "प्रथम प्रह्लाद व्यास मुनिए यति राघवेन्द्र" முதலிய அபரோக்ஷ க்ஞானிகளான ஸ்ரீ ஹரிதாஸரின் வசனங்கள் மேற்கண்ட விஷயத்தைச் சுருக்கமாக விவரிக்கின்றன.

" சங்கு கர்ணாக்ய தேவஸ்து ப்ரம்ஹசாபாச்ச பூதலே '
ப்ரஹ்லாத இதி விக்யாதோ பூபார க்ஷபணே ரத: ||
ஸஏவ ராகவேந்த்ராக்ய யதிருபேண ஸர்வதா |
கலௌயுகே ராமஸேவாம் குர்வன் மந்த்ராலயே
அபவத் || "

अगम्य महिमालोके राघवेन्द्रो महायशाः ।
அகம்ய மஹிமா லோகே ராகவேந்த்ரோ மஹாயசா)

என்று குருஸ்தோத்ரமியற்றியவர் சொற்படி ஸ்ரீ குருராஜரின் மகிமை பொருந்திய சரித்திரம் இணையற்றது. அவைகளைப் பூராவும் யாரும் அறிய முடியாது. ஆயினும் அந்த குரு ச்ரேஷ்டரின் தயையினால் அந்த மஹாமகிமையரவரின் சரித்திரத்தில், மகிமைகளின் சில அம்சங்களை பக்த ஜனங்களின் சந்தோஷத்திற்காக இங்கு விவரிக்க முயற்சி செய்துள்ளோம்.

2. குருவர்யரின் வம்சம் :

ஸகல வித்தைகளுக்கும் பிறப்பிடம் எனப்படும் ''ஷாஷ்டிக வம்ச''ம் (அரவத்தொக்குலு வம்சம்) ஜகத்தினில் மிக ப்ரஸித்தி பெற்றது. இந்த வம்சத்தவர்கள் வேத வேதாங்க சதுஃசாஸ்திரங்கள், சாஹித்யம், கலைகளில் ப்ரவீணர்களாக இருந்ததைப் போல, நாட்டின் சேவையிலும் பெயர் பெற்றிருந்தனர். அந்த வம்சத்தின் மூதாதையர், கதம்ப, ராஷ்ட்ரகூடம், சாளுக்ய, தேவகிரி, விஜயநகரஸாம் ராஜ்யங்களில் உயர்ந்த பதவிகளிலமர்ந்து நாடு, மொழி இவைகளின் சேவை செய்து கீர்த்தி பெற்றிருந்தனர்.

விஜயநகரத்தின் கன்னட ஸாம்ராஜ்யம் பாரத நாட்டில் மாத்திரமல்லாமல், இதர நாடுகளிலும் ப்ரசித்தி பெற்றிருந்தது. கிருஷ்ணதேவராயனின் காலம் கன்னட நாட்டின் பொற்காலமாயிருந்தது. விஜயநகரத்தின் ஆஸ்தானத்தில் ஷட்சாஸ்த்ரகோவிதரும் தார்மிக நியமங்களைக் கட்டு திட்டாகப் பரிபாலனம் செய்பவரும், வீணை வாசிப்பில் நிபுணருமான க்ருஷ்ணபட்டர் மஹாபண்டிதராயிருந்தார். கன்னடமாதாவின் வரபுத்திரனான கிருஷ்ணதேவராயர் க்ருஷ்ணபட்டரிடம் வீணைவாசிக்கும் கலையைப் பயின்று அவரை மிக கௌரவித்தார்.*

க்ருஷ்ண பட்டருக்கு கனகாசல பட்டரென்ற புத்திரரிருந்தார். கனகாசலபட்டருக்குத் திம்மண்ணபட்டர் என்னும் ஸத்புத்திரர் பிறந்தார். திம்மண்ணபட்டர்

---

"उपदिश्य स भूवरालेनिजगांधर्वकलां कलामगृण्हात् ।
घनमौक्तिकगुच्छ हारपूर्वं बिरुदालीं गुरुदक्षिणापदेशात्" ॥
(श्रीराघवेन्द्र विजय)

ஸகல வித்யாபாரங்கதராக இருந்ததோடு மாத்திர மல்லாமல் வீணை வாசிப்புக்கலையிலும் ப்ரவீணராயிருந் தார். அவருக்குக் கோபிகாம்பா என்ற நற்குணம்படைத்த பத்னியிருந்தாள் இந்தத் திம்மண்ணபட்ட-கோபிகாம்பா தேவியே ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் தாய் தந்தையர்கள்.

திம்மண்ணபட்டர் ஸ்ரீநிவாஸப்பெருமாளின் கிருபை யால் வெங்கடாம்பா என்ற புத்ரியையும் குருராஜனென்னும் மகனையும் பெற்றனர். திம்மண்ணாசார்யரின் பாண்டித்யத் திற்கு மெச்சி கன்னட நாட்டுச் சக்ரவர்த்தி ஸ்ரீ ரங்கராஜன் அவருக்கு ''பகல் தீவட்டி'' மஹா கௌரவத்தை அளித்து மரியாதை செய்தான். இரண்டாவது ஸ்ரீ ரங்கராஜன் இவருடைய வித்வத்திற்கு மனம்மகிழ்ந்து ஒரு உத்தமமான வ்ருத்தி (தொழில்) தானம் செய்து கௌரவித்தான்.

கி.பி. 1565ல் விஜயநகரத்தின் வீழ்ச்சிக்குப்பிறகு ஆதர வற்ற அநேக பண்டிதர்களுடன் அவர் குடும்பத்துடன் தஞ்சாவூருக்கு வந்து கன்னட ஸாம்ராஜ்யத்தின் மண்டலாதி பதியாக இருந்த சவ்வப்பநாயகனின் ஆஸ்தானத்தில் வந்து சேர்ந்தனர். வருங்கால குலகுருவும், ஸ்ரீ மத்வாசார்யரின் மஹாஸமஸ்தான பீடாதிபதியும் பந்துக்களும் ஆன ஸுரேந்திர தீர்த்தர் மற்றும் ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தரின் உத்தரவின்படி கும்பகோணத்திற்கு வந்து ஸ்ரீ மடத்தின் ஆச்ரயத்தில் வாழ்ந்து வந்தனர்.

வருடங்கள் பல கழிந்தன. திம்மண்ணபட்டர் தம்பதி களுக்கு மேலும் புத்திரப் பேறில்லாததால் திம்மண்ண பட்டர் குல விளக்காகவும் ஞானியுமான உத்தம புத்திரனை அடைவதற்குக் குல தெய்வமான திருப்பதி ஸ்ரீநிவாஸப் பெருமாளைச் சரணடைந்து பத்னி கோபிகாம்பாவுடன் க்ஷீரவ்ரதம் முதலிய வ்ரதம் நோற்று ஸ்ரீ வேங்கடேச் வரனை சேவித்தனர். இந்தத் தம்பதிகளுடைய ஸேவை யினால் சந்தோஷமடைந்து ஸ்ரீநிவாஸப் பெருமாள் பட்டரின் கனவில் தோன்றி, ''எனது பக்தச்ரேஷ்டனும் உலகம் போற்றக் கூடியவனுமான ஸத்புத்திரனை உமக்கு அளிப் போம்'' என்று வரமருளி மறைந்தார். ஆனந்தம் நிரம்பின வராய் புளகாங்கிதமடைந்து திம்மண்ணபட்டர் பத்னியுடன்

ஸ்வாமிக்குப் பூஜைகள் செலுத்தித் தமது ஊருக்குத் திரும்பி வந்தார்.

## 3. குருகளின் அவதாரம் :

பதிவ்ரதா கோபிகாம்பாதேவி ஸ்ரீவெங்கடேச்வரனின் வரப்ரஸாதத்தினால் ஸ்ரீசாலிவாஹன சக ஆண்டு 1517-ல் மன்மத நாமஸம்வத்ஸரம் பால்குண சுக்ல ஸப்தமி, குரு வாரம் கி.பி. 1595) மிருகசிருஷ நக்ஷத்திரத்தில் ஸர்வ லக்ஷணங்களும் நிறைந்த ஸத்புத்திரனைப் பெற்றெடுத்தாள்[1] உலக க்ஷேமத்திற்காக மறுபடியும் ஸ்ரீப்ரஹ்லாதராயர் அவதரித்தார்.

திம்மண்ணபட்டர் வேதோக்த ரீதியில் மகனின் ஜாதகர்ம-நாமகரண மகோற்சவத்தை நிறைவேற்றி ஸ்ரீ வெங்கடேச்வரனின் வரப்ரஸாதியான புத்திரன் ஸ்ரீவெங்கடேச்வரனைப் போலவே உலகம் போற்றும் உத்த மனாகட்டுமென்று புத்திரனுக்கு வெங்கடநாதனென்றே பெயர் சூட்டினார்.[2] குழந்தையின் ஜாதகத்தின் பலன் களைப் பரிசோதித்த ஜோதிடன், "இந்தச் சிறுவன் பெரிய ஞானியாவான். இவனால் உலக க்ஷேமமாகும்" என்று அவன் எதிர் காலத்தைச் சொன்னான். சிறுவன் வெங்கடநாதன் சரத்கால சந்திரனைப் போல் ப்ரகாசித்தான். தாய் தந்தை, பந்து-பாந்தவர்களை மகிழ்வித்து வளர்ந்து வந்தான்

## 4. சௌளம்-அக்ஷராப்யாஸம் :

ஸ்ரீசக 1519-ஹேவிளம்பி நாம ஸம்வத்ஸரம், கி.பி. 1597-ல் திம்மண்ணபட்டர் வெங்கடநாதனுக்கு சௌளம் மற்றும் அக்ஷராப்யாஸ மஹோற்சவத்தை வைபவத்துடன் நடத்தினார். அக்காலத்தில் வெங்கடநாதன் காண்பித்த

---

1. असविष्ट सुतं द्विजेन्द्र पत्नी शुभलग्ने परिपूर्ण दृष्टि भाजि ।
अखिलद्विजराजवंदनीयं द्विजराजं विगिवामराधिपस्य ॥ (रा.वि.)

2. उदयास्त पटीर हेमपृथ्वी धरपर्यंत धराचर्यैर्जनोघ्यैः ।
अभिवंद्य इतीयं बालकस्य धतनोर्वेंकटनाथ नाम तातः ॥
(रा.वि.)

திறமை அவனது வருங்கால பாண்டித்யத்திற்கு எடுத்துக் காட்டாக இருந்தது அக்ஷராப்யாஸ காலத்தில் திம்மண்ண பட்டர் மணலின் மீது "ஓம்" என்ற எழுத்தை எழுதி மகனைப் பார்த்து, "குழந்தாய்! இதை ஓம் என்று வாசி" என்றார். உடனே வெங்கடநாதன் "அப்பா! ஸகலாகம வேத்யனான ஸ்ரீஹரி ஸகல குண ஸம்பூர்ணனென்பதை இந்தச் சிறிய எழுத்து எவ்வாறு தெரிவிக்கிறது?"[1] என்று சொன்னான். மூன்று வருடத்திய பாலகனான குழந்தை வெங்கடநாதனின் பேச்சைக் கேட்டு எல்லோரும் திக்ப்ரமை யடைந்தனர். இதற்கு முன் கேள்விப்படாத, இத்தப் பால கனின் திறமை, ஞானங்களைக் கண்டு பண்டிதர்கள், "ஆச்சரியம்! இந்தச் சிறுவன் ஸாமானியனல்லன்! இவன் யாரோ தேவதையாக இருக்கவேண்டும்.[2] இப்படி பட்ட மகனைப் பெற்ற திம்மண்ணபட்டர் உண்மையாகவே புண்ணியசாலி" என்று தகப்பனாரைப் புகழ்ந்தனர். மஹாபண்டிதரைப் போல் திறமை பொருந்திய மகனைத் தாய் தந்தையர்கள் கட்டியணைத்து முத்தம் கொடுத்து திருஷ்டி சுத்திப் போட்டனர்.

வெங்கடநாதனின் வளர்ச்சி, முன்னேற்றத்தைக் கண்டு மகிழும் பாக்கியமில்லாத தகப்பனார் திம்மண்ணபட்டர் சில நாட்களிலேயே காலமாய் விட்டார். வருங்காலத்தில் அநாதர்களுக்கு நாதனாகப் போகும் வெங்கடநாதன் இப் பொழுதே தானே அனாதனானான்.

---

1. विलिख्य भूमौ प्रथमं कुमारं रेखामिमां ओमिति संपठेति ।
   पित्रानियुक्तः पुनरब्रवीत्तं अल्पेकथं सा गुण पूर्ण संज्ञा ॥

2. अश्रुत प्रतिभा यस्य श्रुतिस्मृति अवरोधिने ।
   विस्तृतं नरजातंच तं विद्याद्देव सत्तमम् ॥
   इति वदंतमवेक्ष्य सुहृज्जनाः श्रुतिशिरो दृढवासन मानसं ।
   कथमयं शिशुरीदृशवाक् पितासुकृतवानिति विस्मयनो भवन् ॥
   (राघवेंद्र विजय)

5. உபநயனம்—கல்வி பயிலுதல் :

குமாரன் வெங்கடநாதன் அண்ணன் குருராஜாசார்யரிடம் வளர்ந்து வந்தான். அவரிடமே பல மொழிகளின் எழுத்துக்கள், அகராதி, மந்த்ரம், ஸ்தோத்ரம் முதலியவைகளைப் பயின்று வந்தான். தனது திறமையினால் எல்லோரையும் திகைக்கச் செய்து அண்ணன் அண்ணியாரின் அன்பைச் சம்பாதித்துக் கொண்டான். குருராஜாசார்யர் ஸ்ரீசக ஆண்டு 1524ல் சுபக்ருது வருஷத்தின் வைசாக மாதத்தில் (கி. பி. 1602) வெங்கடநாதனுக்கு உபநயனம் மகோற்சவத்தை நல்ல முறையில் நடத்தி வைத்தார். பிறகு சாஸ்திர அத்யயனத்திற்காக தம்பியை மதுரை ராஜ ஆஸ்தானத்தில் மஹாபண்டிதராயிருந்த தனது சகோதரியின் கணவர் ஸ்ரீ லக்ஷ்மீநரசிம்மாசார்யரிடத்தில் அனுப்பினார். ஏகஸந்தக்ராஹியும், மேதாவியுமான வெங்கடநாதன் அவரிடம் காவ்யம் — நாடகம் — அலங்காரம் முதலிய ஸாஹித்யங்களையும், தர்க்கம்—வ்யாகரணம் மீமாம்ஸா சாஸ்திர க்ரந்தங்களையும், ஸ்ரீமன்ந்யாயஸுதா முதலிய வேதாந்த சாஸ்திரக்ரந்தங்களையும் அத்யயனம் செய்து சில வருஷங்களுக்குள்ளேயே ப்ரகாண்ட பாண்டித்யம் அடைந்து விட்டான்.

வெங்கடநாதன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து பதினெட்டு வயது வாலிபனாகத் திகழ்ந்தான். அவனுடைய அழகும் தேஜஸ்ஸும் கேட்க வேண்டுமா? அற்புதமான, பொன்னைப் போல மின்னும் மேனியழகு, உடற்பயிற்சியினால் உருண்டு திரண்ட கட்டு மஸ்தான சரீரம், அகன்ற மார்பு, மலர்ந்த தாமரைப் பூவை ஒத்தகண்கள், தீர்க்கமான நாசி, பவளத்தையொத்த சிவந்த உதடுகள், பளிச்சிடும் பற்கள், விசாலமான நெற்றி, மலைச் சிகரத்தையொத்த புஜங்கள், நீண்ட தோள்கள், எப்பொழுதும் புன்முறுவல் பூத்த மற்றும் பாண்டித்யத்தையும் திறமையையும் வெளிப்படுத்தும் முகம், மனதைக் கவரும் ரூபலாவண்யம், இப்படிப்பட்ட ஒளிவீசும் கண்ணியமான உருவத்தைக் கொண்ட வெங்கடநாதன் தேவலோகத்தின்

அழகெல்லாம் திரண்டு உருவெடுத்து பூமிக்கு வந்திருப்பதைப் போல் கண்ணுற்றான்.

## 6. திருமணம் மற்றும் குடும்ப வாழ்க்கை :

திருமண வயதையெட்டிய வெங்கடநாதருக்கு அண்ணன் குருராஜாசார்யர் நல்ல குலத்திற்பிறந்தவளும், ரூபவதியும், ஸங்கீதஸாஹித்ய கலாப்ரவீணளான ஸரஸ்வதி என்னும் கன்னிகாரத்னத்தைத் தேடிக் கொண்டு வந்து ஸ்ரீசக வருடம் 1036-ல், ஆனந்த நாம ஸம்வத்ஸரம் (கி. பி. 1614) நல்ல சிறப்பான முறையில் திருமணம் செய்து வைத்தார்.

சில நாட்கள் கழிந்தன. பிறகு வெங்கடநாதாசார்யர் பத்னி ஸரஸ்வதி தேவியுடன் துண்டீரமண்டலத்திலுள்ள பிரசித்தி பெற்ற "காவேரிபட்டணம்" என்னும் அக்ரஹாரத்தில் மகிழ்ச்சியுடன் குடும்ப வாழ்க்கை நடத்தத் தொடங்கினார். இந்தப் புதுமணமக்களின் குடும்பம் மிக மனோஹரமாக இருந்தது. அழகான கணவன், உத்தமமான பண்டித, ஸங்கீத ஸாஹித்யம், வீணை முதலிய கலைகளில் திறமை வாய்ந்த ரஸிகர், இனிமையாகப் பேசும் இயல் புள்ள கணவனை அடைந்த எந்தப் பத்னிதான் மகிழ்ச்சி யுடன் தன்னை மறந்திருக்க மாட்டாள்? வெங்கடநாதரும் அவ்வாறே சுசீலமுள்ளவளும், பதிவ்ரதையும், பதிபக்தி நிறைந்தவளும், ஸங்கீத ஸாஹித்ய கலாரஸிகையும் அன்பு நிறைந்தவளுமான ஸரஸ்வதியைக் கண்டு மிக்க மகிழ்ச்சி யுடன் இருந்தார். இந்தப் புதுமண மக்களின் சம்ஸாரம் பாலும் தேனும் கலந்தாற்போல இனிமையாகவே யிருந்தது. அவர்களின் ப்ரேமையின் பலனாக வெங்கட நாதருக்கு ஒரு ஸத்புத்திரன் பிறந்தான். ஆசார்யர் மகனுக்கு லக்ஷ்மீநாராயணன் என்று நாமம் சூட்டினார்.

## 7. ஏழ்மையின் அனுபவம் :

வெங்கடநாதரின் பாண்டித்யத்தின் புகழ் எங்கும் பரவியது. இப்பேர்ப்பட்ட மஹாபண்டிதரிடம் கல்வி பயிலுவதற்கு அநேக மாணவர்கள் மிக்கஆர்வம் கொண் டிருந்தனர். அப்பேர்ப்பட்ட பத்துப் பதினைந்து பேர்கள்,

மாணவர்கள் ஆசார்யரிடம் வித்தைப் பயில்வதற்கு வந்து சேர்ந்தனர். முன் காலத்தில் குருவானவர் சிஷ்யரின் வாழ்க்கையின் பொறுப்பேற்று வித்யாதானம் செய்யும் முறையிருந்து வந்தது. வெங்கடநாதரின் முன்னோர்கள் பிறப்பிலேயே தனவந்தர்களாயிருந்தனர். ஆனால் விஜய நகரத்தின் வீழ்ச்சிக்குப் பிறகு அவர்களுடைய ஐச்வர்யங்கள் நஷ்டமாகி விட்டன. அதனாலேதான் ஆசார்யரின் தாய்-தந்தையர்கள் திம்மண்ணபட்டர் ராஜரின் மடாதிசரின் ரக்ஷணையில் ஜீவிக்க வேண்டி வந்தது. ஏழையாகவே வளர்ந்த வெங்கட நாதருக்குத் தனது சிறிய குடும்பத்தை நடத்துவது சிரமமாயிருந்த பொழுது பத்துப் பன்னிரண்டு சிஷ்யரின் ஜீவனத்தை நிர்வகிக்கும் பொறுப்பு வேறு வந்து சேர்ந்தது. இவ்வாறாக ஆசார்யர் மிக தரித்திர நிலைக்காளாக வேண்டியதாயிற்று. "यस्यानुग्रहमिच्छामि तस्यवित्तं हराम्यहम् ।" அதாவது யாருக்கனுக்ரஹம் செய்ய விரும்புவேனோ அவர்களுடைய ஐச்வர்யத்தை நான்அபகரித்துக் கொள்ளுவேன் என்று பரமாத்மா சொல்லியருளியிருக்கிறான். ஸ்ரீ ஹரி ஒரு க்ருஷ்ண ரூபத்தினால் மாத்திர மல்லா்-ராம - நரஹரி - வேதவ்யாஸ - க்ருஷ்ண - நாராயணனென்று இவ்வாறு ஐந்து ரூபங்களினால் இவரில் அனுக்ரஹம் செய்ய விரும்பினானென்றால் ஆசார்யரின் ஐச்வர்யத்தை அபகரித்துக் கொண்டு அவரது மனம் தன்பக்கம் திரும்பும்படி செய்ததில் ஆச்சரியம் எதுவுமில்லை. பகவந்தன் ஏழை பங்காளனல்லவா ?

இங்கு சற்று யோசிக்க வேண்டியுள்ளது. வெங்கட நாதர் (வருங்கால ஸ்ரீ ராகவேந்திரர்) வறுமை அனுபவிப்பது தலை எழுத்து ; அது அனுபவித்தே தீரவேண்டும். முன்பு அவர் ப்ரஹலாத பாஹ்லீகராஜனாக இருக்கையில் மஹாசாம்ராஜ்யாதிபதியாக இருந்ததால் அப்பொழுது வறுமை அவரிடம் நெருங்க இடமேயிருக்கவில்லை. தற்போதைய ஸ்ரீ வெங்கடநாதரின் அவதாரம் சங்கு கர்ணனின் கடைசி அவதாரம் ! இப்பொழுது தரித்திரத்தை அனுபவிக்க வேண்டுமென்பது பகவத் ஸங்கல்பம். அதனால் தான் ஆசார்யர் ஹரிசித்தமென்று அதை மகிழ்ச்சியுடன்

வரவேற்றுக் கடுமையான தரித்திரத்தின் கொடுமையை அனுபவித்து வந்தார். ஆயினும் அவர் அதற்காகக் கவலைப் படவில்லை, வருந்தவில்லை; இவை யெல்லாம் மஹான் களின் லக்ஷணம். இப்பொழுது ஏற்பட்டிருக்கும் அவரது தரித்திரத்தின் நினைவே, வருங்காலத்தில் அவர் ராக வேந்திரராக வரும்பொழுது அதாவது மஹா ஸமஸ்தானாதி பதிகளாகி, ஏன் இப்பொழுதும் கூட தீனர்கள், அனாதைகள், ஒடுக்கப்பட்டவர் மீது கருணையை உண்டு பண்ணி தம்மைச் சரணடையும் எல்லோருடைய தரித்திரத்தை நீக்கி கேட்கின்ற சம்பத்தை அனுக்ரஹிக்கும் கருணைக்கு வழி யேற்பட்டதென்று சொன்னால் தவறாகாது.

"ஸ்ரீராகவேந்திர விஜயத்தில்" வர்ணிக்கப்பட்டுள்ள ஸ்ரீ குருராஜர் அனுபவித்த கடுமையான தரித்திரத்தைப் படித்தால் எப்படிப்பட்ட கல்மனமும் கரைந்து கண்ணீர் வராமலிருக்காது.

வெங்கடநாதரின் வீட்டில் ஒரு நாளைக்கு எவ்வளவு தேவையோ அது கூட இருப்பதில்லை, போஜனத்திற்கு சாதத்துடன் வேண்டிய பதார்த்தங்கள் (காய்கறி முதலியவை) கிடையாது. தீபாவளியைப் போன்ற பண்டிகை நாளன்று, வருடத்திற்கு ஒருமுறை எண்ணை ஸ்நானம் செய்து கொள்வதற்கு எண்ணை கூட இல்லாம லிருக்கையில், தினஸரி உணவிற்கு நெய் எங்கிருந்து வரும்? எவ்வளவோ நாட்கள் சாப்பிட இலையில்லாமல் தரையையே சுத்தம் செய்து அதன்மீது உணவு அருந்த வேண்டியதாயிற்று. வருஷத்திற்கொருமுறை மோட்டா வேஷ்டி யுடுத்த இயலாதிருக்கையில் விலையேறப் பெற்ற மென்மையான பட்டு வேஷ்டி மடிகள் எங்கிருந்து கிடைக்கும்?

லோகத்தில் மாதமிருமுறை உபவாஸம் இருக்க வேண்டியது உறுதி. ஆனால் ஆசார்யரின் வீட்டில் ஒரு பக்ஷத்தில் (15 நாட்களில்) நான்கைந்து உபவாசம் வரும். ஒரு நாள் திருடர்கள் அவரது அற்பசொற்பப் பொருள் களைக் களவாடிச் செல்லவே, பிறகு ஸந்யாஸிகளான

பொழுது ஸந்யாஸிகளுக்கு அவசியமான கோவணம் மாத்திரம் விட்டு வைக்கப்பட்டிருந்ததாம்.[1] இன்னும் ஸரஸ்வதி அம்மாளின் நிலைமை எவ்வாறிருந்திருக்கும்? அதை வர்ணிக்கக் கையே வராது. இப்படியிருந்தும் ஆசார்யரின் வாழ்க்கையில் பிளவு இல்லை. ஸரஸ்வதியம்மாள் முணுமுணுத்ததில்லை; அதிருப்தி தெரிவித்ததில்லை. கோபத்துடன் பேசியதில்லை. கஷ்டங்கள் அதிகரித்ததைப் போலவே ஸரஸ்வதியம்மாளின் பதிபக்தியும் அதிகரித்தது. ஆசார்யருக்கு ஹரிபக்தி இரு மடங்காயிற்று. பதியின் ரூபம், கருணை நிறைந்த மனம், அன்புடன் நடந்து கொள்ளும் விதம் இவைகளினால் ஸரஸ்வதியம்மாளின் மனம் தளரவில்லை. மெய்மறந்து தரித்திர நிலையை அவள் உணரவேயில்லை. பதியின் இனிமையான குரலில் வேதாத்யயனம், பாடம் சொல்லும் பொழுது அவரின் முகத்திலிருந்து கங்காப்ரவாஹத்தைப் போல் வெளிப்படும் இனிய வாணியைக் கேட்டு அவள் சரீரம் புளகாங்கித மடையும். ஆசார்யர் ஒவ்வொரு சமயத்தில் வீணை வாசிப்பதில் ஆழ்ந்திருக்கும் பொழுது ஸரஸ்வதியம்மாள் மெய்மறந்து தானும் தேவர நாமங்கள், அஷ்டபதிகளை தனது குயிலோசையில் பாட ஆரம்பித்து விடுவார். அன்பிற் சிறந்த பத்னியின் உணர்ச்சிகளையும் ஈடுபாட்டையும் கண்டு புன்சிரிப்புடன் ஆசார்யர் தானும் சேர்ந்து பாடுவார். இவ்வாறு அந்த ஆதர்ச (ideal) தம்பதிகள் பரஸ்பரம் ஒத்துழைப்பு, சகிப்புத் தன்மை அன்பு முதலியவைகளினால் தங்களது செல்லப் புதல்வன்

---

1. अब्दस्यैकं वस्त्यतो नास्य नव्यं स्थूलं वस्त्रं संततं चाल्प मौल्यं । नव्यं वस्त्रनैव सूक्ष्मं कदापि क्षौमे तस्मिन् का कथा किंचनस्य । तैलाभ्यंगं वत्सरस्यैकवारं नैतस्यास्ति प्राज्यमाज्यं कथंस्यात् । कालेकालेलभृतेनास्यभुक्तं लब्धंचेत्तद्भुज्यते हंत भूमौ । पात्रा भावदेकदा नार्चितेपि क्षुद्बाधाया: शांतिमेवालमिष्ट । छिन्नेवस्त्रे भिन्नपानीयपात्रे जीर्णस्थल्यां वस्युभिर्नीयमाने । प्रागाकृष्णं भाविकौपीनमस्य विष्णोरेको वासरो वर्धमाने लोके क्लृप्त: पंचषस्तस्यचेहे ॥ (रा वि.)

லக்ஷ்மீநாராயணனின் ஆடல்பாடல்களினால் மகிழ்ந்து ஏழ்மையிலும் பகவந்தனனின் ரூபத்தைக் கண்டு வாழ்க்கைப் பாதையில் நடந்தனர்.

**8. ஸுதீந்திரரிடம் வித்யாப்யாஸம் :**

பிறரின் ரக்ஷணையை ஏற்க மறுக்கும் வெங்கடநாதர் குழந்தை லக்ஷ்மிநாராயணனின் ரக்ஷணையின் நோக்கத்துடன் ஸரஸ்வதியம்மாளின் யோசனைப்படி சது:சாஸ்திரங்களில் உயர்ந்த க்ரந்தங்களை அத்யயனம் செய்யும் உத்தேசத்துடனும் குலகுருகளான ஸ்ரீ ஸுதீந்திரதீர்த்தரிடம் அடைக்கலம் வேண்டி சிஷ்யர்களுடன் கும்பகோணத்திற்கு வந்து தங்கினார்[1], ஸ்ரீ ஸுதீந்திரதீர்த்தர் வெங்கடநாதரைப் போன்ற மஹாபண்டிதர் தம் சிஷ்யராகக் கிடைத்ததற்கு மிக்க மகிழ்ந்து அவரது குடும்பத்தின் ஜீவனத்தின் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொண்டு ஸகல வஸதிகளையும் ஏற்பாடு செய்து கொடுத்தார்.

ஆசார்யர் குரு ஸுதீந்திரரிடம் வ்யாகரணம், மஹாபாஷ்யம். ஜயதேவனின் வியாக்யானம், பட்ட மற்றும் ப்ரபாகர மீமாம்ஸம் பாமதி மற்றும் ஸ்ரீ வ்யாஸராஜரின் சந்த்ரிகா க்ரந்தங்களை அத்யயனம் செய்ய வாரம்பித்தார்.[2]

ஆசார்யர் பொழுது விடிவதற்கு முன்பே உஷா காலத்தில் எழுந்து ஸந்தியாவந்தனம், தேவதார்ச்சனைகளை நிறைவேற்றி ஸ்ரீ ஸுரேந்திரதீர்த்தரின் ஸம்ஸ்கிருத விச்வவித்யா பீடத்தில் முதல் ஜாமத்தில் வேதாந்த சாஸ்திரத்தையும் இரண்டாவது, மூன்றாவது ஜாமங்களில் வ்யாகரண, தர்க்க சாஸ்திரங்களை, நான்காவது ஜாமத்தில் மீமாம்ஸா சாஸ்திரத்தையும் ஏராளமான சிஷ்யர்களுக்குப் பாடம்

---

1. देशे तस्मिन् भूमिभूषायमाणे कुर्वन् वासं कुंभकोणे सुधीन्द्रं ।
दृष्ट्वानित्यं मानि तस्तेन विद्याभ्यासोद्युक्तो वेंकटार्यो विशेष्य ।
(रा.वि.)

2. शाब्दं भाष्यं जायदेवीं च टीकां भाट्टं तंत्रं भामति गौरवंच ।
व्यासार्योक्तां चंद्रिकां वेंकटार्यं - पयद्वेयं तत्तदभ्यस्यतिस्म ॥

சொல்லிக் கொண்டு குருகளின் அன்புக்கும், மதிப்பிற்கும் பாத்திரரானார்.[1]

9. வாதி திக்விஜய ஸன்மானம் (கௌரவம்) :

வெங்கடநாதர் ஸுதீந்திரருடன் ஸஞ்சாரக்ரமத்தில் ராஜமன்னார்குடிக்கு ஸ்ரீ கிருஷ்ண தரிசனத்திற்காகச் சென்றார். அப்பொழுது கோவிலில் அநேக சிஷ்யர்களுடன் கூடிக்கொண்டு, அத்வைத தத்வ உபந்யாஸம் செய்து கொண்டிருந்த சைவ ஸந்யாசிகளொருவரைக் கண்டார்.[2] ஆசார்யர் அவருடன் வ்யாகரணமஹாபாஷ்யத்தில் வாதம் செய்து வெற்றியடைந்தார். இதற்கு முன் எங்கும் கண்டிராத மகத்தான திறமையைக் காண்பித்த வெங்கடநாதரைக் கண்டு ஆனந்த மடைந்து ஸ்ரீ ஸுதீந்திரதீர்த்தர் பண்டிதர்களின் சபையில் ஆசார்யருக்கு "மஹாபாஷ்யாசார்யர்" என்னும் வித்வத்திற்குத் தகுந்த விருதையளித்து கௌரவித்தார்.[3]

மற்றொரு முறை ஸ்ரீ ஸுதீந்திர தீர்த்த ஸ்ரீபாதங்களவர்கள் ஸஞ்சாரக்ரமத்தில் மஹா ஸமஸ்தானத்துடன் தஞ்சாவூருக்கு திக் விஜயம் செய்யும் பொழுது ஸ்ரீயவர்களின் ப்ரிய சிஷ்யரும் தஞ்சாவூரரசனுமான ரகுநாத பூபாலன் குருவான ஸுதீந்தர தீர்த்தரைச் சகல அரசு மரியாதைகளுடன் எதிர் கொண்டு கௌரவம் மரியாதைகளுடன் வரவேற்று அரண்மனைக்கு அழைத்துவந்து நன்றாக ஸேவை செய்தான்.

---

1. प्रात: स्नात्वा साधुवेदांत भाष्यं शाब्दं पश्चात्तर्कशास्त्रं ततस्स: ।
पूर्वं तंत्रं चावद्वेंकटार्यो तुर्यो यामे कांश्चिदब्दाव नवंणीत् ॥

2. द्रष्टुं कृष्णं दक्षिणद्वारकोश प्राप्तस्साकं वेंकटो देशिकेन ।
मायावादिव्रातमध्ये निषण्णं कंचिद्भिक्षुं दृष्टवान् वावदूकम् ॥
(रा.वि.)

3. दृष्ट्वा सर्वं देशिक: श्री सुधींद्र: प्रागज्ञातं कोशलं शब्दभाष्ये ।
प्राचीनारव्यां तां महाभाष्य पूर्वां प्रादा दस्मै श्रृण्वतां पंडितानां ॥

அப்பொழுது ராஜசபையில் அநேக பண்டிதர்கள் ஆஸ்தான வித்வான்களாக வாழ்ந்திருந்தார்கள். கல்வி யறிவிற்குத் தாய் வீடாக விளங்கிய தஞ்சாவூருக்கு எழுந்தருளிய ஸ்ரீ ஸுதீந்திரதீர்த்தர் வழக்கம்போல் ஆஸ்தான பண்டிதோத்தமர்களின் வித்வத்தை பரீக்ஷிக்க மஹாஸம்ஸ்தானத்தின் பண்டிதர்களை ப்ரேரேபித்தார். அப்பொழுது ஸ்ரீயவர்களின் விசேஷ அன்புக்கு பாத்திரரான வெங்கடநாதாசார்யர் தலைமையில் பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தில் பூர்வபக்ஷம் செய்தார். பூர்வ மீமாம்ஸா கோவிதரும் யக்ஞ சிலருமான அனேக பண்டிதர்கள் வெங்கடநாதருடன் நான் முன்னே நான் முன்னேயென்று வாக்யார்த்தம் செய்து வெங்கடநாதாசார்யரின் சக்தி பொருந்திய வாதத் திறமையின் முன்பு நிற்க முடியாமல் ஒவ்வொருவராகத் தோல்வியடைந்தனர்,[1] இவ்வாறு வாதத்தில் ஆஸ்தான பண்டிதரெல்லாம் தோல்வியடைந்து கொண்டிருந்தபொழுது "சுல்பஸூத்ரத்திற்கு (शुल्व सूत्र) வ்யாக்யானம் செய்து கீர்த்தி பெற்றிருந்த உத்தம பண்டிதரொருவர் வெங்கடநாதார்யருடன் வாதத்திற்கு வந்தார். அப்பொழுது "काकतालीय" (காகதாலிய) என்னும் பதத்தைப் பற்றிய விஷயம் வந்தபொழுது அதன்மீது பெரிய வாக்கு வாதமே உண்டாயிற்று. இறுதியில் வெங்கடநாதரின் வாக் வன்மையின்முன்பு அந்த ப்ரஸித்தமான பண்டிதோத்தமரின் வாதம் நிற்காதென்ற நிலைவந்து அவர் தோல்வியடைந்தார். இதைப்போல வெங்கடநாதாசார்யர் "तप्तमुद्रांकन" தப்தமுத்ராதாரண விஷயத்திலும் ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தரின் "चक्रमीमांसा" என்னும் அஸாதாரண க்ரந்தத்தின் ஆதாரம், ச்ருதி-ஸ்ம்ருதிகளின் உதாரணங்களுடன் அநேக வாதிகளை வென்றார். இவ்வாறு ராஜ ஆஸ்தானத்தில் விஜய பரம் பரையைப் பெற்ற வெங்கடநாதாசார்யரின் ப்ரகாண்ட பாண்டித்யம், தடைசொல்ல முடியாத (எதிர்க்கமுடியாத)

---

1. तजापुर्यामनेवा शुल्ब सूत्रं व्याख्यातासं वावदूकान् जयंतं राज्ञो विद्वान् यज्ञनारायणेऽर्था शीलोत स स्तं ननंदाति मात्रं ॥

(रा.वि.)

வாக் வன்மையுள்ள ப்ரமாணங்களினாலும், அஸாதாரண மான திறமையினாலும் செய்யும் வாதத்தைக் கண்டு வாதத்தின் நடுவராக உள்ள தஞ்சாவூரின் மந்திரிகளும் உத்தம பண்டிதர்களும், வித்யா போஷகருமான ஸ்ரீ யக்ஞநாராயண தீக்ஷிதர் மிக்க மகிழ்ச்சியடைந்து வெங்கட நாதாசார்யரை வெகுவாகக் கௌரவித்தார்.[1] இதனால் ஸ்ரீ ஸுதீந்திரதீர்த்தரவர்களுக்கு உண்டான ஆனந்தம் வர்ணிக்க முடியாததாயிற்று. தஞ்சாவூரரசனான ரகுநாத பூபாலன் தானே கவியும் உத்தம பண்டிதனுமாவான். அவன் தனது குருவின் அன்பார்ந்த சிஷ்யரான வெங்கட நாதரின் இந்த வெற்றிப் பரம்பரையைக் கண்டு மிக்க மகிழ்ச்சி கொண்டு வெங்கடநாதரை விசேஷமான முறையில் கௌரவப்படுத்தினான்.

இவ்வாறு வெங்கடநாதாசார்யர் தஞ்சாவூரில் அநேக வாதிகளை வென்று ஸ்ரீ ஸுதீந்திர தீர்த்தரை பரமானந்தத்திலாழ்த்தி அவரைத் திகைக்கும்படி செய்தார்.

## 10. க்ரந்தமியற்றுதல்:

மஹாஸமஸ்தானம் கும்பகோணத்திற்கு வந்த பிறகு குருவர்யரின் ஆணைப்படி மூல குருகளான ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத் பாதாசார்யரைப் பற்றி ஸ்ரீ நாராயண பண்டிதாசார்யர் இயற்றியுள்ள "अणुमध्वविजय" (அணுமத்வ விஜய), (प्रमेयनवमालिका) ப்ரமேய நவமாலிகா க்ரந்தத்திற்கு மிக மிக உத்தமமான வ்யாக்யானம் செய்து ஸ்ரீ ஸுதீந்த்ர தீர்த்தருக்கு ஸமர்ப்பித்தார். ஆசார்யரின் வ்யாக்யானம் செய்யும் திறமையைக் கண்டு மகிழ்ச்சியடைந்த ஸ்ரீஸுதீந்திர தீர்த்தர் வெங்கடநாதரை சிறந்த முறையில் கௌரவித்து அவரிடம் இன்னும் அதிக அன்பும் மரியாதையையும் செய்து வந்தார். ஆசார்யரை குரு ஸுதீந்திரர் ஒரு நொடிகூட விட்டுப் பிரிய முடியாதபடி அன்பும் வாத்ஸல்யமும் வளர்ந்தன.

---

1. कालो नास्मिन् काकतालीय शब्दे जेतारं तं याय जूकान् कवीन्द्रान् ।
तस्यां पुर्यां तप्तमुद्रांकने च प्रौढं मेने यज्ञनारायणस्तम् (रा.वि.)

ஸ்ரீ வெங்கடநாதாசார்யர் (ஸ்ரீ ராகவேந்திர குரு ஸார்வ பௌமர்) தமது பூர்வாச்ரமத்தில் இயற்றிய க்ரந்தம் 'अणुमध्वविजय' (அனு மத்வ விஜயம்) ஒன்றே. இந்த ஒரே க்ரந்தம் இவரின்-க்ரந்தமியற்றும் பாண்டியத்யம் திறமைகளுக்கு நாடெங்கிலும் கீர்த்தியைத் தேடித் தந்தது வித்வன்மணிகள் இந்த மஹான் வருங் காலத்தில் ஸாஹித்ய ரசனை (இலக்கியம் இயற்றும் திறமை) யினால் த்வைத ஸித்தாந்தத்தை நிரந்தரமாக, சூர்ய சந்திரருள்ளவரையில் நிலை நிற்கும்படி விளங்கச் செய்வார் என்று அவரைப் புகழ்ந்தனர். அவ்வித்வான்களின் பவிஷ்ய வாணியானது ஸ்ரீ வெங்கடநாதாசார்யர் ஸ்ரீராக வேந்த்ர குரு ஸார்வபௌமராக விளங்கி ஸத்யமாக ப்ரதிபலித்து "अद्य श्री राघवेंद्राद्विलसति फलितो मध्व सिद्धांतशाखी" । என்னும் திக்கெட்டிலும் பரவிய கீர்த்திக்குக் காரணமா யிருப்பதை இன்று யாவரும் மனதில் நினைக்க வேண்டி யுள்ளது.

## 11. ஸந்யாஸி ஆவதற்கு அழைப்பு :

ஸ்ரீ ஸுதீந்திரதீர்த்தருக்கு ஒரு நாள் கனவில் ஸ்ரீமூல ராம·வேதவ்யாஸர், ஸ்ரீமதாசார்யர் இவர்கள் தோன்றி ஹம்ஸநாமக பரமாத்மாவிலிருந்து இடைவிடாது நடந்து வந்துள்ள ஸ்ரீமதாசார்யரின் த்வைத ஸாம்ராஜ்ய திக்விஜய வித்யா ஸிம்ஹாஸனத்திற்கு ஸ்ரீ வெங்கடநாதாசார்யரே அருகதையுடையவரென்று அதற்காகவே அவர் அவதரித் திருப்பதாகவும் அவருக்குப் பரமஹம்ஸ ஆச்ரமத்தை அளித்து 'श्री राघवेंद्रतीर्थ' (ஸ்ரீ ராகவேந்த்ர தீர்த்தர்) என்னும் பெயரினால் பட்டாபிஷேகம் செய்ய வேண்டு மென்று ஆணையிட்டு மறைந்தனர். ஸ்ரீ மூலராமர் ஸ்ரீ பாதராயணஸ்வாமி, ஸ்ரீமதாசார்யர் இவர்கள் யாவரும் தமது மனதிலிருப்பதையே ஆக்ஞாபித்துள்ளனரென்று ஸ்ரீஸுதீந்த்ர தீர்த்தருக்கு பரமானந்தமாயிற்று. வெங்கட நாதரைத் தனிமையில் தன் அருகே அழைத்துத் தனக் குண்டான கனவின் விவரத்தைத் தெரிவித்துப் பரமஹம் ஸாச்ரமத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று வெங்கட

நாதரிடம் பிரஸ்தாபித்தார். அப்பொழுது வெங்கடநாதா சார்யர் சொன்னது :

"क्वाहं त्वातः कुत्र वा वेदविद्या साम्राज्यं ते क्वापि विद्याहमायं?" குருவர்யரே! தாங்களெங்கே? தமது வித்யாவைபவ மெங்கே? அல்பக்ஞான (அற்பஞானமுடைய) நானெங்கே? வித்யா ஸாம்ராஜ்யத்தில் அமர யோக்யதை, அருகதை எனக்குள்ளதா என்ன? என்பதாக விஞ்ஞாபனம் செய்து "बाला भार्या बालको नोपनेतः। बालश्चाहं नाश्रमे मेऽस्ति वांछा ॥" ஸ்வாமி, எனது பத்னி ஸரஸ்வதி இன்னும் மிகச்சிறு பிராயமுள்ளவள். நானும் இன்னும் பாலகனாகவே இருக்கிறேன். எனது குமாரன் லக்ஷ்மிநாராயணனுக்கு இன்னும் உபநயனம் கூடச் செய்யவில்லை. எனக்கு ஸந்நியாஸியாக மனமில்லை. ஆகையால் எனக்கு இச்சந்யாஸம் வேண்டாம். இவ்வளவு விஞ்ஞாபனம் செய்து கொண்டும் கூட என்னைப் பலவந்தப்படுத்தினால் மடத்தை விட்டு வெளியேறி விடுகிறேன். (निर्गमिष्याम्येव नूनम्) தமக்குச் சேவை செய்துகொண்டு பாட ப்ரவசனங்களில் ஈடுபட்டு மடத்தில் இருப்பது எனது தலையில் எழுதப்பட வில்லையென்றறிந்து நான் தம்மைவிட்டு அகல வேண்டிய தாயிருக்கும். தயவு செய்து என்னை நிர்பந்தம் செய்யா தீர்கள் என்று வினயத்துடன் விண்ணப்பித்துக் கொண்டார். மறுபடியும் தனிமையில் ஸ்ரீ ஸுதீந்திரர் பலவிதமாக உபதே சித்தும் அதைக் கேட்டும் கூட கேட்காதவர் போல வெங்கட நாதர் மௌனமாக வீட்டிற்குத் திரும்பினார்.

### 12. வாக்தேவியின் தரிசனமும் மற்றும் அவள் உபதேசமும் :

மடத்திலிருந்து வீட்டிற்கு வந்த ஆசார்யருக்குச் சமாதானமேயில்லை. அவருடைய மனதில் சிந்தனைகள் எழுந்தன. "குருவர்யர் ஸந்நியாஸம் ஏற்றுக்கொள்ள வேண்டுமெனச் சொல்லியிருக்கிறார். எனக்கோ விருப்ப மில்லை. குருவின் வார்த்தைகளை மீறினால் அவர் சாபம் கொடுக்கக்கூடும். பத்னி ஸரஸ்வதி இன்னும் ஒன்றும் அறி யாத கபடமற்றவள். பாலகன் லக்ஷ்மிநாராயணன் பச்சிளங்

குழந்தை. எனது கஷ்டத்திலும் தரித்திரநிலையிலும் சமப் பங்கு ஏற்கும் ஸரஸ்வதியை எவ்வாறு விடுவது? நான் ஸந்நியாஸி ஆனால் .....ஆனால் ..பிறகு மனைவி மக்களின் கதியென்ன? இனி செய்ய வேண்டிய கடமையென்ன?'' இவ்வாறு பலவித யோசனைகளில் மூழ்கின ஆசார்யருக்கு உணவே அருந்தப் பிடிக்கவில்லை. அவ்வாறே சித்தா க்ராந் தராய் அமர்ந்திருக்கிறார். அன்பு மனைவிக்கு இந்த விஷயத்தைத் தெரிவிக்க வாய் வரவில்லை. பாவம், ஸரஸ்வதியம்மாள் பதியின் இந்த நிசப்தமான மௌனம், ஆழ்ந்த சிந்தனைக்கு காரணம் என்னவென்று தெரியாமல், கேட்கவும் தைரியமில்லாமல் மனதிநுள்ளேயே நொந்து கொண்டு குழந்தை லக்ஷ்மிநாராயணனுடன் ஒரு மூலையில் உட்கார்ந்திருக்கிறாள். எவ்வளவு நேரமாயிற்றோ தெரியாது; தன்னை மறந்து தூங்கி விட்டாள்.

ஆசார்யர் யோசித்துக் கொண்டே உட்கார்ந்திருக் கிறார். இரவு கடைசி ஜாமத்தில் பாதிநேரமும் கழிந்து விட்டது. இருந்தாற்போல் ஒரு மின்னல் மின்னுவதைப் போன்று ஒரு தெய்வீக ஒளி வீசிற்று. அதைப் பார்த்த ஆசார்யர் திடுக்கிட்டார். இதென்னவென்று ஆச்சரியத்துடன் பார்க்கிறார். தம்மெதிரில் ஸர்வாலங்கார பூஷிதளான பரம சுந்தரமான ரூபலாவண்யமுள்ள தேவி ஒருவர் கையில் வீணையுடன், புன்முறுவலுடன் நின்றிருக்கிறாள்! இதென்ன கனவா அல்லது ப்ரமையா? என்று ஆசார்யர் தரையில் கைதட்டினார்! இல்லை, எச்சரிக்கையுடன் தானிருக்கிறார்!! அப்படியானால் இந்தத் தெய்வலோக அழகி யார்? என்னைத் தேடிவரக் காரணம்? என்று யோசித்துக் கொண்டிருக்கையிலேயே அந்த தேவி மென்மை யான இனிய குரலில் பேச ஆரம்பித்தாள்:

''பண்டிதோத்தமரே! குமார, வெங்கடநாத! ஸ்ரீ ஆனந்த தீர்த்தருக்குப் பிரியமுள்ளவளான[1] என்னை வித்யாலக்ஷ்மி என்று அறிவாய்! ஸ்ரீ மத்வாசார்யரினால் உனது குரு ஸ்ரீ ஸுதீந்திரர் வரையிலும் எல்லா யதிச்ரேஷ்டர்

---

1. तस्माज्जातानंदतीर्थप्रियाहं विद्यालक्ष्मीं विद्धि मां विद्वदाद्य ।

களும் என்னைக் காப்பாற்றிக் கொண்டு வந்தனர். உனது குருவிடம் நான் இன்னும் இரண்டு[1] வருஷங்கள் மட்டும் வசிப்பேன். ஸ்ரீ மூலராமர் பூஜை ஏற்றுக் கொள்ளும் பொழுது நான் அங்கு வாஸம் செய்யும்படி தந்தை பாதராயணர் எனக்கு ஆணையிட்டுள்ளார். அந்த மூலராமனை ஸந்யாஸிகள்தான் பூஜை செய்ய வேண்டு மென்னும் நியமமுள்ளது. ஆகையால் நான் அவரிடம் வாஸம் செய்கிறேன்.[2] நான் இன்னும் இரண்டு வருடம் கழிந்தால் ஆச்ரயமற்றுப்போய் விடுவேன் (காப்பாற்று பவரில்லாமல் போய் விடுவேன்). நீ இப்பொழுது ஸந்யாஸாச்ரமம் ஏற்று எனக்கு ஆச்ரயமளிக்க வேண்டும் (என்னைக் காப்பாற்ற வேண்டும்); உன்னை அண்டி வந்துள்ள நான் கனவிலும் பிறரை நினைக்க மாட்டேன்.[3] நீ இப்பொழுது ஸந்யாஸியாகாவிட்டால் வேத விசார பூர்ணமான வைஷ்ணவ ஸம்ப்ரதாயமே நஷ்டமாகி விடும்.[4] ஸந்நியாஸி ஆகும் உன்னால் அநேக மாபெரும் காரியங்கள் நடைபெற வேண்டியுள்ளன. ஆசார்யரே! வேதத்ரயங்களுக்கு வ்யாக்யானம், ந்யாயஸுதாவிற்குப் 'பரிமளா' இயற்று தல், மற்ற வைதிக ஸாஹித்யத்திற்கு விவரணபர க்ரந்தங்களை இயற்றவேண்டியதாக உள்ளது. இவ்வாறு ஸத்க்ரந்தரசனை செய்து நீ என்னைப் போஷிக்காவிட்டால் எல்லாமே நஷ்டமாகி விடும். உனது மகிமையைக் காண்பிப்பதன் மூலமாக நீ பகவந்தன் இருக்கிறான் என்பதை ஸ்தாபிக்க வேண்டும். உன்னால் தத்வம்,

---

1. "जानीहित्वं वेंकटाचार्य त्वदार्यो वासोयन्मे वत्सरद्व मेव" ।
तद् व्याख्याने लब्धवर्णो न चास्ति विद्वत्संघे नैव भावी त्वदन्य: ॥

2. श्रीरामार्चा पूज्यते येन तस्मिन् वासो यन्मे कल्प यद् व्यास देव: ।
कर्मार्दीद्रयैरेव पूजापि क्लप्ता तस्मात्साहं तेषु नित्यं वसामि ॥

3. संप्राप्ता त्वां न तैजामि क्षणं वा स्वप्नेवाहं न स्मराम्यन्य मिशुम् ॥

4. नोचोऽलुंपे नित्यवाचां विचार्यै: साकं लोके वैष्णव: संप्रदाय: ।
(रा.वि.)

தர்மம், கலாச்சாரங்கள் வளர வேண்டும். தன்னை உயர்த்திக்கொள்ள வழிதெரியாது பவபந்தனத்தில் சிக்கி (உலக மாயையால் கட்டப்பட்டு) உழன்று கொண்டிருக்கின்ற மனித இனத்தை நீ காப்பாற்ற வேண்டியதாகியுள்ளது. வியாதியின் உபத்திரவத்தினால் நொந்துபோயிருக்கும் ஏழை, தரித்திரர், நசுக்கப்பட்டவர்களுக்கு சாந்தியையும் அமைதியையும் அளித்துக் காப்பாற்றவேண்டியுள்ளது. பலவித கஷ்டங்கள், உபத்திரவங்கள், தரித்திரம் இவை களினால் அவதிப்படுபவர்களுக்கு வேண்டிக்கொள்ளும் வரங்களை அளித்துக் காப்பாற்ற வேண்டியுள்ளது. ஜனங் களுக்குச் சுகம், அமைதி, சமாதானம் முதலியவைகளை ஏற்படுத்தி பாமர ஜனங்களில் தர்ம உணர்ச்சிகளை ஊக்கு வித்து, தர்ம விழிப்பை உண்டுபண்ண வேண்டியதாயுள்ளது. மனிதகுலம் காப்பாற்றப்பட்டு, உய்விக்கப்பட்டு உலக நன்மை ஏற்பட வேண்டும். அந்த மாபெரும் காரியத்திற்கு நீ ஒருவனே திறமையுள்ளவன்! உலக க்ஷேமத்தின் பொருட் டாகவே உனது அவதாரம்!! ஸந்யாஸியாவது உன் தலையில் எழுதப்பட்டுள்ளது. உன் வசமாவது எனது தலையெழுத்து. இதைத் தவிர்க்க யாராலும் முடியாத காரியம்.[1] ஸ்ரீ ஹரியின் சிறந்த பக்தனும் ஞானியும், விச்வபந்துவுமான நீ இந்த மாதிரி தைரியம் இழப்பது உசிதமல்ல. உலக நன்மைக்காக நீ முன்வரத்தான் வேண்டும்! குமாரா! எழுந்திரு! ஸந்நியாஸாச்ரமத்தை ஏற்று வித்யாஸாம்ராஜ்யலக்ஷ்மிக்கு உடையவனாவாய்![2] நான் எப்பொழுதும் உன்னிடமே நிலைத்து வெற்றி-கீர்த்தி முதலியவற்றை பெற்றுத் தருவேன்.'' என்று சொல்லி வாக்தேவி வெங்கடநாதருக்குத் தனது மந்த்ரத்தை உப தேசித்து ஆசார்யரின் தலைமீது தனது அம்ருதஹஸ்தத்தை வைத்து ஆசீர்வதித்து பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே கண்மறைவானாள்.[3]

---

1. विद्यायत्तं ते यतित्वं न शक्यं त्यक्तुं प्राप्तुं त्वद्वशत्वं ममापि ॥

2. तस्मादंगीकृत्य कर्मंदिभावं राजा विद्याराज्यलक्ष्म्यं भवत्वं ॥

3. इत्युक्त्वा सा मंत्ररहस्योपदिश्य स्वीयं देवी पश्यंतोंतर्दधेद्धा ॥

தேவியின் தரிசனம், உபதேசங்களினால் ஆசார்யரின் தேகம் புல்லரித்தது. தொண்டை அடைத்தது. பக்தி மேலீட்டினால் ஆனந்தக் கண்ணீர் பெருக ஆரம்பித்தது. அதுவரையிலிருந்த மனோ அதைரியம் மாயமாய் மறைந்தது, காரிருள் நீங்கி திவ்ய ஒளிமயமான மார்க்கம் காணப்பட்டது. மகிழ்ச்சியுடன் ஆசார்யர்—"ஆஹா! நானெப்படிப்பட்ட பாக்யசாலி! ஸாக்ஷாத் ஸகலகலா வல்லியான ஸரஸ்வதி தேவியே எனக்குத் திவ்யதரிசனம் கொடுத்திருக்கிறாளே! எப்படிப்பட்ட கிருபை செய்திருக் கிறாள் அந்தத்தாய் என்மீது? நானே போற்றத் தகுந்தவன்! வாக்தேவியே! உனது ஆணைப்படியே நடந்து கொள்ளு வேனம்மா! என்று மனதுக்குள்ளேயே சாரதா தேவியை நமஸ்கரித்தார். இது முடியும் தறுவாயில் சூர்யனும் உதய மானான்.

ஆசார்யர் காலை அனுஷ்டானங்களைச் சீக்கிரமாகவே முடித்துக்கொண்டு மடத்திற்கு விரைந்தார். குருவிடம் நடந்த விருத்தாந்தங்களை ஆதியோடந்தமாக விக்ஞாபனம் செய்தார். குருவிற்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையே யில்லை. சிஷ்யரை அணைத்து ஆலிங்கனம் செய்து கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்து "ஆசார்யரே, நீரே போற்றத் தகுந்தவர். ஸாக்ஷாத் பாரதீதேவியே உமக்கு தரிசனமருளி நேரில் காணும் பாக்யம் கிடைத் துள்ளது. உமக்குச் சமமானவர் வேறு யார் உள்ளனர்? இனி கவலையை விடும். லக்ஷ்மிநாராயணனுக்கு உபநயனம் செய்துவைத்துவிட்டு ஸந்யாஸத்திற்கு தயாராவீர் என்று சொல்லி, உபநயனத்திற்குத் தேவையான பணம்-பொன், வஸ்திரம், ஆபரணங்கள் முதலியவைகளைக் கொடுத்து அனுக்ரஹம் செய்தனுப்பினார்.

வெங்கடநாதாசார்யர் அண்ணன் குருராஜாசார்யரை அழைத்துக்கொண்டு அவரது மேற்பார்வையில் புத்திரன் லக்ஷ்மிநாராயணனுக்கு உபநயனத்தைச் சிறப்பான முறை யில் நடத்தினார். உபநயன உற்சவத்தின் கோலாகலங்கள் முடிந்த பிறகு அண்ணன் குருராஜாசார்யருக்கு

ஸ்ரீஸுதீந்திரர் தமக்குப் பரமஹம்ஸாச்ரமம் அனுக்கிரஹிக்கப் போகும் விஷயத்தைத் தெரிவித்தார். குருராஜாசார்யர் பரமாநந்த மடைந்து தனது சம்மதத்தை அளித்தார். பிறகு அன்பு மனைவியை யழைத்து மிக்கக் கருணையுடன் அவள் தலையைத் தடவிக்கொடுத்து தழு தழுத்த குரலில் பேச முடியாதவராய் மிகக்கஷ்டத்துடன் 'ஸ்ரஸ்வதி' என்று மெதுவாகப் பெருமூச்சு விட்டார். ஸரஸ்வதியம்மாள் பதியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஆசார்யர் சொன்னார் :

வெங்கடநாதர் : ஸரஸ்வதி எனது வார்த்தை ஒன்றை நிறைவேற்றுவாயா ?

ஸரஸ்வதி : (தலைவணங்கி) ஸ்வாமி, நான் தங்களது பாதங்களின் அடிமை. தங்கள் ஆணையை நிறை வேற்றுவதே எனது கடமை, தர்மம். அதே எனது வாழ்க்கையின் லக்ஷியம் !

வெங் : (புன்முறுவலுடன்) இந்த மனோ தைரியம் என் வார்த்தைகளைக் கேட்ட பிறகும் உன்னிடம் நிலைக்குமானால் ........ஸந்தோஷம் !

ஸ : பதியின் சொல்லை மீறும் பாவியா ஸ்வாமி நான் ?

வெங் : நீ பரம பதிவ்ரதை, பதிபக்தியுள்ளவள், அதை நான் அறிவேன் ........ஆனால் நான் சொல்லப்போகும் சொற்களினால் உனக்கு மனம் நோகலாம். அப்பொழுதும் கூட நீ சிரித்த முகத்துடன் என் சொல்லை நடத்திக் கொடுத்தால் அப்பொழுது உன் பதிபக்தி எடுத்துக்காட்டாகக் (ideal) கருதப்படும்.

ஸ: தாங்கள் எனது தெய்வம் ஸ்வாமி! இந்த தாஸிக்குத் தன்னுடையது என்று ஒன்று உண்டா என்ன ? தங்களை விட்டு அகன்று வாழ்வதைக் காட்டிலும் தம்முடைய பாதத்தின் கீழ் மரணமே எனக்கு சௌபாக்யம் ! ஆணையிடுங்கள் ஸ்வாமி !

வெங் : (கருணையுடன்) சீச்சீ ! அமங்கள வார்த்தைகள் சொல்லாதே ஸரஸா ! எனது சொல்லை நிறைவேற்றுவதாக வாக்குறுதி கொடு.

ஸ: (கலவரமும் பயத்துடனும்) எனது பதிதேவா, தங்கள் பாதங்களின் மீது ஆணை ! தங்கள் சொல்லை நடத்திக் கொடுக்கிறேன். சீக்கிரம் சொல்லுங்கள் அது என்ன ?

வெங் ; குருவர்யரின் மறுக்கமுடியாத ஆணை, வாக் தேவியின் கட்டளை ! கடமையின் அழைப்பு, தேவி, நான் ஸந்யாஸம் ஏற்றுக்கொள்ள உனது அனுமதிவேண்டும்.

ஆச்சார்யரின் வார்த்தைகளைக்கேட்ட ஸரஸ்வதி யம்மாள் அடியற்றமரம் போல் சாய்ந்தாள். தலைமேல் பேரிடி விழுந்ததைப்போல் ஆயிற்று. மனம் உடைந்து போனது. உதடுகள் படபடப்பு ! கண்ணீர் ஆறாகப் பெருகிற்று. மனம் நொந்து பெருமூச்சுவிட்டாள். " ஹா, ஸ்வாமி ஸ-ந்-யா-ஸ மா ஸ்வாமி ?

வெங் : ஆம் ஸரஸா ! ஸந்யாஸம் !

ஸ: ஐயோ, தலைவிதியே ! ஸந்யாஸம். ஆம் எனது ஸர்வநாசம்? ஸ்வாமி, தங்களையகன்று நான் உயிருடனிருக்க முடியாது. எனது இந்த வாயினாலேயே ஸந்நியாஸத்திற்கு அனுமதி தர வேண்டுமா ?

வெங் ; நிர்பந்தம் ! ஸரஸ்வதி, உண்மை. என்னைப் பிரியும் துக்கத்தை உன்னால் தாங்கிக் கொள்ள முடியாது. அது எனக்குத் தெரியும். ஜகத்கல்யாணம் (உலக க்ஷேமத் திற்காக) உன் தியாகத்தை, மகத்துவத்தை அறிவாயானால் நீ இவ்வாறு துக்கப்படமாட்டாய். நான் சொல்வதைக்கேள். எனது தீர்மானம் உறுதி. எஞ்சியுள்ளது உனது அனுமதி மாத்திரம் ! உம் ப்ரியே, சொல்லு, மனப்பூர்வகமாய் சம்மதிக்கிறேன் என்று சொல்...ஸரஸ்வதி !

ஸ: (கண்ணீரும் கம்பலையுமாய்) தாங்களே நிச்சயித்து விட்ட பிறகு நான் என்ன சொல்ல முடியும் ! ஸ்வாமி,

உமது மனதின்படி ஆகட்டும். தங்களது பாத ஸேவையைச் செய்யும் பாக்யம் இனி எனக்கில்லாமற் போய்விட்டதே! உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்—என்று பதிதேவனின் பாதங்களில் விழுந்து வணங்கிக் கதறி அழுதுவிட்டாள் பாவம், அந்த ஸரஸ்வதி. அந்தப் பதிவ்ரதா சிரோமணி!

பத்னியைத் தனிமையில் அழைத்து பலவிதமாக ஆறுதல்கள் சொல்லி வெங்கடநாதாசார்யர் பத்னியிட மிருந்து ஸந்நியாஸாச்ரமம் ஏற்க ஒப்புதல் பெற்று, பத்னி-புத்திரர்களின் ரக்ஷணையின் பொறுப்பை அண்ணன் குருராஜாசார்யரிடம் ஒப்புவித்து ஸ்ரீகுருஸுதீந்திரருடன் ஸமஸ்தானஸஹிதம் தஞ்சாவூருக்கு எழுந்தருளினார்.

## 13. ஸந்நியாஸம்-வித்யா ஸாம்ராஜ்யத்தில் பட்டாபிஷேகம்:

வெங்கடநாதாசார்யருக்கு வேதாந்த ஸாம்ராஜ்ய பட்டம் அளிக்கப்போகும் செய்தி கேட்டு தேச தேசங் களிலிருந்து பண்டிதர்கள்—தார்மீகர்கள் தஞ்சாவூருக்கு விரைந்தனர். ஸ்ரீசக ஆண்டு 1543, துர்மதி வருடம், பால் குண சுத்த த்விதியை (கி. பி. 1621) அன்று ஸ்ரீ ஸுதீந்திர தீர்த்தர் தமது ப்ரிய சிஷ்யனான ரகுநாத பூபாலனின் ஆஸ்தானத்தில் எல்லோருடைய முன்னிலையில் வெங்கட நாதருக்கு ஸந்யாஸாச்ரமமளித்து ஸ்ரீ மத்வாசார்யரின் மஹாஸமஸ்தான பரம்பரை பரம்பரையாய் அனுஷ்டித்து வந்த முறைப்படி தனது சிஷ்யரான புதிய யதிகளை வேதாந்த ஸாம்ராஜ்ய திக்விஜய வித்யாசிம்மாஸனத்தில் அமர்த்தி ஸாம்ராஜ்ய பட்டாபிஷேகம் செய்து "ஸ்ரீராகவேந்திர தீர்த்தர்" என்ற நாமம் சூட்டி அவருக்கு மூலராம—திக்விஜயராம—ஜயராம ஸ்வாமிகள் முதலான மஹாஸம ஸ்தானத்தின் விக்ரஹங்களை, வியாஸமுஷ்டிகள், சாஸ்திர க்ரந்தங்களின் பொக்கிஷத்தை அனுக்ரஹித்து, வெண் கொற்றக் குடை, சாமரங்கள், தங்கமயமான அம்பாரி மற்றும் யானை, தங்கப் பல்லக்கு, ராஹுகேதுவாத்யம், தாளஸ்துதி பாடகர் முதலிய ராஜ கௌரவங்களை அர்ப்பித்து

"तस्य नाम स ददे सवाशिषा राजराज इव राजित श्रिया रामभद्र इव भद्रभाजनं तत्कृपेन जगतां हितेरतः ।
श्री सुरेन्द्रवदयं तपस्यया श्री जयीन्द्र इव कीर्ति संपदा विश्रुतोहमिव वादसंगरे राघवेंद्रयतिराठ् ।।"

"குபேந்திரனைப் போல் குறையாத ஐச்வர்யத்துடன் கூடி, ஸ்ரீராமசந்திரனைப் போல லோக கல்யாணத்தில் ஈடுபட்டு, லோகக்ஷேமத்தை செய்துகொண்டு ஸ்ரீ ஸுரேந்திர தீர்த்தரைப் போல் மஹாதபஸ்வியாய், ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தரைப் போல கீர்த்திசாலிகளாய், எம்மைப் போல் வாதவித்யாத் திறமை பெற்று மானவ சமூகத்திற்கு நன்மை கோருபவராய், எல்லோரையும் ரக்ஷித்துக் கொண்டு நமது ஸ்ரீவரகுமாரரான ஸ்ரீராகவேந்திர தீர்த்தர் முன்னேறட்டும்" என்று ஆசீர்வதித்து ரத்னாபிஷேகம் செய்வித்தார். மங்கள வாத்தியங்கள் முழங்கின. வேத மந்திரங்கள், ஸங்கீத நாதம், வாத்யங்களின் இனிய இசை அரண்மனையில் எதிரொலித்தன. பீரங்கி வணக்கம் செய்யப்பட்டது. ஜனங்கள் ஒன்றாகச் சேர்ந்து, "ஜய ஜய ஸ்ரீராஜாதி ராஜ ராகவேந்திர ஸார்வபௌம" என்று கோஷித்தனர். அப்பொழுது ஸ்ரீ ராகவேந்திர யதிராஜர் தேவேந்திரனைப் போல் சிம்மாசனத்தில் காணப்பட்டார். மந்தகாசத்துடன் யாவருக்கும் அபயமளித்தார். கவிகள் உடனடிக் கவிதை இயற்றி அந்த வைபவத்தை வர்ணித்தனர். தஞ்சாவூரின் மஹாராஜா, ராஜ பரிவாரங்கள், நகரவாஸிகள், புதிய யதிராஜருக்குக் காணிக்கைகள் சமர்ப்பித்தனர். அந்த வைபவம், கொண்டாட்டம் இவைகளைக் கண்ணாரக் கண்டவர்களே பாக்யசாலிகள்! வேதாந்த ஸாம்ராஜ்யமான கிழக்குத் திசையில் ராகவேந்திர சூர்யன் உதயமானான்!

அங்கு அவ்வாறிருக்க இங்கு ஸரஸ்வதியம்மாளுக்குப் பதிதேவன் ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தராய் பரமஹம்ஸ பீடாதிபதியான செய்தியறிந்து மிக துக்கத்திலாழ்ந்தாள். மஹாபதிவ்ரதையான அந்த அம்மாள் பதியின் பிரிவைச் சகிக்க முடியாமல் வாழ்வையே முடித்துக் கொள்ள உறுதி

செய்து சொந்தக்காரர் யாருக்கும் தெரியாமல் இரவில் வீட்டின் கிணற்றில் குதித்து உயிரைத் துறந்தாள். ப்ராரப்த கர்ம (ஊழ்வினை)த்தினால் துர்மரணத்திற்கு இலக்காகி அந்த அம்மாளுக்குப் பிசாச ஜன்மம் வந்தது. தனக்கேற் பட்டதுர்கதிக்காக வருந்தி தனது உய்வுக்காக பிசாசு உருவத் துடன் ஸ்ரீ ராகவேந்திரர் முன்னால் வந்து நின்று அழுதாள். தமது பூர்வாச்ரம மனைவிக் கேற்பட்ட துர்கதியைப் பார்த்து அவள் மீது கருணை கூர்ந்து அந்தக் கருணை வள்ளலான குரு கமண்டல தீர்த்தத்தை அந்தப் பிசாசு உருவத்தின் மீது ப்ரோக்ஷணை செய்தார். தமது தபோ சக்தியினால் பிசாசு ஜன்மத்தை விலக்கி நல்லகதி அளித்தார். தமது பூர்வாச்ரம பந்துக்கள் வீட்டில் நடக்கப்போகும் சுபசோபனம் முதலிய கார்யங்களில் ஸரஸ்வதியம்மாளவர்களின் ப்ரீதிக்காக சுமங்கலிகளுக்கு சுமங்கலி ப்ரார்த்தனை செய்து அவர்களுக்கு சௌபாக்ய த்ரவ்யங்கள் அளித்துப் பூஜிக்க வேண்டுமென்று ஆணையிட்டார். இன்றைக்கும் குருவர்யரின் வம்சத்தினர் வீடுகளில் இந்த வழக்கம் நடந்து வருகிறது.

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் இரண்டு வருடகாலம் குரு ஸுதீந்திரரின் சேவையிலீடுபட்டு, அவருடன் தேச சஞ்சாரம் செய்து வந்தார். கடைசியில் ஹம்பியில் தங்கியிருந்த பொழுது ஸ்ரீ ஸுதீந்திர தீர்த்தர் மஹா ஸமஸ்தானத்தை ஸ்ரீ ராகவேந்திரரிடம் ஒப்புவித்து விட்டு, ஸ்ரீ சக ஆண்டு 1545 ருதிரோத்காரி வருஷம், பால்குண கிருஷ்ண திவிதியையன்று (கி.பி. 1623) நாராயணத்யான பரமானார். ஸ்ரீ ராகவேந்திரர் குருவர்யரின் ப்ருந்தாவன ப்ரதிஷ்டை, மஹாஸமாராதனை முதலானவற்றைச் சிறப்பாக நிறை வேற்றி கும்பகோணத்திற்கு விஜயம் செய்தார்.

**ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் :**

ஸ்ரீ ராகவேந்திர குருராஜர் மஹா ஸமஸ்தானாதி பதிகளான பிறகு ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் கும்பகோணத் திற்கு வந்தார். ஸ்ரீ யாதவேந்திர தீர்த்தர் ஸ்ரீ ஸுதீந்திர தீர்த்தரின் பூர்வாச்ரம மருமான் (சகோதரியின் மகன்). க்ஞான, பக்தி, வைராக்ய சம்பன்னரான ஸ்ரீ யாதவேந்திரர்

வைராக்யத்தினால் ஸ்ரீ ஸுரீந்த்ரரிடமிருந்து ஸந்யா ஸாச்ரமம் பெற்று தீர்த்த க்ஷேத்ர யாத்திரையிலிருந்தார். ஆச்ரமத்தில் மூத்தவரான யாதவேந்திரரை நமஸ்கரித்து மஹா ஸம்ஸ்தானத்தை ஒப்புக் கொள்ளும்படி ஸ்ரீ குருராஜர் ப்ரார்த்தித்தார். அவர் ஸ்ரீ ராயரின் உதார குணத்தை மெச்சி ஒரு நாள் ஸ்ரீ மூலராமரின் பூஜை செய்து அதிலேயே த்ருப்தியாகி, இந்த மஹாஸம்ஸ்தானத்தை ஆளுவதற்கு நீங்கள் தான் அருகதையுள்ளவர் என்று ஸ்ரீ குருராஜருக்கு அதை ஒப்புவித்து, ஆசிர்வதித்து, தவம் செய்ய எழுந்தருளினார். ஸ்ரீ குருராஜர் கும்பகோணத்தில் க்ரந்த மியற்றுதல், பாடப்ரவசனம் முதலியன காரியங்களில் ஈடு பட்டு எல்லோராலும் போற்றப்பட்டார்.

## 14. ஸ்ரீயவர்களின் தினசரி கார்யக்ரமங்கள் :

ஸ்ரீ குருராஜரின் உருவம், காரியங்கள், க்ஞானம் அவர் பெயர் எல்லாமே வெகு பவித்ரமானவைகளே. அவருடைய சரீரலக்ஷணங்கள் அவர் தேவாம்சரென்பதை அறிவித்தது. புடம்போட்ட பத்தரை மாற்றுத் தங்கம் போல் தங்கமய மான உடல், களங்கமற்ற ஒளிமயமான முகம், பரமாத் மாவை ஸாக்ஷாத்காரம் செய்து கொண்டதனால் அதொரு விதமான திவ்யதேஜஸ், அவரது முகத்தில் பிரகாசித்தது. விசாலமான அவரது கண்கள் சூர்யனைப்போல் ஒளிவீசினது. காதுகளில் துளசி தளங்கள் வெகு அழகாகப் பொருந்தி யுள்ளன. தீர்க்கமான நாசியின் மீது ஊர்த்வபுண்டரம் சோபித்தது. கமலாக்ஷம், துளசிமாலைகளினால் அவரது ஹ்ருதயம் சோபையுடன் விளங்கிற்று. காஷாய வஸ்திர மணிந்து தண்டகமண்டலங்களைக் கைகளில் ஏந்தி திவ்ய மான பாதுகைகளை அணிந்து கொண்டு குருராஜரின் முகத்தாமரை, வாக்தேவியின் (ஸரஸ்வதியின்) நடன அரங்கத்தைப் போல் பளபளத்தது. ஆஜானுபாஹுகள் (முழங்கால் வரை தொடும் இரு கைகள்) உத்தம புருஷரின் லக்ஷணத்தை அறிவித்தது. ஸ்ரீபாதரின் பாதங்கள் தீர்த்த யாத்திரையின் காரணமாக பவித்ரமடைந்திருந்தன-அவரது தரிசனமே பக்தியை உண்டுபண்ணிற்று. ஸ்ரீயவர்களின்

பாதங்களை நாடிச் சரணடைந்தால் தங்களது உய்வு (உத்தாரம்) மங்களங்களுண்டாகும் என நம்பி யாவரும் நிரந்தரமாக பஜித்துக்கொண்டிருந்தனர்.

தேவஸ்வபாவரான ஸ்ரீ குருராஜர் அன்றாட கர்மாக்க ளெல்லாம் பகவத்ஸேவாரூபமாகவே இருந்தன. குருராஜரின் நித்ய கர்மாக்களை இங்கு வாசித்து மகிழுங்கள்.

கும்பகோண வித்யாமடம், ஓய்வெடுக்கும் வீட்டில் ஸ்ரீ குருராஜர் சாய்ந்து அமர்ந்திருக்கின்றார். ஓய்வு சமயம். பிரம்மருத்ரேந்திராதி தேவதைகளினால் வணங்கப்படும் லக்ஷ்மிபதியின் அனந்த கல்யாண குணங்களைத் திருடிக் கொண்டு, அவன் நிர்குணன், நிராகாரன் (உருவமே யில்லாதவன்) என்று போதிக்கும், வஞ்சகரான மாயா வாதிகள் பிரபஞ்சத்தில் தலைதூக்க முடியாதபடி அமுக்கு வோமென்று பந்தயம் போட்டிருப்பாரோ என்னும்படியாக வஞ்சகரூபமான கட்டிலின்மேல் புலித்தோல்களினால் மூடப் பட்ட மெத்தையின்மீது, ஆலிலைமீது யோக நித்திரை செய்துகொண்டு ஸ்ரீ ஹரி படுத்திருப்பதைப் போல் அவ னுடைய அந்தரங்க பக்தனான யதிசந்திரர் ஸதாஸர்வதா ஸ்ரீ ஹரித்யானத்தில் எச்சரிக்கையுடனிருந்தாலும் தூக்கத்தி லாழ்ந்திருப்பதைப் போல நடித்துக்கொண்டு படுத் திருக்கிறார்.

பொழுது புலர்வதற்கு முன் பஞ்சபஞ்ச உஷா காலம். ஸ்ரீ மடத்தின் பாகவதர்கள் வீணை, புல்லாங்குழல், மிருதங்கம், தாளங்களுடன் இனியகுரலில் ஸ்வர சுத்த மாகவும் தாளக்கட்டுடன் ஸ்ரீ ஹரியின் லீலா விநோதங்களை விதவிதமான ராகங்களில் — மலயமாருதம், பூபாளம், சக்ரவாகம் முதலிய ராகங்களில் பாடிப் பிறகு ஸ்ரீ குரு ராஜருக்கு ஸுப்ரபாதத்தைச் சொல்லிக் கொண்டிருக் கின்றனர்.

"श्रीमध्वमत जलधि पूर्णेंदु एद्देळु
रामपादासक्त योगीश एद्देळु ॥
घन महिम एद्देळु लोकगुरु
श्रीराघवेंद्र नीनेद्देळु, करुणेय एद्देळु ॥
अंबरद होंगिरण मूडतिहनेद्देळु
कंबदिं बंदवन सेवेगेद्देळु ।
अंगबिसि बरुतिप्प भकुतवृंदव पोरेदु
मंगळव करुणिसलु एद्देळु गुरुवे" ॥

*" ஸ்ரீ மத்வமத ஜலதி பூர்ணேந்து எத்தேளு
ராமபாதாஸக்த யோகீச எத்தேளு |
கனமஹிம எத்தேளு லோககுரு
ஸ்ரீராகவேந்த்ர நீனெத்தேளு, கவிகேய எத்தேளு ||
அம்பரத ஹொங்கிரண மூடதிஹனெத்தேளு
கம்பதிம் பந்தவன ஸேவே கெத்தேளு |
அங்கவிஸி பருதிப்ப பகுதவ்ருந்தவ பொரெது
மங்களவ கருணிஸலு எத்தேளு குருவே || "*

**தாத்பர்யம்:** சூரியன் உதயமாகப்போகிறான்; ஸ்ரீ ராகவேந்திர குருவர்யரே! தங்கள் ஸேவைக்காக வரும் பக்தர்களுக்கு மங்களம் உண்டாக்க எழுந்திருப்பீர்.

பாகவதர்களின் இனிமையான சுப்ரபாதம் கேட்டு முனிச்ரேஷ்டர் ஒரு முறை வலது பக்கம் புரண்டார். அங்கேயே காத்து நின்றிருந்த வந்திமாகதர்கள் (புகழ் பாடுபவர்கள்) ஸ்ரீ களவர்களின் விருதாவளிகளைக் கோஷித்து, மது என்ற பெயர் கொண்ட தைத்யனை ஸம்ஹாரம் செய்த ஸ்ரீ நந்த கோபாலனின் பாதத்தாமரைகளின் தியானத்தில் எப்பொழுதும் எச்சரிக்கையுள்ளவராக உள்ள ஞானிச்ரேஷ்டரும், பரமஹம்ஸ சிரோமணிகளுமான ஸ்ரீ குருராஜரைக் காவிய வர்ணனைமுறையில் அவர்முன் நின்று எச்சரித்துக்கொண்டு விக்ஞாபனம் செய்தனர்.[1]

1. இந்தவர்ணனைகள், " ஸ்ரீராகவேந்திர விஜயகாவ்யம் " என்னும் நூலினைப் பின்பற்றி செய்துள்ளோம். —நூலாசிரியர்

ஹே! முனிச்ரேஷ்டரே! எங்கள் யாவருக்கும் மங்கள முண்டாகக் கருணை செய்வீர். தாமரைப் பூக்களைப் போன்ற தங்களுடைய கடாக்ஷங்களை ஜகத்தின் மீது படும் படி செய்யுங்கள். திசைகளெங்கும் வேத பாராயணத்தின் இனிமையான தொனி பரவிக் கொண்டிருக்கத் தனது காந்தி யினால் அஷ்ட திசைகளையும் ஒளிமயமாக்கிக் கொண் டிருக்கும் (சம்பத்தினால் ப்ரகாசமடையச் செய்து கொண்டி ருக்கும்) சூரிய பகவானைப் பாருங்கள். இந்திரனின் சம்மந்தி யான ப்ராசீ (கிழக்குதிசை) என்னும் ரமணி (பெண்) தனது நாயகனான தினமணி (சூரியன்) உதயமாவான் என்று மகிழ்ச்சியுடன் அவனை எதிர்கொண்டழைக்க ஆகாயத்தில் ஒளி (ப்ரகாசம்) என்னும் சப்பரம் (canopy) பிடித்துக் கொண்டு காத்திருக்கிறாள். குருநாதரே! சூரியோதயம் ஆவதற்காக ப்ராசீ சிவப்பு நிறமான நக்ஷத்திரங்களும் முத்துக்களால் நிரம்பி சோபையுடன் விளங்குகிறாள். இந்தக் காட்சி ப்ரபாத காலமென்னும் சிம்மத்தினால் பிளக்கப்பட்ட தமஸ் (இருள்) சமூகமென்னும் யானைக் கூட்டத்தின் மத்தகத்திலிருந்து முத்துக்களுடன் கலந்து பீறிட்டுக் கொண்டுவரும் இரத்தப்ரவாஹம் போல் காட்சியளிக்கிறது. ஆகாயமென்னும் ஸ்ரீராமசந்திரனை ஜயிப்பதற்காக இந்திரஜித்தனென்னும் ராக்ஷஸன் எய்த அந்தகாரம் (இருள்) என்ற நாகாஸ்திரங்களை அழிப்பதற்கு கீழ்த்திசையில் சூரியனின் தேர்ப்பாகனான அருணனின் இளைய சகோதரனான ஸந்தியாராகமென்னும் கருடன் ஆவிர்ப்பவித்துக் கொண்டிருப்பதைப் போல் காணப்படும் இந்த அற்புதமான சுப்ரபாதத்தைக் காணுங்கள். ஸ்வாமி! ஆகாயமென்னும் அகஸ்தியமுனிவர் அந்தகாரமென்னும் (இருள்) சமுத்திரத்தைக் குடிப்பதற்காக உஷாவின் (உஷா காலம்) சம்மந்தியின் சாக்கில் ஸந்தியாராகமென்னும் பத்மராக மணிகளை (மாணிக்கங்களை) மெதுவாக ஒளி வீசும்படி செய்கிறது. இந்த அற்புதக்காட்சியைப் பாருங்கள் ஸ்வாமி! அம்பரமென்னும் வஸ்திரம் இருளினால் நீல நிறமாயுள்ள ப்ராசீதிசையின் முன் பாகத்திலுள்ள ஸந்த்யா ராகம் நீல வஸ்திரத்தின் தங்கமயமான கரையைப் போல்

மின்னிக் கொண்டிருக்கிற வசீகரமான காட்சியைக் காணுங்கள் குருதேவா !

இவ்வாறு வந்திமாகதரின் (புகழ்பாடுபவர்கள்) கவிதையின் மாதுர்யரூபமான ஜல மார்ஜனத்தினால் (நீர் தெளிப்பதனால்) எச்சரிக்கை கொண்டு ஸ்ரீ குரு ராஜர், புலித்தோல் மெத்தையிலிருந்து எழுந்து உட்கார்ந்தார்.

கண்திறந்து எச்சரிக்கை கொண்ட அப்பொழுதைய குரு எப்படிக் காணப்பட்டார் என்பதைக் கவிகள் வர்ணிக்கின்றனர்.

ஜாக்ரதாவஸ்தையின் நியாமகனான ஸ்ரீவிச்வரூபபரமாத்மா, பத்தொன்பது முகங்களுடன் ஸ்ரீகுருராஜரின் நேத்திரங்களில் நின்று, ஜாக்ரதாவஸ்தையையளித்து அவர் ஒரே சமயத்தில் பகவன் மகிமைகளை வர்ணிக்கும் த்வாதச ஸ்தோத்திரம் மற்றும் 18 புராணங்களையும் $(1+18=19)$ கேட்கட்டும். குரு ராஜருக்குத்தனதேயான 19 முகங்களைக் காண்பித்து அனுக்ரஹித்தான் ! அதாவது குருராஜர் எச்சரிக்கை கொண்டு ஒரே சமயத்தில் அநேக பண்டிதர்கள் விளக்கம் செய்துகொண்டிருந்த 18 புராணங்கள் மற்றும் த்வாதச ஸ்தோத்திரங்களைக் கேட்டு பரமானந்தமடைந்தாரென்பது கவியின் கருத்து.

முனீந்திரரான குருராஜர் ஸ்ரீமூல ரகுபதி வேதவ்யாஸருக்கு நமஸ்காரம் செய்து வேத வேதாங்க நிபுணர்களான ஸாது ஜனங்களான ப்ராம்மணோத்தமர்கள் வேதோச்சாரண பூர்வமாகச் செய்தவைதிக ஆசீர்வாதங்களை மிக்க மரியாதையுடன் ஏற்றுக் கொண்டு மகிழ்ந்தார். பிறகு வித்யாமடத்தின் தாழ்வாரத்தில் (Courtyard) சோபித்துக் கொண்டிருக்கும் துளசி ப்ருந்தாவனத்தருகில் சென்று துளசிச் செடியில் ஸந்நிதானம் கொண்டுள்ள லக்ஷ்மிதேவியை வணங்கிப் பிறகு துளசி ப்ருந்தாவனத்தின் நடுவிலிருந்த ரமாரமணனின் கிருபைக்கு முக்கிய பாத்திரரான வாயு புத்திரரான ஹனுமந்த தேவனுக்கு மரியாதைகளுடன் நமஸ்காரம் செய்தார். பிறகு ஸ்ரீ யதிராஜர் திவ்ய பல்லக்கிலமர்ந்து கஜேந்திர

மோக்ஷஸ்துதி முதலான பகவானின் மஹிமைகளை வர்ணிக்கும் ஸ்தோத்ரங்களைச் சொல்லிக் கொண்டு ஸ்ரீ விஜயீந்திர ஸ்ரீபாதரின் ப்ருந்தாவனத்தினருகில் ஓடுகின்ற தமிழ்நாட்டின் தேவ நதியான காவேரியாற்றில் ஸ்நானம் செய்ய மெதுவாக அங்கு எழுந்தருளினார். அக்காலத்திய காவேரி நதியின் காட்சி மிக்க வசீகரமாக இருந்தது.

வஸந்த காலமானதினால் காவேரி வெள்ளத்தினால் நிறைந்து சமுத்திரத்தில் கலந்து கொண்டிருந்தாள். நதியின் இரண்டு புறங்களிலும் மலர்ந்த புஷ்பங்களுடன் கூடிய சம்பங்கி மரங்கள் வரிசையாகச் சோபிக்கின்றன. காவேரி செம்மஞ்சக் குழம்பு போல சிவப்பு வர்ணமுள்ள அலை களுடன் நடனம் புரிந்து கொண்டு ஓடிக்கொண்டிக் கிறாள். அந்த மனோஹரமான, வசீகரமான காட்சி யைப் பரிசிலித்தால் .....வஸந்த காலத்தில் காவேரி— ஸமுத்ரராஜரின் திருமணம் நடப்பதைப் போல திருவிழாக் கோலம் பூண்டு, செம்மஞ்சக் குழம்பு அலைகளுடன் கூடியவளான (நீரோட்டம்) காவேரி மஞ்சள்-குங்கும ஸௌபாக்ய த்ரவ்யங்களினால் அலங்கரிக்கப்பட்டு மெதுவாக நடந்து வருவது போலவும், நதியின் இரண்டு கரைகளிலும் வரிசையாக சம்பங்கி வ்ருக்ஷங்களில் மலர்ந்துள்ள சம்பங்கி புஷ்பங்கள் மணப்பெண்ணை அழைத்து வருவதற்காக இரு புறமும் வரிசையாகப் பிடித்துக் கொண்டிருக்கும் தீபங்களைப் போலும் காட்சியளிக்கின்றன. இப்படிப்பட்ட அழகான நதிக்கரைக்கு குருராஜர் எழுந்தருளினார்.

ஸஹ்யாத்ரி பர்வதத்தில் உற்பத்தியான காவேரி அங்குள்ள அநேகத் தாமரை வனங்களின் வழியாக ஓடி தாமரைப் பூக்களின் மகரந்தங்களுடன் கலந்து ஓடி வருவதினால் அந்த ஜலத்தினால் மகரந்த ப்ரியனான ரங்கநாதனென்னும் மதுகரன் காவேரியில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். அவ்வாறு இல்லாவிடில் ஸ்ரீரங்கநாதன் காவேரியிடம் அன்புகொண்டு அங்கு க்ரீடை செய்து கொண்டிருப்பானா என்ன !

---

(மதுகரன்=தேன் சேகரிப்பவன், வண்டு)

யதிச்சக்ரவர்த்திகளான ஸ்ரீ குருராஜர் இவ்வாறு மகிமை பொருந்திய காவேரி தீரத்திலுள்ள உத்யானவனத்தின் சமீபத்தில் பல்லக்கிலிருந்து இறங்கி, அங்கு மிருத்திகா சௌசம், தந்த சுத்தி முதலியவைகளை முடித்துக் கொண்டார்.

பிறகு ஸ்ரீகளவர்கள் காவேரி நதியில் ஸங்கல்ப விதிப்படி ஆசமனம் செய்து ஸ்நானத்திற்கு இறங்கினார். சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள உத்தமமான மந்திரங்களான ஸ்ரீ நாராயண அஷ்டாக்ஷர, ஸ்ரீவிஷ்ணு ஷடக்ஷர, ஸ்ரீவாஸுதேவ த்வாதசாக்ஷர மந்திரங்களை மும்மூன்று முறை ஜபம் செய்து, ஸ்நானகாலத்தில் ஜபம் செய்வதற்குத் தகுந்த ஸூக்தங்களை ஜபித்து, மிருத்திகாஸ்நானம், அகமர்ஷண ஸ்நானம், ப்ரணவம் மற்றும் புருஷஸூக்தபடன பூர்வகமாக ப்ரோக்ஷணங்களை எப்படிச் செய்ய வேண்டுமோ அந்த க்ரமப்படி செய்து மந்த்ரோதகத்தினால் தேவதா தர்ப்பணங்களைச் செய்து விஷ்ணு பாதோதகத்தை அருந்தினார்.

பிறகு ஸ்ரீ களவர்கள் கௌபீனம் மற்றும் காஷாய வஸ்திரங்களை அணிந்து கோபிசந்தனத்தினால் ஊர்த்வ புண்டரங்கள் முதலிய 12 நாமங்களையும் பஞ்ச முத்திரைகளையும் அணிந்தார். உத்தம மஹிமையுடையவரான யதிச்ரேஷ்டர் அர்க்யப்ரதானம் செய்து ஹ்ருதயத்தில் வேத மாதாவான காயத்ரி மந்திரத்தைத் தரித்துப் பிறகு சிரத்தா பக்தியுடன் மந்த்ர ரத்னமான தாரக மந்திரத்தை, ப்ரணவ மந்திரத்தை மௌனமாக ஜபித்தார். அப்பொழுது குருராஜரின் முகத்தில் காணப்படும் ஸாத்வீக தேஜஸ்ஸு, கம்பீரம், புன்சிரிப்பு, இவைகள் அவரது திவ்யமான தனிச் சிறப்பை எடுத்துக் காட்டின. பிறகு யதிவர்யர் காவேரிக் கரையின் உத்யானத்திலுள்ள "புராண மண்டபத்திற்கு விஜயம் செய்து அங்கு ஸ்ரீ பாதராயண ஸ்வாமிகள் ஸ்ரீமதாசார்யருக்கு அருளிய பரம்பரையாக ஸ்ரீமஹா ஸமஸ்தானத்தில் பூஜிக்கப்பட்ட சுத்த சிலாத்மகமான ஸ்ரீவ்யாஸ முஷ்டிகள் இரண்டையும் பூஜிக்க உத்ஸாஹத்துடன் பண்டித ச்ரேஷ்டரினால் பாகவதம் முதலிய புராணங்களின் வியா

க்யானத்தைச் ச்ரத்தையுடன் கேட்டார். புராணம் கேட்ட பிறகு கமல லோசனனான ஸ்ரீ ஹரிக்குச் சுத்தோதகத்தினால் அபிஷேகம் செய்து கொண்டு, ஸ்ரீ ஹரிக்குப் பாலபிஷேகம் செய்து ச்ரேஷ்டமானதும், மனோஹரமான பாசிப்பயிறு முத்தான்னம் நெய்யுடன் நிவேதனம் செய்து மங்கள ஹாரதி எடுத்தார்.

யோகிச்ரேஷ்டரான ஸ்ரீ குருராஜர் அதற்குப் பிறகு ப்ருந்தாவனாந்தர் கதமாயுள்ள தமது பரம குருகளான ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தருக்கு ப்ரதக்ஷிண நமஸ்காரங்களை சமர்ப்பித்து ரிஷிக்குச் சமானமான மஹாபண்டித ச்ரேஷ்டரான பண்டிதர்கள் சூழ, பிரகாசிக்கும் மணியைப் போலுள்ள பாதுகைகளணிந்து ஸ்ரீ மடத்திற்குப் புறப்பட்டார்.

இவ்வாறு பண்டிதர்கள், தர்மாபிமானிகள் புடை சூழச்செல்லுகையில் ஸ்ரீ க ள வ ரின் முன்பக்கத்தில் ஸ்ரீ மடத்தின் சேவகர்கள், தாளஸ்துதி பாடகர்கள், ஹரிதாஸர்கள் சங்கு, துந்துபி, பேரி, மிருதங்கம், கொம்பு முதலியவைகளினால் தாழ்ந்த ஸ்வரத்தில் ஒலித்துக் கொண்டிருந்தனர். அந்த மஹாத்வனி மற்றும் மட்டுக வாத்யம், தவலவாத்யம், சோபனச்ருங்க வாத்யம், ஜர்ஜர வாத்யம், சக்ரவாத்யங்களின் ஒலியினால் திக்குகள் எதிரொலித்தன. தேவலோகத்தின் கற்பக வ்ருக்ஷமே யதிருபமாக உருவெடுத்து நேரில் பூமியிலிறங்கி வந்திருப்பதைப் போல் ஸ்ரீராகவேந்திர குரு ஸார்வபௌமர் தமது ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்பொழுது பூமியைப் புனிதமாக்கிக் கொண்டு நகர ஊர்வலமாக வருகையில் வழியின் நடுவில் நின்று கும்பேச்வரனுக்கு நமஸ்காரம் செய்து வணங்கிப் பாதசாரிகளாகவே ஜயகோஷத்தினிடையே வித்யாமடத்தை அடைந்தார்.

ஸ்ரீ மடத்தின் சபை கூடும் தாழ்வாரத்தில் (Courtyard) உயர்ந்த பீடத்திலமர்ந்து ஸ்ரீகுருராஜர் சாந்திபாடத்துடன் பண்டித சிஷ்யர்களுக்கு மங்களகரமான ஸ்ரீமதாசார்யரின்

விசேஷாகார கம்பீரநடையில் அர்த்தங்களை விவரித்துக் கொண்டு ப்ரவசனம் செய்து கொண்டு பாடம் சொல்லும் பொழுது இடையிடையே மற்ற தர்சனங்களின் (Philosophy) குயுக்திகளை நிராகரித்து த்வைத ஸித்தாந்த ஸத்தத்வங்களை ஸ்தாபித்தார்.

ஸித்தாந்த தத்வங்களை விவரித்து விளக்கம் கொடுத்துக் கொண்டு, ஸ்ரீ குருராஜர் பரமமங்களமான ஸ்ரீமந் நாராயணன்,—ரமா-ப்ரம்மா-ருத்ரன் இந்த்ராதி தேவதைகளால் வணங்கப் பெற்றவன், அநந்த கல்யாண குண பரிபூர்ணன், தோஷரஹிதன், வேதத்தினாலேயே அறியப்படுபவனான அவன் க்ஞானிகளால் உபாஸிக்கப்படுபவன், அவன் ஸகல ஜீவர்களின் முக்கிய லக்ஷியமான மோக்ஷத்தை அனுக்ரஹம் செய்பவனான மஹாப்ரபு. இதே ப்ரம்ம மீமாம்ஸா ஸூத்ரங்களின் ஸாரபூதமான அர்த்தம். இந்த மஹாதத்துவங்களை ஸ்ரீ ஸர்வக்ஞாசார்யர் ப்ரமாணங்களின் மூலமாக எடுத்துக் காட்டியுள்ளார். ஸ்ரீஜயதீர்த்த குருவர்யர் அதைக்தன் "டீகா" க்களினால் ஆமோதித்தார். ஸ்ரீ கவீந்திரர்-ராஜேந்திரர்-விபுதேந்திரர் ஸ்ரீ பாதராஜர் - ஸ்ரீ வ்யாஸராஜர் - விஜயீந்திர தீர்த்தர் - மற்றும் குருபாதரான ஸ்ரீ ஸுதீந்திர தீர்த்தர் - பாஷ்யம் - டீகா உக்திகளின் தத்வங்களை யுக்த யுக்தியாய் ஆமோதித்து முமுக்ஷுகளான (மோக்ஷமே லக்ஷ்யமாக உள்ள) நல்ல ஜீவர்களுக்கு மாபெரும் உபகாரம் செய்துள்ளனர் என்று உபதேசித்து மேலும் தொடர்ந்து அதை ஆமோதித்து :-

பரப்ரம்மன் அநந்த கல்யாண குண பரிபூர்ணன். கவலை, துக்கம் முதலிய தோஷங்களை மீறியவன். சிந்திக்கத் தகுந்தவன், காணத்தகுந்தவன். மற்றும் முக்தியளிப்பவன். இந்த ப்ரமேயங்களை ஸ்ரீ பகவத்பாதர் ஸூத்ரபாஷ்யத்தில் க்ரமமாக 'ओं अयातो ब्रह्मजिज्ञासा, जन्माद्यस्य यत:, शास्त्र योनित्वात् तत्तु समन्वयात्, ईक्षतेर्ना शब्दं" என்னும் பஞ்ச அதிகரணங்களில் ப்ரம்ம லக்ஷண முதலியவைகளை உபதேசித்துள்ளார் என்று ஸ்ரீ குருராஜர்

சொல்லுகையில் அந்த விஷயத்தில் ஒரு பண்டிதர் இவ்வாறு சந்தேகப்பட்டார் :—

நித்தியமான வேதங்களுக்கு அகோசரமான (கண்ணுக்குப் புலப்படாத) ப்ரம்மனின் விஷயத்தை வாயினால் ஸம்ஸ்கிருதத்தைத் தவிர மற்ற சொற்களின் உச்சாரணத்தினால் சொல்வதற்கு ஒரு பொழுதும் வருவதில்லை. இதனால் சாஸ்திரத்திற்கு விஷயமுள்ளது என்று சொல்வது சரியல்ல. ஏனென்றால் வாயினால் உச்சரிக்கப்படும் நாமதேயம் ஜடமெனப்படும். ஆகையினால் ப்ரம்மனைத் தெரிவிப்பதைப் போல் காணுகின்ற இந்தச் சொற்கள் ஜடமாகையினாலேயே பொய் யெனப்படுகின்றன. உண்மையில் அந்தச் சொற்கள் ப்ரம்மனைத் தெரிவிப்பவை களாக இரா. வேதம் தவிர மற்ற சொற்களினால் தெரிவிக்க மாட்டாதாகையால் தங்கள் அபிப்ராயம் ப்ரயோஜன மற்றது. இன்னும் ப்ரம்மனின் பெயரால் காணப்படும் சொற்கள்கூட ப்ரம்மத்தைத் தெரிவிப்பவையாகா. ஆகை யால் ஆதியில் ''ப்ரப்ரம்மன் அநந்த கல்யாண குணபரி பூர்ணன்'' என்று ஆமோதித்த உமது சித்தாந்தம் ப்ரயோஜனமற்றது. சரீரத்திற்குள்ளிருக்கும் ஆத்மா இரண்டு வகையில் ஸித்திக்கிறான். சரீரத்தின் அவயவங்கள் இயங்குவது முதலான காரியங்கள் லிங்கங்களெனப்படும். இப்படிப்பட்ட சரீரசேஷ்டகமான அநேக லிங்கங்களினால் ஆத்மா ஸித்திப்பது ஒரு க்ரமம். ''அஹம்'' என்னும் புத்தியினால் கண்டு ஸித்திப்பது இரண்டாவது க்ரமம். இவ்வாறு இரண்டு முறைகளினால் ஸித்தித்த ஆத்மனிலிருந்து வேறுபட்டவனாய் வேறு பரமாத்மா இருக்கிறான் என்னும் விஷயத்திற்கு எந்த ப்ரமாணமுமில்லை. ஆத்மன் அஹம்தீ ப்ரத்யக்ஷத்தினால் (अहंधी प्रत्यक्ष) ஸித்தமாகியிருப்பதினாலே தான் என்பது இதற்குக் காரணம். இவ்வாறு சரீரசேஷ்டகம் முதலிய ஹேதுக்களினால் ஜீவனிலிருந்து வேறுபட்ட அன்யனான பரமாத்மா ப்ரமாணத்தால் ஸித்திப்ப தில்லை என்னும் அம்சம்கூட தத்வக்ஞானமாகாது. அதுவு மல்லாமல், இந்தப் ப்ரம்ம க்ஞானத்தினால் பலனென்ன? எந்தப் பலனுமில்லை. ஸ்வர்க்கம் முதலிய பலன் கிடைக்கு

மென்றாலோ ज्योतिष्टोम (ஜ்யோதிஷ்டோம) முதலானயாக கர்ம ஆசரணையினாலேயே ஸ்வர்காதி பலன்கள் கிடைக்கும். இன்னும் ப்ரம்ம க்ஞானிகளானாலும் இப்பொழுதே முக்தி கிடையாது. எந்த தேசத்திலாகட்டும், எந்தக் காலத்திலாகட்டும் அவர்களுக்கு முக்தி கிடைத்தது காணப்படவில்லை. ஆகையால் ப்ரம்மக்ஞானத்திற்கு பலனில்லை யென்றாயிற்று'' என்று அந்த வாதி தனது சந்தேகத்தைத் தெரிவிக்க, இன்னொரு வாதி அவனுக்கு இவ்வாறு மறுப்புக் கூறினான். ''சாஸ்திரத்திற்கு விஷயம், ப்ரயோஜனங்கள் இல்லையென்னும் உனது வாதம் ஸரியானதல்ல. மானஸ ப்ரதயக்ஷஸித்தனான நிர்க்குண ப்ரம்மம் சாஸ்திரத்திற்குரிய விஷயம். சுத்தப்ரம்ம க்ஞானத்திற்கு பந்த ரூபமான ஸம்ஸார நிவ்ருத்திதான் பலன். இது பலனல்லவென்னும் பக்ஷத்தில் ஸம்ஸார நிவ்ருத்தியைத் தவிர எந்தப் பலனுள்ளது? என்பதை நீயே சொல். ஸகுண ப்ரம்மனை மந்த புத்தியுள்ளவர்கள் உபாஸிக்க வேண்டும். நிர்க்குண ப்ரம்மம் முமுக்ஷுக்கள் உபாஸிக்க தகுந்தது'' என்று வாதம் செய்தான். இவனுடைய வாதத்தைக் கேட்ட மற்றொரு வாதி வெகு கோபத்துடன் அதைக் கண்டித்து இவ்வாறு பதிலளித்தான். ''மானஸ ப்ரத்யக்ஷக் கோசரனான ப்ரம்மன் சுத்த ப்ரம்மனென்று நீ சொன்னது சரியல்ல. எப்படிச் சரியல்லவென்பதை நான் எடுத்துக் காட்டுகிறேன். "एकमेवाद्वितीयं ब्रह्म' (ஏகமேவாத்விதீயம் ப்ரம்ம) என்ற ச்ருதியின்படி பரப்ரம்மன் அத்விதியன், ஒருவனேயும் ஆகியுள்ளான் என்று அர்த்தம் 'அத்விதிய' என்றால் பரப்ரம்பனில் ஜடம். ஜீவன் முதலான ''தர்மங்கள்'' இல்லை. ஏகதா என்றால் ஏகத்வம் என்னும் தர்மம்கூட ப்ரம்மனுக்கு அபின்னமாக உள்ளது என்று சொல்வதானால், அத்தகைய ப்ரம்மனில் धर्मधर्मिभाव (தர்மதர்மிபாவ)மே இல்லை என்றாயிற்று. அப்பொழுது அப்படிப்பட்ட ப்ரம்மன் சூன்யம் என்று ஸித்திக்கிறது. இந்த விஷயத்தில் சற்றேனும் சந்தேகமில்லை. மற்றும் வேறான இந்த ஜகத்து ப்ரம்மனிலிருந்து வேறு பட்டது என்பதும்கூட யுக்தி யுக்தமாவதில்லை. ஏனென்றால் இந்த ப்ரம்மனிலிருந்து வேறுபட்ட ஜகத்து

ஸத்யமா? பொய்யா? என்று விகல்பம் செய்வதற்கும் ஸாத்யமாவதில்லை. அப்படியானால் ஜகத்தின் ஸ்வரூபத்தில் ப்ரம்மன் காணப்படுகிறான் என்பதும் ஸாத்தியமில்லை. ஏனென்றால் ப்ரம்ம ஸ்வரூபமான ஜகத்தில் உனக்கு ப்ரமை இருப்பது யுக்தமல்ல. பரப்ரம்மனுக்கு ப்ராந்தி இல்லையே? ஆகையினால் மானஸ ப்ரத்யக்ஷ கோசரமான ப்ரம்மன் சுத்த ப்ரம்மனென்னும் உனது வாதம் சரியல்ல.'' என்று தெரிவித்தான். இவ்வாறு வாதி ப்ரதிவாதிகளின் கேள்வி பதிலின் ப்ராந்தியைப் பரிஹாரம் செய்யவேண்டும் என்ற ஆர்வத்தினால் குருராஜர் அவர்களுக்கு கிருபையுடன் சிரித்த முகத்துடனும் இவ்வாறு கூறினார்.

अहंधीप्रत्यक्ष (அஹம் தீப்ரத்யக்ஷத்தினால்) ஸித்தமான ஜீவாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவனும் விஷ்ணு வென்ற பெயருடையவனும் குணபரிபூர்ணனும் அற்புதனு மான பரப்ரம்மனென்ற வஸ்து ஸித்தமாகியுள்ளது. பரப்ரம் மனின் விஷயத்தில் பரமாத்மா ஜீவாத்மாக்களின் பரஸ்பர பேதத்தைத் தெரிவிக்கும் ப்ரம்ஹ என்னும் அர்த்த புஷ்டியுள்ள பதத்தை வேதபுருஷன் ப்ரயோகித்திருக்கிறான். அதற்கு அர்த்தத்தில் விஸ்தாரமுள்ளது. '"बृहंतोह्यस्मिन् गुणा:" என்ற தாது (धातु) (derivative) ப்ரக்ருதி ப்ரத்யய வ்யுத்பத்தி யினால் குணபூர்ணன், பரப்ரம்மனென்றும் ஜீவன் குண பூர்ணனல்லன் என்றும் ஸித்திக்கின்றது. இப்பேர்ப்பட்ட ஜீவனிலிருந்து வேறுபட்ட குணபூர்ண ப்ரம்மக்ஞானத் தினால் முக்தி ஸித்திக்கிறது. அதற்கு முக்தியே பலன். முக்தியாகிய பலனிருப்பதினால் இப்படிப்பட்ட ப்ரம்மத்தைத் தெரிவிக்கும் வேதாந்த சாஸ்திரத்தை உபக்ரமம் செய் வதற்கு (ஆரம்பம்) விஷயம், ப்ரயோஜனம், ஸம்பந்தம், அதிகாரிகளென்னும் நான்கு அனுபந்தங்கள் (சம்பந்தங்கள்) ஸித்தியாகியுள்ளன. ஆகையால் ப்ரம்மமீமாம்ஸா சாஸ்திரத் திற்கு பரப்ரம்மம் விஷயம். உத்தமமான குருகளின் உப தேசத்தினால் உபாஸகன் பரப்ரம்மனின் ச்ரவண, மனன, நிதித்யாஸனம் செய்வதனால் ப்ரம்மக்ஞானம் பெற்று, அதன் மூலமாக ப்ரஸாதம் பெற்று ஜீவனின் ஸ்வரூபானந்த

ஆவிர்பாவ ரூபமான மோக்ஷம் கிடைக்கின்றது. முக்தியே இதற்கு ப்ரயோஜனம். முமுக்ஷு ஜீவர்கள் (மோக்ஷம் விரும்பும்) அதிகாரிகள். ப்ரம்மனுக்கும் சாஸ்திரத்திற்கும் ப்ரதிபாத்ய (நிரூபிக்கப்படுபவன்) ப்ரதிபாதக (நிரூபிப்பவன்) ர்கள் சம்பந்தமிருக்கின்றது, இவ்வாறு நான்கு அனுபந்தங்களுடன் கூடியதாயிருப்பதால் ப்ரம்ம மீமாம்ஸா சாஸ்திரம். ஆரம்பணீய (ஆரம்பிக்கத் தகுந்த)தென்று ஸித்தியாயிற்று'' என்று கம்பீரமான குரலில் ஸத்சாஸ்திரத்தைச் சந்தோஷத்துடன் உபதேசித்துக் கொண்டிருக்கையில் சூரியன் ஆகாயத்தின் மத்ய ப்ரதேசத்தை அலங்கரித்து ப்ரம்மக்ஞானத்தின் அனுபவத்தை அடைந்தானோ என்று சொல்லும்படியாக மத்யானமாயிற்று.

பிறகு மகத்தான கீர்த்தியுள்ளவரான யதிநாயகரான குருராஜர் சிஷ்ய மண்டலிக்கு மனோஹரமான உபநிஷத் விஷயங்களை ப்ரவசனம் செய்து மாத்யான்ஹிகம் முதலிய புனித கார்யங்களுக்காக பீடத்திலிருந்து எழுந்தார். சம்பூர்ண கீர்த்தி பெற்ற தண்டதாரியான பண்டிதோத்தமரான குருபுங்கவர் ஸ்ரீமடத்தின் உத்யானத்திலுள்ள புஷ்கரிணியில் விதிபூர்வகமாக ஸ்நானம் செய்து காஷாய வஸ்திரங்களை உடுத்தி வித்வஜ்ஜனங்களால் வணங்கப்பட்டு ஸ்ரீமூல ரகுபதி வேதவ்யாஸ ஸ்வாமியை பூஜிக்கப் பூஜை யறைக்கு வந்தார். ஸ்ரீ குருராஜர் நாமதாரணம், ஜபதபம், அனுஷ்டானம் த்யான முதலியவைகளை முடித்துக் கொண்டு ஸ்வாமியின் இடதுபக்கம் அமர்ந்து ஸ்ரீமதாசார்யரின் பரம்பரையாக வந்த மஹாஸமஸ்தானத்தின் சம்ப்ரதாய முறையில் பூஜையை ஆரம்பித்தார். ஸ்ரீமடத்தின் புரோஹிதர், வித்வான்கள் முதலியவர்கள் இனிமையான குரலில் வேத பாராயணம் செய்துகொண்டிருக்கின்றனர். ஹரிதாஸர்கள் பக்தி பரவசமாய் காலில் சலங்கை கட்டி, கையில் தம்பூரி, தாளங்களை ஏந்தி ஸ்ரீஹரியின் மகிமைகளை வர்ணிக்கும் பதங்களை இனிமையான குரலினால் பாடிக் கொண்டிருக்கின்றனர். மங்கள வாத்யங்கள் முழங்குகின்றன. நகாரியின் ஓசை எங்கும் எதிரொலிக்கின்றது. ஏராளமான

ஜனங்கள் உணர்ச்சி வசப்பட்டு பக்தியுடன் ஸ்ரீ குருராஜரின் பூஜா வைபவத்தைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருக்கின்றனர். சதுர்யுக மூர்த்திஸம சதுர்யுக மூர்த்திகள் பூஜிக்கும் அந்த வைபவம் நிறைந்த காட்சி அதிமனோஹரமானது. அது கண்களுக்கு ஒரு விருந்து.

வைகுண்டம், அனந்தாஸனம், ச்வேதத்விபம் என்ற மூன்று படிகளுடன் கூடிய தங்கமயமான பீடம், மணிமய மண்டபத்தில் சோபித்துக் கொண்டிருக்கின்றது. வைகுண்ட பீடத்தில் ஒருபொழுதும் பிரியாத மஹாலக்ஷ்மியினால் ஆலிங்கனம் செய்யப்பட்ட ஹ்ருதயமுள்ளவனாய், கருடா ருடனாய் ஸ்ரீமன்நாராயணன் சோபிக்கிறான். அநந்தாஸன பீடத்தில் வலப்புறம் ஸ்ரீஸர்வக்ஞாசார்யரால் பூஜிக்கப் பட்ட திக்விஜயராமர், இடதுபுறம் ஸ்ரீஜயதீர்த்தரின் உபாஸ்யமூர்த்தி ஸ்ரீஜயராமர்; இவ்வாறு " ஸ்வமூர்த்தி: கண மத்யஸ்த"னாய், ஸ்ரீ சதுரானனரினால் பூஜிக்கப்பட்ட சதுர்யுகமூர்த்தி ஸ்ரீ மூலராமசந்த்ரப்ரபு சோபிக்கிறார். மூலராமரின் வலதுபுறம் ரத்னஸம்புடத்தில் ரத்னகர்ப்பம், லக்ஷ்மீ நாராயண சாலிக்ராமங்கள், ராமடங்கிவராஹ, ஸ்ரீவ்யாஸ முஷ்டிகளுள்ளன. இடதுபுறம் ரத்ன பீடத்தில், ஸ்ரீ குருராஜர் உடுப்பியில் சந்திரிகா க்ரந்தத்திற்கு ப்ரகா சத்தை இயற்றும்பொழுது தானே நிர்மாணம் செய்து உபாஸித்த ஸ்வர்ணமயமான தயிர் மத்தும் கயிறும் பிடித்த கோலத்துடன் காட்சிதரும் கிருஷ்ணன் சோபிக்கிறார். ச்வேதத்விப பீடத்தில் ஸ்ரீ வாஸுதேவமூர்த்தி மற்றும் இதர பகவன் மூர்த்திகள் காணப்படுகின்றன.

ஸ்ரீ குருராஜர் முதலில் கொண்டுவந்து வைக்கப்பட்ட ஜலத்தினால் நிறைந்த கும்பத்தைக் கந்தம், அக்ஷதை, தாமரைப் புஷ்பங்களினாலும், துளஸி புஷ்பத்தினாலும் பூஜித்துக் கலசபூஜை செய்து, சங்கபூஜையான பிறகு பீட பூஜை, பகவதாவாஹனம், ஆவரண பூஜைகளையும் செய்தார். பிறகு ஷோடசோபசார பூஜைகளினால் (16 உபசாரங்கள். த்யானம், ஆவாஹனம், அர்க்யம், பாத்யம்........ப்ரதக்ஷிண நமஸ்காரம், ஸமர்ப்பணம் வரை)

ஸ்ரீ மூலராமரின் பூஜை செய்து, பஞ்சபக்ஷ்யம், பரமான்னம், பழங்கள், தாம்பூலாதிகளை பரமாத்மாவிற்கு நிவேதனம் செய்து, மஹாநீராஜனம் செய்து மந்த்ரபுஷ்பங்களைச் சமர்ப்பித்தார். சங்கப்ரமணம் செய்த பிறகு சம்ப்ரதாயப் படி ரமா நைவேத்யம் வாயுதேவர் பூஜை, குருபரம்பரை பூஜை செய்து ஹஸ்தோதகங்கள் ஸமர்ப்பித்த பிறகு, ஸ்ரீ மூலராமனைக் கையில் ஏந்தி பக்த ஜனங்களுக்குத் தரிசனம் செய்வித்தார். பிறகு திக்விஜயராமர், ஜயராமரின் தர்சனம் பெற்ற ஸஜ்ஜனர்கள் ஆனந்தமடைந்தனர். ஸ்ரீயவர்கள் பகவானைப் பெட்டியில் வைத்துவிட்டு; மணி யோசையிடையே எழுந்திருந்தார். பிறகு தண்ட கமண்டலம் ஏந்திக்கொண்டு "பாபமோசன ஸ்தோத்ரம், ஸ்ரீ ராமசாரித்ரமஞ்சரி, கிருஷ்ண சாரித்ரமஞ்சரி"களைப் பாராயணம் செய்து கொண்டு ப்ரதக்ஷிண நமஸ்காரங்களைச் சமர்ப்பித்து, தண்டோதக ப்ரதானமான பிறகு ஸ்வாமி தீர்த்தத்தை அருந்தி, ஸகலருக்கும் தீர்த்தப்ரஸாதம் அருளினார். பிறகு ஸகல ஸஜ்ஜனர்களுடன் ஸ்ரீ ஹரிதத்வ விஷயங்களைப்பற்றி பேசிக்கொண்டு பிக்ஷை ஏற்று தீர்த்த ப்ராசனம் செய்து சபை நடக்கும் தாழ்வாரத்திற்கு எழுந்தருளினார்.

அதற்குள்ளேயே ஸ்ரீமடத்தின் உயர்தர மாணவர்கள் அநேகரும் பண்டிதர்களும் பாடம் கற்கத்தயாராக ஸ்ரீயவர் களை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். சிரித்த முகத்துடன் ஜகத்குருவர்யர் ஆஸனத்திலமர்ந்தார். ஸகலரும் ஸ்ரீயவர் களுக்கு நமஸ்காரம் செய்து அமர்ந்தனர். த்வாரபாலகன் வ்யாஸபீடத்தையும் இதர ஓலைச்சுவடி க்ரந்தங்களையும் கொண்டுவந்து முன்னால் வைத்து வணங்கினான். ஸ்ரீயவர் கள் வ்யாகரணம், ந்யாயம், மீமாம்ஸா முதலிய இதர சாஸ் திரங்களை வெகுவித்வத் பூர்ணமாகவும், திறமையுடனும் சிஷ்ய மண்டலிக்கு ப்ரவசனம் செய்ய ஆரம்பித்தார். நடு நடுவில் அநேக பண்டிதர்களுக்கு வந்த ஸந்தேகங்களைப் பரிகாரம் செய்து கொண்டு ஸ்ரீ குருராஜர் முன்பு கேட்டிராத சாப்த போதங்களையும், கடினமான (சிக்கலான) பாகங் களின் விளக்கங் களைச் சுலபமாக சிஷ்யர்களுக்குப் புரியும்படி

தெரிவித்துச் சொல்லிக்கொண்டிருந்தார். பாடம் முடிந்தது. அதே சமயத்தில் பாருபத்திகாரர் வந்து ஸ்ரீயவருக்கு வணங்கி ஸ்ரீயவர்களின் தரிசனத்திற்காகப் பல தேசங்களிலிருந்து வந்துள்ள பண்டிதர்கள், கவிகள், தர்மாபிமானிகள், கும்பகோண நகரவாஸிகள் முதலானோர் ஸ்ரீயவர்களின் அனுமதிக்காகக் காத்திருக்கின்றனரென்று விக்ஞாபனம் செய்து ஸ்ரீயவரின் உத்தரவு பெற்று அவரெல்லோரையும் அழைத்து வந்து குருராஜருக்கு அறிமுகப்படுத்தினார். எல்லோரும் ஞானம், பக்தி, வைராக்யம் நிறைந்தவர்களாயும் தேஜஸ்விகளாகவும் தரிசன மாத்திரத்தினாலேயே பக்தி மரியாதைகளை உண்டு பண்ணும் குருராஜருக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து அனுமதி பெற்று அமர்ந்தனர். க்ஷேம லாபங்களை விசாரித்த பிறகு ஸ்ரீயவர்கள் லௌகீக தர்மாபிமானி பக்தநகரவாஸிகளுக்கு (அலௌகிகளான) பரதத்வனான பகவந்தனின் கணக்கற்ற மஹிமைகளை உபதேசித்து, "वेदशास्त्र विचारेण प्रीणयन् पुरुषोत्तमं" என்ற பிரகாரம் லௌகிகத்திற்காக அவசியமாக ஒதுக்கப்பட்ட மிகச் சொற்ப சமயத்தை ஆத்பாத்மிகமாகச் செய்து அலௌகிக தேஜஸ்ஸினால் காணப்படுகிறார். இவ்வாறே ஸத் காலக்ஷேபத்தினால் காலம் கழிந்துகொண்டிருக்கையில் மாலைப் பொழுதாயிற்று.

ஆகாயத்தில் சந்த்ரோதயமாயிற்று. ஸ்ரீயவர்கள் மாலை தீபாராதனைக்காக எழுந்திருந்தார். ஸ்ரீமடத்தின் புனிதமான தடாகத்தில் ஸ்நானமாயிற்று. காஷாயவஸ்திரங்கள், கௌபீனதாரணம் செய்து கொண்டு பூஜாக்ரஹத்திற்கு எழுந்தருளினார். குருவர்யர் கந்தாக்ஷதைகளை தாரணம் செய்துகொண்டு காயத்ரி ஜபம் செய்தார். பிறகு துளஸி மாலையைக் கையிலேந்தி ப்ரணவம் முதலிய ஜபங்கள் செய்து தேவதா ஸார்வபௌமனான ஸ்ரீஹரியைப் பூஜிக்க குரு ஸார்வபௌமர் தனது மணையின் மீது முன்னால் அமர்ந்தார், பண்டிதர்கள் ராத்ரி ஸூக்தாதிகளைப் பாராயணம் செய்து கொண்டிருக்கின்றனர். நகாரி, மங்கள வாத்யங்கள் முழங்கின. ஸ்ரீயவர்கள் புன்னகையுடன் ஸ்ரீமூலரகுபதி வேதவ்யாஸருக்கு மாலை தீபாராதனை

ஆரம்பித்து அர்ச்சனை பால், தேங்காய் மற்ற பழங்கள் தாம்பூலாதி ஸமர்ப்பண பூர்வமாக ஸ்ரீ விஷ்ணுவை மகிழ் வித்து தங்கத்தாம்பாளத்தில் மங்களாரதி, வத்தி, கற்பூரம் முதலியவைகளுடன் மங்களாரதி எடுத்து மந்த்ர புஷ்பங்களை சமர்ப்பித்து தலை மீது மந்த்ர புஷ்பாஞ்சலியை வைத்துக் கொண்டு, இதர விஷயங்களை மறந்து இமைகளை மூடி அரைக் கண் பார்வையினால் ஸ்ரீமூலராகுநந்தனைப் பக்தியுடன் துதிக்க ஆரம்பித்தார். ஸ்ரீயவர்களின் முகம் கருணையுடன் விளங்குகிறது. ஸாத்விக தேஜஸ் (ஒளி) வீசுகிறது. பக்தி மேலீட்டினால் கண்ணிலின்றும் ஆனந்தக் கண்ணீர் சொரிகின்றது. ஸ்ரீயவர்கள் முகாரவிந்தத்தினின்று ஸ்ரீமூலராமனின்று வேறுபடாதவனான ஸ்ரீ விஷ்ணு பரமாத் மாவின் தசாவதாரஸ்தவனம் புறப்பட்டது.

वेदसिद्ध मणुतोऽप्यणुभावं
मोवदापि महतोऽपि महत्वं ॥
बिभ्रतं प्रथयितुं मनवे त्वां
मीनतां शरणायामि भवंतम् ॥ 1 ॥

ஸ்வாமி ஸ்ரீமூலராமசந்திரன் சாக்ஷுஷ மன்வந்தரத்தின் நடுவில் க்ருதமாலிகாதீரத்தில் அர்க்யப்ரதானம் செய்து கொண்டிருந்த ஸத்யவ்ரத மஹாராஜனை அனுக்ரஹிக்க, அவனின் அஞ்சலி (உள்ளங்கையில்) வந்து "अणोरणीयान् महतोमहीयान्" என்று வேதப்ரஸித்தமான உனது மகிமையை காண்பிக்க அணுமகத்துவங்களைக் காண்பித்த மீனரூபியான உன்னைச் சரணடைந்துள்ளேன்"

वेदविप्लु तिकृतं विधि जाड्यं
हंत हंतु मवधाज्झलं जन्म ।
मीन भावन भरेण ततो मे
विस्तृणीहि विमलं प्रतिबोधम् ॥ 2 ॥

முன்பு ஒரு சமயம் ஸ்ரீப்ரம்ம தேவன் த்யானத்திலீடு பட்டிருந்தபொழுது தேவதைகளின் பலத்தைக் குறைக்க ஹயக்ரீவனென்னும் தைத்யன் மாயையினால் வேதங்களை

அபகரித்துச் சென்றதினால் ப்ரம்ம தேவனுக்கு ஸ்ருஷ்டி விஷயத்தில் அஞ்ஞானம் உண்டாகவும் கருணைக் கடலான நீ ஹயக்ரீவனென்னும் தைத்யனைச் சம்ஹாரம் செய்தாய். அப்படிப்பட்ட மீன ரூபியான ஸ்ரீ மூலராம! நீ நமக்குள்ள நிர்மலமான யதார்த்த க்ஞானத்தை அபிவிருத்தி செய்.

आत्मन्यंव कमठेन वितन्वन्
मंदरेण च भवानरणीद्वे ।
मंथ्यतोकृत हलाहलवन्हि
होतुमीन्द्र रिपु वृंद हवींषि ॥ 3 ॥

ஸ்வரூப பூதமான கூர்மரூபம் மற்றும் மந்தர பர்வதம் என்னும் இரண்டு அக்நி ஸாதன த்ரவ்யங்களை யுண்டாக்கி இந்திர சத்ரு சமூகமென்னும் ஹவிஸ்ஸுகளை ஹோமம் செய்ய சமுத்திர மதனத்தின் மூலம் காலகூடமென்னும் அக்நியை ஸ்ருஷ்டித்த கூர்மரூபியான ஸ்ரீமூலராமசந்திரா! உனது இந்த லீலா விநோதத்தை யார்தான் கொண்டாடா மலிருப்பார்கள்?

आविसूकर धरोद्धरणं ते
सिंधुबंधुजठराच्छ्रुति गीतम् ।
मादृशां भवपयोधिगतानाम्
रक्षणे परिचयं तववेमः ॥ 4 ॥

ஸ்ரீ ஆதி வராஹாவதாரியான ராமபத்ர! நீ ஸமுத்ரத்தின் நடுவிலிருந்து பூமியைக் காப்பாற்றினது வேதத்தின் மூலம் தெரியப்பட்டுள்ளது. அந்தவிதத்தைப் பார்த்தால் பவ ஸாகரத்தில் மூழ்கிக்கிடக்கும் நம் போன்றவர்களைக் காப்பாற்றுவதற்காகக் கையாண்ட முன்னோடித் திட்டம் என்று பாவிக்கின்றோம்.

पूर्णचन्द्रगत लक्षण रेखा
लक्षितायदि तदेक कलायां ।
संश्रितेंदुमणि दंष्ट्रधरं त्वां
सोपमा भवति सूकररूप ॥ 5 ॥



4

ஸ்ரீ வராஹமூர்த்தி! சந்திரனின் ஒரு கலையினால் அவனிடத்திலிருக்கும் களங்கரேகை சோபிப்பதைப்போல், சந்திரனின் கலையைப்போலுள்ள பற்களையுடையவனான உனது கருமைநிறமுள்ள சரீரம் சோபிக்கின்றது.

तावकं नरहरेऽति विरुद्धं
वेषधारणमिदं तनुते नः ।
अत्यसंघटित कर्म च कृत्वा
पालयो प्रणतमित्युपदेशम् ।। 6 ।।

தேவா! லோகத்தில் பக்த ஜனங்களை ரக்ஷிக்கும் பொழுது ஸௌம்யரூபத்தையும், சத்ரு ஸம்ஹார காலத்தில் உக்ரரூபத்தையும் நீ தாரணம் செய்திருப்பது கண்டுவந்துள்ளது. ஆனால் இப்பொழுது நீ உக்ரமான நரஸிம்ம ரூபத்தினால் என்னை (பிரகலாத ரூபியான என்னை) ரக்ஷிக்க வந்திருப்பதைப் பார்த்தால் பக்தஜனங்களுக்காக முன்பு ஒருபொழுதும் செய்யாத மிகமிகச் சாத்திய மில்லாத காரியங்களாயிருந்தாலும் அதைச்செய்து நான் பக்தர்களைக் காப்பவனென்று அபயம் கொடுப்பதைப் போல் காணப்படுகிறது.

दारितोदर हिरण्यक शत्रो
रांत्रमाल्य कलितं तव रूपं ।
नारसिंह कलयेऽननुभूतम् ।
शारदं जलधरं सहशंपम् ।। 7 ।।

ஸ்ரீ மூலராமனிலிருந்து வேறுபடாதவனான ஹே! நரசிம்மதேவா! ஹிரண்யகசிபுவின் வயிற்றைப் பிளந்து, குடலை மாலையாக அணிந்துள்ள உனது ருபம் சரத்ருது காலத்திய மின்னலுடன் கூடிய மேகத்தைப்போல் சோபிக்கிறது. (சரத்ருதுவின் மேகத்தில் மின்னலின் சம்மந்த மில்லை. ஆனாலும் இங்கு அனுபவத்தில் கண்டுவராத சரத்கால மின்னலுடன் கூடிய மேகத்தைப்போல் உனது உருவம் காணப்படுகிறது என்று நரசிம்மஸ்வாமியை ஸ்ரீ குருராஜர் अभूतोपमालंकार த்தினால் (அபூதஉபமானம்) வருணித்துள்ளார்)

जानतां निजमनः परमाणौ
मातुमेव बलिनिग्रहदंभात् ।
वामनं यदभवत्तद्रूपम्
तत्सुखेन भगवन् हृदि कुर्मः ।। 8 ।।

ஸ்ரீ வாமன மூர்த்தியே! உலகத்தில் சிறிய பதார்த்தத்தில் பெரிய வஸ்து ப்ரவேசம் செய்வது முடியாத விஷயம். நீ முனிவர்களுடைய மனதில் ப்ரவேசிக்க விரும்பி நீ மிகப் பெரியவனானதால் சிறிய முனியின் மனதிற்குள் பிரவேசிப்பது கடினமென்று அறிந்து பலி சக்ரவர்த்தியை நிக்ரஹம் செய்யும் சாக்கில், அணுவான வாமன ரூபத்தைத் தரித்ததினால் நாங்கள் இப்பொழுது சுகமாக உன்னைத் தியானம் செய்கிறோம்.

चंद्रमा इव भुवोविरच-
न्नक्षत्र योगमपि यत्वमालासीः ।
तेन शात्रव यशोंबुजराजे
मुद्रणं तव कृति बहुमन्ये ।। 9 ।।

ஹே பரசுராம தேவ! பூமியிலுள்ள க்ஷத்ரிய ஸம்ஹாரத்தின் மூலம் நக்ஷத்ரயோகத்தை, சத்ருக்களின் கீர்த்தி என்னும் தாமரைகளின் சங்கோசத்தை (குறைத்து)ச் செய்திருப்பதினால் சந்திரனைப் போல ஒளிமயமான உனது பரசுராமருபத்தைப் பூஜிக்கின்றேன்.

तारणे दुरितनीरनिधेर्नः
सेतुभाव मचिरेण यियासोः ।
भासते तव विभो करुणायाया:
पूर्वरंग इव दक्षिण सेतुः ।। 10 ।।

ஸ்ரீ மூலராமசந்திரரே! பக்தர்களை பாவசமுத்திரத்திலிருந்து பிறவிக்கடலிலிருந்து கடக்கச் செய்து ரக்ஷிக்கும் உன்னுடைய, கருணைக்குச் சேதுபந்தனம் முன்னோடித் திட்டம் போல் காணப்படுகிறது.

बंधनाय कृतमात्मजनन्या
तादृशं च गुणमंग्यकरोर्यत् ।
तेन निर्गुण मतानि निरस्यन्
दर्शयिष्यसि निजां गुणवत्ताम् ।। 11 ।।

பந்தனம் முதலியவைகளற்றவனான ஸ்ரீ கிருஷ்ணா! நீ தாயான யசோதாதேவியின் குணத் (கயிறு) தினால் கட்டப் பட்டதை அதாவது குணத்தை ஒப்புக்கொண்டதைப் பார்த்தால், ப்ரம்மமான நீ நிர்குணமென்றெல்லாம் நிகில துர்மதங்களை நிராகரித்துப்ரம்மன் (நீ) அநந்தகல்யாண குணபரிபூர்ணனென்று ஜகத்திற்கு வெளிப்படுத்திக் கொண் டிருப்பதைப் போல் காணுகிறது.

सर्वदेवरथचेष्टन मंगी
कुर्वत स्तव सदैव जगत्यां ।
अर्जुनैकरय सारथि भावो
विस्मयाय विदुषां न कथंचित् ।। 12 ।।

ஹே நந்தகோபனின் புத்ரனே! ப்ரபஞ்சத்தின் எல்லா ஜீவர்களின் தேஹ ரதமென்னும் தேவரதங்களை ப்ரேரேபிக்கும் உனக்கு அர்ஜுனனின் ஒரு ரதஸாரத்யம் செய்தது ஞானிகளுக்குக் கட்டாயம் ஆச்சரியமூட்டுவதாக இல்லை.

त्वं कुचेल मुनिमीश ! कुचेला
द्यर्पणेन कृतवानकुचेलम् ।
सोभवत्तदपि चारु कुचेला-
लंकृत स्तदिद मद्भुतमासीत् ।। 13 ।।

ப்ரபோ! குசேலனின் குசேலத்திலிருந்த (கிழிந்த துணியிலிருந்த) பதார்த்தத்தை (அவலை)க்கொடுத்ததினால் நீ அவனை அகுசேலனாக (உத்தமவஸ்திரம் அணிந்த வனாக)ச் செய்தாய். இது பரம ஆச்சரியகரமான விஷயம், ஸுதாமா தனது கிழிந்த துணியிலிருந்து ஒரு பிடி அவலை உனக்கு அர்ப்பித்ததினால் அவனுக்கு பீதாம்பரம் முதலிய

வைகளை பணம், பொன் முதலிய சொத்துக்களை அனுக்ரஹித்த உன்னுடைய பக்த வாத்ஸல்யத்தை வர்ணிக்க யாரால் முடியும்?

एवमादि विविधैरवतारैः
पालिताखिल जनौघ ममाघम् ।
सन्निरस्य कमलास्य नमस्याम्
स्वीकुरुष्व रघुवंशवतंस ।। 14 ।।

இவ்வாறு மத்ஸ்யம், கூர்மம், வராஹம் முதலிய அவதாரங்களையெடுத்து துஷ்டசிக்ஷண சிஷ்டபரிபாலனம் செய்த தாமரை முகத்தினனான ஹே ஸ்ரீமூல ராமசந்த்ர தேவா! எனது பாபத்தை வேறுடன் களைந்து என் நமஸ்காரத்தை ஏற்றுக்கொள்வீர் ப்ரபோ!

இப்படி வினயத்துடன் ஸ்ரீமூலராமனைத் துதித்து த்யானத்திலிருந்து விழித்துக் கண் திறந்தார்.

ஸ்ரீ குருராஜரின் முகமாகிய நாடக மேடையில் காவ்ய ஸரஸ்வதியானவள் மெய்ம்மறந்து நடனம் செய்து கொண்டிருக்கையில் அவளது தலைக்கொண்டையிலிருந்து உதிர்ந்து விழுந்த புஷ்பங்களைப்போலுள்ள ஸ்ரீதசாவதார ஸ்தவகாவ்ய அலைகளில் மூழ்கி பக்தர்களின் சமூகம் பக்தி மேலிட்டுப் புளகாங்கித மடைந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்து கொண்டு இஹலோக விஷயங்களையே மறந்து உணர்ச்சி என்னும் ஸாம்ராஜ்யத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

ஸ்ரீகுருராஜர் பீடத்திலிருந்து எழுந்து ப்ரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து ப்ரார்த்தனை செய்து கொண்டிருக்கும் பொழுது ஸ்ரீமடத்தின் பண்டிதர்கள் மற்றும் சேவகர்கள் கை கூப்பி சபைக்கு எழுந்தருளவேண்டுமென வேண்டினர். கருணைக்கடலான ஸ்ரீ குருவர்யர் सत्पथ (ஸத்பத)த்தை सत्पथ: ஸஜ்ஜனர்கள் பின்பற்றும் மார்க்கம் மற்றும்(தேவதைகளின் மார்க்கமான ஆகாயம்) ஒளிவீசும்படி உதயமான, வெண்தாமரையின் நாயகனான சந்திரன்

(குமுதப்ரேமி) உதயாசலத்தில் ப்ரவேசிப்பதைப்போல் வித்வத் சபையில் ப்ரவேசித்தார்.

பரமஹம்ஸ நாயகரான குருராஜர் சபையிலுள்ள உயர்ந்த சந்த்ரசிலா நிர்மிதமான மேடையின் மீது மணிகள் பதிக்கப்பட்ட திக்விஜய வித்யா சிம்மாஸனத்தில் பத்மாஸன மண்டிதராக அமர்ந்தார். குருராஜர் பட்டொளி வீசுகின்ற வெண்கொற்றக் குடையின் கீழமர்ந்து காட்சியளிக்கின்றார். இடதுபுறத்திலும் வலப்புறத்திலும் சேவகர்கள் தங்கப் பிடியுள்ள வெண் சாமரங்களை வீசிக்கொண்டிருக்கின்றனர். சபையின் உயர்ந்த ஜன்னலின் வழியாக நிலா ஒளி சிம்மாஸனத்தின் மீது வீசிக்கொண்டிருக்கிறது. அந்த மகத்தான காட்சியைக் கண்டால் ஆகாசகங்கையில் நீந்துகின்ற அன்னப் பறவைகள் கங்கையின் ப்ரவாஹத்துடன் பூமிக்கு இறங்கி வந்து உயர்ந்த ஜன்னல்களின் வழியாக உள்ளே நுழைந்து வெண்கொற்றக்குடை சாமர உருவத்தில் வெகுதூர ப்ரயாணத்தினால் களைத் திருப்பதனால் மெதுவாகச் செயல் படுகின்றனவோ என்னும்படி காணுகிறது. முத்துக்களும் மணிகளும் ப்ரகாசிக்கும் சிம்மாஸனத்தில் யோகீச்வரரான குருராஜர் அமர்ந்துள்ளார். முத்துக்களால் அலங்க்ருதமான சிம்மாஸனத்தைப் பார்த்தால், ஆகாயத்தைத் தாண்டிச் செல்லும் கர்வங்கொண்ட ஸ்வர்க்கத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கும் நக்ஷத்திரங்களின் மார்க்கம், ஆகாய மார்க்கத்தில் கூட்டங்கூட்டமாய் ஸ்வர்க்கத்திற்குச் சென்று கொண்டிருக்கும் யோகிகளின் நெருக்கமான கூட்டத்தினால் தடைபட்டிருக்கிறபடியால் நக்ஷத்திரங்கள் ஸ்வர்க்கத்திற்குப் போவதற்கு வழி காணாமல் யோகிகளின் ப்ரபுவும் எல்லாத் தடைகளையும் விலக்குபவரான தங்குதடையே இல்லாது செல்லவல்ல குருவர்யரின் சிம்மாஸனத்தை அடைந்து சரணடைந்தால் எளிதாக ஆகாயத்தைத் தாண்டி ஸ்வர்க்கத்தை அடைந்து விடலாமென்று நினைத்து முத்து, மணிகளின் உருவத்தில் வந்து நக்ஷத்திரங்கள் சிம்மாஸனத்தில் மின்னிக்கொண்டிருக்கின்றனவோ என்னும்படி காண்கிறது. ஸ்ரீயவர்களின் சந்திரகாந்தி சிலையினால் செய்யப் பட்ட மேடையின் மீது முத்துச் சிம்மாஸனத்தில் பாடலாம்

பரதாரி (= காஷாயம், பீதாம்பர)யாக அமர்ந்திருப்பதான காட்சியைப் பார்த்தால் சமுந்திரத்தின் நடுவில் (சந்திரகாந்தி சிலாமேடை) ஆதிசேஷனின் படுக்கையில் (முத்து சிம்மா சனத்தில்) பீதாம்பர (காஷாயாம்பரம்) அணிந்து காட்சி தரும் நாராயணனைப் போல் ராகவேந்த்ர பரமாத்மா[1] (ஸ்ரீ நாராயணனையும் மஹாலக்ஷ்மியையும் மனதில் நிலை நிறுத்தியிருப்பதனால்) சோபிப்பதைப்போல் காணுகிறது.

பிறகு அந்த திவ்ய சபையில் வித்வான்கள் — ஸ்ரீ குரு ராஜரை இன்னொரு இந்திரரென்று வேதாந்தங்களினால் உபாஸித்தனர். உத்தம பண்டிதர்கள் ஸ்ரீயவர்களின் மஹாமஹிமைகளை வர்ணித்து உபந்யாஸம் செய்தனர். வீணை, புல்லாங்குழல் முதலிய வாத்தியங்களில் நிபுணரான கலைஞர்கள், ஸங்கீதகலா கோவிதர்கள் ஸ்ரீ ஹரியின் மகிமைகளை எடுத்துக் காட்டுகின்ற அபரோக்ஷக் ஞானி களால் இயற்றப்பட்ட கீர்த்தனைகளை இனிமையான குரலில் பாடி குருவர்யரை மகிழ்வித்தனர். அநேக கவிகள், வித்வான்கள் பாதார்த்த பிந்து மாத்ரா க்ரியாதி (पादार्घबिन्दु मात्रा क्रियादि) ஸமஸ்யாபூரணம் (समस्यापूरण) செய்து கவிதை களினால் யதிராஜரின் க்ஞான—பக்திவைராக்ய, தபஸ்யா, உதாரகுணங்கள் முதலிய குணங்களைத் துதித்து அவர் அனுக்ரஹம் பெற்றனர்.

இந்த நிகழ்ச்சி நிரல்கள் முடிந்த பிறகு, மாலிகா மங்களாரதியாயிற்று. ஸ்ரீ குருராஜர் புனிதமான மந்த்ராக்ஷதையைத் தன் சிரஸில் தாரணம் செய்து கொண்டு பிறகு லௌகீகவைதீக வித்வான்கள், சுமங்கலிகள் முதலிய வர்களுக்கு அனுக்ரஹ பூர்வமாகப் பலமந்த்ராக்ஷதையை அருளி ஆசீர்வாத ரூபமங்கள வ்ருஷ்டியினால் ஸகலரையும் க்ருதக்ருத்யராகச் செய்தார்.

## 15. ஸ்ரீகளவர்களின் சஞ்சாரக்ரமும் திக்விஜயமும் :

ஸ்ரீ ராகவேந்திர குருவர்யர் முதலில் கிழக்குதிசையில் சஞ்சாரத்திற்குப் புறப்பட்டு பரிபூர்ண தேவநகரத்தில்

1. "परश्च माच परमे, ते उभे आत्मनि यस्य सः परमात्मा'

பகவந்தனை வணங்கி அங்கிருந்து கமலாலய மெனனு மிடத்திற்கு வந்து அங்கு மஹாலக்ஷ்மியை ஆராதனை செய்து, அங்கிருந்து அர்த்தநாரீச்வரத்திற்கு வந்து மஹா ருத்ரதேவனைச் சேவித்து சமுத்ரஸ்நானம் செய்து, அங்கிருந்த பஞ்சகேச்வரமார்க்கமாக ராமேச்வரம் வந்து சேது ஸ்நானம், தர்ப்பசயன ராமர் மற்றும் சேதுமாதவன், ஸ்ரீ ராமேச்வரரையும் தரிசித்து, அளிகிரிக்கு வந்து ஸுந்தரேச்வரனைத் தரிசித்து நமஸ்கரித்து அங்கிருந்து அநந்தசயனத்திற்கு வந்தார். அங்கு அனந்த பத்மனாபனைச் சேவித்துப் பிறகு ஜனார்த்தனத்திற்கு வந்து பகவத்தர்சனம் செய்து தாமிரபரணிதீரத்தின் திருநெல்வேலி க்ஷேத்திரத் திற்கு விஜயம் செய்தார். அங்கு ப்ராம்மண சமூகத்தி லிருந்து பஹிஷ்கரிக்கப்பட்ட ஒரு ப்ராம்மணனை சங் கோதக ப்ரோக்ஷணத்தினால் சுத்தமாக்கி, ஆக்ஷேபித்த ஜனங்களுக்கு சங்கோதக மஹிமையைக் காண்பித்துக் கொடுத்து அவரால் வணங்கப்பட்டு அங்கிருந்து மதுரைக்கு விஜயம் செய்தார்.

மதுரையில் அப்பொழுது திருமலை நாயக்கர் (கி.பி. 1623—50) அரசாண்டுகொண்டிருந்தார். ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் பேரரான ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் மதுரையின் திருமலைநாயக்கனுக்கு மந்திரியாயிருந்தார். ஸ்ரீகளவர்களின் சர்வசாஸ்திர பாண்டித்யத்தைப் பரீக்ஷிப்பதற்காக தீக்ஷிதர் பாட்ட மீமாம்சா சாஸ்திரத்திலுள்ள (भाट्ट मीमांसा शास्त्र) சில சந்தேகங்களை ஸ்ரீயவர்கள் முன்வைத்து விளக்கம் கோரினார். ஸ்ரீகளவர் தீக்ஷதரின் எல்லா சந்தேகங்களை யும் பரிகாரம் செய்து தாம் இயற்றிய பாட்டஸங்க்ரஹ (भाट्टसंग्रह) என்னும் க்ரந்தத்தை நீலகண்ட தீக்ஷிதருக்குத் காண்பித்தார். தீக்ஷிதர் அதை ஆதியோடந்தமாகப் பரிசீலனைசெய்து, மீமாம்ஸா சாஸ்திரத்தில் குருவர்யருக் கிருந்த அபாரமான பாண்டித்யத்தைப் புகழ்ந்து அந்த க்ரந்த ரத்னத்தை யானைமீது அம்பாரியில் வைத்து அரசு மரியாதைகளுடன் ஊர்வலமாக எடுத்துச்சென்று ஸ்ரீகுரு ராஜரை மிகப்பெரியளவில் கௌரவித்தார். இந்தச்

சந்தர்ப்பம் முன்பு ஸ்ரீ வித்யாரண்ய முனிவர் ஸ்ரீ ஜய தீர்த்தரின் க்ரந்தத்தை யானைமீது அம்பாரியில் வைத்து ஊர்வலம் செய்வித்ததை ஞாபகமூட்டுகிறது. மதுரை அரசன் திருமலைநாயக்கன் குருராஜரை நன்கு கௌர வித்து, வரவேற்றுபசரித்து அனுக்ரஹம் பெற்றான். மதுரை திக்விஜயம் குருராஜரின் திக்விஜயத்தில் முதல் மைல் கல்லென்பதில் தடையில்லை. மதுரையில் குருராஜர் ஸ்ரீ ஸுந்தரேச்வர - மீனாட்சியின் தரிசனம் செய்து, அங்கிருந்து ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளினார். அங்கு சில நாட்கள் தங்கி ஸ்ரீரங்கநாதனைச் சேவித்து அங்கிருந்து வடதேச பக்கமாகச் சஞ்சாரம் தொடங்கினார்.

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் முதலில் நாமக்கல்லிற்குப் போய் ஸ்ரீ நரசிம்மஸ்வாமியை ஆராதித்து, அங்கிருந்து வேலூருக்கு எழுந்தருளினார். வேலூர் அப்பொழுது விஜயநகர அரசனான வெங்கடபதிராயர் நான்காவது ராமதேவராயரின் தலைநகராயிருந்தது. அங்கு வீரபத்ர, பைரவபட்டர் என்று இருவர் வாதமல்லரான பண்டிதர்கள் ஸ்ரீகளவருடன் வாக்யார்த்தத்திற்கு வந்தனர். அவர்கள் ப்ரபல பண்டிதர்களாயிருந்தனர். அநேக சிஷ்யர்களுடன் கூடிய அவர்கள் அரசனின் மதிப்பிற்குரியவர்களாயிருந்தனர். இரண்டு மூன்று நாட்கள் வரை வாதம் விறுவிறுப்பாக நடந்து அந்த வாதிகள் ஸ்ரீகளவரின் மஹாபாண்டித்தியத்தின் முன் எதிர்த்து நிற்கமுடியாமல் மௌனமாய்விட்டனர். அரசன் ஸ்ரீகளவரின் இந்த விஜயத்தினால் மகிழ்ச்சி யடைந்து அநேக கிராமங்கள், நிலங்களை ஸ்ரீயவருக்குத் தானம் செய்ததல்லாமல் ஸ்ரீயவரை சிம்மாசனத்திலமர்த்திக் கனகாபிஷேகம் செய்து கௌரவித்து, கிருதார்த்தனானான். இது ஸ்வாமிகளின் இரண்டாவது மஹா திக்விஜய மென்னலாம். இங்கு ஸ்ரீகளவரின் தக்ஷிணதேசத்தின் சஞ்சாரம் முடிந்து மேலே அவர் தக்ஷிணகன்னட ஜில்லாவை நோக்கிப் புறப்பட்டார். ஸ்வாமிகள் விஷ்ணுமங்களத் திற்குப் போய்ப் பகவந்தனைப் பூஜித்து அங்கிருந்து சுப்ரமண்யத்திற்கு விஜயம் செய்து ஸ்வாமியைப் பூஜித்து அங்கு சில தினங்கள் தங்கினார்.

## 16. உடுப்பியில் தங்குதல் மற்றும் க்ரந்தம் இயற்றுதல் :

பிறகு ஸ்ரீகளவர்கள் உடுப்பிக்கு விஜயம் செய்து அங்கு, ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீ விஜயீந்திரருக்கு தமது நட்பின் அடையாளமாக அர்ப்பித்த சொந்தமடத்தில் முகாம் செய்தார். ஸ்ரீ கிருஷ்ண தரிசனம் செய்து அந்த ஸ்வாமியை தன் கையாரச் சேவித்து ஆனந்த பரவசரானார். ஸ்ரீகுருராஜரின் உபாஸ்யமூர்த்தி ஸ்ரீ மூலராமனாயினும் அவருக்கென்னமோ. க்ருஷ்ணனிடம் அபரிமிதமான பக்தி ! உண்மை. "कृष्णग्रहगृहीतात्म' ரல்லவா அவர் ! முன்பு ப்ரஹலாதனாயிருந்த பொழுதும் கிருஷ்ணக்ருஹீதராக விருந்தார் ! பாஹ்லீக ராஜனான பொழுதும் ஸ்ரீகிருஷ்ணோபாஸகராக இருந்தார். ஸ்ரீவ்யாஸராஜராயிருந்த பொழுதோ "ஸ்ரீ மூலகோபால க்ருஷ்ண"னின் உபாஸகராக இருந்ததல்லாமல் தமது எல்லா க்ரந்தங்களுக்கும் "ஸ்ரீ கிருஷ்ண" என்றே நாமாங்கிதம் போட்டிருந்தாரல்லவா அதேபோல இந்தக்கடைசி அவதாரத்திலும் ஸ்ரீ குருராஜர் ஸ்ரீ கிருஷ்ணனிடம் விசேஷ பக்தி செய்துகொண்டிருந்ததில் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஸ்ரீகுருராஜர் ஸ்ரீகிருஷ்ணனின் ஸந்நிதியில் "சந்த்ரிகா" க்ரந்தத்திற்கு "ப்ரகாச"மென்னும் உத்தமமான வ்யாக்யானம் இயற்ற ஆரம்பித்தார். அது பூர்த்தியாவதற்குள், ப்ரம்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விளக்கும், "தந்த்ர தீபிகா" மற்றும் "ந்யாயமுக்தாவலி" என்று இரண்டு க்ரந்தங்களையும் இயற்றி முடித்தார். பிறகு ஸ்ரீவாக்தேவியின் உத்திரவின்படி ஸ்ரீ ஜயதீர்த்தரின் "ஸ்ரீமந்நியாயஸுதாவிற்குப் "பரிமள" மென்னும் அஸாதாரணமான வ்யாக்யானத்தை இயற்றி பிறகு, "ப்ரகாச" என்னும் நூலைப் பூர்த்தி செய்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கு அர்ப்பித்தார்.

ஸ்ரீ கிருஷ்ணனின் ஸந்நிதியில் குருராஜர் ஸ்ரீ ராமநவமி மகோற்சவத்தின் அங்கமாக மஹாபிஷேகத்தை ஸ்ரீராமருக்கு விமரிசையாக நடத்தி வைத்தார். அந்த சமயத்திற்குள் ஸ்ரீயவர்கள் தனது சிஷ்யர்களுக்கு, "சந்த்ரிகா" க்ரந்தத்தை பத்து தடவைகள் பாடம் சொல்லி எங்கும் பிரஸித்தி

யடைந்தார். இது ஒரு பெரிய க்ஞானயக்ஞம் என்று சொல்லவேண்டும். ஸ்ரீஸ்வாமிகள் அதுவரை தானியற்றிய நூல்களை ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் சமர்ப்பித்து உடுப்பி வாஸத்தின் ஞாபகமாக தங்கத்தினால் ஸ்ரீ கிருஷ்ணப்ரதிமையை நிர்மாணம் செய்து இன்றும், ஸ்ரீ மடத்தில் பூஜிக்கப்பட்டு வருகிறது. பக்தர் சிஷ்யர்களுக்கு, பீடாதிபதி ஸர்வஸித்தி, ஸந்தான, பீதியந்திரங்களை இந்த க்ருஷ்ண ப்ரதிமையின் உபாஸனா பலத்தினாலேயே அனுக்ரஹித்திருப்பது வழக்கமாக உள்ளது.

## 17. மைஸூர் ஸமஸ்தானத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் :

ஸ்ரீயவர்கள் ஸஞ்சார க்ரமத்தில் மைசூர் ராஜ்யத்திற்கு விஜயம் செய்தார். அப்பொழுது பெரிய தேவராஜ உடையார் அரசனாகவிருந்தார். ஸ்ரீரங்கப்பட்டணம் தலை நகராயிருந்தது. முன்பு ஸ்ரீ விபுதேந்திர தீர்த்தர் மைசூர் அரசரால் கௌரவிக்கபட்டு கபிலா தீரமான நஞ்சன் கூடையே ஸ்ரீமடத்தின் மூலஸ்தானமாக்கிக் கொண்டு அரசினால் கிராமம் பூமிகளை சம்பாதித்திருந்தார். ஸ்ரீவிஜயீந்திரர் உடுப்பியாத்திரை காலத்தில் மடத்தின் மூலஸ்தானமான நஞ்சன் கூடுக்கு வந்த அந்தச் சமயத்தின் அரசனால் க்ராம பூமி ஸம்பாதித்து அங்கு சில தினங்கள் வசித்திருந்தார். க்ரமப்படி ஸ்ரீகுருராஜர் மடத்தின் மூலஸ்தானமான நஞ்சன் கூடிற்கு எழுந்தருளினார். பெரிய தேவராஜன் குருகளின் பாண்டித்யம், தபஸ்யா மஹிமைகளைக் கேள்விப்பட்டிருந்ததினால்ஸ்ரீகளவர் வந்த செய்தி அறிந்து நஞ்சன்கூடிற்கு வந்து ஸ்வாமிகளைத் தரிசித்துத் தலைநகருக்கு வரவேண்டுமென்று ப்ரார்த்தனை செய்தான். தயாளுவான ஸ்ரீகளவர் அரசனின் வேண்டுகோளின்படி ஸ்ரீரங்கபட்டணத்திற்கு எழுந்தருளினார். அங்கு அவரை அரசுமரியாதையுடன் வரவேற்பு அளித்து அரண்மனையில் பூஜைக்கு ஏற்பாடு செய்தான். மறுதினம் ஆஷாட சுக்லஏகாதசி ப்ரதமைகாதசியானதினால் பெரியதேவராஜர் ஸ்ரீரங்கநாதனின் ஸந்நிதியில் ஸ்ரீயவருக்கு (6—7—1662) ஸங்கல்பபூர்வகமாக "நெல்லூரு" அல்லது "தேவராஜபுரம்" என்னும் கிராமம் மற்றும் இதர வயிரம், வைடூர்யம் முதலிய ஆபரணங்களைத்

தானம் செய்து கிருதார்த்தனானான், ஸ்ரீஸ்ரீகளவர்கள் ஸ்ரீரங்கநாதனின் ஸேவைகள் செய்து திருப்தராய் சாதுர் மாஸ்ய ஸங்கல்பம் முடித்து அரசனை ஆசீர்வதித்து, நஞ்ஜன் கூடிற்கு வந்து ஸ்ரீகண்டேச்வரஸ்வாமியைத் தரிசித்து அங்கு சில காலம் தங்கியிருந்து பிறகு துலா ஸ்நானத்திற்கு ராமநாதபுரத்திற்குச் சென்று காவேரியில் ஸ்நானம் செய்து பகவந்தனை ஆராதித்தார்.

## 18. மோக்ஷம் அளித்த மஹாயதி

ஸ்ரீ குருராஜர் பிறகு வடதிசையில் ஸஞ்சாரத்தை மேற் கொண்டு சித்ரதுர்கத்திற்கு எழுந்தருளினார். அவருடைய சேவகனும் அந்தரங்க பக்தனுமான வெங்கண்ணன் வெகு நாட்களாகவே தனக்கு மோக்ஷம் கிடைக்கச் செய்ய வேண்டு மென்று கேட்டுக்கொண்டிருந்தான். க்ஞானிகளான ஸ்ரீராயர் அவனது ஸாதனம் முடிந்து மோக்ஷயோக்யனாகி யுள்ளதை யறிந்து, மந்த்ரபூத அக்னியில் ப்ரவேசிக்கும்படி ஆக்ஞாபித்தார். வெங்கண்ணன் மடியுடன் முனிவர்யருக்கு நமஸ்கரித்து ஸ்ரீஹரி த்யானம் செய்து கொண்டே தகதக வென்று கொழுந்து விட்டெரியும் அக்னியில் குதித்தான். சில ஜனங்கள் ஸ்ரீ குருகள் அந்யாயமாக வெங்கண்ணனைக் கொன்றுவிட்டாரென்று ஆக்ஷேபித்தனர். என்ன அற்புதம் ! என்ன ஆச்சரியம் ! இருந்தாற்போல் ஆகாயத்தில் மின்னல் மின்னி மணி ஓசை கேட்டது ! ஜனங்கள் தலை நிமிர்ந்து பார்த்தனர். அழகான ப்ரகாசிக்கும் விமானத்தில் வெங் கண்ணன் கைகூப்பிப் புன்சிரிப்புடன் ப்ரயாணம் செய்வதைக் கண்டு ஆச்சரியக் கடலில் மூழ்கினர். உடனே ஸ்ரீயவர்களின் மகிமையை யறிந்து எல்லோரும் குருகளின் பாதத்தில் விழுந்து மன்னிப்புக் கேட்டு ஸ்ரீயவர்களைப் பாராட்டினர்.

## 19. அபம்ருத்யு பரிகாரம் :

அங்கிருந்து குருராஜர் உத்தரகர்னாடக ஸஞ்சாரம் செய்யப் புறப்பட்டு கதக்கிலுள்ள வீரநாராயணஸ்வாமியின் தரிசனம் செய்து அங்கிருந்து கிரீடகிரிக்கு வந்தார். அங்கு ஸ்ரீமடத்தின் சிஷ்யனான தேசாய் வெங்கடராமன் குரு

களுக்கு தன் வீட்டில் பிக்ஷை ஏற்பாடு செய்திருந்தான். அப்பொழுது வைசாக மாதம். வஸந்த கால மானதினால் ஏராளமாக மாம்பழங்கள் தருவித்து மாம்பழ ரஸாயனம் (श्रीखरणी) செய்வித்திருந்தான், எல்லோரும் பூஜாரா தனையில் மெய்மறந்திருக்கையில் தேசாயின் ஒரே மகன் விளையாடிக் கொண்டே வந்து மாம்பழ ரஸாயனம் வைக்கப் பட்டிருந்த பெரிய கங்காளந்தில் விழுந்து இறந்து விட்டான். தீர்த்தம் கொடுக்கும் வேளையில் இந்த துக்கமான சமாசாரம் ஸ்ரீயவர்களுக்குத் தெரிந்தது. அவர் "ஸ்ரீமூல ராமனின் பூஜை நடக்குமிடத்தில் துர்மரணமா? ஜகன் மங்களமூர்த்தி, அவ்வாறு ஒருபொழுதும் செய்யமாட்டான்; எங்கே? கொண்டு வாருங்கள் அந்தச்சிறுவனின் சரீரத்தை என்று ஆணையிட்டார். துக்கத்தினால் தவித்துக் கொண்டிருக்கின்ற தேசாய் தம்பதிகள் கண்ணீர் சொரிய பாலகனின் சரீரத்தைக் கொண்டு வந்து குருவர்யரின் முன் வைத்தனர்.

ஸ்ரீயவர்கள் மந்திரித்த பவித்ர கமண்டலு ஜலத்தைப் பாலகனின் சரீரத்தின் மீது தெளித்து கண்ணை மூடிக் கொண்டு த்யானிக்கத் தொடங்கினார். அற்புதம்! ஆச்சரியம்! மரணமடைந்த தேசாயின் மகன் தூக்கத்தி லிருந்து விழித்தவனைப் போல் திடீரென்று எழுந்து உட்கார்ந்தான். ஜனங்கள் இந்தமாபெரும் சம்பவத்தைக் கண்டு திக்ப்ரமை யடைந்தனர். தேசாய் தம்பதிகளின் மகிழ்ச்சி ஆனந்தத்திற்கோ எல்லையே யில்லை. இறந்த மகனைப் பிழைக்க வைத்த மஹாமகிமையுள்ள குரு வர்யருக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து தனது "கிரீடகிரி" க்ராமத்தையே ஸமர்ப்பித்து கிருதார்த்த னானார்கள். அந்தக் கிராமம் இப்பொழுது கூட ஸ்ரீமடத்தின் ஆதினத்திலுள்ளது.

இவ்வாறு ஸ்ரீகளவர்கள் அபம்ருத்யுகளைப் பரிகாரம் செய்த எவ்வளவோ திருஷ்டாந்தங்களுள்ளன. ஒரு சமயம் அவருடைய சிஷ்யனொருவன் நிஷேக முகூர்த்தத்தன்று அறையின் வாசற்காலில் தலைபட்டு மரணமடைத்தபொழுது

குருவர்யர் மனமிரங்கிக் கருணைசெய்து அவனைப் பிழைக்க வைத்து புதிய மணமக்களைச் சுகமுடன் வாழும்படி செய்தார்.

கிரீடகிரியிலிருந்து ஹூப்ளிக்கு வந்த சமயம் அங்கும் இவ்வாறே சாவனூரின் நவாபின் புத்திரன் பாம்பு கடித்து மரணமடைந்திருந்த பொழுது கருட மந்த்ர ஜபத்தினால் காருடி மந்த்ரம்) அவனை உயிர்ப்பித்தார். அவன் முஸல்மானாக இருந்தபோதிலும் அந்த நவாப் குருராஜரின் மகிமையைக் கண்ணாரக் கண்டு தனது மகனைப் பிழைக்க வைத்த குருராயருக்குக் ''கிருஷ்ணாபுரம்'' என்னும் கிராமத்தை பக்தியுடன் ஸமர்ப்பித்து கௌரவித்துச் சேவித்து கிருதார்த்தனானான். அந்த க்ராமம் இப்பொழுது கூட ஸ்ரீ மடத்தைச் சேர்ந்தது.

## 20. வேத மஹிமையைக் காண்பித்தது :

ஸ்ரீ குருராஜர் தேச சஞ்சாரம் செய்யும் பொழுது பல சமயம் பகவந்தனின் அஸ்தித்வம் (இருக்கை), வேதங்களின் மகத்துவம், ஸனாதன ஹிந்து தர்மங்களின் சிறப்பு முதலியவைகளை எடுத்துக் காண்பித்து, ஆஸ்திக மதத்தின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டிய பரீக்ஷைகளுக்கு ஆளாக வேண்டி வந்தது. மஹாதபோநிதியும் பரமாத்மாவை சாக்ஷாத்கரித்துக் கொண்ட மஹாக்ஞானிகளுக்கு அது ஒரு பெரிய காரியமாயில்லாத போதிலும் தமது தவவலிமையை அநாவச்யமாகச் சிலவழிக்கக் கூடாதென்று நினைத்தாலும் வேறு வழியின்றி கடவுள் இருப்பது, சாஸ்திரங்களின் மகத்துவம், இவைகள் சத்யம் என்பதைக் காண்பிப்பதற்காகப்பல வேளைகளில் அற்புத-மஹிமைகளை (Miracles) காண்பிக்க வேண்டி வந்தது.

சிரஸங்கியென்னும் ஊரில் தேசாயிக்கு வேதங்களில் நம்பிக்கையே இருக்கவில்லை. வேத மந்திரங்களெல்லாம் பொய்க் கதைகள் என்று அவன் நம்பியிருந்தான். ஸ்ரீ குருராஜர் அங்கு சஞ்சாரம் செய்த சமயம் இந்த விஷயம் அவர்

காதுக்கும் எட்டிற்று. ஸ்ரீயவர்கள் தேசாயை அனுக்ரஹித்து அவனை ஆஸ்திகனாக்க வேண்டுமென்று விரும்பி ''நவலகுந்தத்''திற்கு எழுந்தருளினார். தேசாயை வரவழைத்து ஆஸ்திக மதத்தின் மகத்துவத்தை உபதேசித்தார். தேசாய் ஸ்ரீ களவரைப் பார்த்து, ''ஸ்வாமி, வேதங்கள், மந்த்ரங்கள் என்றெல்லாம் தாங்கள் அவைகளைப் புகழ்வீர்கள். அதில் எந்த சக்தி அடங்கியுள்ளது? அவையெல்லாம் கேவலம் வயிற்றுப் பிழைப்பிற்காக கற்பனை செய்யப் பட்டவைதான் என்பது எனது நம்பிக்கை, உமது வேதங்களின் உண்மையாக அப்படிப்பட்ட சக்தியிருப்பதானால் இதோ பாருங்கள். ''உலக்கையை முளைக்க வையுங்கள் பார்க்கலாம். என்று பரிகாசம் செய்து சிரித்தான். ஸ்ரீயவர்கள் புன்னகை செய்து அமைதியுடன், ''அய்யா, வேதங்களிலும், மந்த்ரங்களிலும் அபார சக்தி அடங்கியுள்ளது. இல்லையென்று நினைக்காதீர்கள். அதைக் காண்பிக்க எல்லோராலும் முடியாது. அதனாலேயே அது பொய்யல்ல'' உனக்கனுக்ரஹம் செய்து உனக்கு அதன் மகிமையைக் காண்பிக்கத்தான் நாம் இங்கு வந்துள்ளோம். பார்! நமது வேத மந்திரங்களின் அபாரசக்தியை'' என்று சொல்லி கமண்டலு ஜலத்தை மந்திரித்து உலக்கை மீது தெளித்து இரண்டு மூன்று தினங்கள் வரை இடைவிடாமல் மந்திரித்த புனித ஜலத்தைத் தெளித்ததினால் உலக்கை கொழுந்துவிட்டு முளைத்தது. அந்த அற்புத மகிமையைக் கண்ணாரக் கண்ட சிரஸங்கியின் தேசாய் குருராஜரின் பாதங்களில் விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கி மன்னிப்பு கேட்டான். ஸ்ரீயவர்கள் அவனை அனுக்ரஹித்துப் பல மந்த்ராக்ஷதை யருளி மேலே ப்ரயாணமானார். தேசாய் ஆஸ்திகனாக மாறினான். குருவர்யரின் பக்தனுமானான்.

### 13. வறண்டுபோன கட்டாந்தரையில் தண்ணீர் வரவழைத்தது :

குருராஜர் அங்கிருந்து பண்டரீபுரத்திற்கு ப்ரயாணமானார். ஒரு வறண்ட பூமியின் வழியாகப் போய்க் கொண்டிருக்கிறார். சூர்யனின் கடுவெப்பம் சகியாமல்

ஜனங்கள் தவித்துக் கொண்டிருக்கின்றனர். எங்கும் தண்ணீர் இல்லை என்பதே பேச்சு. அதல்லாமல் வெய்யிலின் கொடுமை. இந்த நிலையில் ஸ்ரீராயரின் சேவகனின் நிறை சூலியான பத்தினி அந்த வறட்சிக் காட்டில் ப்ரஸவித்து விட்டாள். தண்ணீரில்லை. நிழலுமில்லை. இனி என்ன செய்வது என்று தோன்றாமல் சேவகன் குருகளுக்குச் சரண மடைந்து தனது மனைவியையும் குழந்தையையும் காப்பாற்ற வேண்டுமென்று வேண்டினான். தயாசமுத்திரரான குரு ராஜர் கமண்டலு ஜலத்திலிருந்து தண்ணீர் பொங்கி வரும் படி செய்தார். உடம்பின் மேலிருந்த காஷாய வஸ் திரத்தை ஆகாயத்தில் வீசி அதனால் விசாலமான நிழலை உண்டாக்கினார். பாணந்தியையும் குழந்தையையும் காப்பாற்றினார்.

பண்டரிபுரத்திற்கு விஜயம் செய்தபொழுது அங்கு ''சேஷ''னென்னும் வாதியுடன் வெகுநாட்கள் வாக்யார்த் தம் நடைபெற்றது. ஸ்ரீயவர்கள் தமது பரம குருவாகிய ஸ்ரீ விஜயீந்திரர் இயற்றிய "वाग्वैखरी" ''வாக்வைகரீ'' என்னும் க்ரந்தத்தின் யுக்திகளினால் அவனை வென்றார். தனது வெற்றியை ஸ்ரீ பாண்டுரங்கனுக்குச் சமர்ப்பணம் செய்து, அவனைச் சேவித்து, அங்கிருந்து கொல்லாபுரத் திற்கு எழுந்தருளி ஸ்ரீ லக்ஷ்மி தேவியாரைத் தரிசித்து அங்கு வெகுநாட்கள் தங்கினார். தஞ்சாவூரின் ராஜ குருகளான ஸ்ரீகுருவர்யரை ஹிந்து தர்மஸம்ரக்ஷணைக்காக யுத்தத்திற் காகக் குரல் கொடுத்த சத்ரபதி சிவாஜி மஹாராஜா மோரோபந்த் ஹனுமந்தே என்னும் தனது நண்பனுடன் வந்து விசேஷமாகக் கௌரவித்துச் சேவித்தான். சிவாஜி மஹாராஜா குருராஜரின் உபதேசத்தினால் க்ருதக்ருத்யனா னார். குருவர்யர் அங்கிருந்து நாஸிக்வரை திக்விஜயம் செய்து கோதாவரியில் ஸ்நானம் செய்து திரும்பினார். வழிநடுவில் பீஜப்பூர்—சிக்கோடி வழியின் காட்டில் வெய்யிலின் தாபத்தினால் குற்றுயிராகக் கிடந்த ஒரு ப்ராம்மணனை ஜலம் வரவழைத்துக் கொடுத்து அவனை உயிர்ப்பித்தார்.

## 22. பீஜப்பூரில் திக்விஜயம் :

அன்று பீஜப்பூர் பெரிய ராஜ்யமாக இருந்தது. அங்கு இரண்டாவது அலி அதில் ஷா என்னும் சுல்தான் ஆட்சி காலம். அவன் முஸ்லிம் அரசனாயினும் ஹிந்து மதத்தின் மீது அபாரமான மதிப்பு வைத்திருந்தான். ப்ராம்மணர் களிடம் தனி பக்தி மரியாதையிருந்தன. ஆர்ய தர்மத்தில் அவனுக்கிருந்த மரியாதை, அன்பு முதலியவைகளைக் கண்டு அவனுடைய முஸ்லீம் ப்ரஜைகள் அவனை "ஜகத்குரு" என்று அழைத்து வந்தனர்.

ஸ்ரீ ராகவேந்திரர் ஸமஸ்தானத்துடன் அங்கு வந்த பொழுது சுல்தான் அவரைக் கௌரவத்துடன் வரவேற்று உபசரித்தான். குருராஜரின் வித்தையின் மகத்துவத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட அவனது ஆஸ்தானத்தின் மூத்த பண்டி தர்கள் குருகளுடன் வாதம் செய்து தோல்வியடைந்து அவரது சிஷ்யரானார்கள். சுல்தான் ஸ்ரீகளவரின் இந்த திக்விஜயத்தினால் மகிழ்ச்சியடைந்து ஸ்ரீயவர்களுக்கு "ஜகத்குரு" என்ற விருதையும், ஸாம்ராஜ்ய சின்னமாக வெண் கொற்றக்குடை, ஒட்டகம் மீது பச்சைக் குடை, अप्तागिरि (வெண் கொற்றக் குடை) கிராமம், பூமிகளைத் தானம் செய்து கௌரவப்படுத்தினான்.

ஸ்ரீகளவர் பீஜப்பூரிலிருந்து ஆலூரகிரிக்கு வந்து க்ருஷ்ணா ஸ்நானம் செய்து, அங்கு சில நாட்கள் தங்கி, "தத்வ ப்ரகாசிகா" க்ரந்தத்திற்கு "भावदीप" (பாவதீப) என்னும் உத்தமமான வியாக்யானங்கள் எழுதி, "ப்ரம்ம ஸூத்ர அனுபாஷ்ய"த்திற்கு "தத்வ மஞ்சரி" என்னும் விஸ்தாரமான "டீகா" இயற்றினார்.

## 23. தீண்டாதவராக இருந்த கனகதாஸருக்கு ஸத்கதி :

அங்கிருந்து ஸ்ரீ குருராஜர் கிழக்கே ப்ரயாணம் மேற்கொண்டு ராய்ச்சூர் ஜில்லாவின் 'மானவி'யின் சமீபத்திலுள்ள ஸ்ரீ ப்ராணதேவனின் கோவிலில் முகாம் செய்தார். அந்தக் கோவிலின் வெளிப்புறத்தில் கருடகம்

பத்தின் சமீபத்தில் கை கூப்பிக் கொண்டு வினயத்துடன் நின்றிருந்த தீண்டாதவனொருவன் ஸ்ரீ குருராஜரைக் கண்டு அவரை வணங்கி "ஒடெய" என்றான். அவனைப் பார்த்த ஸ்ரீ குருராஜர் புன்சிரிப்புடன் "இதென்னப்பா கனக! உனது நிலைமை ஏன் இவ்வாறாயிற்றப்பா?" என்றார். அப்பொழுது அந்தத் தீண்டாதவன் மிக வினயத்துடன் பெருமூச்சு விட்டு, "உம், இதெல்லாம் எனது ஸ்வாமி ஸ்ரீ ஆதிகேசவனின் லீலையப்பா, வ்யாஸப்பா! அன்று கனக! நீயும் மறுபடியும் ஜன்மமெடுக்க வேண்டு மய்யா, விட்டதல்ல, அப்பொழுது தான் உனக்கு நல்லகதி" என்று நீயே சொன்னது மறந்து விட்டாயா என்னுடையா? இதோ கேசவனின் சங்கல்பம், உன் ஆணைப்படி இந்த ஜன்மத்தில் வந்திருக்கின்றேன். குருதேவா இப்பொழுது நீயே எனக்கு ஒரு வழி காண்பித்து நற்கதி பிறக்கும்படி செய்து என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டினான். முன்பு ஸ்ரீ குருராஜர் ஸ்ரீவ்யாஸ ராஜராக இருந்தபொழுது—கனகதாஸராக இருந்த மஹானுபாவரே பகவத் ஸங்கல்பப்படி இப்பொழுது தீண்டத்தகாதவனாகப் பிறந்துள்ளார். இதை அறிந்திருந்த ஸ்ரீ குருஸார்வ பௌமர், "உம், ஆகட்டும் கனகா! நாளைக்கு ஸ்ரீமூல ராமருக்கு ஏதாவது காணிக்கை கொண்டு வந்து கொடு. ஸ்ரீ மூலரகுபதி கண்டிப்பாக உனது அபிலாஷையை நிறை வேற்றுவார்" என்று கருணை நிறைந்த இதயத்துடன் புன்முறுவலுடன் விடையளித்தார். "இனியென்ன? குருகளனுக்கிரஹமாய்விட்டது. நான் நற்கதியடைவதில் சந்தேகமில்லை" என்று மகிழ்ச்சியடைந்து அவன் குரு களிடம் விடைபெற்றுச் சென்றான்.

மறுநாள் தீண்டாதவனை எதிர்பார்த்துப் பதிதபா வனரான குருராஜர் த்வஜஸ்தம்பத்தினருகே நின்றிருக்கும் பொழுது அவன் கொஞ்சம் கடுகை எடுத்துவந்து தூரத்தி லிருந்து குருவர்யர் முன்பு வைத்து வணங்கினான். ஸ்ரீ ராயர் அவனை ஆசீர்வதித்து அந்தக் கடுகை அன்றைய சமையலுக்கு உபயோகப்படுத்தும்படி ஆணையிட்டார்.

மடத்தின் பாருபத்திதாரர் சாதுர்மாஸ்ய வ்ரதகாலத்தில் கடுகைச் சமையலில் சேர்ப்பது நிஷித்தம் என்று தெரிந்தவ ரானதால், அந்த விஷயத்தைக் குருவிடம் கேட்கத் தைரிய மில்லாமல் அப்படியே நின்றார். அதைக்கண்டு அவருடைய மனக்குழப்பத்தை அறிந்து குருராஜர் புன்னகை செய்து, "பாருபத்திதாரரே! கடுகு ஹோமத்ரவ்யம்! நீங்கள் அதைத் தாராளமாக உபயோகிக்கலாம். ஆகையால் எந்தக் குறையும் வராது. தோஷமுமில்லை. இன்று மாத்திரமல்ல; ஸ்ரீ மத்வாசார்யரின் சமஸ்தானத்தில் இனிமேலும் நிரந்தர மாக வ்ரதகாலங்களில் கடுகை உபயோகிக்கலாம். இது ஸ்ரீ ஹரியின் சித்தம்" என்று ஆக்ஞாபித்தார். ஸ்ரீயவர் களின் ஆணைப்படி கடுகு அன்றைய சமையலில் சேர்க்கப் பட்டது. ஸ்ரீ மூலராமரின் பூஜை, நைவேத்யம், ஸ்ரீ யவரின் பிக்ஷை ஏற்றுக்கொண்ட பிறகு ஸ்ரீ குருராஜர் தீர்த்தம் மந்த்ராக்ஷதை மற்றும் பகவத் ப்ரஸாதத்தைப் பாருபத்தி தாரரின் மூலமாக அந்தத் தீண்டாதவனுக்கு அனுப்பினார். தீண்டாதவன் பக்தி சிரத்தையுடன் குருராஜர் அனுக்ரஹ பூர்வமாக அனுப்பின தீர்த்தப்ரஸாதத்தை உண்டு பிறகு, ஸ்ரீ குருராஜர் த்வஜஸ்தம்பத்தினருகில் எழுந்தருளி சிரித்த முகத்துடன், "ஸ்ரீ ஹரிவாயுகளின் ப்ரஸாதத்தினால் கனகா! நீ கிருதார்த்தனானாய். உம், உனது காரியங் களெல்லாம் இன்று முடிந்தன. ஸ்ரீ ஹரியை தியானித்துக் கொண்டே சரீரத்தை விட்டுவிடு, உனக்கு மோக்ஷம் ஆகும்" என்று உத்தரவிட்டார். தீண்டாதவன் மறுபடியும் மறு படியும் ஸ்வாமிகளுக்கு நமஸ்கரித்து ஸ்ரீயவர்களின் கண்ய மான ஸ்வரூபத்தையே மனமார த்ருப்தியடையும் வரை பார்த்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்துகொண்டே ஸ்ரீஹரி ஸ்மரணைபூர்வகமாக தேகத்தை விட்டான். அடுத்த நொடியில் விமானத்தில் ஏறி வைகுண்டபுரத்திற்குப் பயண மானான். இந்த அற்புதத்தைக் கண்டுகொண்டே ஜனங்கள் நின்று கொண்டிருக்கையில் மணியோசையாயிற்று. அதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரியத்துடன் தீண்டாதவனாக இருந்த கனகதாஸரின் பாக்கியத்தைப் பாராட்டினர்.

## 24. பிதரஹள்ளி ஸ்ரீநிவாஸாசார்யரு :

ஸ்ரீ குருராஜர் மானவி க்ஷேத்திரத்தருகிலுள்ள ஆஞ்ச நேயரின் தேவாலயத்திலேயே சாதுர்மாஸ விரத சங்கல்பத் திற்கு உட்கார்ந்தார். அப்பொழுது தானாகக் கிடைத்த இந்த நல்ல சந்தர்ப்பத்தை விடாமல் லாபமடைய வேண்டு மென்று அனேக பண்டிதர்கள், கவிகள் ஸ்ரீகளவரின் தரிசனத் திற்காக வந்து ஸ்ரீ குருராஜரின் அனுக்கிரஹத்தைச் சம்பாதித்துக்கொண்டு போய்க்கொண்டிருந்தனர். அதே சமயத்தில் ஸ்ரீ யாதவார்யரென்னும் க்ரந்தகாரரின் (நூலாசிரியரின்) சகோதரரான ஸ்ரீ பிதரஹள்ளி ஸ்ரீநி வாஸாசார்யரென்னும் பண்டிதர் அண்ணனின் உத்தரவின் படி குருஸார்வபௌமரின் தரிசனத்திற்காக வந்தார். ஸ்ரீநிவாஸாசார்யர் குருகளின் தரிசனம் செய்து, அனுக்ரஹிக்கவேண்டுமென்று ப்ரார்த்தனை செய்தார். உத்தம பண்டிதரான ஆசார்யரை குருவர்யர் சிறப்பாக ஆதரித்தார். ஸ்ரீ மூலராமரின் பூஜை, தீர்த்தப்ரஸாதங் களான பிறகு குருவின் முன்பு வித்வான்களுடன் அவர் சமீபத்தில் ஸ்ரீநிவாஸாசார்யர் போஜனத்திற்கு உட் கார்ந்தார். சமையலில் கடுகு உபயோகப்படுத்தியிருந்த தினால் ஸ்ரீநிவாஸாசார்யர் சாப்பிடப் பின்வாங்க ஆசார் யரின் அவஸ்தையைக் கண்ட உதாரகுணமுள்ள ஸ்ரீயவர்கள் அவருக்காக கடுகு இல்லாத சமையல் செய்வித்துப் பரிமார ஏற்பாடு செய்தார். பிறகு ஸ்ரீ நிவாஸாசார்யர் ஸ்ரீகளவ ரிடமிருந்து பல மந்த்ராக்ஷதை பெற்று, யாதவார்யரிடம் வந்தார். ஸஹோதரனின் முகத்தில் ஸ்வோத்தமத்ரோஹ- லக்ஷணத்தைக்கண்டு ஸ்ரீ யாதவார்யர் மந்த்ராக்ஷதையை கொடுக்கும்படி கேட்டார். துணியிலிருந்து மந்த்ராக்ஷதை முடிச்சை அவிழ்த்தபொழுது சிவப்பாக இருக்க வேண்டிய மந்த்ராக்ஷதை கருப்பாயிருப்பதைக் கண்டு ஸ்ரீ யாதவார்யர் துக்கத்துடன், " ஸ்ரீநிவாஸா, குருத்ரோகம் சம்பாதித்துக் கொண்டுவந்துவிட்டாயே! உம். அங்கு என்ன அபசாரம் செய்துவிட்டாய்? சொல் " என்றார். அப்பொழுது ஸ்ரீநிவா ஸாசார்யருக்குக் கடுகுவிஷயம் நினைவிற்கு வந்தது. அண்ணனுக்கு அந்த விஷயத்தைத் தெரிவித்தார். பெரு

மூச்சு விட்டு ஸ்ரீயாதவார்யர், "மஹாக்ஞானிகளின் எதிரில், மஹாத்மாவினெதிரில் உனது அதிகப்ரஸங்கித் தனம் தேவையா? எது ஏற்றுக்கொள்ளத்தக்கது? எது ஏற்றுக்கொள்ளத்தகாதது என்பதை க்ஞானிகளான குரு ராஜரைவிட அதிகமாக அறிந்தவனா? ஸ்ரீமூலராமனின் ப்ரஸாதம், ஸ்ரீயவர்களின் ஹஸ்தோதக சேஷத்தைத் திரஸ்காரம் செய்து வரலாமா? உம்! புறப்படு. முதலில் அந்த மஹானிடம் மன்னிப்புக் கேட்டு அவரனுக்ரஹத்தைச் சம்பாதித்துக் கொண்டுவா! இல்லாவிடில் ஸ்ரீமதாசார்யரின், ஸ்ரீ டீகாசார்யரின், அனுக்ரஹம் உனக்காகாது" என்று சொல்லவும் மனம் நொந்தவராய் ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்ரீ குருராஜரின் ஸந்நிதிக்குத் திரும்பி வந்து அனுக்ரஹிக்க வேண்டுமென்று ப்ரார்த்தனை செய்தார். மறுநாள் ஸ்ரீநிவாஸாசார்யர் கடுகு உபயோகிக்கப்பட்ட சமை யலையே உண்டு ஸ்ரீயவர்களினால் கௌரவப்பட்டு, குருராஜரின் அனுக்ரஹம் பெற்றுச் சென்றார். இது ஒரு பெரிய பாடம், (நீதி) ஸ்வோத்தமரின், க்ஞானிகளின் ஸந்நிதியில் ஸாமான்ய மனிதரான நாம் நமது பெருமை யைக் காண்பிப்பது தவறு. அவ்வாறு செய்யலாகாது; ஸ்ரீ பிதரஹள்ளி ஸ்ரீநிவாஸாசார்யரின் இந்த சம்பவம் ஜனங்களுக்கு ஒரு நீதி கற்பிப்பதாயுள்ளது.

## 25. அனாதை வெங்கண்ணன் திவானானான்:

ஸ்ரீ குருராஜர் சாதுர்மாஸ்ய விரதம் முடிந்த பிறகு சஞ்சார க்ரமத்தில் 'கந்தனாதி'க்கு விஜயம் செய்தார். அங்கு வெங்கண்ணனென்னும் வாலிபன் குருவர்யரின் சேவை செய்து தான் முன்னேற்றமடையும்படி ஆசீர்வதிக்கும்படி வேண்டிக் கொண்டான். குருராஜர், "வெங்கண்ணா! உன் சேவையினால் நாம் மகிழ்ந்தோம்! ஸ்ரீஹரி பரமாத்மா உன்னிடம் சந்தோஷமடைந்துள்ளார். உனது பக்தியினால் நமக்கு அபார ஆநந்தமாயுள்ளது. உனக்கு ஆபத்துவரும் பொழுது நம்மை நினைத்துக் கொள். (ஸ்மரணை செய்) அன்றிருந்து நீ முன்னேற்றமடைந்து கீர்த்தி பெறுவாய்— இனி உன்னால் ஸ்ரீமூலராமனுக்குப் பெரிய சேவையாக

விருக்கிறது. உனக்கு மங்களமுண்டாகட்டும்'' என்றருளிப் பல மந்த்ராக்ஷதை கொடுத்து ஆசீர்வதித்தார். பிறகு மேலே ப்ரரயணத்தைத் தொடங்கினார்.

வெங்கண்ணன் ''கந்தனாதி''யின் பணக்காரக் குடும்பத்திற்குச் சேர்ந்தவனாயிருந்தும் தாயாதிகளின் பொறாமை, அவமரியாதைக்காளாகி, படிப்பின்றி, புத்தியுமில்லாமல் அனாதையாக வளர வேண்டியதாயிற்று. வெங்கண்ணனுக்குத் தானும் எல்லோரைப் போல படிப்பாளியாகித் தகுதியுள்ள குடிமகனாகக் கௌரவத்துடன் வாழவேண்டுமென்று ஆசையென்னமோ பிரமாதமாக இருந்தது. ஆனால் சரியான ரக்ஷகர், அவனை முன்னுக்குக் கொண்டுவர பெரியோர்கள் யாரும் இல்லாததால் அனாதையான அவனை ஜனங்கள் சோம்பேறியென்று சட்டை செய்யாமல் இருந்ததால் கல்வி கற்காமல் எழுத்தறிவில்லாதவனாய் துக்க வாழ்வு நடத்தி வந்தான். வெங்கண்ணனின் பாக்யத்தின் கதவு திறந்ததோ என்னும்படியாக மஹானுபாவரான குருராஜர் ''கந்தனாதி''க்கு வந்தார். வெங்கண்ணன் ஸ்ரீராயரின் மகிமைகளைக் கேள்வியுற்றிருந்தான். அதன் படியே குருராஜர் அனுக்ரஹித்தால் தானும் ஒரு நல்ல க்ருஹஸ்தனாக முடியும் என்னும் ஆசையினால் உற்சாகத்தினால் ஸ்ரீ குருராஜரின் சேவை செய்து அவரது க்ருபா கடாக்ஷத்தினால் அனுக்ரஹிக்கப் பெற்றான். குருவர்யர் வந்து பல மந்த்ராக்ஷதை அளித்து ஆசீர்வதித்த நாளிலிருந்து ஏதோ ஒரு விதமான உணர்ச்சிகள் அவனுக்கு வரத் தொடங்கின. அதுவரை சுத்தமில்லாமலிருந்த வெங்கண்ணன் உடுத்திக் கொண்டிருந்த துணியை நன்றாகத் துவைத்து உடுக்க ஆரம்பித்தான். அனுதினமும் ஸ்நானம் செய்து பகவானுக்கும் குருவிற்கும் நமஸ்கரித்து பிறகு தனது காரியங்களை ஆரம்பிக்கலானான். அவனிடம் இந்த மாறுதலைக் கண்டு ஊரிலுள்ளவர்களுக்கு ஒரே ஆச்சரியம். வெங்கண்ணனின் முன்னேறும் தினம் நெருங்கிற்று.

இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் ஆதோணி நவாப் (அரசன்) நிலவரி வசூல் செய்வதற்காக ''கந்தனாதி''

க்ராமத்தின் வழியாக சைன்யத்துடன் ப்ரயாணம் செய்து கொண்டு வருகையில் குதிரை ஸவாரி செய்து கொண்டு வரும் ஒரு ராஜ தூதன் நவாபிடம் இரண்டு கடிதங்களைக் கொண்டு வந்து கொடுத்தான். யானை மீது அமர்ந்திருந்த நவாப்புடன் கூட தர்பாரில் கடிதங்கள் படித்துச் சொல்லும் சேவகன் இருக்கவில்லையாதலால் பக்கத்தில் ஒரு மரத்தினடியில் நின்று கொண்டிருந்த வெங்கண்ணனைக் கண்டு அவனது லக்ஷணங்களைப் பார்த்து ப்ராம்மணனென்றறிந்து அவனையழைத்துவரச் சொல்லிக் கடிதங்களை வெங்கண்ணனிடம் கொடுத்து படிக்கும்படி உத்தரவிட்டான் படிக்கத்தெரியாத வெங்கண்ணன் பயந்துகொண்டு, "ஸ்வாமி, எனக்குப் படிக்கத் தெரியாது" என்று தெரிவித்தான். அதைக் கேட்டு கோபமடைந்த நவாப், "பொய்யா சொல்லுகிறாய்? பார்த்தால் ப்ராம்மணனைப் போலிருக்கிறாய், ப்ராம்மணனாயிருந்தும் படிக்கத் தெரியாதென்று பொய்யா சொல்லுகிறாய்? நீ இப்பொழுது கடிதங்களைப் படிக்காவிட்டால் உன்னைப் பலியாக்கிவிடுவேன், உம், வாசி" என்று மிரட்டினான்.

நவாபின் மிரட்டலைக் கேட்டு வெங்கண்ணனுக்குக் கை-கால்கள் நடுங்க ஆரம்பித்தன. பீதியடைந்த அவனுக்கு என்ன செய்வதென்று தோன்றவேயில்லை; உயிருக்கு ஆபத்தில் அகப்பட்ட வெங்கண்ணனுக்கு முன்பு ஸ்ரீ குருராஜர், "வெங்கண்ண, உனக்கு ஆபத்துவந்த பொழுது நம்மை ஸ்மரணை செய்வாயாக; அன்றிலிருந்து நீ முன்னேற்றமடைந்து கீர்த்திபெறுவாய்" என்று சொல்லியிருந்தது நினைவில் வந்தது. உடனே பக்தி-சிரத்தையுடன் மனதிலேயே "ஸ்ரீராகவேந்திரா காப்பாற்றும்" என்று த்யானம் செய்து தைரியமாகக் கடிதத்தைப் பிரித்து கடகடவென்று படிக்க ஆரம்பித்தான்! என்ன ஆச்சரியம்! நன்றாகக் கற்ற வித்வானைப்போல் படித்துக்கொண்டிருந்த வெங்கண்ணனுடைய கம்பீரத்தைக் கண்டு நவாப் மகிழ்ச்சியடைந்தான். வெங்கண்ணன் வாசித்த அவ்விருகடிதங்களிலும் மகிழ்ச்சிகரமான செய்தி இருந்தது. ஒரு கடிதத்தில்

வெகு நாட்களாக முற்றுகை போடப்பட்ட ஒரு கோட்டை நவாபின் கைவசமான வெற்றிச் செய்தி இருந்தது. மற்றொரு கடிதத்தில் நவாபிற்குப் புத்திரன் பிறந்த சுபசமாசார மிருந்தது. புன்னகையுடன் நவாப் கேட்டான், "ஏனய்யா, இவ்வளவு நன்றாகப் படிக்கத் தெரிந்தும் கூட படிக்கத் தெரியாதவனைப்போல் நடித்தாயல்லவா! என்னைப் பார்த்து பயந்தா அப்படிச் சொன்னாய்?"

இப்பொழுது வெங்கண்ணனுக்கு ஸ்ரீ குருராஜர் தன்னிடம் செய்துள்ள அனுக்ரஹத்தின் முழு அறிவு ஏற்பட்டது. அவ்வாறே அவன் அவருடைய கிருபையான கவசத்தை அணிந்தவனாய் தைரியமாக, "இல்லை ப்ரபுவே! உண்மையாகவே இந்த வினாடி வரையிலும் எழுத்தறி வில்லாதவனாகத்தான் இருந்தேன். ஆனால் மஹாத்மா வான எனது குருபாதரின் அனுக்ரஹத்தினால் இப்பொழுது உமது எதிரில் இந்தக் கடிதங்களைப் படிக்கும் பொழுதே தான் படிக்க முடியுமென்பதை யறிந்தேன். இது சத்தியம்!" என்று தெரிவித்தான். ஆச்சரியமடைந்த நவாப், "அது எப்படி முடியும்" என்று கேட்கவும், வெங்கண்ணன் ஸ்ரீகுரு ராஜரின் தரிசனம், தனது வேண்டுகோள், ஸ்ரீகளவர்களின் அபயப்ரதானம் முதலான நடந்த எல்லா விஷயங்களையும் ஆதியோடந்தமாகத் தெரிவித்தான். நவாப் பரம சந்தோஷ மடைந்து, எல்லையற்ற ஆச்சரியமடைந்து, "உமது ஹிந்து ஜனங்களில் இப்படிப்பட்ட மஹாத்மாக்கள் இருக்கின்றனரென்று கேட்டிருக்கிறேன். மகிழ்ச்சி. நீ எனக்கு இரண்டு ப்ரியமான செய்திகளைத் தெரிவித்திருக் கிறாய், உனக்கென்ன வேண்டும், கேள், கொடுக்கிறேன், என்று சொல்லவும் வெங்கண்ணன் மிக்க அடக்க ஒடுக்கத் துடன், "ப்ரபு! எனக்கு எந்த ஆசையுமில்லை. நீங்கள் என்னால் மிக்க த்ருப்தியடைந்தீர்கள்; அவ்வளவே போதும்" என்று சொல்லவே அவனது சுயநலமற்ற புத்தி, அடக்கமான உருவம் முதலியவைகளினால் திருப்தியடைந்த சித்தி மசூத்கான் அவனைத் தன்னுடன் அதோணிக்கு வரும் படி அழைத்து, அங்கு அழைத்துக் கொண்டுபோய், ஒரு

உத்யோகம் கொடுத்தான். வெங்கண்ணன் ஸ்ரீகுருராஜரின் அனுக்ரஹத்தினால் அன்றிலிருந்து பத்து பன்னிரண்டு வருடங்கள் வரை படித்தவனைப்போல் புத்திசாலித் தனமாகக் காரியங்கள் சிரத்தையுடன் நிர்வஹித்து, குருவர்யரின் அனுக்ரஹத்தினால் ஸகல ராஜதந்திரங்க ளெல்லாவற்றிலும் நிபுணனாய், நவாபிற்கு மிக ப்ரிய பாத்ரனாகி விட்டான். சில நாட்களிலேயே அநாதையா யிருந்த வெங்கண்ண ஆதோணிராஜ்யத்தின் மந்திரி (திவான்) ஆனான். அன்றிருந்து திவான் வெங்கண்ண பந்த் என்ற பெயர் பெற்று நவாபின் நெருங்கிய ஆப்த நண்பனானான். அநாதையைத் திவானாகச் செய்து அனுக்ரஹித்த ஸ்ரீகுரு ராஜரின் கருணையை வெங்கண்ண பந்த் எப்பொழுதும் ஸ்மரணை செய்து கொண்டு மஹானுபாவரின் சேவை செய்யும் நல்ல சந்தர்ப்பம், பாக்யம் எப்பொழுது கிடைக்கு மென்று நல்ல காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு திவான் பதவியில் கீர்த்திபெற்று சுகமாக வாழ்ந்து வந்தான்.

## 26. கும்பகோணத்திற்குத் திக்விஜயம் :

ஸ்ரீமதாசார்யரின் மஹா ஸமஸ்தானாதிபதிகளான பிறகு திக்விஜய யாத்திரையை மேற்கொண்டு தீர்த்த க்ஷேத்ர தரிசனாதிகள் செய்து கொண்டு சிஷ்யர்களைப் புனிதராக்கிக் கொண்டு சஞ்சார க்ரமத்தில் ''கந்தனாதி''க்கு வந்து வெங்கண்ணனுக்கு அனுக்ரஹம் செய்து மேலும் சஞ்சாரத்தை மேற்கொண்டு ஸ்ரீ குருஸார்வ பௌமர் ''கந்தனாதி''யிலிருந்து புறப்பட்டாரல்லவா? அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீயவர்கள் ஸ்ரீசைலத்திற்குச் சென்று ஸ்ரீ ருத்ரனைத் தரிசித்து அங்கிருந்து திருப்பதிக்கு வந்து சேர்ந் தார். திருப்பதியில் குலதேவனான ஸ்ரீ ஸ்ரீநிவாஸப் பெரு மாளைத் தரிசித்து, ஸ்ரீரமாகாந்தனை மனமாரச் சேவித்து சில நாட்கள் அங்கு தங்கியிருந்து ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்த ப்ரவசனத்தினால் ஏராளமான ஜனங்களை மகிழ்வித்து ஸ்ரீநிவாஸனிடமிருந்து விடைபெற்று, அங்கிருந்து காஞ்சி, அருணாசலம் (திருவண்ணாமலை), விருத்தாசலம்,

ஸ்ரீ முஷ்ணக்ஷேத்திரங்களுக்குப் போய் ஆங்காங்கே பகவந்தன் சேவை செய்தார். இவ்வாறு ஸ்ரீபாதங்களவர் ஒரு ப்ரதக்ஷிணாகாரமாக. தக்ஷிணபாரத சஞ்சாரத்தை முடித்துக் கொண்டு த்வைத விஜய துந்துபியை எங்கும் முழக்கி கும்பகோணத்திற்கு எழுந்தருளினார்.

வெகு நாட்களுக்குப் பிறகு கும்பகோணத்திற்குத் திக்விஜயம் செய்த ஸ்ரீபாதங்களவரை வரவேற்ற ஜனங்களின் பக்தி—சிரத்தை, உற்சாகம், விமரிசையை முன்பு பதினான்கு வருடகாலம் வனவாஸத்திற்குச் சென்றிருந்த ஸ்ரீராமசந்திர பிரபு அயோத்திக்குத் திரும்பி வந்தபொழுது ஏற்பாடு செய்யப்பட்ட விமரிசையான நிகழ்ச்சிகளை நினைவூட்டிற்று.

கும்பகோணத்தில் சில நாட்கள் வாசம் செய்த பிறகு ஸ்ரீ குருராஜர் தமது அவதார காரியத்தைச் சீக்கிரமாக முடிப்பதற்காக விரும்பி, கும்பகோணத்தை விட்டுக் கர்நாடக ப்ரதேசத்திற்கு வரவிரும்பினார். அதன்படியே ஸ்ரீயவர்கள் கும்பகோணத்தின் ஸகல்தேவாலயங்களின் தலைமைப் பொறுப்பை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதீசர், ஸ்ரீ வைஷ்ணவ மடாதிபதிகளுக்கு ஒப்புவித்தார். ஸ்ரீ விஜயீந்திரர் ஸ்தாபித்த ஸம்ஸ்க்ருத வித்யாபீடம், ஸ்ரீ விஜயீந்திரரின் ப்ருந்தாவனம், ஸ்ரீமடத்தின் சொத்துக்களின் நிர்வாக அதிகாரங்களை முறைப்படி நிறைவேற்றுவதற்காகத் தம் மடத்தின் பூர்வாச்ரம வம்சத்தினர்களுக்கு ஆணையிட்டு எல்லா ஏற்பாடுகளும் செய்து கும்பகோணத்திலிருந்து புறப்பட்டு, முதலில் நவப்ருந்தாவனத்தீவிற்கு வந்து சேர்ந்து அங்கு தமது மடத்தின் பூர்வாசார்யர்களான ஸ்ரீபத்மனாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர், கவீந்த்ரதீர்த்தர், வாகீசதீர்த்தர், மற்றும் ஸ்ரீவ்யாஸர், மேலும் தனது குருவான ஸ்ரீஸுதீந்த்ர தீர்த்தரின் ப்ருந்தாவன தரிசனம், ஸேவை முதலியவைகளைச் செலுத்தி ஹஸ்தோதகம் ஸமர்ப்பித்து ஸஞ்சாரக்ரமத்தில் ஆதோனி (ஆதவானி)க்கு விஜயம் செய்தார்.

## 27. மந்த்ராலய க்ராமம் ஸம்பாதித்தல் :

தன்னை ரக்ஷித்துக் காப்பாற்றிய குருவர்யர் ஆதோனிக்கு வரவிருக்கும் சுபசெய்தியைக் கேட்டு, 'திவான் வெங்கண்ண பந்த் ஸர்தேசாய் பரமானந்தமடைந்து நகரத்தை அலங்கரித்து ஸகல ராஜமரியாதையுடன் தலைநகரின் எல்லையில் குருஸார்வ பௌமரை விமரிசையுடன் எதிர் கொண்டு பக்தி-சிரத்தையுடன் வரவேற்று ஊர்வலமாக அழைத்து வந்து தனது அரண்மனையில் அவரைத் தங்க வைத்தான். குருபாதருக்கு அரசனுக்கேற்ற மரியாதை உபசரிப்புகளை ஏற்பாடு செய்து சேவைகளைச் செலுத்தி கிருதார்த்தனானான். ஸ்ரீகுருராஜர் வெங்கண்ணபந்த் இன்று தமது அனுக்ரஹத்தினால் பெரிய அரசனின் திவானாக இருந்தாலும் பதவி, மரியாதை முதலிய கர்வ மேலீட்டினால் தன்னை மறந்து நடந்து கொள்ளாமல், நன்றி கெட்டவனா காமல், இப்பொழுதும் முன்பு இருந்தது போலவே குரு பக்தனாகவே இருந்து வருவதைக் கண்டு மகிழ்ச்சியடைந்து புன்னகையுடன், ''என்ன திவான் சாஹிப் அவர்களே, இந்த ஏழை குருவைத் தாங்கள் இன்னும் மறவாமலிருப்பது மகிழ்ச்சி'' என்றார். குருவின் வார்த்தையைக் கேட்ட வெங்கண்ணபந்த் அயர்ந்து போய் விட்டான். அவனது கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகி விட்டது. தொண்டை அடைத்தது. வாய்பேச முடியவில்லை. நாதழுதழுக்க ஸ்ரீயவர்களின் பாதத்தில் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, ''மஹாஸ்வாமி, எங்கோ குப்பை மேட்டில் கிடந்திருந்த என்னை அனுக்ரஹித்து ஸ்வரூப உத்தாரக குருபாதரான தங்களை மறப்பதா? குப்பை யைப் புனிதப்படுத்தி அதற்கொரு வடிவம் தந்து, ஜகத்தினில் கௌரவம் பெறும்படியாகச் செய்த மஹானுபாவரான தங்களை மறந்து போகும்படியான நீசனா நான்? அதை நினைக்கவே உடல் நடுங்குகிறதே ஸ்வாமி! அப்படியிருக்கும் பொழுது அந்த நீச உணர்ச்சி ஏற்பட்டால்......அப்பப்பா ஜகத்தின் எந்த சக்தியும் என்னைக் காப்பாற்றவே காப்பாற்றாது. அன்னமிட்ட வீட்டில் கன்னம்போடும் துரோகி நானல்ல குருபாதர

வர்களே! இன்றைய இந்த வைபவம், கௌரவம், பதவி, ஐச்வர்யம் எல்லோராலும் மதிக்கப்படும் தகுதி—இவையாவும் தங்களது க்ருபாகடாக்ஷத்தின் பலம், வரப்ரஸாதம். இந்த தாஸானுதாஸனிடம் தாங்கள் வேறுவிதமாக எண்ண வேண்டாம் என்று வேண்டிக் கொள்கிறேன். தங்கள் கருணையிருந்திராவிட்டால் இந்த அனாதை வெங்கண்ணனை கேட்பவர் யார்? இந்த தாஸனின் தேகத்தில் ஓடும் ஒவ்வொரு துளி ரத்தமும் தமது கருணையினால்தான் ஓடுகிறது. வாழ்க்கையில் உயிருக்குச் சமமான தாங்கள் இவைகளுக்குக் காரண பூதராக இருக்கின்றீர்கள் ஸ்வாமி! என்னுடையது என்பது எதுவுமில்லை. எல்லாம் தங்களதே தான். சிஷ்யனை அனுக்ரஹிக்க வேண்டுமென்று ப்ரார்த்தித்தான்.

ஸ்ரீ குருராஜர், "வெங்கண்ணா! நாம் வேடிக்கையாகப் பேசினதற்கு இவ்வளவு ஏன் மனம் நோக வேண்டும்? உன்னை நான் அறியமாட்டேனா? நீ நமது அன்பிற்குரிய சிஷ்யனாக இருக்கிறாயப்பா" என்று ஆறுதல் சொல்லி அவன் தலையை அன்போடு தடவிக் கொடுத்தார். ஸ்ரீயவர்கள் கரஸ்பரிசத்தினால் புளகாங்கிதமடைந்த வெங்கண்ணன் ஆனந்தத்தினால் சரீரமே பெருத்ததைப் போல் உணர்ந்தான். ஸ்வாமிகளை மறுபடியும் மறுபடியும் நமஸ்கரித்தான்.

வெங்கண்ணபந்தின் மூலம் குருராஜரின் மகிமை, மாபெரும் சக்திகளைக் கேட்டறிந்திருந்த நவாப் ஸித்தி மஸூத்கான் ஸ்ரீயவர்களின் மகத்துவத்தைப் பரீக்ஷிப்பதற்காக ஒரு நாள் குருபாதரின் தரிசனத்திற்காக வந்தான். நவாபை அரசு மரியாதை முறையில் வரவேற்று ஸ்ரீமஹா ஸமஸ்தானத்தின் அதிகாரி ஸ்ரீபாதங்களவரின் ஸந்நிதிக்கு அழைத்து வந்தார். ஸ்ரீகுரு ஸார்வபௌமரைப் பரீக்ஷிக்க வணக்க ரூபமாக நவாப் ஒரு வெள்ளித் தட்டில் மது, மாமிஸம் முதலிய நிஷித்தவஸ்துக்களை அதன் மீது ஒரு சரிகைப் பட்டு வஸ்திரத்தைப் போர்த்து வேலையாட்களின்

மூலம் கொண்டு வந்திருந்தான். ஸ்ரீகளவர் ஸந்நிதிக்கு வந்த பிறகு அவைகளை முன்வைத்து நமஸ்கரித்து விட்டுத் தனக்காக ஏற்பாடு செய்திருந்த ஸ்தானத்திலமர்ந்தான்.

க்ஷேமசமாசாரங்களான பிறகு நவாப் கை கூப்பி, "குருஜீ! தமது மகிமைகளை நமது திவான்ஜீயிடமிருந்து கேள்விப்பட்டு அறிந்துள்ளோம். மஹானான தமது சேவைக்காக நமது காணிக்கையாக இதை அங்கீகரிக்க வேண்டும்" என்று தட்டைக் காண்பித்துச் சொன்னான்.

க்ஞானிச்ரேஷ்டரான ஸ்ரீகளவர்கள் நவாப்பின் உள்ளெண்ணத்தையறிந்தார். வைதிக ஸநாதன தர்மத்தின் மகத்துவம், பகவந்தனின் மகிமைகளை முஸ்லீம் நவாபிற்கு காண்பித்துக் கொடுத்து அவனை அனுக்ரஹிக்க விரும்பிப் புன்னகையுடன், "மகிழ்ச்சி! நவாப்ஜீ, எமது ஸ்வாமி பக்தியினால் ஸமர்ப்பித்ததை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்கிறான். அவ்வாறே அதற்காகவே உங்களை, இங்கு வரவழைத்திருக்கிறான்" என்று சொல்லி கமண்டலத்தின் ஜலத்தை (மந்திரித்த ஜலம்) தட்டின் மேலே தெளித்தார், சேவகனுக்கு அந்தப் போர்த்தப்பட்ட வஸ்திரத்தை எடுக்கும்படி உத்தரவிட்டார். அவ்வாறே அவன் வஸ்திரத்தை எடுக்கவே, என்ன ஆச்சரியம், அற்புதம்! நவாபின் தட்டில் கொண்டுவரப்பட்டுள்ள மது, மாமிசங்களெல்லாம் பழங்கள், புஷ்பங்கள், பசும்பாலாக மாறியிருந்தன! இந்த மாபெரும் அற்புதத்தைக் கண்ணாரக் கண்டு குரு பாதங்களவர்களின் மாபெரும் மகிமையை மனத்திலுணர்ந்து, தான் செய்த குற்றத்திற்காக ஸித்திமஸூத்கான் பயந்து போய் நடுங்கிவிட்டான். "ஐயோ! நான் எத்தகைய முட்டாள்தனமான காரியம் செய்துவிட்டேன்? மஹாத்மாக்களைப் பரீக்ஷிக்கும் ஆத்திரத்தில் யோசனையின்றி அவசரப்பட்டு விட்டேன். இதனால் எனக்கென்ன விபத்தேற்படுமோ தெரியவில்லையே?" என்று மனதில் நினைத்து பயபக்திகளினால் எழுந்திருந்து குருபாதங்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, "மன்னிக்கவேண்டும் மஹா

ஸ்வாமிகளே! மஹானுபாவரான தங்களுக்குப் பெரிய அபசாரம் செய்து விட்டேன். தமது தாஸனை மன்னிக்க வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டான்.

ஸ்ரீ குருராஜர் புன்னகையுடன், 'ஏன் கவலைப்படுகிறீர் நவாப் அவர்களே? வெங்கண்ணபந்த் நம் விஷயத்தைப்பற்றி உம்மிடத்தில் மிக அதிகமாகச் சொல்லிவிட்டாரென்று தெரிகிறது. அதனால்தான் நீங்கள் நம்மைப் பரீக்ஷித்துக் கௌரவிக்கவேண்டுமென்றே வந்திருக்கிறீர்கள். இது ஸ்ரீ மூலராமனின் விருப்பம். உம்மைப் போன்றவர்கள் இருந்தால்தானே பகவந்தனின் மகிமை வெளிப்படும்! உம்மிடத்தில் நமக்கு எந்தவிதமான அஸமாதானமுமில்லை. ஒரு மனிதனின் நடையுடைபாவனை, ஆசாரம் வ்யவஹாரம், செய்யும் நற்காரியங்கள், தவம் இவைகளைப் பற்றித் தெரிந்தால்தானே அப்படிப்பட்டவரிடம் கௌரவம் மரியாதை உண்டாகும்? ஆகையால் நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. பரமாத்மா உங்களுக்கு மங்களமுண்டாக்கட்டும்' என்று சொல்லி நவாபிற்குப் பலமந்த்ராக்ஷதையருளி ஸமஸ்தானத்தின் கௌரவதித்திற்குத் தகுந்தபடி மரியாதை செய்து அனுப்பினார்.

ஸ்ரீகளவரிடமிருந்து அரண்மனைக்குத் திரும்பிவந்த நவாபுக்கு மனநிம்மதியே ஏற்படவில்லை. ஏதோ ஒரு அறியமுடியாத பீதி அவனது மனதில் குடிகொண்டு விட்டது. தான் செய்த குற்றத்திற்காக நவாப் மிக்க வருந்தினான். குருபாதர் மஹா தபஸ்விகள். மாபெரும் மகிமை வாய்ந்தவர். மந்திரஸித்தரும்கூட என்பது கண்ணாரக் காணமுடிந்தது. அவன் ஏதாவது செய்து அவரது மனதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அவரை மகிழ்வித்து அவரது சம்பூர்ண அனுக்கிரஹத்திற்குப் பாத்திரனாக வேண்டுமென்று தவித்தான். உடனே திவான் வெங்கண்ண பந்த்தை வரவழைத்து அவனுக்கு தான் ஸ்ரீபாதங்களிடம் தரிசனத்திற்கு சென்றதும், அங்கு நடந்த அற்புதங்களெல்லாவற்றையும் ஆதிபோடந்தமாகத் தெரிவித்து, ''திவான்ஜீ!

உமது குருபாதர் சாமானியரல்லர். அவர் மிகப்பெரிய மஹான், தபஸ்விகள், இனிமேல் அவர் எனக்கும் குருகள் தான்! அந்த ஸந்த் மஹாராஜருக்கு "குருசேவை" என்று நான் ஒரு கிராமத்தை அவருக்கு ஸமர்ப்பிக்க விரும்பியுள் ளேன். அதைக் குருபாதர் அங்கீகரித்தால் நான் செய்த பாவத் திற்கு ப்ராயச்சித்தமாயிற்றென்று எனக்குத் திருப்தி உண்டாகும். நீங்கள் எப்படியாவது குருபாதரை இதற்குச் சம்மதிக்கச் செய்யவேண்டும்" என்று சொன்னான்.

வெங்கண்ணபந்திற்கு நவாபின் வார்த்தைகளைக் கேட்டுப் பேரானந்தமுண்டாயிற்று. நவாபிடம் உத்தரவு பெற்று குருவர்யரிடம் வந்து வணங்கி நவாபின் விருப் பத்தைத் தெரிவித்தான். ஸ்ரீயவர்கள் புன்னகை செய்து, "வெங்கண்ணா, உமது நவாப் உண்மையாகவே தெய்வ பக்தன். க்ஞானிகள், ஸாது-ஸந்தர்களிடம் அவனுக்கு அபார கௌரவம் உள்ளது. அவனிடம் நமக்கும் மிக்க நம்பிக்கையுள்ளது. உம், ஆகட்டும்! நமக்கு துங்கபத்திரா நதிக்கரையிலுள்ள மந்ராலயமென்னும் கிராமத்தைக் கொடுக்கும்படி செய்; அதனால் ஸ்ரீமூலராமன் மகிழ்ச்சி யடைவான்" என்று அனுமதி அளித்தார்.

வெங்கண்ணபந்த் :—"குருபாதரே! மந்த்ராலயம் ஒரு குக்கிராமம் (பட்டி). அதனால் ஸ்ரீ மடத்திற்கு என்ன லாபம்? நவாப் இப்பொழுது தங்களுக்கு எது வேண்டு மானாலும் கொடுக்கத் தவித்துக்கொண்டிருக்கிறான். தாங்கள் ஏதாவதொரு பெரிய ஜாகிரைக் கேட்கலாம்"

ஸ்ரீகளவர் :—(புன்னகையுடன்) "வெங்கண்ணா, நமக்கு அந்த க்ராமம்தான் வேண்டுமப்பா! அதைச் சம்பாதிக்கவே நாம் இப்பொழுது இங்கு வந்துள்ளது! முன்பு 'கந்தநாதி'க்கு வந்திருந்த பொழுது உனக்குச் சொன்னது மறந்து போயிற்றா? ஸ்ரீமூலராமர் வருங்காலத்தில் உன்னால் பெரிய சேவையை ஏற்றுக்கொள்ளவிருக்கிறான்" என்று நாம் சொல்லியிருக்கவில்லையா? இந்த மந்த்ராலயக் கிராமமே இப்பொழுது உன்மூலமாக ஸ்ரீமூல ரகுபதி ஏற்றுக்

கொள்ளப் போகும் சேவையாகும் என்று தெரிந்து கொள். அந்த க்ராமத்தை வாங்கிக் கொடப்பா, போதும்.''

குருபாதரின் வார்த்தைகளைக் கேட்டு ஆச்சரிய மடைந்த வெங்கண்ண பந்த் ஸ்ரீராயரின் வார்த்தைக்கு மறு உத்திரம் சொல்லத் தைரியமில்லாமல், ''சரி. குருபாதரின் இஷ்டம்'' என்று விக்ஞாபித்து நவாபிடம் வந்து குரு ராஜரின் அபிப்ராயத்தைத் தெரிவித்தான்.

நவாப் அந்த கிராமத்தை இதற்கு முன் தன் குருவாக இருந்த காஜி சாஹப்பிற்குத் தானமாகக் கொடுத்திருந்தான். இப்பொழுது ஸ்ரீகுருராஜரும் அதே க்ராமத்தை விரும்பி யிருக்கிறார். என்ன செய்வதென்று சற்று நேரம் யோசித்து ஸ்ரீகுருராஜரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்து அவருடைய அனுக்ரஹத்திற்குப் பாத்திரனாகத்தான் வேண்டுமென்று நிச்சயித்துக் காஜிசாஹபை அழைத்துக் கொண்டு அவருக்குத் தன் நிலைமையை எடுத்துச் சொல்லி அவருக்கு ''வகரூர், திம்மாபுர ''மென்னும் இரண்டு கிராமங் களைத் தானமாகக் கொடுப்பதாகச் சொல்லவும் காஜிசாஹப் இரண்டு கிராமங்கள் கிடைக்கிறதென்ற மகிழ்ச்சியில் நவாபின் விருப்பத்திற்கிணங்கினார். உடனே நவாப் காஜி சாஹப்பிற்கு ''வகரூரு-திம்மாபுரம்'' கிராமங்களைத் தானமாகக்கொடுத்து மகிழ்ச்சியுடன் அதற்கு வேண்டிய தஸ்தாவேஜுகளையும் கொடுத்து (Documents) ஸ்ரீ குரு ஸார்வ பௌமரின் ஸந்நிதிக்கு வந்து மந்த்ராலய க்ராமத்தைப் பணம், பொன், வஸ்திரங்கள், நகைகள் சஹிதமாக அவருக்குத் தானம் செய்து மகிழ்ச்சியுடன் கிராமதான சாஸனத்தைத் திவான் வெங்கண்ணபந்தினால் எழுதுவித்துக்கொடுத்து அரசாங்க முத்திரையிட்டு பக்தி சிரத்தையுடன் நமஸ்கரித்தான். ஸ்ரீபாதங்களவர்கள் நவாபின் பக்தி, சிரத்தை, உதார புத்திகளைப் பாராட்டி அவனை ஆசீர்வதித்தார்.

அன்று நவாபின் வேண்டுகோளுக்கிணங்கி அரண் மனைக்கு எழுந்தருளி குருராஜர் அவனது குடும்பத்தினரை

ஆசிர்வதித்துப் பலமந்திராக்ஷதை அனுக்ரஹித்தார். நவாப்பின் மனவிருப்பத்தின்படி வெங்கண்ணபந்த் குருகளுக்கு நவாபின் பரமாகத் தனது வீட்டில் பிக்ஷைக்கேற்பாடு செய்தான். ஏராளமான ஜனங்களுக்குச் சந்தர்ப்பணை செய்வித்தான். மறுநாள் குருராஜர் மஹா ஸமஸ்தானத்துடன் மந்த்ராலயத்திற்குத் திக்விஜயம் செய்தார். திவான் வெங்கண்ணபந்த் நவாபின் கோரிக்கையின்படி ஸகல ராஜ மரியாதைகளுடன் ஸ்ரீகளவர்களை மந்திராலயத்திற்கு அழைத்து வந்து கிராமத்தை ஸ்ரீகளவர்களுக்குச் சமர்ப்பித்து கிருதார்த்தனானான்.

## 28. மந்த்ராலயத்தின் வரலாறு :

ஸ்ரீபாதங்களவர்கள் மந்த்ராலயத்திற்கு விஜயம் செய்த பிறகு ஊருக்குள் வந்து கோவிலைக் கட்டி அங்கு ஒரு சுப முகூர்த்தத்தில் தமது குலதெய்வமான ஸ்ரீ வேங்கடேச்வரனை ப்ரதிஷ்டை செய்தார். அங்கே தான் வசிக்க ஒரு இல்லமும் கட்டுவித்து அங்கு வசிக்க ஆரம்பித்தார்.

ஒரு நாள் ஸ்ரீ குருராஜர் திவான் வெங்கண்ணபந்த்துடன் புறப்பட்டு துங்கபத்ரா நதியின் கரைக்கு எழுந்தருளினார். இன்னொரு இடத்தைக் காண்பித்து அங்கு பூமியைத் தோண்டும்படி ஆணையிட்டார். தோண்டி மண்ணெடுத்த பொழுது யாகம் செய்த நினைவுச்சின்னங்களான பதார்த்தங்களும் மற்றும் யக்ஞ குண்டம் காணப்பட்டது. வெங்கண்ணபந்த் திகைத்து அந்த விஷயத்தைப்பற்றி ஸ்ரீகளவர்களிடம் விசாரித்தான்.

ஸ்ரீயவர்கள் புன் சிரிப்புச் செய்து இவ்வாறு சொன்னார். வெங்கண்ணா, அன்று நீ மந்த்ராலய க்ராமத்தைத்தான் நாம் எதற்காக விரும்பினோம் என்று கேட்டாயல்லவா? கேள், அதனுடைய ரகஸியத்தை இப்பொழுது சொல்லுகிறோம். இது ஸாமானியமான க்ராமமென்று எண்ணாதே. இது பரம பவித்ரமான க்ஷேத்திரமப்பா! க்ருதயுகத்தில் ப்ரஹ்லாத ராஜர் இங்கு பல தடவைகள் யாகங்களை

நடத்தியுள்ளார். இது அவர் இயற்றிய யாக குண்டம்! த்ரேதாயுகத்தில் ஸ்ரீ ராமசந்த்ர ப்ரபு ஜகன்மாதாவாகிய சீதாமாதாவைத் தேடிக்கொண்டு லக்ஷ்மணனுடன் இங்கு வந்து சில முஹூர்த்த காலம் இங்கு இளைப்பாறி மேலே பயணத்தைத் தொடர்ந்தனர். ஸ்ரீ ராமசந்த்ர-லக்ஷ்மணர் களின் பாததூளியினால் இந்த ப்ரதேசம் புனிதமாகியுள்ளது. பிறகு த்வாபரயுகத்தில் இந்த ப்ரதேசம் அனுஸால்வனின் தலைநகராயிருந்தது. குருக்ஷேத்ரயுத்தம் முடிந்து தர்ம ராஜனுக்குப் பட்டாபிஷேகமான பிறகு பாண்டவர்கள் அச்வமேத யாகத்தை நடத்திய பொழுது யாக குதிரையை அனுஸால்வன் கட்டிப்போட்டான். ஆகையால் யாக குதிரையைப் பின்தொடர்ந்து வந்துகொண்டிருந்த அர்ஜுனனுக்கும் அனுஸால்வனுக்கும் இதே இடத்தில் கோர யுத்தம் நடந்தது. அனுஸால்வனை ஜயிக்க முடியாமல் அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணனை ஸ்மரணை செய்தான். ஸ்ரீ கிருஷ்ணன் உடனே அங்கு தோன்றி வருத்தமுற்றிருந்த அர்ஜுனனைச் சமாதானப்படுத்திக் கொண்டே இந்த இடத்தின் மகத்துவத்தை அவனுக்கு தெரிவித்து இவ்வாறு சொன்னார்:—அர்ஜுனா! அனுஸால்வனைத் தோற்க இயலவில்லையென்று கவலைப்படாதே. அனுஸால்வன் முன்பு ப்ரஹ்லாதன் செய்த யக்ஞகுண்டத்தின் மேல் நின்று யுத்தம் செய்திருக்கிறான். ஆகையால் நீ மாத்திரமல்ல; வேறுயாராலும் அவனை ஜயிக்க முடியாது. அவன் ஜயிக்கப்படாதவனாயிருப்பது தனது பராக்ரமத்தாலல்ல! அது இந்தப் புனிதமான ஸ்தலத்தின் மகிமை! அர்ஜுனா! இப்பொழுது நாம் ஒரு உபாயத்தினால் அவனை ஜயித்துவிட வேண்டும். பார், இப்பொழுது எனது யோகமாயாவை, என்று சொல்லி கண்மூடித்திறப்பதற்குள் அனுஸால்வனை அந்த இடத்திலிருந்து நீக்கி அந்த இடத்தில் அர்ஜுனனின் ரதத்தை நிறுத்தினார் ஜகந்நாடக சூத்ரதாரியான ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மா! அப்பொழுது மறுபடியும் அர்ஜுன— அனுஸால்வனுக்கும் யுத்தம் நடந்து அர்ஜுனன் அனுஸால் வனை எளிதாக ஜயித்தான். ஸ்ரீ நர-நாராயணரென்று

ப்ரஸித்தரான ஸ்ரீகிருஷ்ணார்ஜுன பாத தூளிகள்பட்டு இந்த ப்ரதேசம் புனிதமடைந்துள்ளது.

இது மாத்திரமல்ல; இந்த ப்ராந்தியத்தைக் கர்நாடக அரசர்கள் தர்மத்தினால் ஆட்சி புரிந்துள்ளனர். விஜயநகரச் சக்ரவர்த்தியின் காலத்தில் நம் மஹா ஸமஸ்தானத்தின் பழம் பெரும் ஆசார்யரான விபுதேந்திர தீர்த்தர் விஜயநகர அரசரால் இந்த க்ராமத்தைத் தானமாகப்பெற்று இந்த யாக குண்டம் உள்ள புனிதஸ்தலத்தில் வெகுகாலம் தவம் செய்து உள்ளனர். ஆனால் விஜயநகரத்தின் வீழ்ச்சிக்குப் பிறகு இந்தப்ரதேசம் பீஜப்பூர் ஸுல்தான்களுக்குச் சேர்ந்து விட்டதால் இந்த க்ராமம் ஸ்ரீமடத்தின் கையைவிட்டுப்போய் விட்டது. இந்தக் கிராமம் மற்றும் இந்த இடம் பரமபவித்ர மானது. மங்களகரமானது. மந்திரஸித்தியைக் கொடுக்க வல்லது. அதனால்தான் நாம் இந்தக் கிராமத்தைப்பெறவே ஆதோணிக்கு வந்தோம்! பீஜப்பூரின் ராஜ ப்ரதிநிதியான (கவர்னர்) உமது நவாபினால் நாம் இப்பொழுது உமதாக இருந்த இந்த மந்த்ராலயத்தை திரும்ப சம்பாதித்தோம். வெங்கண்ண! இவ்வாறு ப்ரஹலாதரின் யாகங்கள், ஸ்ரீராமலக்ஷ்மணரின், ஸ்ரீகிருஷ்ணார்ஜுனரின் பாததூளி யினால், ஸ்ரீவிபுதேந்த்ரதீர்த்தரின் தவத்தினால் பரம பாவன மாகியுள்ள, புனிதமாகியுள்ள, வராஹநந்தினியின் மங்களகரமான அலைகளினால் பவித்ரமாக விளங்கு கின்ற இந்த மந்த்ராலய க்ஷேத்திரத்தில் ஸ்ரீப்ரஹலாதரின் யக்ஞவேதியுள்ள இந்த ஸ்தலத்திலேயே நாம் இந்த சரீ ரத்துடனேயே ப்ருந்தாவனப்ரவேசம் செய்து வெகுகாலம் லோகக்ஷேமத்திற்காக தவத்தில் ஈடுபடவேண்டியதாக உள்ளது. அது ஸ்ரீஹரியின் ஸங்கல்பம். வெங்கண்ணா! நாம் இப்பொழுது தெரிவித்த விஷயத்தை ரகசியமாக வைத்துக் கொண்டு நம் ப்ருந்தாவன ப்ரவேசத்திற்குச் சகல ஏற்பாடு களையும் செய்'' என்று ஆக்ஞாபித்தார்.

ஸ்ரீகுருராயர் தெரிவித்த விஷயங்களைக் கேட்டுக் கொண்டிருந்த போதே வெங்கண்ண பந்த்தின் மெய் சிலிர்த்தது. மயிர்க்கூச்சலுண்டாயிற்று. பக்தி-சிரத்தை

யினால் அவனது கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் பெருகிற்று. ஸ்ரீபாதங்களவர்கள் ப்ருந்தாவனப்ரவேசம் செய்யப் போகிறாரென்ற செய்தி தெரிந்து மிக்க மனவருத்தமடைந்தான். அவன் மனக்கலக்கத்தைக் கண்டு ஸ்ரீராயர் புன்னகையுடன் வெங்கண்ணா! உன் மனவருத்தத்தை நாமறிவோம். இது பகவந்தனின் ஸங்கல்பமப்பா! நாம் ப்ருந்தாவனப்ரவேசம் செய்யவேண்டுமென்று சொன்ன அந்த நொடியிலேயே விபரீதக் கற்பனை செய்து கொண்டுள்ளாய் போலிருக்கிறது. நான் சரீரத்தை விடப்போவதில்லையப்பா! நாம் சரீரத்துடனேயே ப்ருந்தாவனப்ரவேசம் செய்து அங்கு ஏழு நூறு வருடகாலம் ப்ருந்தாவனத்திற்குள்ளிருந்து கொண்டு லோகக்ஷேமம் செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதற்காகக் கவலைப் படக்கூடாது என்று சொல்லி அவனுடன் மடத்திற்கு எழுந்தருளினார்.

நான்கைந்து நாட்களுக்குப் பிறகு குருராஜர் வெங்கண்ணபந்த்தைத் தனிமையில் அழைத்து, "வெங்கண்ணா, நமக்கொரு ப்ருந்தாவனம் ஏற்பாடு செய். நாம் காண்பித்த யக்ஞவேதியின் மீது ப்ருந்தாவனத்திற்குத் தகுந்த கர்ப்ப க்ருஹத்தைக் கட்டு" என்று ஆக்ஞாபித்தார்.

சில நாட்களிலேயே வெங்கண்ணபந்த் ஒரு அழகான ப்ருந்தாவனத்தைத் தயார் செய்து ஸ்ரீகளவர்களுக்குக் காண்பித்தான். ஸ்ரீபாதங்களவர் புன்னகை செய்து, "எவ்வளவு அழகான ப்ருந்தாவனம்! உம் இதை ஏற்றுக் கொள்ள ஒருவர் வரப்போகிறார். இது அவருக்காகட்டும். நமக்கு இது வேண்டாம்" என்று சொல்லவும், வெங்கண்ணன், ஸ்வாமி அப்படியானால் எந்தக்கல்லினால் செய்யவேண்டும்? உத்தரவாகட்டும்" என்றான்.

ஸ்ரீகுருராஜர் மறுபடியும் வெங்கண்ணபந்த்துடனேயே, இன்று மஹாத்வாரம் என்று சொல்லப்படுகின்ற கிராமத்தினருகில் வந்து அங்குள்ள ஒரு கருப்புச் சிலையை (கல்லை,க் காண்பித்து. "இதோ, வெங்கண்ணா! இந்தக் கல்லினால் ப்ருந்தாவன நிர்மாணம் செய்" என்று சொன்னார். பிறகு

மேலே சென்று இதைச் சாமானியக் கல்லென்று நினைக்காதே, முன்பு த்ரேதாயுகத்தில் ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் இப்பிரதேசத்தில் சஞ்சாரம் செய்ததாக அன்று நாம் உனக்குச் சொன்னோமல்லவா ? அப்பொழுது ஸ்ரீராமசந்த்ர ப்ரபுவும் லக்ஷ்மணனும் இந்தக் கல்லின் மீது ஏழுமுகூர்த்த காலங்கள் இளைப்பாறினார்கள். ஸ்ரீராமரின் பாதஸ்பர்சத்தினால் புனிதமாகியுள்ள இந்தக்கல்லினாலேயே இந்த மூலராமனின் பாதசேவகனான நமக்கு ப்ருந்தாவனம் தயாராக வேண்டுமப்பா !'' என்று சொன்னார்.

ஸ்ரீ குருராஜரின் ஒவ்வொரு வார்த்தைகளும் வெங்கண்ணனின் மனதில் உணர்ச்சி அலைகளைத் தட்டி யெழுப்பின. அவன் உடல் சிலிர்த்தது. மயிர்க் கூச்சலுண்டாயிற்று. ஒருபுறம் துக்கம், மற்றொரு புறம் ஆச்சரியம், ஆநந்தம் இவைகளினால் அவனது தொண்டை அடைக்கிறது. பக்தி பரவசமாய் வெங்கண்ணபந்த் ஸ்ரீராயருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து கைகூப்பி, '' குருதேவா ! தங்கள் நடை, பேச்சு, தேஜஸ், க்ஞானம், பக்தி, பக்தவாத்ஸல்யம்—தவம்—உபதேசங்களைக் கேட்டபொழுதெல்லாம் எனக்கென்னமோ தாங்களே சாக்ஷாத் ப்ரஹ்லாதராஜரென்று மனதிற்குத் தோன்றுகிறது ! தம்மைப்போன்ற மஹானுபாவரை அடைந்த நானே தன்யன் ! தம் அனுக்ரகத்திற்குப் பாத்ரனாயுள்ள நானே பாக்யசாலி ! மஹாப்ரபு ! தங்கள் ஆக்ஞையை சிரஸாவகிக்கிறேன்'' என்று விக்ஞாபிக்கவும் குருராஜர் புன்னகை செய்து அவனுடன் மந்த்ராலயத்திற்குத் திரும்பினார்.

## 29. ஆச்ரமம் அருளுதல் :

ஸ்ரீகுருராஜர் தமது அவதார கார்யத்தை முடிப்பதற்குத் தீர்மானம் செய்த பிறகு ஸ்ரீமத்வாசார்யரின் மஹாமுக்ய ஸமஸ்தானத்திற்குத் தமது வாரிசை நியமித்து ஆச்ரமம் கொடுத்தருள யோசித்தார்.

ஸ்ரீகுருராஜரின் பூர்வாச்ரமத்தின் வம்சம் ஸாமான்யமல்ல. வித்யா, ஸகல கலைகள், ஸத்ய-தர்ம-த்யாக-சீல

ப்ரோபகாரம் முதலான ஸத் குணங்களுக்குத் தாய்வீடாகி (பிறப்பிடமாய்) உலகப் பிரஸித்தி பெற்ற ஷாஷ்டிக வம்சத்தின் (அரவத்தொக்கலு) கௌதம கோத்திரத்தின் முத்திரை போடப்பட்ட வம்சம்! அது பரம்பரை பரம்பரையாக நாடு, மொழி, தர்மம் கலாசாரங்களின் முன்னேற்றத்திற்காகச் சேவை செலுத்தின பரம ஸாத்வீகமான பகவந்தனுக்கு மிக ப்ரியமான பாகவத தர்ம ப்ரஸாரத்திற்குக் கட்டுப்பட்ட மதிப்பிற்குரிய மஹாத்மாக்களினால் காணப்பட்ட பரமபாவனமான வம்சம்! பகவந்தன் இப்பேர்ப்பட்ட வம்சத்தில் ஸதாப்ரீதியுள்ளவனாய் அந்த வம்சத்தினரால் சேவையை ஏற்றுக்கொண்டு அனுக்ரஹிக்க ஸங்கல்பம் பூண்டிருந்தான் எனத் தோன்றுகிறது. அவ்வாறே பரம பாகவதோத்தமரான ஸ்ரீகுருராஜர் தமது வம்சத்தவரான ஸ்ரீ வெங்கண்ணாசார்யருக்கு ஆச்ரமம் அளிக்க நிச்சயித்தார்

ஸ்ரீ குருராஜரின் பூர்வாச்ரமத்தில் அவரது அண்ணன் ஸ்ரீ குருராஜாசார்யர். அவர் ஸகல சாஸ்திர பாரங்கதராக இருந்தார். அவருக்கு ஸ்ரீ வெங்கடநாராயணாசார்யரென்பவர் புத்திரர். அவர் தகப்பனார் மற்றும் குருராஜரிடமே ஸகல சாஸ்திரங்களையும் ஸ்ரீ குருராஜரின் புத்ரரான ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணாசார்யரவர்களுடன் சேர்ந்து பயிற்சியடைந்த பாக்யசாலிகள். அவருக்கு ஐந்து பேர் புத்திரர்கள். அவர்களெல்லோரும் ஸ்ரீ குருராஜரிடம் ஸகல சாஸ்திரங்களையும் அத்யயனம் செய்து மஹா பண்டிதர்களாயிருந்தனர். அவர்களில் க்ஞான - பக்தி - வைராக்ய பூர்ணரும், எப்பொழுதும் பகவத் ஸேவையிலீடுபட்டிருந்த ஸ்ரீ வெங்கண்ணாசார்யர் தமது மஹாபீடத்தில் முதலில் அமர வேண்டுமென்று தீர்மானித்து ஸ்ரீராகவேந்திர குருஸார்வபௌமர் ஒரு நாள் சுபமுகூர்த்தத்தில் ஸ்ரீ வெங்கண்ணாசார்யருக்கு ஸகல லௌகிக வைதிக வித்வான்களின் முன் ஆச்ரமம் ஏற்றுக் கொள்வதற்காகப் பல மந்தராக்ஷதை யருளினார்.

ஸ்ரீவெங்கண்ணாசார்யர் வைதிக நியமங்களின்படி பரமஹம்ஸாச்ரமத்தை ஏற்று வந்து ஸ்ரீ குருராஜருக்கு நமஸ்காரம் செய்து பாதபூஜை செய்தார். பிறகு ஸ்ரீ குரு ராஜர் அவருக்கு மந்த்ரமுத்ராதாரணம், குருபதேசம் முதலியவைகளைச் செய்து, அவரை ஸ்ரீமத்வாசார்யரின் வேதாந்த ஸாம்ராஜ்ய திக்விஜய வித்யா சிம்ஹாஸனத்தில் அமர்த்தி' "ஸ்ரீயோகீந்த்ர தீர்த்தரு" என்று நாமகரணம். பட்டாபிஷேகம் செய்து தமது வாரிசாகப் பரமானு க்ரஹம் செய்தார், ஸகல ஸஜ்ஜனர்களும் உபய ஸ்ரீபாதங் களவர்களுக்கு நமஸ்கரித்து ஜயகோஷம் முழங்கினர்.

## 30. மந்த்ராலயாம்பிகையின் தரிசனமும் வரம் பெறுதலும் :

ஸ்ரீகுருராஜர் ப்ரிய சிஷ்யரான ஸ்ரீயோகீந்த்ர தீர்த் தருடன் அந்த வருஷம் (விரோதிக்ருது ஸம்வத்ஸரம்) மந்த்ராலயத்திலேயே சாதுர்மாஸ்ய வ்ரதஸங்கல்பத்திற்கு உட்கார்ந்தார். ஒரு நாள் ஸ்ரீராயர், முன்பு தாம் ப்ரஹ்லாத ராகவிருக்கையில் நிறைவேற்றிய யாகங்களினால் புனிதமான யக்ஞகுண்டத்தில் ஸந்நிஹிதளாயிருந்த க்ஷேத்ரதேவதையும் ப்ரஹ்லாதரின் குலதேவதையுமாயிருந்த சாக்ஷாத் ஸ்ரீ துர்கா தேவியை (மந்த்ராலயாம்பிகே) ஏகாந்தமாக பக்தியுடன் மெய்மறந்து ப்ரார்த்தனை செய்யவாரம்பித்தார். பக்த ச்ரேஷ்டனான ப்ரஹ்லாதனின் அவதாரரான ஸ்ரீகுரு ராஜரின் பக்திக்கு மெச்சி தேவி ப்ரஸன்னமானாள். ஸர்வா பரணங்களினால் அலங்கரிக்கப்பட்ட சிம்மவாஹினி சிரித்த முகத்துடன் தனது வாத்ஸல்யத்தை அவர் மீது கடாக்ஷித்து அபய-வரத ஹஸ்தங்களுடன், "புத்ரனே, ப்ரஹலாத! இந்தத்தாயின் ஞாபகம் உனக்கு வந்ததா? என்னை ஏன் அழைத்தாய் குழந்தாய்? என்னுடையவனான பரமாத்மா உன்னுடன் இடைவிடாமல் நர்த்தனம் செய்து கொண் டிருக்கும் பொழுது இந்தத் தாயினிடம் என்ன எதிர்பார்க் கிறாயப்பா?" என்று கேட்டாள்.

பக்தி மேலீட்டினால் ஆனந்தக் கண்ணீர் ததும்பும் கண்களுடன் ஸ்ரீ ராகவேந்திரர் கைகூப்பி நாதழுதழுக்க,

" நமோ நமோ லோகமாதா, நாராயண மனோஹாரிணி! நான்முகனின் உத்தம ஜனனி! தைத்ய ஸம்ஹாரிணி! துஷ்டகுல நாசினி, லோக கல்யாணி, பக்தஜன சிந்தாமணி, கமலாஸனே, கமலே, என்குல ஸம்ரக்ஷணி, மாதா! உனது தரிசனத்தினால் நான் தன்யனானேனம்மா. மகனுடன் விளையாட்டா; தாயே! பதிநான்கு லோகங்களில் நீ இல்லாத இடமுண்டா? ஏ தேவி! உன் பதி என்னுடன் இடைவிடாது இருக்கிறானென்றாயே தாயே! நித்யாவியோகி (இணை பிரியாதவள்)யென்று எல்லோராலும் புகழப்படும் நீ, என்னுடையவனான பரமாத்மாவை ஒரு நொடி கூட அகலாதவளானவளும், மஹாமகிமையுடையவளுமானவள் நீ என்று நான் அறியாதவனா தாயே? यं कामये तंतमुग्रं कृणोमितं ब्रह्माणं तमृषितं सुमेधाम्", 'यत: प्रसूता जगत: प्रसूति' என்றெல்லாம் வேதங்களினால் பாடப் பெற்றவளான நீ ப்ரம்ஹ-ருத்ரேந்திராதி ஸகல தேவதைகளினால் வணங்கப் படும் பாதாரவிந்தங்களாயிருப்பவளே! அதிகமென்ன தாயே, சொல்வது? ப்ரளய காலத்தில் எதுவுமில்லாதிருக்கையில் கூட மஹானுபாவளான ஆலிலையின் உருவமெடுத்த உன் மீது படுத்த பராத்பரனான ஸ்ரீஹரி பரமாத்மாவை இடைவிடாது நல்லமுறையில் சேவிப்பதை நான் அறிவேனம்மா. ஏ வைஷ்ணவீ! தாயே! நான் இந்த இடத்தில் ஏழு நூறு வருட காலம் லோகக்ஷேமத்திற்காக சரீரத்துடன் ப்ருந்தாவன மந்திரத்திலிருந்து கொண்டு என்னுடையவனான பரமாத்மனை தவத்தினால் மகிழ்விக்க விரும்பியுள்ளேன். நான் இங்கு வாஸம் செய்ய அனுமதியளிக்க வேண்டும் தாயே! என்னைச் சரணடைந்து பஜிக்கும் பக்த சமுதாயத்திற்கு நான் அளிக்க விரும்பும் அபார ஸம்பத்தை நீ கொடுத்துக் கருணை காட்டவேண்டும். தாயே! 'महालक्ष्मी च विद्महे विष्णुपत्नीच धीमहि । तन्नो लक्ष्मी: प्रचोदयात्' என்று நான் ப்ரார்த்தனை செய்யும் போதெல்லாம் ஐச்வர்யாபிமானியான நீ கருணித்து என் மூலமாக ஸகல பக்த ஜனங்களுக்கு சம்பத்தை அருளிக் காப்பாற்ற வேண்டும் தாயே! தேவி! இவ்விதமான வரத்தைக் கொடுத்தருள் தாயே! என்று ப்ரார்த்தனை செய்து நமஸ்கரித்தார்.

புன்னகை பூத்த முகத்தாரையினால் சோபிக்கும் நந்த நந்தனனான கோவிந்தனின் ரூபலாவண்யமுள்ள ராணியான மஹாலக்ஷ்மி முன்னால் வந்து பக்த பந்துவான ஸ்ரீ குரு ராஜரின் அழகான சிரத்தின் மீது தனது அம்ருதமயமான கரத்தை வைத்து, "ததாஸ்து" என்றாசீர்வதித்து வரமளித்து, "புத்ரா, எனது அடையாளமாக உனது மந்திரத்தின் ராஜவாயிலில், இங்கே மேஷமஸ்தகங்களை ஸ்தாபனம் செய். நான் ஸகல துஷ்ட சக்திகளை அழித்து எப்பொழுதும் உன்னையும் உன்னுடைய பக்த கோடிகளுக்கும் மெய்க்காவலாக இருந்து ரக்ஷிக்கிறேன். இனிமேல் இந்தக்ஷேத்ரம் ஸகல மந்த்ரஸித்தக்ஷேத்ரமென்று பெயர் பெற்று பாரத தேசத்தின் உத்தம கலாசாரத்தின் மய்யமாக, பிறப்பிடமாக உலக ப்ரசித்தி பெறும். மகனே, உனக்கு மங்களமுண்டாகட்டும். கலியுக மக்களின் உய்விற்கும் நன்மைக்கும் நீ காரணமாவாய். யதிராஜா! விச்வகுரு வென்று மாபெரும் கீர்த்தி பெற்று லோக ஜனங்களின் உபகாரியாக நீ விளங்குவாய். உன்னால் அநேக வருஷகாலம் பாரதத்தில் வைதிக, வைஷ்ணவ ஸத்-தத்துவங்கள் வளரும்" என்று சொல்லியருளி இன்றைய மந்த்ராலயம்மனின் ஆலய முள்ள இடத்திற்கு நடந்து மற்றொரு முறை ஸ்ரீ குரு ராஜருக்கு ஆசீர்வாதம் செய்து சிலை ரூபத்துடன் நின்றாள் லோகமாதா மந்த்ராலயாம்பிகையாக!! ஸ்ரீ குருராஜர் தேவியின் வரம்-தரிசனம் இவைகளினால் ஆனந்த பரவசராய் ஸ்ரீ மடத்திற்கு எழுந்தருளினார்.

## 31. ப்ருந்தாவன ப்ரவேசம்:

வராஹநந்தினியான துங்கபத்ரா தனது மங்களகரமான அலைகளின் இனிமையான கலகல நாதம் செய்து கொண்டு லோககுரு ஸ்ரீ ராகவேந்திர யதீந்திரரின் ப்ருந்தாவன ப்ரவேச மகோற்சவத்தைத் தானும் காண விரும்பி ஆனந்தத்தினால் ஓடோடி வருகின்றாளோ என்பது போல நிறைந்து வேகமாகப் பாய்ந்து ஓடிக்கொண்டிக் கிறாள். கரை ஓரம் நீலநிறமான சரிவில் எங்கு பார்த் தாலும் ஜனநெருக்கம். பல ஆயிரம் பேர்கள் ஒன்று

கூடியுள்ளனர். இதற்குக் காரணமில்லாமலில்லை. ஸ்ரீ குரு ஸார்வ பௌமர் சரீரத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்யப் போகிறாரல்லவா இன்று! குருபாதங்களின் ப்ருந்தாவனப்ரவேசம் செய்யப்போகும் செய்தி நாட்டின் எல்லா இடங்களிலும் பரவி அவரைத் தரிசனம் செய்து சேவை செலுத்தி ஸ்ரீகளவர்களின் இறுதி செய்தி மற்றும் உபதேசங்களைக் கேட்டு க்ருதார்த்தர்களாவதற்காக கூட்டம் கூட்டமாகப் பண்டிதர்கள், மாணவமணிகள், நகரத்தின் முக்யஸ்தர்கள், மடத்தின் சிஷ்யர்கள், பக்த கோடிகள், ராஜப்ரதிநிதிகள், கவிகள், சங்கீத வித்வான்கள், கலைஞர்கள், ஹரிதாஸர்கள், மதாபிமானிகள் மந்த்ராலயத் திற்கு வந்து கூடியுள்ளனர். அதனால்தான் இவ்வளவு ஜன நெருக்கம். எங்கு பார்த்தாலும் ஒரே கோலாகலம், குழப்பம், ஆர்வம் மேலும் உற்சாகம்.

சாலிவாஹன சக ஆண்டு 1593 விரோதிகிருது நாம ஸம்வத்ஸரம் (கி.பி. 1671, ஆகஸ்டு மீ) ச்ராவண க்ருஷ்ண பக்ஷ த்விதியை, வெள்ளிக்கிழமை! துங்கபத்ரா நதியின் அருகில் விசாலமான வெளியில் நிர்மாணம் செய்யப்பட்டுள்ள பன்னிரண்டு தூண்கள் கொண்ட அதிஉத்தமமான கல் மண்டபம் (கர்பக்ருஹம்) த்வாதசாக்ஷரப்ரதிபாத்யனான ஸ்ரீ வாசுதேவனின் விஜயஸ்தம்பம் போல் சோபிக்கிறது! கர்ப்பக்ரஹத்தின் நான்கு பக்கங்களிலும் விஸ்தாரமான கூரை, மாவிலைத் தோரணங்கள், வாழைமரங்கள், பழங்கள், புஷ்பங்கள், வண்ணவண்ணமான கொடிகளால் அலங்கரிக்கப் பட்டு பரிசோபித்துக் கொண்டிருக்கிறன்றன. ஊருக்குள் ளிருக்கும் மடத்திலிருந்து ஸகல விருதாவளி வாத்ய கோஷங்களுடன் யானையின்மீது அம்பாரியிலமர்ந்து ஊர் வலமாக வந்த குருவர்யர் ஸ்வாமியுடன் மண்டபத்திற்கு எழுந்தருளி வித்யா சிம்மாஸனத்தில் அமர்ந்தார். வலது புறம் வசீகரமான பொன்மயமான மண்டபத்தில் ஸ்ரீமூலராமரின் பெட்டி வைக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ குருராஜர் மூலராமரை நமஸ்கரித்து உட்கார்ந்து ப்ரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார். சுற்றிலும் மதாபிமானிகள் அமர்ந்துள்

ளனர். ஸ்ரீயவர்கள் முன்பக்கத்தில் ஸ்ரீ யோகீந்த்ர தீர்த்தர் கைகூப்பி அமர்ந்திருக்கிறார். அவர் பக்கத்தில் ஸ்ரீ குருராஜரின் பூர்வாச்ரம புத்திரரான ஸ்ரீலக்ஷ்மீநாராயணாசார்யர், பந்து பாந்தவர்கள், அன்பிற்குறிய சிஷ்யர்கள், திவான் வெங்கண்ணபந்த் முதலியவர்கள் வருத்தமான முகத்துடன் அமர்ந்திருக்கின்றனர். எல்லோருடைய கண்களும் மனமும் ஸ்ரீ குருராஜரிடமே லயித்துள்ளன.

தெய்வீக தேஜஸ், காந்தியுடன் காணப்படும் குருராஜர் மூலராமனை பக்தி பரவசத்துடன் ப்ரார்த்தனை செய்துகொண்டு அமர்ந்திருக்கிறார். அவர் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகுகிறது. ஹரிதாஸர்கள் இனிய குரலில் பாடிக்கொண்டிருக்கின்றனர். பக்தர்கள் புளகாங்கிதர்களாய் மெய்மறந்து, 'ஜய ஜய மூலராம, ஜய ஜய ஸ்ரீ ராகவேந்த்ர யதி ஸார்வபௌம' என்று ஜயகோஷம் செய்துகொண்டிருக்கின்றனர். எல்லோரிடமும் ஒருவகையான தெய்வீக உணர்ச்சி காணப்படுகிறது.

ஸ்ரீ குருஸார்வபௌமர் ப்ரார்த்தனைகள் முடித்து, ப்ரதக்ஷிணை நமஸ்காரங்கள் செய்து ஸ்ரீ யோகீந்த்ர தீர்த்தருக்கு ஸ்ரீஅக்தரீதியில் உபதேசத்துடன் மஹா ஸமஸ்தானத்தை ஒப்புவித்து தீரகம்பீர தோரணையில் மெல்ல எழுந்து பாதுகைகளையணிந்து நின்றார். ஆஹா! அது எவ்வளவு அபூர்வமான காட்சி! ஜோதிஷ சாஸ்திர பண்டிதர்கள் ஸ்ரீயவர்கள் ஸந்நிதானத்திற்கு வந்து சுப முகூர்த்தம் நெருங்குகிறதென்று அடக்கத்துடன் தெரிவித்தனர்.

சிஷ்யர்கள் பிடித்துக்கொண்டிருந்த நடுசப்ரத்திற்கு யதிராஜர் எழுந்தருளினார். வெங்கண்ணபந்த் ஸ்வயம் குருவர்யருக்கு வெண்கொற்றக் குடை பிடித்துக்கொண்டு நிற்கிறான். ஸ்ரீயோகீந்திரர் பக்தி பூர்ணமாக கை கொடுத்து அழைத்துக்கொண்டு வருகிறார். பண்டிதர்கள், புரோஹிதர்கள் இனிய குரலில் வேதம், உபநிஷத், கீதா பாராயணம் செய்து கொண்டிருக்கின்றனர். ஏராளமான

ஹரிதாஸர்கள் காலில் சலங்கை கட்டி மெய்ம்மறந்து பகவந்தனின் லீலாவிலாஸங்களை உணர்ச்சியுடன், பாவங்களுடனும் நடனம் ஆடிக்கொண்டிருக்கின்றனர். பாகவதர்கள் குருமகிமையைத் தெரிவிக்கும் பதங்கள் பாடிக்கொண்டிருக்கின்றனர். பலவித வாத்ய நிபுணர்கள் வீணை, குழல், தம்பூரா, மிருதங்கம் முதலிய வாத்தியங்களை வாசித்துக் கொண்டிருக்கின்றனர். பாடகர்கள் பலவித ராக. தாளங்களில் ஸ்ரீ குருகள்மீது கீர்த்தனங்கள் பாடுகின்றனர். மங்களவாத்தியங்கள் முழங்குகின்றன. சங்கு, சேகண்டி வாங்கா, கொம்பு, பேரிகைகளை முழக்கிக்கொண்டிருக்கின்றனர். இந்த எல்லா ஓசைகளும் ஒன்றாகச் சேர்ந்து திக்குகளிலெல்லாம் எதிரொலிக்க, "ராகவேந்திர, ராகவேந்த்ர" என்று எல்லாபக்தர்களுடைய இதயத்திலும் எதிரொலிக்கும்படி செய்கிறது.

குருவர்யரின் முன்பக்கத்தில் பொற்கோல் பிடித்த சேவகர்கள்; சவுரி, சாமரம் ஏந்திய சேவகர்கள், உறுவிய வாளுடன் காவல் துறையினர், பகல் தீவட்டிகள், விளக்குகள் ஏந்தி புறப்பட்டுப்போகின்றன. குருபாதங்களவர் ப்ருந்தாவன ப்ரவேசத்திற்குத் தயாரானதும், தஞ்சாவூர், மதுரை, பீஜப்பூர், வேலூர், மைசூர் மற்றும் ஆதோனி முதலிய ராஜ்யங்களின் ராஜப்ரதிநிதிகள் முன்வந்து அரசு காணிக்கை, கௌரவங்களைச் செலுத்தி வந்தனம் செய்துவிட்டுப் போகின்றனர். சுமங்கலிகள் மதுரமான குரலில் பாடிக்கொண்டு ஆரத்தியெடுத்துக் கொண்டிருக்கின்றனர். பக்தர்கள் அவல் பொரியை ஸ்ரீயவர்களின் மீது அர்ப்பிக்கின்றனர். அந்த வைபவம், சம்பிரமம், பக்தி பரவசங்களைக் கண்டு மகிழ்ந்தவர்களே பாக்யசாலிகள்! அது என்றும் கண்டிராத, வர்ணனைக்கப்பாற்பட்ட, பரம மங்களகரமான புனிதக் காட்சி! இப்பேர்ப்பட்ட, மஹானுபாவரான குருதர்சனம், சேவை, உபதேசங்கள் முதலியவை நமக்கு இனி கிடைக்கப் போவதில்லை, அவரது பிரிவாற்றாமையை எவ்வாறு சகிப்பது" என்று எல்லோரும் துக்கத்தினால் கண்ணீர் விடுகின்றனர்.

ஸ்ரீ குருஸார்வபௌமர் காஷாயவஸ்திரம் தண்ட கமண்டலுகளை ஏற்று, ஊர்த்வபுண்டரம், கந்தாக்ஷதை த்வாதச, நாமங்கள், கமலாக்ஷி துளஸிமணிமாலைகளினால் அலங்க்ருகராய் ப்ருந்தாவனத்தில் பிரவேசிக்க புறப்பட்டிருக்கிறார். அந்த அபூர்வமான திவ்யமூர்த்திகளின் சரீரம் பத்தரை மாற்றுத் தங்கம்போல் பளபளவென்று ப்ரகாசிக்கிறது. முகத்தாமரையில் புன்னகை மின்னலைப் போல் மின்னுகிறது. கருணை நிறைந்த அவரது கண்கள் தளதள வென்றுப் பிரகாசிக்கின்றன. ஒளிவீசும் ஸாத்விக முக முத்திரையுடன் கம்பீர நடையில் செல்லும் அந்த திவ்ய உத்தமமான உருவம் எல்லோரையும் வசீகரம் செய்து பக்தி பரவசத்தால் எல்லாரையும், மெய்சிலிர்க்கும்படி செய்கிறது. ப்ரதக்ஷிணமாகப்புறப்பட்ட ஸ்ரீ குருராஜர் க்ர்ப க்ரஹத்தின் முன்வந்து நின்றார். உடனே பீரங்கிகள் முழங்கின. பக்தகோடிகள் மெய்மறந்து ஜயகோஷம் செய்தனர்.

ஸ்ரீகுருராஜரின் ப்ரிய சிஷ்யரான யோகீந்திரதீர்த்தருக்குத் தமது பாதுகைகளை அருளி, "தாங்கள் இனி உமது பீடபரம்பரையின் யதிவர்யர். நமது இந்தப் பாதுகைகளைப் பூஜித்துக்கொண்டு லோககாரியங்களில் ஈடுபட்டு, பாடப்ரவசனம், ஸித்தாந்த ஸ்தாபனம், க்ரந்தமியற்றுதல், தத்வதர்ம, பகவத்பக்தி, பாகவத தர்மப்ரசாரம் செய்து கொண்டு சிஷ்ய-பக்தகோடிகளை ஸாத்வீக சன்மார்க்கத்தில் நடத்திச்சென்று ஸகலஜனங்களையும் உய்விக்கச் செய்து வந்து கீர்த்தி பெற்று ஸ்ரீஹரிவாயு, குருகளின் பரம அனுக்ரஹத்திற்கு பாத்திரராகி ச்ரேயஸைப் பெறவேண்டும் என்று ஆக்ஞாபித்து அவரது சிரத்தின் மீது தமது அம்ருத ஹஸ்தத்தை வைத்து ஆசீர்வதித்தார். பிறகு பூர்வாச்ரமபுத்திரரான ஸ்ரீலக்ஷ்மீநாராயணாசார்யர், பேரனான புருஷோத்தமாசார்யர் மற்றும் இதர பந்துக்கள், ப்ரியசிஷ்ய வெங்கண்ணபந்த் முதலியவர்களைச் சமாதானப்படுத்தி பக்த சிஷ்யமண்டலியின் பக்கம் திரும்பி கம்பீரவாணியினால் ஸ்ரீ நாராயண ஸத்தத்வமஹிமைகளை உபதேசித்து சொற்பொழிவாற்றி :-

அன்புக்குரிய தர்மாபிமானிகளான ஸஜ்ஜனர்களே! நாம் இன்று (ஸசரீரராக) இந்த தேகத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்யும்படி ஸ்ரீ ஹரியின் ஸங்கல்பம். அவனது ஆணையை இன்று இப்பொழுது நிறைவேற்றுவோம். இதற்காக நீங்கள் கவலை கொள்ளக்கூடாது. நாம் ரமாபதி வனான ஸ்ரீ மந்நாராயணனின் ஆக்ஞைப்படி இந்த ப்ருந்தா வனத்தில் 700 வருஷங்கள் உங்கள் யாவரின் க்ஷேமநலத்திற் காக தவத்தில் ஆழ்ந்திருப்போம். ஸ்ரீமூலரகுபதி உங்களுக்கு, ஜகத்தின் மக்களுக்கு உங்கள் மூலம் மங்களங்களைக் கருணை செய்வார்.

மற்றொரு முக்கியமான விஷயத்தை நாம் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறோம். ஸகல வேதார்த்தங்களை நிர்ண யிக்கின்ற ப்ரம்மமீமாம்ஸா சாஸ்திரத்தின் உண்மையான ஹ்ருதயத்தை ஜகத்குருகளான ஸ்ரீமதாசார்யரின் பரம ஸித்தாந்தம் ஒன்றே சரியாக விதித்துள்ளது, தெரியப் படுத்தியுள்ளது. ஸ்ரீ மதாசார்யரின் ஸத்தத்வங்களின் அத்யயனம், பாட ப்ரவசனம், ப்ரசாரம் முதலியவைகளை நமது ப்ரிய சிஷ்யரான பீடாதிபதிகளொருவர் மாத்திரம் செய்தால் போதாது. நம்மிடம் அத்யயனம் செய்த சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரையினர் செய்தாலும் கூடப்போதாது. மாபெரும் மகத்துவமுள்ள காரியத்தை ஒவ்வொரு நல்லவரும் செய்யத்தான் வேண்டும். நம் ஆக்ஞையைப் பரிபாலனம் செய்கின்ற பக்த ஜனங்கள், சிஷ்யர்கள், நமது க்ரந்தங்களின் பாட ப்ரவசனம் செய்யும் மற்றும் நம்மிடத்தில் பாடம் பயின்றவரான வித்பாசம்மந்திகளும், சிறப்பாக தேசசம் மந்திகளும் ஆன நம் வம்ச பரம்பரையில் வந்த பாலகர் களிலிருந்து விருத்தாப்பியர்கள்வரை கூட தத்வ க்ஞான ப்ரசாரம், க்ரந்த ரசனை, ஸதாசாரங்களின் அனுஷ்டானம், ஸ்ரீ ஹரிவாயுகளில் பக்தி, சேவை, ஆராதனை மற்றும் லோகக்ஷேமம் முதலிய காரியங்களைச் செய்து கொண்டுவர வேண்டும். இதை நாம் நம்பிக்கை கொண்டு வ்ரதமாக நாம் மாத்திரமன்றி உங்கள் எல்லோராலும் செய்விக் கிறோம் என்று சபதம் செய்துள்ளோம்.

ஸ்ரீ ஹரியின் ஆக்ஞைப்படி நாம் மேற்கொண்டுள்ள வ்ரதம்! ஆகையினால்தான் நாம் உங்களுக்கு உபதேசித்துக் கொண்டிருக்கிறோம். நீங்கள் ஒரு வேளை இந்த விஷயத்தில் அலக்ஷியமாயிருந்தால் நாம் உங்களை எச்சரித்துத் தூண்டி உங்களால் அந்த மகத்தான காரியத்தைச் செய்விக்கிறோம். நமது இந்த உபதேசத்தின் விஷயத்தில் எப்பொழுதும் உங்கள் லக்ஷ்யமிருக்க வேண்டும். உங்கள் கவனமிருக்க வேண்டும்.

அன்பிற்குரிய பக்தர்களே! ஸ்ரீ ஹரியே பரதெய்வம் என நம்பி, அவனிடம் நிஷ்காமபக்தி (சுயநல மற்ற பக்தி) செய்து கொண்டு, உங்களுக்கு விஹிதமான (விதிக்கப்பட்ட) முறையில் ஸத்கர்மானுஷ்டானங்களில் ஈடுபட்டு ஸாதனம் செய்து கொள்ளுங்கள். துவேஷம், பொறாமை, அகங்காரம், கோபதாபங்களை விட்டு பரஸ்பரம் நட்புடன் நடந்து கொண்டு, குணம் நிறைந்தவர்களாய், ஸதாசார அனுஷ்டானங்கள் செய்து, தர்ம மார்க்கத்தில் முன் னேறுங்கள். தாய்-தந்தையர், குரு மற்றும் மூத்தவர்களிடம் மரியாதையுடன் நடந்து கொள்ளுங்கள் அமைதி, இரக்கம், பரோபகாரம், அன்பு, ப்ராணிகளிடம் அன்பு இவைகள் உங்களுக்கு சிரேயஸ்ஸிற்குச் சாதனமானவை. பகவானிடம் உறுதியான நம்பிக்கை வைத்து பாரத தேசத்தின் உத்தம மான கலாசாரத்திற்குக் கௌரவம் தரும் நல்ல குடிமகன் களாய் வாழுங்கள். ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதா சார்யர் காண்பித்த ஆனந்த மார்க்கத்தை பின்பற்றினால் உங்களெல்லோருக்கும் கோவிந்தனின் ஆனந்த ஸாம்ராஜ்யத் தில் சுகம்பெறும் பாக்யம் உறுதியாகக் கிடைக்கும். இது சத்தியம்! ஸ்ரீஹரி உங்களுக்கு மங்கள பரம்பரையைக் கொடுத்தருளட்டும். "सर्वे जनाः सुखिनो भवंतु समस्त सन्मंगलानि भवंतु" இதே நாம் "உங்களுக்கு நேரில் செய்யும் ஆசிர் வாதம். இதுவே நமது இறுதிச் செய்தி" என்று உபதேசம் செய்து எல்லோரையும் ஆசிர்வதித்து சிரித்த முகத்துடன் பக்தர்களின் ஜய கோஷத்தினிடையே மஹாமகிமரான

ஸ்ரீமத் ராகவேந்திர குரு ஸார்வபௌமர் சரீரத்துடனே ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து யோகா ஸனத்திலமர்ந்து கண் மூடிக் கொண்டு கையில் ஜப மாலையைப் பிடித்து ஸ்ரீ நாராயணனை இதய சிம்மாஸனத்தில் ஸ்தாபித்து ப்ரணவ மந்திரத்தை ஜபித்துக்கொண்டே ஜகத் க்ஷேமத்திற் காக தவம் மேற்கொண்டார்!! பிறகு 700 சாலிக்ராமங் களை ப்ருந்தாவனத்தில் வைத்து வெள்ளிப் பலகையினால் மேல் பாகத்தை மூடி பவித்ர ம்ருத்திகையை அதன் மேலே போட்ட பிறகு ஸ்ரீ குருராஜர் ஜனங்களின் பார்வையிலிருந்து மறைந்தார்.

பிறகு ஸ்ரீ யோகீந்த்ர தீர்த்தர் ப்ருந்தாவன ப்ரதிஷ்டா மஹோத்ஸவத்தை ஸாங்கோ பாங்கமாக நடத்தின பிறகு ஸ்ரீ குருராஜரின் ஆணைப்படியே அன்றே மஹா ஸமாராதனையை வைபத்துடன் நிறைவேற்றி நாதமுதழுக்க ஸம்ப்ரதாயப்படி குருராஜரின் மீது சரம ச்லோகத்தை இயற்றி இவ்வாறுப் படித்தார்.

''दुर्वादिध्वांतरवये वैष्णवेंदीवरेंदवे ।
श्रीराघवेन्द्रगुरवे नमोत्यंत दयाळवे'' ।।

அதாவது :— துர்வாதிகளென்னும் இருட்டிற்குச் சூரியனான வைஷ்ணவரென்னும் குமுத புஷ்பங்களுக்கு (வெள்ளைத்தாமரை) சந்திரரானவரும் மிக்க கருணா மூர்த்தியுமான ஸ்ரீ ராகவேந்த்ர குருபாதங்களவர்களுக்கு நமஸ்காரம் என்னும் அர்த்தத்தைச் சொல்லி குருவர் யருக்குச் சமர்ப்பித்து நமஸ்கரித்தார்.

ஸ்ரீ யோகீந்த்ர தீர்த்தர் குருராஜரின் ஆக்ஞைப்படி பூஜ்யகுருகளின் மஹாசமாராதனையை நிறைவேற்றி அதேசமயம் பெரிய வித்வத் ஸதஸ் (சபை) ஏற்பாடு செய்தார். ஸகல சாஸ்திரங்களின் விஷயாலோசனை, வாக்யார்த்தம், விசாரகோஷ்டி, மாணவர்களுக்குப் பரீக்ஷை, வ்யாஸ கூட்டம், தாஸர் கூட்டம், இவர்கள் மஹாநாடு,

சங்கீதம், ஹரிகதை, ஆசுகவிதா (உடனடிக் கவிதை இயற்றும்) போட்டி, சொற்பொழிவுகள் முதலியன நடை பெற்றன. மற்றும் வெவ்வேறு சாஸ்திர பண்டிதர்கள் கவிகள், பாடகர்கள், இலக்கிய மேதைகள், ஹரிதாஸர் களுக்கு விசேஷ சம்பாவனைகள் கௌரவங்களை அனுக்ர ஹித்து எல்லோராலும் மதிக்கப்பட்டார். விரோதிக்ருது, ச்ராவண கிருஷ்ண த்விதீயா, வெள்ளிக்கிழமையன்று மஹா ஸமஸ்தானாதிபதிகளான யோகீந்திரதீர்த்தர் வெகுநாள் வேதாந்த ஸாம்ராஜ்ய வித்யா சிம்மாசனத்தில் சோபித்து லோகக்ஷேமத்தைச் செய்து கொண்டு கீர்த்தி பெற்றார்.

## 32. ஸ்ரீ குருராஜர் இயற்றிய க்ரந்தங்கள்

ஸ்ரீ குருஸார்வ பௌமர் வைதிக இலக்கியத்திற்குக் க்ரந்தமியற்றுதல் மூலம் அபார சேவை செய்துள்ளார். அவரது இந்த மஹோபகாரத்தை வித்வத் ப்ரபஞ்சம் என்றும் மறக்க முடியாது. ஸ்ரீ ராயர் ப்ரஸ்தான த்ரயங் களிலும் தமது க்ரந்தமியற்றும் திறமையினால் ஜகத் ப்ரஸித் தராயிருக்கின்றார். ப்ரஸ்தானத்ரயங்களில் (1) ச்ருதி ப்ரஸ்தான (வேதங்களும் உபநிஷத்துகளும்) (2) கீதா ப்ரஸ்தான (3) ஸூத்ர ப்ரஸ்தான இவ்வாறு மூன்று ப்ரஸ் தானங்களில் டீகா-டிப்பணிகளை மாத்திரமல்லாமல் ஸ்வதந் த்ரமாக அஸாதாரண க்ருதிகளை இயற்றி வைதிக இலக் கியத்திற்கு மறக்க முடியாத கொடையளித்து ஸாஹித்ய பண்டாரத்தை (இலக்கியப் பொக்கிஷத்தை) நிறப்பி யுள்ளார். அவர் இயற்றிய நூல்கள் பின்வருமாறு :—

### ச்ருதி-ப்ரஸ்தான

(1-3) " த்ரயீ " என்று ப்ரசித்தமான ரிக்-யஜுர்-ஸாம வேதங்களுக்கு "விவ்ருத்தி" என்னும் ஸ்வதந்த்ர க்ருதிகள்

(4) மந்த்ரார்த்த மஞ்ஜரி

(5-9) புருஷஸூக்தம் முதலிய பஞ்சஸூக்த வ்யாக் யானங்கள்

(10-19) தசோபனிஷத் கண்டார்த்தங்கள்

### கீதா ப்ரஸ்தானம்

20. கீதார்த்த ஸங்க்ரஹ (கீதாவிவ்ருத்தி)
21. கீதாபாஷ்ய ப்ரமேய தீபிகா வ்யாக்யானம்
22. கீதா தாத்பர்ய டீகாவிவரணம்

### ஸூத்ர ப்ரஸ்தானம்

23. தந்த்ர தீபிகா
24. ந்யாய முக்தாவளி
25. ப்ரம்மஸூத்ரபாஷ்ய தத்வப்ரகாசிகா பாவதீப
26. அனுபாஷ்ய டீகா தத்வமஞ்ஞரீ
27. அனுவ்யாக்யான டீகா ந்யாயஸூதா-பரிமள
28-37. தசப்ரகரண டீகா வ்யாக்யானங்கள்
38. சந்த்ரிகா ப்ரகாச
39. தர்க்கதாண்டவ வ்யாக்யா
40. வாதாவளீ வ்யாக்யா
41. ப்ரமாணபத்ததி வ்யாக்யா
42. ஸ்ரீ ராமசாரித்ர மஞ்ஞரீ
43. ஸ்ரீ க்ருஷ்ணசாரித்ர மஞ்ஞரீ
44. ஸ்ரீமன் மஹாபாரத தாத்பர்ய நிர்ணய பாவ ஸங்க்ரஹம்
45. அனுமத்வ விஜய வ்யாக்யானம்
46. ப்ராதஸ்ஸங்கல்ப கத்யம்
47. பாட்ட ஸ்ங்க்ரஹம்
48. ப்ரமேய ஸங்க்ரஹம்

இவ்வாறு ஸ்ரீ குருராஜர் வேதம், உபநிஷத்து, ஸூத்ரங்கள், ப்ரம்மஸூத்ர, ஸ்ரீ மத்வ பாஷ்யம் மற்றும் டீகாக்களுக்கு வ்யாக்யானமும் ஸ்வதந்த்ர க்ரந்தங்களும் இயற்றியிருப்பதல்லாமல் பாகவதம், ராமாயணம், மஹாபாரதத்திற்குச் சம்பந்தப்பட்ட நித்யோபயோகமுள்ள ஸங்க்ரஹங்களின் மீது சுருக்கமாக ஸ்ரீ கிருஷ்ணசாரித்ர மஞ்ஞரீ,

ஸ்ரீ ராமசாரித்ரமஞ்ஜரி, தாத்பர்ய நிர்ணய பாவஸங்க்ரஹம் என்னும் க்ரந்தங்களையியற்றி அவைகளின் பாராயண பலன் ஸஜ்ஜனர்களுக்குக் கிடைக்குமாறு செய்து பேருபகாரம் செய்துள்ளார். இதைப் போலவே நாராயண பண்டிதா சார்யர் ஸஜ்ஜனர்களுக்கு பாராயண உபயோகத்திற்காக இயற்றியுள்ள "அணுமத்வ விஜய" (ப்ரமேயநவமாலிகா) விற்குப் பூர்வாச்ரமத்திலேயே "गूढभाव प्रकाश" என்னும் வ்யாக்யானத்தை இயற்றி உபகாரம் செய்துள்ளார். ப்ரமேய விஷயங்களைச் சேகரித்து "प्रमेयसंग्रह" (ப்ரமேய ஸங்க்ரஹ) என்னும் க்ரந்தத்தை இயற்றி மக்களுக்குச் சரி யான ப்ரமேயங்கள் (தெரிவிக்கப்படவேண்டிய விஷயம்) தெரியும்படி அனுக்ரஹம் செய்துள்ளார். இதல்லாமல் ஸகல சாஸ்திரங்களின் ஸாரபூதமானவையும் ஸ்ரீஹரி-வாயு குருகளின் மகிமையை அறிவிப்பதுமான "प्रात: संकल्प गद्य" (ப்ராத: ஸங்கல்ப கத்யம்) என்னும் க்ரந்தத்தை இயற்றி பேருபகாரம் செய்துள்ளார்.

ஸ்ரீ மந்த்ராலய ப்ரபுவின் க்ரந்தமியற்றும் நடை(अन्यादृश) (ஒரு இடத்தில் சொன்னதை இன்னொரு இடத்தில் சொல் லாமல்) "उक्तं नो वक्ति भूय:" என்னும் விருது அவர் ஒரு வருடையதே என்றால் மிகையாகாது.

राघवेन्द्रात् "अद्य श्री विलसति फलितो मध्वसिद्धांत शाखी" என்னும் ஸ்ரீ வாதிந்திர தீர்த்தரவர்களின் வார்த்தைகள் எழுத்துக்கெழுத்து உண்மை. ஸ்ரீ மத்வசித்தாந்த மென்னும் கற்பக வ்ருக்ஷம் எல்லாவகையிலும் அழகான வகையில் வளர்ந்து ஸ்ரீ குருராஜரினால் பலன் தருவதாயிற்று.

த்வைத ஸித்தாந்தம் சூரிய சந்திரர்கள் உள்ளளவும் சாஸ்வதமாக இருக்கும்படி செய்த ஸ்ரீமகானுபாவர் நம் குருராஜர். ஸ்ரீ ராயரினால் வளர்ந்த ஸ்ரீமத்வஸித்தாந்த வ்ருக்ஷத்தின் நிழலில் நாம் இன்று வாஸம் செய்துகொண்டு

அவருடைய கிருபையினால், ''ஸித்தாந்த வ்ருக்ஷ''த்தில் பழரஸத்தை அருந்தி, ருசித்து ஆனந்தப்பட்டுக்கொண்டிருக்கிறோம்.

ஸ்ரீமன் மத்வாசார்யர் தமது பாஷ்யாதி க்ரந்தங்களில் ஸூத்ரார்த்தங்களை விவரித்து தாம் சொன்ன அர்த்தத்திற்கு, ''तदुक्तं स्कांदे'' போன்ற பாதராயணரின் மேற்கோள்களை எவ்வாறு எடுத்துக்காட்டியுள்ளனரோ அதைப் போலவே நம் ஸ்ரீ பரிமளாசார்யர் (ஸ்ரீ ராயர்) தாமும் 'டீகா' முதலியவைகளுக்கு வ்யாக்யானங்கள் செய்து, தாம் சொன்ன அர்த்தத்திற்கு 'तदुक्तं अनुव्याख्याने,' 'तदुक्तं सुधायां,' तदुक्तं चंद्रिकायां - 'तर्क तांडवे, न्यायामृते' முதலிய ப்ராசீனாசார்யர்களின் சம்மதத்தைப் பிரகடனம் செய்கிறார். ஸ்ரீமதாசார்யரின் வாக்யத்திற்குத் தோஷம் கல்பித்தால் எவ்வாறு ஸ்ரீ பாதராயணரின் வாக்யத்திற்கு விரோதம் வருமோ அதுபோல மந்த்ராலய ஸ்ரீபாதங்களவரின் வாக்யத்திற்கு தோஷம் கல்பிப்பவருக்கு ''முனித்ரய''ர்களின், அதாவது ஸ்ரீமதாசார்யர், ஸ்ரீஜயதீர்த்தர், ஸ்ரீவ்யாஸராஜ குருவர்யர்களின் வாக்யவிரோதம் வந்தேதீரும்.

### 33. ஸ்ரீ குருவர்யரின் தனிச்சிறப்பு (speciality)

ஸ்ரீடீகாக்ருத்பாதர் (ஸ்ரீ ஜயதீர்த்தர்) தமது தவத்தின் பலனாக ஸ்ரீ பாரதி தேவியைச் சாக்ஷாத்காரம் செய்து கொண்டு, அவரின் அனுக்ரஹத்தினால் குரல் மற்றும் அதிகாரம் பெற்று அதன் உதவியினால் க்ரந்தமியற்றியதனால் அவரது க்ரந்தங்களைப் பிறர் தூஷிக்கமுடியாமற் போனது. அதுபோலவே, विद्यायत्त ते यतित्वं नं शक्यं त्यक्तुं प्राप्तं त्वद्वशत्वं मयापि! इत्युक्त्वा सा मंत्र-मस्योपदिश्य स्वीयं देवी पश्यंतोऽस्तदंधेद्वा' ।

அதாவது ''யதியாகப்போவது'' உனது தலையெழுத்து, அதை நிராகரிப்பது, (அதிலிருந்து தப்புவது) உன்னால் முடியாத காரியம். அதேபோல் உன்னிடம்

வாஸம் செய்யவேண்டியது என் தலையெழுத்து. அதி லிருந்து தப்பிப்பது எனக்கும் இயலாது!! என்றெல்லாம் சொல்லி ஸ்ரீ ஸரஸ்வதி தேவி ஸ்ரீ குருராஜருக்கு தனது மந்த்ரத்தை உபதேசித்துக் கண் முன்னாலேயே மறைந் தாள்'' என்று ''ஸ்ரீ ராகவேந்திர விஜய''த்தில் சொல்லி யுள்ளபடி ஸ்ரீ ராயர் ஸாக்ஷாத் ஸரஸ்வதி தேவியினால் மந்த்ரோபதேசம் பெற்று க்ரந்தமியற்றி இருப்பதினால் அவரது க்ருதிகள் அமர க்ருதியாகியுள்ளன. அவை பிறரால் தூஷிக்க முடியாதவைகளாக உள்ளன.

இன்னும் ஸ்ரீ டீகாக்ருத்பாதரின் க்ரந்தத்தைக் கண்டு வியந்து ஸ்ரீ வித்யாரண்யர் ஸ்ரீ டீகாராயரின் க்ரந்தத்தை யானையின்மீது அமர்த்தி ஊர்வலம் நடத்தியதைப் போல, மந்திரியான ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் ஸ்ரீ குருராஜரின் 'भाट्टसंग्रह' மென்னும் க்ரந்தத்தை யானையின்மீது அமர்த்தி கௌரவித்தார். ('मंत्रि श्री नीलकंठाभिधमुखमणिना............ ग्रंथे तावत्वदीये करिणे गुणविदारोपितेऽभ्यर्हणाया' – गुरुगुणस्तवन) த்வைத ஸித்தாந்தத்தின் இதிகாசத்தில் ஸ்ரீ டீகாராயருக்குப் பிறகு க்ரந்தமியற்றுவதில் அந்த மரியாதை குருராஜரொரு வருக்கே வந்துள்ளது. அப்படியிருக்கையில் ஸ்ரீபாதராய ணரின், ஸ்ரீ மதாசார்யர் மற்றும் ஸ்ரீ டீகாக்ருத்பாதரின் அனுக்ரஹம் இவரிடம் எவ்வளவு உள்ளது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

ஸ்ரீராயரின் மற்றொரு சிறப்பு அவர் ஒரு இடத்தில் ஒரு முறை சொன்ன விஷயத்தை வேறொரிடத்தில் ஒருபொழுதும் விவரிப்பதில்லை என்னும் அவரது விருது அர்த்தம் நிரம்பியுள்ளது.

''बाल संघमपि बोधयद्भृशं दुर्निरूपवचनंच पंडितै:'' என்றபடி ஸ்ரீ குருராஜரின் க்ரந்தங்கள் மிகமிக சுலபமான நடை யிலுள்ளன. மற்றும் சிறிய சிறிய வாக்கியங்களினால் சோபித்து ஸாமான்ய பண்டிதர்களுக்கும் அர்த்தமாகக் கூடியவையாயிருந்தாலும், யோசித்துப் பார்க்கும்பொழுது

பெரிய பெரிய பண்டிதருக்கும் விவரிக்க முடியாத அளவுக்கு அர்த்த கம்பீரமுடையதாகவும் கடினமானதுமாக இருப்பது அவருடைய மற்றொரு சிறப்பு.

வ்யாகரண சாஸ்திரத்தில் (இலக்கணம்) அவரது பாண்டித்யம் அஸாதாரணமானது. த்வைத சாஸ்திரத்தை அத்யயனம் செய்கின்ற (வ்யாகரண சாஸ்திரத்தைப் படிக்காதவர்) அதிகாரிகளுக்கு ஆங்காங்கு மூலடீகா முதலியவைகளில் வர்ணிக்கப்பட்டுள்ள வ்யாகரண ப்ரக்ரியைகளை விவரமாக எழுதி அந்த ஞானம் சுலபமாகும் வகையில் விவரித்து உபகாரம் செய்வது ஸ்ரீ பரிமளாசார்யரின் இன்னொரு சிறப்பாகும்.

ஸ்ரீ ராயர் "சந்த்ரிகா" முதலிய க்ரந்தங்களில் உபவர்ணிதமீமாம்ஸாதிகரணங்களை (அதாவது விஷயம், சம்சயம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தங்களை) அந்தந்த சாஸ்திரங்களின் முறைப்படி விவரிக்கிறார். "தர்க்கதாண்டவ" வ்யாக்யானத்தில் ந்யாயமத ப்ரக்ரியை (reaction) விளக்கியிருப்பதல்லாமல், ஆங்காங்கு அத்வைத, விசிஷ்டாத்வைத மதப்ரக்ரியைகளை நன்றாகத் தெளிவு படுத்தியுள்ளார். இதிலிருந்து ஸ்ரீராயரின்-ந்யாய-வ்யாகரண-மீமாம்ஸா வேதாந்தம் முதலிய ஸர்வதந்த்ர ஸ்வாதந்திரியம் எப்படிப் பட்டது, அவருடைய கருணை, தயை எவ்வளவென்பது விளங்கும்.

ஸ்ரீ குருராஜரிடம் ஸ்ரீ ஸரஸ்வதி தேவியின் அனுக்ரஹம் அபாரமும் வேறு எங்கும் காண முடியாததாகும்." "तद्व्याख्याने उद्भूवर्णो न चास्ते विद्वत्संघे नैव भावे त्वदन्य:" । மற்றும் "शारदाया दयामेव शास्त्राणां परिशीलने । विविध ग्रंथकरणे यस्सहायं समाश्रित:।" என்னும் பதங்களின் பர்யாலோசனையினால் வித்வத்வரேண்யர்களுக்கு மேல் சொன்ன விஷயம் தெரியாமலிருக்காது.

ஸ்ரீ மந்த்ராலயப்ரபு ஆச்ரமம் ஏற்றுக்கொண்டிராவிட்டால் "भाष्यारंभं शाब्दिका एव कुर्यु:"— ஸ்ரீமந்யாயஸுதா

முதலிய க்ரந்த(ரசனை) ப்ரவசனத்தை வையாகரணரே (grammarian) செய்ய வேண்டியதாயிருந்திருக்கும்!'' என்று ஸ்ரீ ராயருக்கு ஸரஸ்வதி தேவியே சொல்லி, ''संप्राप्ता त्वां न त्यजामि क्षणं वा स्वप्नेवाहं न स्मरामन्यमिक्षुं'' என்று குருராஜரை ஆசீர்வதித்து பரமஹம்ஸ ஆச்ரமத்தை ஏற்று க்ரந்தமியற்றும் படி ஆக்ஞாபித்து தனது மந்திரத்தை உபதேசித்து, வேறு யாருக்கும் செய்யாத பரமானுக்ரஹம் செய்திருப்பதிலிருந்து ஸ்ரீ குருராஜரின் க்ரந்தமியற்றும் பாண்டித்யம், திறமை ஸகலருக்கும் தெரியவரும். மேலே சொல்லப்பட்ட விவரங்களை மனனம் செய்தபொழுது ஸ்ரீயவர்களின் க்ரந்தங்களின் மகிமை தெரியவரும்.

## 34. ஸ்ரீ குருராஜரின் உபகாரம் :

ஸ்ரீகுரு ஸார்வபௌமர் ஜகத்தின் ஜனங்களுக்குச் செய்துள்ள அனுக்ரஹ உபகாரங்கள் பல வகைப்பட்டவை. குருராஜரின் நான்கு அவதாரங்களிலும் (ப்ரஹலாதன், பாஹ்லீகன், வ்யாஸராஜர் மற்றும் ஸ்ரீ ராகவேந்திரர்) ஒரே வகையான செயல்கள், ஒரே வகையான நடத்தை, மகிமை, பகவத் பக்தி, லோகக்ஷேம நன்மை, ஸஜ்ஜனர்களை போஷித்துக் காப்பாற்றி உய்வித்தல் இவைகளை நாம் காணலாம். எல்லா அவதாரங்களிலும் பாகவத தர்மத்தின் சிரத்தை, ஹரிபக்தியே உயர்ந்து காணும். வைதிக வைஷ்ணவ ஸம்ப்ரதாயம், தர்மங்களின் ப்ரசாரம், நல்ல ஜீவர்களின் உயர்வே அவருடைய லக்ஷியமாக இருந்தது. தீன, அஸஹாய—அனாதைகளிடம் அவருக்கு அபார கருணை இருப்பதை அவருடைய எல்லா அவதாரங்களிலும் காணலாம். அவ்வாறே அவரிடம் அன்பு செலுத்தாத, கௌரவிக்காத, சரணடையாத, பஜிக்காத அன்பர்களில்லை. ப்ரபஞ்சத்திற்கு அவர் செய்துள்ள உபசாரமோ அபாரமாக உள்ளது. வேதங்களுக்குப் பூர்ணமாக வ்யாக்யானம் செய்வதுடன் ஸ்வதந்திர நூல்கள் இயற்றுவதன் மூலம் வேத—உபநிஷத்து—கீதார்த்தங்களை விவரித்து பாரத கலாச்சாரத்தை இதய பூர்வமாக உபதேசித்தார். ப்ரபஞ்சத்தில் ஜனங்களின் கண்ணிற்கு

முன்னாலேயே நடமாடி தேச சஞ்சாரம் செய்த காலத்தில் ஸ்வதர்மத்தினர்-விதர்மி (முஸ்லீம்) அரசர், மஹாராஜாக் களினால் கௌரவிக்கப்பட்டவராய், ஹிந்து தர்மத்தின் மகத்துவத்தை அவர்களுக்குக் காண்பித்துக் கொடுத்து ப்ருந்தாவன பரவேசம் செய்த பிறகும் நூற்றுக்கணக் கான வருடங்களான பிறகு ஸர்தாமஸ் மன்றோவைப் போல ஐரோப்பியனுக்குத் தரிசனமருளி யோக சக்தியின் அபாரசக்தியுடைய ஸநாதன ஹிந்து மதத்தின் மகிமையைக் காண்பித்துக் கொடுத்துப் பேருபகாரம் செய்துள்ளார். மஹாராஷ்டிரம், ஆந்திரம், தமிழ்நாடு, மற்றும் கர்நாடக ராஜ்யங்களின் ராஜகுருகளின் உட்பூசல்களைப் பரிகாரம் செய்து தேசத்தில் சாந்தி-அமைதி-சமாதானம் நிலவும்படி செய்துள்ளார். ஸ்ரீ வ்யாஸராக இருந்த காலத்தில் நாடு, மொழி, கலாச்சாரம், கலைகளின் எல்லா முனைகளிலும் முன்னேற்றத்திற்குக் காரணமானது மாத்திரமன்றி வ்யாஸ கூட தாஸ கூடத்தவர்களுக்கு போஷகராக இருந்து, ஹரி தாஸ மார்க்கத்தைப் போஷித்து வளர்த்து, குருராஜரான பொழுது சிறப்பாக போஷித்து தானும் பதங்கள்-பத்யம்-ஸுளாதிகளை இயற்றி கன்னட மொழிக்குச் சோபையை உண்டாக்கி, ஆயிரமாயிரம் ஜனங்களெதிரில் சரீரத்துடனே ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து தாம் இயற்கையின் நியமத்தை எவ்வாறு வென்றுள்ளாரென்பதைக் காண்பித்தார் முக்கிய மாகக் கடவுளே இல்லை; ஸ்வர்க்கம் நரகம் முதலியவைகள் இந்திரியத்திற்கெட்டாத விஷயங்கள், சாஸ்திரங்கள் முதலியவை வெறும் பொய் என்று சொல்லும் நாஸ்திக யுகத்திலும், தற்காலம் புதுயுகமான பௌதிக விஞ்ஞானத் திற்குச் சவாலாக நின்று ஹிமாலயம் முதல் கன்னியாகுமரி வரை தம்மை சரண் புகுந்து வந்த ஜனங்களின் ஆதி-வ்யாதி களைப் போக்கி ஐஹிக-ஆமுஷ்மிக சுகமளிப்பதன் மூலம் பகவந்தனின் அஸ்தித்வத்தை (existence) (அதாவது கடவுள் இருக்கிறார் என்பதை) நிலைநிறுத்திக் கொண்டு லோக ப்ரியராக, மதிப்பிற்கும் மரியாதைக்கும் பாத்திரராக இன்றும், இப்பொழுதும் கூட ப்ருந்தாவனத்தில் விராஜ மானராக இருந்து கொண்டு ஸனாதன தத்வ தர்மங்களை

உயர்த்திக் காண்பித்து கலாச்சாரத்தின் சின்னமாக விளங்கிக் கொண்டிருக்கின்றார். அப்பேர்ப்பட்ட மாபெரும் மகிமையுடைவரும் விச்வபந்துகளுமான (Universal Kith & Kin) ஸ்ரீகுருஸார்வ பௌமரின் பாத ஸேவை, பஜனை முதலியவைகள் செய்து அவரது கருணைக்குப் பாத்ரனாகு பவனே போற்றத்தகுந்தவன்.

## 35. ஸ்ரீ அப்பணாசார்யர் :

ஸ்ரீ ராகவேந்திர குருபாதரின் சிஷ்யர்களில் 'பிச்சாலய' அப்பணாசார்யர் ஒருவர். ஸ்ரீகுருராஜர் இவரிடத்தில் விசேஷமான அன்பு கொண்டிருந்தார். ஸ்ரீராயர்ப்ருந்தாவன ப்ரவேசம்செய்யும் பொழுது தீர்த்தக்ஷேத்திர யாத்தி ரைக்காகப் போயிருந்ததால் யாத்திரையிலிருந்து திரும்பி வந்த பிறகு ஸ்ரீராயர் ப்ருந்தாவனப்ரவேசம் செய்த தகவல் தெரிந்து அவருக்குமிகமிக வருத்தமுண்டாயிற்று. ஸ்ரீராயரின் ப்ருந்தாவன தரிசனம் செய்வதற்கு ஓடிவந்தார். ஆனால் துங்கபத்திரையில் வெள்ளப்பெருக்கெடுத்துக் கொண்டிருந்த தால் நதியைத் தாண்டிவர இயலவில்லை. ஸ்ரீராயரின் ப்ருந்தாவன தர்சனம் பெறத் தவித்துக் கொண்டிருந்த அப்பணாசார்யர் வெள்ளம் தணியுமென்று ஒன்றிரண்டு மணி நேரங்கள் எதிர்பார்த்தாலும் துங்காவின் வெள்ளம் இறங்கு முகமாகக் காணவில்லை. ஸ்ரீகுருராஜரின் ப்ருந்தா வனத்தை பார்க்க வேண்டும் என்ற ஆர்வத்தில் சரியாக நீச்சல் தெரியாத ஆசார்யர் ஸ்ரீ ராயர் மீது பாரம் போட்டு நதியில் குதித்து இக்கரையை அடைய முயற்சித்தார். நதியில் தன்னால் முடிந்தவரை நீச்சலடித்துக் கொண்டே ஸ்ரீமகிமையை வர்ணிக்கும், " ஸ்ரீகுருஸ்தோத்ரம் " அவர் வாயினின்று புறப்பட்டது! பவஸாகரத்தையே தாண்டு வதற்கு உதவுகின்ற, ஸ்ரீ ஹரியின் அனுக்ரஹத்தினால் சக்தி படைத்த ஸ்ரீ குருராஜர் அப்பணாசார்யரை சிறியதான துங்காநதியைத்தாண்டச் செய்யாமலிருப்பாரா? என்ன? குருவனுக்ரஹத்தின் பலனோ என்னும் படியாக கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு கை ஒன்று அவருக்கு நதியைத்தாண்டி வர உதவியது! ஒரே மாதிரி (quite alike) ஆசார்யரின் வாயினின்று " ஸ்ரீகுரு ஸ்தோத்ரம் " புறப்பட்டுக் கொண்டி

ருக்கிறது. "श्री पूर्णबोध गुरुतीर्थ पयोब्धिपारा" என்றாரம்பித்து "यो भक्त्या" என்னும் கடைசிச் லோகத்தின் நான்காவது அடியான "कीर्तिर्दिग्विदिता विभूतिरतुला" என்பது வரை வந்த பொழுது கரையை அடைந்துவிட்டார். அங்கு கூடியிருந்த ஜனங்களில் ஒருவர் ஆசார்யரை அடையாளம் கண்டு, "ஸ்வாமி" நம் குருராஜர் ப்ருந்தாவனப்ரவேசம் செய்து நம்மை அனாதையாக்கிவிட்டார்" என்று சொல்லவும் துக்கம் பொங்கிக் கண்ணீர் விட்டுக்கொண்டே ப்ருந்தா வனத்தை நோக்கி ஓடினார். சற்று அரைகுறையாக இருந்த ச்லோகம் அபூர்ணமாகவே இருந்தது. ஓடோடி வந்தார் ஆசார்யர். அவருக்கு ப்ருந்தாவன தரிசன மாயிற்று. பக்தி மேலிட்டு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து துக்கந்தாளாமல் நின்றார். ஆச்சரியம்! ப்ருந்தா வனத்திலிருந்து ஆசார்யரின் திவ்யவாணி (வார்த்தை) கேட்டது. 'साक्षी हयास्योऽत्र हि' ஆஹா! எத்தகைய அனுக்ரஹம் சிஷ்யரிடம்! குறைபாடுடன் விட்டுப்போன ஸ்தோத்திரத்தைத் தமது முத்திரைவைத்துக் கொடுத்து 'साक्षी हयास्योऽत्र हि' என்று பூர்த்திசெய்து அபயமளித்தார் ஸ்ரீராயர்! ப்ருந்தாவனத்தில் அமர்ந்துள்ள குருபாதரின் வாணியை நூற்றுக்கணக்கானவர்கள் தம் காதுகளால் கேட்டு திக்பிரமை அடைந்தனர்! அப்பணாச்சார்யருக்கான ஆனந்தம் வர்ணனைக்கப்பாற்பட்டது.

### 36. ஸ்ரீ அப்பணாசார்யரின் ஸ்தோத்திர மகிமை :

அப்பணாசார்யர் வந்தபொழுது ப்ருந்தாவனத்தில் ஸ்ரீஹயக்ரீவ மந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு உட்கார்ந் திருந்தார். ஸ்ரீ குருராகவேந்திரஸ்வாமிகள். தமது அன்பிற் குரிய சிஷ்யர் ஸ்ரீ அப்பணாசார்யர் இயற்றிய ஸ்தோத் திரத்தினால் ப்ரீதியடைந்து அந்த ஸ்தோத்திரத்திற்குத் தனது அங்கீகாரத்தை, (முத்திரையை) குருஸ்தோத்திரத்தில் சொல்லப்பட்ட விஷயங்களின் உண்மையைப்பற்றி தம் மெதிரில் காட்சிகொடுத்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ ஹயவதன ஸ்வாமியின் சாக்ஷியையும் கொடுத்து அப்பணாசார்யர்

இயற்றிய ஸ்தோத்திரத்தின் கடைசி ச்லோகத்தில் குறை பாடுடனிருந்த ஏழு எழுத்துக்களைத் தானே அனுக்ரஹ பூர்வகமாகப் பூர்த்தி செய்து ஸ்தோத்திரத்தை முடித்துக் கொடுத்தார். இதுவும் ராயரின் அற்புதச் செயலுக்குச் சான்றாகும்.

## 37. அனுக்ரஹம் :...

ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவனத்திலிருந்து திரகம்பீர வாணியினால் புறப்பட்ட 'साक्षी हयास्योऽत्र हि' என்னும் குருவாணியைக் கேட்டு அப்பணாசார்யர் ஆச்சரியத்தினால் திடுக்கிட்டார். அவரது மெய்சிலிர்த்தது. மயிர்க்கூச்ச லுண்டாயிற்று. கண்களினின்று ஆனந்தக் கண்ணீர் பெரு கிற்று. ஆஹா! குருஸார்வபௌமரே! உமது எவ்வளவோ சிஷ்யர்களிலொருவனான இந்தச்சாமானிய ஏழை சிஷ்ய னிடத்தில் தங்களுக்கு எவ்வளவு கருணை! அற்பனான நான் இயற்றிய ஸ்தோத்திரத்திற்கு அங்கீகாரம் கொடுத்து பரமானுக்ரஹம் செய்துள்ளீரல்லவா! ஸ்வாமி, அற்பனான நான் இயற்றிய ஸ்தோத்திரம் அபூர்ணமாக இருப்பதை யறிந்து தமது அமிர்தவாணியினால் அதைப் பூர்த்தி செய்து அதற்குத் தமது சம்மதத்தை முத்திரையிட்டு அனுக்ரஹம் செய்தீரல்லவா பிரபு! குருதேவா! நான் எவ்வளவு பாக்யசாலி! தன்யன்! எனது வாழ்க்கை இன்றுதான் போற்றத் தகுதி பெற்றது. குருதேவா! தமது சிஷ்ய வாத்ஸல்யத்திற்கு எல்லையென்பதே கிடையாது. ஸ்வாமி எனது அனந்தகோடி நமஸ்காரங்களை ஏற்றுக்கொள்ளுங்கள் ப்ரபோ! தமது தரிசனமாகவில்லை யென்னும் துக்கத் தினால் கலங்கிய என்னைத் தங்களது அமிர்தவாணியினால் சமாதானப்படுத்திவிட்டீர்கள். தாங்கள் இப்பொழுது சரீரத்துடன் ப்ருந்தாவனத்தில் சாக்ஷாத் ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்வாமியை உபாஸனை செய்துகொண்டிருப்பதை தெரிவித்துத் தங்கள் அபார மஹிமையைப் பாமரனான எனக்குத் தெரியப்படுத்தியுள்ளீர்கள். உண்மை. ஸ்வாமி, தாங்கள் யோகஸித்தர். ஸத்யஸங்கல்பனான பகவந்தனின் அந்தரங்க பக்தர். ப்ருந்தாவனத்தில் 700 வருடகாலம்

சரீரத்துடன் ஸந்நிஹிதனாயிருப்போமென்னும் தமது அபய வசனம் ஸத்யமானது. தம்மை ப்ரதயக்ஷமாகக் காணும் பாக்யம் எனக்கில்லாமற் போனாலும் தங்கள் அமிர்த வாணியை கேட்டேனே ஸ்வாமி! இது போதாதா? இது யாருக்குக் கிடைக்கும்? நான் தன்யனானேனென்று மகிழ்ச்சியால் புளகாங்கிதராய் ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தா வனத்திற்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து குருகளின் காருண்யததை மனமாரப் பாராட்டினார்.

## 38. அளவில்லாத ப்ரிய ஸ்தோத்ரம் :—

ஸ்ரீ குருராஜரின் மீது அநேக மஹான்கள் ஸ்தோத்திரங் களை இயற்றியுள்ளார்கள். ஆனால் ஸ்ரீ குருராயருக்கு அளவற்றப் ப்ரியமுள்ள ஸ்தோத்திரம் என்றால் அப்பணா சார்யரியற்றிய இந்த ஸ்தோத்திரம்தான் என்று தைரிய மாகச் சொல்லலாம். இன்று லக்ஷக்கணக்கான ஜனங்கள் இந்த ஸ்தோத்திரத்தைப் பாரயணம் செய்வதால் தங்களது ஸகல விருப்பங்களையும் அடைகின்றனர். இந்த ஸ்தோத் திரத்தின் ஒவ்வொரு எழுத்தும் பீஜாக்ஷரமாக உள்ளது. மகிமை நிறைந்ததாக உள்ளது. சக்திவாய்ந்ததாக உள்ளது. பக்தர்களின் மனவிருப்பங்களை அளிக்கவல்லதாயுள்ளது. சாக்ஷாத் ஸ்ரீ குருராஜரே 'साक्षी हयास्योऽत्र हि' என்று இதற்குச் சம்மத, சாச்வதமான முத்திரையிட்டு அருளியிருப்பதனா லேயே இந்த ஸ்தோத்ரம் இவ்வளவு மகத்துவம் நிறைந்ததா யுள்ளது. இப்படிப்பட்ட அபூர்வஸ்தோத்ரத்தை இயற்றி பாரத நாட்டின் பக்த ஜனங்களுக்கு மாபெரும் உபகாரத்தைச் செய்த ஸ்ரீ அப்பணாசார்யரை நாம் என்றும் மறப்பதற் கில்லை.

## 39. குருஸ்தவனத்திற்கு ப்ருந்தாவனம் தலை அசைத்தது :

ஸ்ரீ ராகவேந்திர குருகளின் ப்ருந்தாவனம் தலை யசைத்தது! என்ன ஆச்சரியம் இது? என்று நினைத்தாலும் சந்தேகப்பட வேண்டியதில்லை. உண்மை. முன்னொரு முறை ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவனம் தலையசைத்தது!

இது நடந்தது பதினெட்டாவது நூற்றாண்டில் இந்த அற்புத மான நிகழ்ச்சியை அநேகர் கண்ணாரக் கண்டு நடனமாடும் படி செய்த மஹாபுருஷர் ஸ்ரீவாதீந்திர தீர்த்தர்.

மந்த்ராலயத்தில் ஸ்ரீ குருராஜரின் மூல ப்ருந்தாவனத்தின் இடது பக்கத்தில் ஒளிரும் அழகான ப்ருந்தாவனம் ஒன்றுள்ளது. அதை மந்த்ராலயத்திற்குப் போய் வந்த ஒவ்வொரு பக்தனும் அறிவான். அதுதான் ஸ்ரீவாதீந்திர தீர்த்தரின் ப்ருந்தாவனம். ஸ்ரீ குருராஜருக்கு மந்திரியைப் போலிருந்து ஏராளமான பக்த ஜனங்களை ஸ்ரீ குரு ராஜருடன் காப்பாற்றிக் கொண்டு வரும் ஸ்ரீவாதீந்த்ர தீர்த்தர் சாமான்யமான யதிகளல்ல. அவர் ஸ்ரீ குருராஜரின் விசேஷ அனுக்ரஹத்திற்குப் பாத்ரர். அவரிடம் ஸ்ரீராயருக்கு இணையற்ற அன்பு. மற்றும் பாட்டனாரின் பேரனிடம் மற்ற யாரிடமும் இல்லாத ப்ரேமாபிமானமிருப்பது இயற்கை தானே? ஸ்ரீவாதீந்திரதீர்த்தர் ஸ்ரீ குருராஜருக்குக் கொள்ளுப்பேரன். ஸ்ரீராயரின் பூர்வாச்ரம புத்திரரான ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணாசார்யருக்குப் பேரனான ஸ்ரீநிவாஸா சார்யரே பிறகு ஸ்ரீவாதீந்திர தீர்த்தரென்னும் பெயரில் ஸ்ரீ குருராஜரின் மஹாபீடத்தை அலங்கரித்து கி. பி. 1728 லிருந்து 1750 வரையிலும் அப்பீடத்தில் ஆட்சி புரிந்தார்.

## 40. அழகான உருவத்துடன் கூடிய ப்ருந்தாவனம் :

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் தாம் சரீரத்துடன் ப்ருந்தா வனப்ரவேசம் செய்யப் போவதாக திவான் வெங்கண்ண பந்த்திற்குத் தனிமையில் தெரிவித்துத் தமக்கு ஒரு ப்ருந்தா வனம் நிர்மாணம் செய்யும்படி சொன்னபொழுது வெங் கண்ணபந்த் பக்தி-மரியாதைகளினால் ஒரு அழகான ப்ருந்தாவனத்தை தயார் செய்வித்தான். ஸ்ரீராயர் அதைப் பார்த்துப் புன்னகை செய்து வெங்கண்ணா! ப்ருந்தாவனம் வெகு அழகாக உள்ளது. அதற்குத் தகுந்த நல்ல அழகான யதீச்வரரொருவர் பிறகு வரப்போகிறார். இது அவருக்காக ஒதுக்கப்பட்டு இருக்கட்டும்! நமக்கு வேண்டிய ப்ருந்தா வனம் இதுவல்ல! என்று சொல்லி ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியின்

பாதம்பட்டதினால் புனிதமான ஒரு கல்லினால் தமக்கு ப்ருந்தாவனம் நிர்மாணம் செய்யும்படி ஆக்ஞாபிக்க வில்லையா? அப்பொழுது (பிறகு ஒரு யதிக்காகக்) காத்திருக்கும்படி ஒதுக்கப்பட்ட ப்ருந்தாவனமே இன்று மந்த்ராலயத்தில் ஸ்ரீராயரின் பக்கத்தில் அமைந்துள்ள ஸ்ரீ வாதீந்திர ப்ருந்தாவனம்! ஸ்ரீ குருராஜர் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்யும் பொழுது ஸ்ரீ வாதீந்திர தீர்த்தருக்கு சுமார் இரண்டு வயதிருந்திருக்கலாம். மஹானுபாவரான குருராஜர் சிசுவாயிருந்த தம்முடைய இந்தத் தன் மகனின் பேரன் மீது அப்பொழுதே தமக்கிருந்த அன்பு வாத்ஸல்யம் அபார அனுக்ரஹங்களைத் தமக்காகத் தயாராகியிருந்த ப்ருந்தாவனத்தையே ஒதுக்கி வைத்து, வெளிப்படுத்தினார். ஆஹா! ஸ்ரீ வாதீந்திர தீர்த்தர் எப்பேர்பட்ட பாக்யசாலி!!

உண்மை. ஸ்ரீவாதீந்திரர் மஹா புண்யசாலிகள், பாக்ய சாலி. அதனால்தான் இன்றைக்கும் வித்வஜ்ஜனர்கள் அவரை "उभय वंशाब्धि चंद्रम" ரென்று பாராட்டுகின்றனர். ஸ்ரீ குருராஜரின் பூர்வாச்ரம (அதாவது ஸந்யாஸிகளாவ தற்கு முன்பு) வம்சத்தில் பிறந்து பிறகு ஸ்ரீ குருராஜர் அலங் கரித்திருந்த ஸ்ரீமன் மத்வாசார்யரின் வித்யாபீட வம்சத்தில் அமரும் மஹானுபாவரை "उभय वंशाब्धि चंद्रम" என்று அழைத்துக் கௌரவிப்பது ஸ்ரீராயரின் மடத்தில் சம்ப்ர தாயம். ஸ்ரீவாதீந்த்ர தீர்த்தர் ஸ்ரீ குருராஜரின் பூர்வாஸ்ரம வம்சத்தில் பிறந்த மகனின் பேரனானால் பீடவம்சத்திலோ ஸ்ரீ ராயருக்குப் பிறகு ஐந்தாவது குருவாக வந்து கீர்த்தி பெற்றார்.

## 41. ஸகல சாஸ்திர பாரங்கதர்:

ஸ்ரீவாதீந்திர தீர்த்தர் ஸகல சாஸ்திர பாரங்கதர்; மஹாபாண்டித்யம் பெற்றவர். அந்தக் காலத்திய வித்வத் ப்ரபஞ்சத்தில் ஸகலருடைய கௌரவமும் நன்மதிப்பையும் பெற்று எல்லோராலும் போற்றப் படுபவராயிருந்தார். அந்நாட்களின் அநேக ராஜா-மஹாராஜாக்கள் பாளையக்

காரர்களால் கௌரவப் படுத்தப்பட்டவர். அநேக ச்ரேஷ்ட கிரந்தங்களை இயற்றி ஸாஸ்வத - ஜகத்தில் விசேஷ ஸ்தானம்-கௌரவங்கள் பெற்று பிரசித்தராக இருந்தார்.

ஸ்ரீ குருராஜரிடம் ஸ்ரீ வாதீந்திர தீர்த்தருக்கு யாரிடத்திலுமில்லாத பக்தி-சிரத்தையிருந்தது. அவ்வாறே ஸ்ரீ குரு ஸார்வ பௌமரின் மாபெரும் தனிச்சிறப்பு, மகிமை, இணையற்ற சரிதை, அவர் இயற்றிய க்ரந்தங்களின் அருமை-பெருமைகளை விவரிப்பதற்காக ஸ்ரீ வாதீந்திரர் "श्री गुरुगुणस्तवन" (ஸ்ரீ குருகுணஸ்தவன) மென்னும் அபூர்வ க்ரந்தத்தை இயற்றியிருக்கின்றார். இது ஒரு சிறிய காவியம். இதில் ஸ்ரீ குருராஜரியற்றிய க்ரந்தங்கள், அந்த ஒவ்வொரு க்ரந்தங்களை இயற்றிய காரணம், அந்த க்ரந்தத்தின் மகத்துவம் மகிமை அதனுடைய இயக்கத்தினால் பண்டிதர்களுக்கும் பாமரர்களுக்கும் எவ்வளவு மாபெரும் உபகாரம் உண்டாயிருக்கிறது என்பவைகளை ஸ்ரீ வாதீந்திரர் பாண்டித்ய பூர்ணமாக வெகு திறமையுடன் வர்ணித்துள்ளார்.

இப்பேர்ப்பட்ட மகத்வ பூர்ணமான "श्री गुरुगुणस्तवन" க்ரந்தத்தை இயற்றி அதைக் குருராஜருக்கு ஸமர்ப்பிப்பதற்காக ஸ்ரீ வாதீந்திரர் ஒரு முறை தனது ஸமஸ்தானத்துடன் மந்த்ராலயத்திற்கு விஜயம் செய்தார். எவ்வளவோ பண்டிதர்கள், மாணவர்கள், அநேக பக்தர்கள் ஸ்ரீகளவருடன் வந்திருந்தனர். ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன தரிசனத்தால் மகிழ்ச்சியடைந்த ஸ்ரீ வாதீந்திரர் ஸ்ரீ ராயரின் ப்ருந்தாவன ஸந்நிதியிலேயே அன்று ஸ்ரீ மூலராமரின் பூஜாராதனைகளை நிறைவேற்றி ஸ்ரீ குருராஜருக்கு ஹஸ்தோதகமர்ப்பித்து மஹா மங்களாரதியும் செய்தார்.

## 42. குருகுணஸ்தவனம்

பிறகு ஸ்ரீ வாதீந்திரர் தாம் இயற்றிய "குரு குணஸ்தவன" காவியத்தை ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவனத்தின் எதிரில் நின்று பக்தியுடன் இனிமையான குரலில் வாசிக்க ஆரம்பித்தார். ஏராளமான ஜனங்கள் ஸ்ரீ வாதீந்

திரரின் வாயினின்று புறப்படும் ஸ்ரீகுருகுண ஸ்தவனத்தை கேட்டுக்கொண்டே மகிழ்ந்து கொண்டிருக்கின்றனர். "व्यासेन व्युप्तबीज:" என்னும் கடைசி பத்யத்தை வாசித்துக் கொண்டிருக்கிறார். "अद्य श्री राघवेन्द्रात् विलसति फलितो मध्वसिद्धान्त शाखी' என்று பத்யத்தை வாசித்து முடித்துக் கொண்டிருக்கையிலேயே ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவனம் தலையாட்டுவதைப் போல சில நொடிகள் அசைந்தது! ப்ருந்தாவனத்திற்குச் சமர்ப்பிக்கப்பட்ட பலவித புஷ்பங்கள் ஸ்ரீ வாதீந்திர தீர்த்தரின் தலைமீது பூமாரியானதைப் போல் சோவெனப் பொழிய ஆரம்பித்தன.

அற்புதம்! விந்தை! அதிசயம்! என்று அங்கு கூடி யிருந்த ஜனங்களெல்லோரும் குரலெழுப்பினர். பண்டிதர் கள், பாமரர்கள் முதலான ஸகலரும் இந்த மாபெரும் அதிசயமான நிகழ்ச்சியைக் கண்ணாரக் கண்டு வியப் புற்றனர். ஸ்ரீ குருராஜரின் மகிமையைக்கண்டு புளகாங்கித மடைந்து "ராஜாதி ராஜ குருஸார்வபௌம கோவிந்தா கோவிந்த" என்று ஒரே குரலில் மகிழ்ச்சி ஆரவாரம் மற்றும் ஜய கோஷங்களை எழுப்பினர். ஸ்ரீ வாதீந்திர தீர்த்தரின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகிக்கொண்டிருக் கின்றது. ஸ்ரீ குருராஜர் தமது க்ரந்தத்திற்கு மெச்சி தலை யசைத்து ஆசீர்வதித்தனரென்ற மகிழ்ச்சி மேலிட்டினால் ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவனத்தைக் கட்டிக்கொண்டு பக்தி ப்ரவசத்தினால் குழந்தைகளைப்போல் விம்மி விம்மி அழுதே விட்டார். ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து க்ரந்தத்தை ஸ்ரீ குருராஜருக்குச் சமர்ப்பித்து மங்களஹாரதி செய்தார். அங்கிருந்த வித்வான்கள், பக்தகோடிகள் ஸ்ரீ குருராஜருக்குத் தமது பூர்வாஸ்ரம பிள்ளையின் பேரனான ஸ்ரீவாதீந்திரரிடம் வைத்துள்ள பேரன்பு, அனுக்ரஹம், தம்மீது இயற்றிய 'குரு குணஸ்தவன'த்திற்குப் ப்ருந்தாவனமே அசைந்து சம்மதத்தைத் தெரிவித்தவகைகளைக் கண்டு பரமானந்தத் தில்மூழ்கி ஸ்ரீ குருராஜரின் மகிமையையும், அவரது பரமானு க்ரஹத்திற்குப் பாத்திரரான ஸ்ரீ வாதீந்திரரின் மகத்துவம், அஸாதாரண பாக்யங்களையும் வர்ணித்துப் பாராட்டினர்.

## 43. அற்புத மகிமை

இன்றுகூட ஸ்ரீ குருராஜரின் கிரந்தங்களின் மகத்துவத்தை எடுத்துக்காட்டும் ஸ்ரீ வாதீந்திரர் இயற்றிய "குருஸ்தவன'ம் ச்ரேஷ்டகிரந்தமென்று பண்டித மண்டலியில் மதிப்பைப்பெற்று சிரமேற்கொள்ளத் தகுந்ததாக விளங்குகிறது.

ஸ்ரீ அப்பணாசார்யரின் "குருஸ்தோத்ரத்திற்கு" "साधो हयास्योऽत्र हि' என்னும் தமது திவ்யவாணியினால் மெச்சி ஆக்ஞையளித்து, முதன் முதல் மகிமையைக் காண்பித்த பிறகு அநேக மகிமைகளை ஸ்ரீ ராயர் காண்பித்திருக்கலாம். ஆனால் பிறகு காண்பித்த மகிமைகளில் ஸ்ரீ வாதீந்திரரின் "குருகுணஸ்தவன" க்ரந்தவாசிப்பைக் கேட்டு ப்ருந்தாவனத்திலுள்ளிருந்து குருராஜர் தலையசைத்துக் காண்பித்த இந்த மகிமையே இரண்டாவது அற்புத மகிமையென்று சொல்லலாம்.

## 44. பக்தர்களின் மனதைக் கவர்ந்த அதிசயங்கள்!

ஸ்ரீ வாதீந்திர தீர்த்தரின் பீடாதிபத்ய காலத்தில் அநேக மகத்துவம் நிறைந்த நிகழ்ச்சிகளை அவரால் செய்வித்து தமது மகிமையைப் பல விதங்களில் ஸ்ரீ ராகவேந்திர குரு ஸார்வ பௌமர் வெளிப்படுத்தியிருக்கிறார். அவைகளில் ஒன்றிரண்டை இங்கு விவரிப்பது உசிதமாகும்.

ஸ்ரீ ராயர் ஸஞ்சார க்ரமத்திலிருந்த பொழுது முன்பு ஒருமுறை கிரீடகிரி க்ராமத்தில் வெங்கடதேசாயின் மகன் மாம்பழ ரஸமிருந்த பாத்திரத்தில் விழுந்து இறந்து போயிருந்தான். அந்தச் சிறுவனைப் பிழைக்கவைத்த பொழுது வெங்கடதேசாய் ஸ்ரீ குருராஜருக்கு காணிக்கையாக சமர்ப்பித்திருந்த கிரீடகிரி க்ராமம் ஸ்ரீ மடத்தின் கை விட்டுப் போய்விட்டது. அப்பொழுது ஸ்ரீ ராயர் ஸ்ரீ வாதீந்திரரின் மூலம் மஹா மகிமையைக் காண்பித்து ஜயவந்த பாயி வெங்கடபஹதூர் தேசாயிபர்கணே என்பவரினால் கி.பி. 1731ல் மறுபடியும் கிரீடகிரி க்ராமம் ஸ்ரீ மடத்திற்குக் கிடைக்கும்படி செய்து அனுக்ரஹித்தார்.

**45. மந்த்ராலயம் மடத்திற்கு நிரந்தரமாக சொந்தமாகச் செய்தது.**

ஆதோணியின் நவாப் ஸித்திமஸூத்கான் ஸ்ரீ குரு ராஜருக்குச் சமர்ப்பணம் செய்திருந்த மந்திராலய க்ராமம் ஏதோ காரணத்தினால் ஸ்ரீ மடத்தின் கையைவிட்டுப் போகும் சந்தர்ப்பம் வந்தபொழுது ஆதோணியின் அதிகாரியாயிருந்த முஜப்பர்ஜங்க் பஹதூருக்கு ஸ்ரீ வாதீந்திரர் மூலம் தமது அபார மகிமையை வெளிப்படுத்தி அவனால் மந்த்ராலயம் ஸ்ரீ மடத்திற்கு நிரந்தரமாகச் சொந்தமாகும்படி செய்து 'सदास्वस्थान क्षेमचिंतकाय नमः' என்று அஷ்டோத்ர சத நாமாவளியில் ஸ்ரீ அப்பாணாசார்யர் சொல்லியிருக்கின்ற மகிமையை சத்தியமாக்கிக் காண்பித்தார்.

**46. ஸ்ரீ விஜயதாஸருக்கு ப்ரத்யக்ஷ தரிசனம்**

கர்நாடக ஹரிதாஸ பரம்பரையில் ஸ்ரீ விஜய தாஸரின் ஸ்தானம் தனி சிறப்பு வாய்ந்தது. தர்சனாசார்ய பரம்பரையில் ஸ்ரீ அத்வைத மதத்தில் ஸ்ரீ வித்யாரண்யர், ஸ்ரீ விசிஷ்டாத்வைத மதத்தில் ஸ்ரீ வேதாந்த தேசிகர், ஸ்ரீ த்வைத மதத்தில் ஸ்ரீ ஜயதீர்த்தருக்கு எந்த ஒரு மகத்துவ பூர்ண ஸ்தானம் உள்ளதோ, ஸ்ரீ ஹரிதாஸ பரம்பரையில் ஸ்ரீ விஜயதாஸருக்கு அவ்வளவே மகத்துவ பூர்ணமான ஸ்தானமுள்ளது. ஸ்ரீ புரந்தரதாஸருக்கு பிறகு ஸ்ரீ ஹரிதாஸ பரம்பரையில் மாபெரும் கௌரவமும் மரியாதைக்கும் உரியவர் ஸ்ரீ விஜயதாஸர்.

விஜயதாஸர் ஸ்ரீவாதீந்திரதீர்த்தரின் வாழ்நாளின் கடைசிக் காலத்தில் இருந்தவரென்று சொல்லலாம். பரவாதிகளில் ஒருவரை வாதத்தில் ஜயித்து தமது குருகளான ஸ்ரீ வாதீந்திரரின் சிஷ்யராகச் செய்து அவரால் மந்த்ர முத்ரா தாரணம், குரு உபதேசம் முதலியவைகளை ஸ்ரீ விஜயதாஸர் செய்வித்தாரென்று ஸ்ரீ விஜயதாஸரின் ஒரு பதத்திலிருந்து தெரியவருகிறது. விஜயதாஸரின் வாழ்நாட்களின் பெரும் பாகத்திய நிகழ்ச்சிகள் ஸ்ரீ வாதீந்திரரின் சிஷ்யரான

ஸ்ரீ வஸுதேத்திர தீர்த்தரின் காலத்தில் நடந்தவையென்று சொல்லலாம்.

விஜயதாஸர் தாஸராவதற்கு முன்பு வறுமையின் கொடுமையில் சிக்கி உழன்று கொண்டிருந்தார். ஒரு வேளை சாப்பாட்டிற்காக அவர் பிறரை அணுகவேண்டியிருந்தது. இவ்வாறிருந்தபோதிலும் தாஸர் சாமானிய மனிதரல்லர் என்பது அவரது பிற்காலத்தில் வரலாற்றிலிருந்து வெளிப்படுகிறது. பகவந்தனைச் சாக்ஷாத்காரம் செய்து கொண்ட விஜயதாஸர் அபரோக்ஷ க்ஞானிகளில் ச்ரேஷ்டராவார். ஸகல வித்தைகளிலும் பாண்டித்யம் பெற்றவர். இவர் ப்ருகு முனிவரின் அவதாரரென்று ஞானிகள் இவரைக் கொண்டாடியுள்ளனர். இந்த மஹான் தாஸ தீக்ஷைபெற்று ஹரிதாஸரான பிறகு ஏராளமான ப்ராமணக் குடும்பங்களுக்கு சரணளித்து உதவி புரிந்து வந்தார்.

ஸ்ரீ புரந்தரதாஸருக்கு பிறகு நிமித்தமாத்திரம் தாஸ கூடம் என்ற நிலைக்கு வந்திருந்த ஹரிதாஸ பரம்பரையைப் புனருத்தாரணம் செய்து அதற்குப் போஷணை, ஊக்கம் உற்சாகம் அளித்து வளர்த்துவிட்ட பெருமை ஸ்ரீ விஜய தாஸருக்கே சேர்ந்தது. அதற்கு உற்சாகம் கிடைத்தது ஸ்ரீ குருராஜரினால். அவரே ஸ்ரீ தாஸருக்குத் தூண்டு கோலாக இருந்தார். காசியில், குருவான புரந்தரதாஸர் விஜயதாஸரின் கனவில் தோன்றி நாமாங்கிதமளித்து அனுக்ரஹம் செய்து ஹரிதாஸ் பரம்பரையை முன்னேறச் செய்வதற்காக ஆணையிட்டார். தாஸர் ஹரிதாஸ கூடத்தின் மறுமலர்ச்சிக்குப் பொறுப்பேற்று தேச சஞ்சாரம் மேற்கொண்டு ஆதோணிக்கு வந்தார். அங்கிருந்து ஸ்ரீகுருராஜரின் தரிசனம் செய்ய மந்த்ராலயத்திற்கு வருகை தந்தார்.

முன்பு விஜயநகரச் சக்ரவர்த்தி கிருஷ்ண தேவராயனின் குருவாயிருந்து, ஸ்ரீ விஜயீந்திர, ஸ்ரீவாதிராஜ, ஸ்ரீபுரந்தர, ஸ்ரீகனகதாஸர்களைப் போன்ற ஞானிச்ரேஷ்டர்களை நாட்டிற்கு அளித்து ஸ்ரீவ்யாஸகூட, ஸ்ரீஹரிதாஸ கூடங்களுக்கு முக்கிய போஷகராயிருந்து ஹரிதாஸ பரம்

பரையை எல்லாத் திசைகளிலும் மேன்மையடையச் செய்து அனுக்ரஹம் செய்துள்ள ஸ்ரீவ்யாஸராஜரே இப்பொழுது ஸ்ரீராகவேந்திர குருஸார்வபௌமராய் ப்ருந்தாவனத்தில் சரீரத்தோடு வீற்றிருக்கிறார் என்பதைத் தெரிந்துள்ள அபரோக்ஷ க்ஞானிகளான விஜயதாஸர், ஸ்ரீபுரந்தரதாஸர் தமக்கு அளித்துள்ள பொறுப்பை நிறைவேற்ற, நடத்தும் சக்தி, ஊக்குவித்து அனுக்ரஹிப்பதற்காக ஸ்ரீவ்யாஸராஜாவதாரிகளான ஸ்ரீ குருராஜரிடம் சரணடைவதற்காகவே மந்த்ராலயத்திற்கு வந்தார்.

ஸ்ரீகுருராஜரின் உயர்ந்த ப்ருந்தாவனத்திற்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து எழுந்து நின்று பரமானந்தத்துடன் குருவர்யரின் ப்ருந்தாவனத்தைப் பார்த்துக் கை கூப்பி நின்றார். அப்பொழுது விஜயதாஸரின் கண்ணிற்குத் தென்பட்டது சிலை ப்ருந்தாவனமல்ல! ஸ்ரீராம-நரஹரி-வேதவ்யாஸ-ஸ்ரீக்ருஷ்ண-நாராயணர்களின் சேவை செய்துகொண்டு, ஸ்ரீமத்வாசார்யரே முதலான மஹாத்மர்களுடன் கூடிக்கொண்டு, க்ஞான அபய முத்திரைகளுடன் சிரித்தமுகத்துடன் காணப்பட்ட சாக்ஷாத் ஸ்ரீ ராகவேந்திர குருஸார்வ பௌமரே தாஸரின் பார்வையில் ப்ரத்யக்ஷமாகக் கண்ணுற்றார்! ப்ருந்தாவனத்தில் கண்ணாரக்கண்ட அற்புதக் காட்சியை மெய்மறந்து உடனே அந்த நொடியிலே ஒரு பதத்தினால் பாடிக்கொண்டாட ஆரம்பித்தார் விஜயதாஸர்.

## 47. ஸ்ரீ விஜயதாஸரால் ஸ்ரீ ராயரின் குணகானம் :

ஸ்ரீ ராகவேந்திர குருஸார்வபௌமரின் தரிசனத்தினால் புளகாங்கிதமடைந்த ஸ்ரீவிஜயதாஸர் ஆனந்தம் மேலிட்டு ஸ்ரீராயரை இவ்வாறு பாடித் துதித்தார்.

### नोडि धन्यनादे !!

राग : भैरवि ताळ : त्रिपुट

नोडिदे गुरुगळ नोडिदे ।। प ।।
नोडिदेनु गुरुरागवेंद्रर ।
माडिदेनु बकुतियल्लि वंदने ।
बेडुवेनु कोंडाडि वरगळ ।
ईडु इल्लदे मेरेव गुरुगळ ।। अ. प. ।।

## நோடி தன்யனாதே !!

ராகம்-பைரவி. தாளம்-த்ரிபுடை

நோடிதே குருகள நோடிதே (ப)
நோடிதேனு குருராகவேந்த்ரர !
மாடிதேனு பகுதியலி வந்தனெ !
பேடுவேனு கொண்டாடிவரகள !
ஈடு இல்லதே மெரெவ குருகள (அ)

தாத்பர்யம் :-குருராகவேந்திர ஸ்வாமிகளைக் கண்டேன் கண்டேன். பக்தியினால் வணங்கினேன். அவரைக் கொண்டாடி வரங்களை வேண்டுவேன். ஈடு இணையில்லாத குருகளைக்கண்டேன் !!

मोदलु गांगेयशजत्यनु ई नदिय तोरदलि यागव मुदहि रविसि पूरेसि पोगिह । लदनु तिळिदु तन्नोळुतवकदि ॥ हृदय निर्मलरागि रागदि । बुधजनर सम्मेळनदलि सिरि । सदननंत्रियतिळिदु नेनेवर । उदित भास्करनंते होळेवर ॥ 1 ॥ अलव बोध मिक्काद महमुनिगळु स अंशह ओंदुरूगदि । नेळेयागि नित्यदलि इप्पह । ओलिसि कोळुतलि हरियगुणगळ ॥ तिळिदु तिळिदुत तम्म तमोंकतत्रिकरिदु पदेशमार्गदि । कलियुगदोळु केवल क । तळेयहरिमुव सोमग संतत ॥ 2 ॥ राम नरहरि कृष्ण कृष्गर । नेमदिंदी मूर्तिगळ पाद । तामरस भजनेयनु माळ्पह । कोनळांगादि कठिन परवादि ॥ स्तोमगळ मह मस्तकाद्रिगे । भूमियोळु पवित्रनेनिसिद यति । याम यामके एल्लरिगे शुभ । कामितार्थव करेव गुहगळ ॥ 3 ॥ नूहपर्वत वहप्र व्रिडदलि । चारु वृन्दावनदल्ली । विस्तार आराधनेयु तोलगदे । वार वारके आगुतिप्पदु ॥ सारे काहण्यदि लकुमि । नारायण ता चक्ररूपदि सारिदवरघ कळेदु इवरिगे । कोरुतिय तंदिप्परनु दिन ॥ 4 ॥ मितवु एनदिरि इल्ल दिनदिन । कतिशयवे आगुवुदु भूसुर । ततिगे भोजन कथाश्रवण भा । रतपुराणगळिद लोप्पुत । क्षितियोळगे मंचालि ग्रामके । प्रतियु इल्लवेंदेनिसि कोंबुदु । पतित पावन विजय विठलन । तुतिसिकोळ्ळुत मेरेव गुरुगळ ॥ 5 ॥

**48. பாக்யசாலி :**

ஞானிகளான விஜயதாஸர் ப்ருந்தாவனத்தில் தங்க மயமான நிறத்துடன் சரீரத்துடன் உதிக்கின்ற சூரியனின் காந்தியினால் காணப்படுகின்ற ஸ்ரீ குருராஜரை ப்ரத்யக்ஷமாக (நேரில்) கண்ணாரக்கண்ட மஹான் ; அவர் எத்தகைய பாக்யசாலி ! அவர் தாம் கண்ட அற்புதக் காட்சியை மெய் மறந்து வர்ணித்துள்ள இந்த மகத்துவம் பொருந்திய பதத்தைக் கவனித்துப் பார்த்தால் பாமரஜனங்களின் கண்ணிற்குக் காணாத குருராஜர் ப்ருந்தாவனத்தில் உயிருடன் பகவந்தனின் சேவையில் ஈடுபட்டிருப்பதை அங்குள்ள அற்புத மகிமைகளையும் க்ஞானிகள் காண வல்லவர்கள் என்பதை இந்தப் பதம் சொல்லுகிறது. மற்றும் ராயரின் அபார சக்தி மகிமைகள் மனதிற்குத் தெரியாமலிருக்காது.

ஸ்ரீ விஜயதாஸருக்கு ஸ்ரீராயர் தரிசனமளித்த விதம் கண்டு எவ்வளவு மகத்துவம் நிறைந்ததாயுள்ளது ! முன்பு இந்தத் துங்காநதிக்கரையில் தற்சமயம் ப்ருந்தாவனமிருக்குமிடத்தில் ப்ரஹலாத ராஜர் பல தடவைகளில் யாகங்களைச் செய்திருக்கிறார். அதை ப்ரஹ்லாதவதாரிகளான ஸ்ரீராயர் தமது ஞானதிருஷ்டியினாலறிந்து இதே இடத்தில் தாம் சரீரத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்ய வேண்டுமென்று ஆர்வத்துடன் நிச்சயித்து அறிஞர்களுக்கெதிரில் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து ஸ்ரீ லக்ஷ்மீரமணனின் பாதகமலத்யானத்திலாழ்ந்து யோகாஸனத்திலமர்ந்து உதிக்கும் சூரியனைப் போல் காந்தியுடன் சோபித்துக் கொண்டிருக்கின்றார் ! இங்கு ஸ்ரீ ஹனும-பீம-மத்வ ரூபங்களென்னும் அவதார ரூபங்களிலும், ஸ்ரீவாயு தேவன் தமது மூலரூபத்துடனும் வீற்றிருக்கிறார். அவரைப்போல் இன்னும் அநேக மஹா முனிகள் மூலரூபங்களுடன் வீற்று நிரந்தரமாக நிலை நின்று ஸ்ரீ ஹரியின் குணங்களைத் தம்மைக் காட்டிலும் உத்தமர்களிடமிருந்து உபதேசம் பெற்று, ஸ்ரீ ஹரியைக் கண்டு கொண்டிருக்கின்றனர். தம்மைவிடச் சிறியவர்களுக்கு உபதேசித்துக் கொண்டிருக்கின்றனர். கலியுகத்தில்

அஞ்ஞான இருளை நீக்கி ஞான ஜோதியைப் பரப்பிக் கொண்டுள்ள அழகை விஜயதாஸர் கண்ணாரக் கண்டு கொண்டு மற்றும் வர்ணிக்கிறார்.

**49. திவ்ய காக்ஷி :**

ஆஹா! எவ்வளவு வசீகரமான திவ்ய காட்சி! ஸ்ரீமூல ராமசந்த்ரர், ஸ்ரீ நரசிம்மமூர்த்தி, வேதவியாஸர், ஸ்ரீ கிருஷ்ணர், ப்ருந்தாவனத்தின் நான்கு பக்கங்களிலும் வீற்றிருக்கின்றனர். ஸ்ரீ ப்ரஹலாத-பாஹ்லீக-வ்யாஸராஜர் ஸ்ரீ ராகவேந்திரர் நான்கு பகவந்தன் மூர்த்திகளின் பாத சேவை செய்து பூஜித்துக்கொண்டு பரவாதிகளென்னும் மலைத் தொடர்களின் மத்தகத்திற்கு வஜ்ராயுதத்தைப் போல சோபிக்கின்றனர். ஒவ்வொரு ஜாமங்களிலும் தம்மை சேவிக்கும் பக்த கோடிகளுக்கு மங்களத்தை அருளு பவராய் விரும்பின வரங்களைக் காமதேனுவைப் போல் அனுக்ரஹித்துக் கொண்டிருக்கிறார்! 700 வருஷகாலம் ஸ்ரீ குருராஜர் சரீரத்துடனே மனோஹரமான ப்ருந்தா வனத்தில் ஒரு நொடி கூட அகலாமல் வீற்றிருக்கிறார் என்பதை அதாவது வருங்கால நிகழ்ச்சிகளைக் கண்டு விஜய தாஸர் மேலே நடக்கப் போகின்ற வைபவங்களை ஆச்சரியத் துடன் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார்!

700 வருடங்கள் வரை ஸ்ரீ குருராயர் ப்ருந்தாவன ஸந்நிதியில் விசேஷமான பூஜை, ஆராதனைகள் நடக்கப் போகின்றன. ஒரு நாள் கூட பூஜை, ஆராதனை இல்லாம லிருக்காது! ஒவ்வொரு வாரங்களிலும் விசேஷ உற்சவங்கள் நடைபெறுவதையும், ஸ்ரீராயரின் பாதங்களைச் சரண டைந்து வந்தால் கருணையுடன் ரமாதவனான நாராயணன் சக்ரரூபத்தினால் அங்கு நிலைத்திருந்து வந்த பக்த ஜனங் களின் பாவங்களையெல்லாம் நீக்கி ஸ்ரீ குருராஜருக்குக் கீர்த்தியைப் பெற்றுத் தருகிறார் என்பதில் கொஞ்சமும் ஐய மில்லை என்பதே மந்த்ராலயத்தில் பேச்சு. அந்த மஹானின் மகிமைக்கு எல்லையே இல்லை. ஒவ்வொரு நாளும் அங்கு

அற்புதம்தான் கண்டு வருகிறது. ஆயிரக்கணக்கான ஜனங்களான ப்ராம்மண சுமங்கலிகளுக்கு சந்தர்ப்பணை, ஸ்ரீ பகவந்தனின் கதா காலக்ஷேபம், பாரத-பாகவதம் முதலிய புராணங்கள் ஸத்-சாஸ்திர பாடம், ப்ரவசனம் முதலியவைகள் நடப்பதை ப்ரபஞ்சத்தில் மந்த்ராலய க்ஷேத்ரத்திற்குச் சமமானது வேறு எதுவுமில்லையென்றும் பெருமை உண்டாகுவதை அன்றே கண்ணாரக் கண்டு 700 வருஷங்களின் வருங்கால நிகழ்ச்சிகள், மகிமைகளையும் பக்தகோடிகளின் க்ஷேமத்திற்காக ஆச்சரிய ஸங்கதியை தெள்ளத்தெளிவாக இந்தப் பதத்தின் மூலமாக ஜகத்திற்குத் தெரிவித்துள்ளார் ஸ்ரீ விஜயதாஸர்.

**50. மிக அற்புதமான மகிமை :**

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளவர்கள் ப்ருந்தாவன ஸந்நிதியில் காண்பித்துள்ள மற்ற எல்லா மகிமைகளைக் காட்டிலும் ஸ்ரீ விஜயதாஸரிடத்தில் அனுக்ரஹம் செய்து காண்பித்த இந்த மகிமை அதிஅற்புதமானது என்று தாராள மாகச் சொல்லலாம். தம்முடைய தரிசனம் மாத்திர மல்லாமல் ஸ்ரீ லக்ஷ்மீஸஹிதனான பகவந்தனின் பஞ்ச ரூபங்கள் (The five fold roopas of Sri Narayana) (அனிருத்த, ப்ரத்யும்ன, ஸங்கர்ஷண, வாஸுதேவ, நாராயண) ஸ்ரீ வாயு தேவரு, அவரது ஹனும-பீம-மத்வாவதார ரூபங்கள், ஸ்ரீ பத்மநாப தீர்த்தர் முதலாக ஸ்ரீ புரந்தர தாஸர் வரையிலும் எல்லா மஹா மகிமையுள்ளவர்கள், தமது முந்திய அவதாரங்களான ப்ரஹலாத-பாஹ்லீக-வ்யாஸராஜ ரூபங்களின் தரிசனத்தையும் விஜயதாஸருக்குச் செய்வித்ததல்லாமல், 700 வருஷங்கள் வரை ப்ருந்தாவன ஸந்நிதியில் நடக்கப் போகும் அற்புத நிகழ்ச்சிகளின் மகிமைகளைப் படம்பிடித்துக் காட்டியது போல் தெரிவித்த ஸ்ரீகுரு ஸார்வ பௌமரின் அகம்யமஹிமையே மகிமை! அதை அனுபவித்தினாலறிந்து மகிழ வேண்டுமே தவிர வர்ணிக்க யாராலும் முடியாது. ஸ்ரீகுருராஜர் சரீரத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்த முன்னூறு வருஷத்திய மஹிமையை அதி அற்புதமென்று சொல்லலாம்.

## 51. கன்னட ஹரிதாஸ பரம்பரையும் குருராஜரும் :

ஸ்ரீ மந்த்ராலய க்ஷேத்ரம் ஆன்மீக ஞானமய்யமாக இருந்தது போலவே பக்த பரம்பரையின் பிறப்பிடமாகவுமாய் கன்னட ஹரிதாஸரின் யாத்திரை ஸ்தலம் எனவும் பிரஸித்தமாய்ப் பதினெட்டாவது - பத்தொன்பதாவது நூற்றாண்டில் வளர்ந்து ப்ரபலமாயிற்று. அந்தக் காலத்திய எல்லா ஞானிகளும், யோகிகள், ஸாதகர்கள், பண்டித நிபுணர்கள் முதலியோர் மந்த்ராலயத்திற்கு வந்து க்ஞான ரூபமான ஆராதனையினால் குருராஜரை மகிழ்வித்து க்ஞான யக்ஞத்தின் பலனை பகவந்தனுக்கு ஸ்ரீகுருராஜர் மூலம் சமர்ப்பித்து குருவர்யரின் கருணையினால் க்ஞான-பக்தி-வைராக்ய சம்பத்தை விருத்தி செய்து கொண்டு தனது லக்ஷியத்தை எட்ட ஸ்ரீஆனந்த தீர்த்தர் காண்பித்த ஆநந்த மார்க்கத்தில் நடந்து க்ருதக்ருத்யராகிக் கொண்டிருந்தார்கள்.

அது போலவே ஒவ்வொரு வருஷந்தோறும் பாரத நாட்டின் பலவேறு பாகங்களிலிருந்து ஸாது-மஹாத்மாக்கள், ஹரிதாஸர், பரமபாவனமான மந்த்ரஸித்தி க்ஷேத்திரத்திற்கு ஓடிவந்து தாம் இயற்றிய க்ருதிகளை குரு ஸார்வபௌமருக்கு சமர்ப்பித்து, அவருடைய சேவை செய்து ஸ்ரீராயரின் ப்ரத்யக்ஷ அல்லது கனவில் வந்து தெரிவித்த ஆணைப்படி தேசத்தின் ஜனங்களினுடைய ஆன்மீக-தார்மீக-கலாச்சார-சமூக மற்றும் நீதிநெறிகளின் முன்னேற்றத்திற்காகத் தமது வாழ்க்கையை ஒதுக்கி உழைப்பதற்கு குரு ஸந்நிதியில் சபதம் எடுத்துக் கொண்டு செயல்பட்டுக் கொண்டிருந்தனர்.

## 52. ஞானிகளின் மஹா சம்மேளனம் (மஹாநாடு) :

மந்த்ராலயத்தில் வருஷந்தோறும் நடைபெறும் ஞானிகளின், ஹரிதாஸ பக்தர்களின், மஹாநாடுகளில் பண்டிதர்கள், கவிகள், ஸங்கீதக் கலைஞர்கள், ஹரிதாஸர்கள் பெரிய அளவில் பங்கேற்றுக் கொண்டிருந்தனர். ஸ்ரீ சுமதீந்திர தீர்த்தர், ஸ்ரீ வாதீந்த்ர-வஸுதேந்த்ர

வரதேந்த்ர-தீரேந்த்ர தீர்த்தர்-ஸத்யபோத தீர்த்தரைப் போன்ற ஞானி ச்ரேஷ்டர்கள் : ஸ்ரீ விஜயதாஸ-கோபால தாஸ - ஜகந்நாததாஸ - ஸ்ரீ ப்ராணேசதாஸரைப் போன்ற உத்தமமான கன்னட ஹரிதாஸர்களின் தலைமையில் அந்த மஹாஸம்மேளனம், க்ஞான ஸத்ரங்கள், கீர்த்தனை பஜனைகளின் மூலம் ஆயிரக்கணக்கான ஜனங்கள், ஆஸ்திகர்கள் தமது வாழ்க்கையைப் புனிதமாக்கிக் கொண்டிருந்தனர்.

ஸ்ரீ குருராஜர் வைதிகஸாஹித்ய ப்ரபஞ்சத்தில் (அதாவது வேத சாஸ்திர ஸம்பந்தமான க்ரந்தங்கள் இயற்றி ஸமஸ்கிருத இலக்கியத்திற்குச் செய்த சேவை) எப்பேர்ப்பட்ட மகத்துவம் பொருந்திய ஸ்தானத்தையும் கௌரவத்தையும் சம்பாதித்தளித்தாரோ, அப்படிப்பட்ட மகத்தான ஸ்தானமும் கௌரவமும் கன்னட ஹரிதாஸ ஸாஹித்யத் (இலக்கியம்)திற்கும் பெற்றுத் தந்தார்.

ஸ்ரீ நரஹரி தீர்த்தரால் ஆரம்பமான தாஸபரம்பரையை ஸ்ரீபாதராஜர் உயர்த்தி வளர்த்தார். ஸ்ரீவ்யாஸராஜர் அதற்கு உயிரூட்டினார். தாஸகுலமகுட மணிகளான ஸ்ரீ புரந்தரதாஸர், கனகதாஸர், ஸ்ரீ விஜயீந்திரர், ஸ்ரீவாதிராஜரைப் போன்ற ஹரிதாஸரத்னங்களை ஜகத்திற்கு அளித்த மஹானுபாவர் ஸ்ரீ வ்யாஸராஜர். அவருடைய காலத்தில் ஹரிதாஸபரம்பரை, வ்யாஸ பரம்பரையைப் போலவே அதிஉன்னத மட்டத்தை எட்டிற்று. ஆனால் போகப் போக அந்த பரம்பரை அவ்வாறே முன்னேற வில்லை. வரவர அது மிக கீழ்மட்ட நிலைக்கு இறங்கி பெயரளவில் மாத்திரம் இருந்து வந்தது. அப்பொழுது அதற்குச் சமய ஸஞ்ஜீவியாக அதை உஜ்ஜீவித்து, அடைக்கலம் தந்து தமது போஷணையில் ஹரிதாஸ பரம்பரை பல முனைகளில் வளர்ந்து முன்னேறி வரும்படி செய்த பெருமை ஸ்ரீ குருராஜரையே சார்ந்தது.

**53. தாஸ ஸாஹித்யத் (இலக்கியம்) திற்குக் காணிக்கை:**

தாஸபரம்பரையினருக்கு அடைக்கலம் தந்து வளர்த்தது மாத்திரமின்றி, ஸ்ரீ குருராஜர் ஸ்ரீ வ்யாஸராஜரே தாம்

என்று காண்பித்துக் கொடுப்பதற்குத்தான் என்பது போல தானே '' இந்து எனகே கோவிந்த '' என்னும் பரமமங்கள மான உத்தம பதத்தை இயற்றி தாஸஸாஹித்ய பொக்கிஷத் திற்குத் தனது கலசத்தை வைத்து அந்தப் பரம்பரையை ஊக்குவித்தார். ஸ்ரீ குருராஜரின் ஒரே தேவரநாமம் இன்று ப்ரஸித்தமாயிருந்தாலும் அவர் இன்னும் அநேக தேவர நாமங்கள் இயற்றியிருக்கலாமென்று ஊகிக்க இடமுள்ளது. இந்த விஷயத்தில் ஆராய்ச்சி அவசியமென்று தனியாகச் சொல்லவேண்டியதில்லை. இப்பொழுது கிடைத்துள்ள தேவர நாமமொன்றே குருராஜருக்குக் கன்னட மொழியின் மீதிருந்த அதிகாரம் (command) உணர்ச்சியின் விளம்பரம், பக்திரஸத்தைக் காண்பிப்பதற்குப் போதுமான சான்றாகும்.

ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் தமது முந்தைய ஸ்ரீவ்யாஸ ராஜரின் அவதாரத்தைப் போலவே இன்றும் கூட ஹரிதாஸ ஸாஹித்ய வ்ருக்ஷத்திற்கு குறையாத நீரூற்றுபோன்றிருக் கிறாரென்பதை ஒவ்வொரு ஹரிதாஸரும் ஒப்பும்படியுள்ளது. ஸ்ரீ குருராஜரின் வர்ச்சஸ்ஸினாலேயே (காந்தியினாலேயே) அனுக்ரஹத்தினாலேயே ஹரிதாஸ ஸாஹித்யம் ஸ்ரீ விஜய தாஸரினால் முன்னணிக்கு வந்து பல கிளைகளாகப் பரவியது. இதற்கு ஊக்கமளித்தவர் ஸ்ரீ குருராஜரே. ஸ்ரீ குருராஜரின் ஸந்நிதானத்திலிருந்து ராய்ச்சூர், ஆதோணி எல்லைகளில் ஒரு புதிய சூழ்நிலை உண்டாயிற்று. க்ஞானி களுக்கு, ஆலோசகர்களுக்கு (thinkers), பகவத் பக்தர்களுக்கு, அவரால் புத்துணர்ச்சி (நவசைதன்யம்) கிடைத்த தென்னலாம். அவ்வாறே மந்த்ராலயத்தருகில் சீகலபரி, உத்தனூர், மானவி, லிங்கஸுகூர், ஆதோனி, மொதலகல்லு, வேணிஸோம்பூர் முதலிய ஸ்தலங்களில் விஜயதாஸர், கோபாலதாஸர், ஜகந்நாததாஸர் முதலிய ஹரிதாஸ சிரோமணிகள் அவதரித்தனர். இவருக்கெல்லாம் ஸ்ரீ ராயர் மத்ய சக்தியாக இருந்தார்.

ஸ்ரீமந்த்ராலய ஸ்ரீபாதங்களவரின் பீட பரம்பரையில் வந்து ஸ்ரீ த்வைத ஸாம்ராஜ்ய பீடத்தை அலங்கரித்து மஹாக்ஞானிகளெனப் பெயர்பெற்ற ஸ்ரீ வாதீந்திர தீர்த்தர்,

ஸ்ரீ வஸுதேந்த்ர, - வரதேந்த்ர - தீரேந்த்ர தீர்த்தர் மற்றும் ஸ்ரீ வ்யாஸதத்வக்ஞ தீர்த்தர் முதலானோர் கன்னட ஹரிதாஸ ஸாஹித்யத்தின் வளர்ச்சிக்குக் காரணமாயிருந்தனர். இவ்வாறு குருராஜரின் செல்வாக்கினால் க்ஷீணமடையும் தறுவாயிலிருந்த தாஸஸாஹித்யம் தொடர்ந்து முன்னேற்றமடைந்து விஸ்தாரமாக எங்கு பார்த்தாலும் பரவ ஆரம்பித்தது.

## 54. வ்யாஸ கூடமும் தாஸ கூடமும் :—

ஸ்ரீ குருராஜர் ஸவ்யா பரம்பரை, தாஸ பரம்பரையினர்களுக்கு தாம் ஜனங்களுடைய பார்வையிலிருந்த பொழுது அவர்களுக்கு உயிருட்டிப் போஷித்து அடைக்கலமளித்திருந்தார், காப்பாற்றினார். பிறகு சரீரத்துடன் ப்ருந்தாவனப்ரவேசம் செய்த பிறகு முதலாவது இரண்டாவது நூறு வருஷங்களின் கடைசி பாகம் வரை க்ஞானிகளுக்கு ப்ரத்யக்ஷ-அப்ரத்யக்ஷ இரண்டுவகையிலும் தரிசனமளித்து அவர்களிடம் புதிய உற்சாகத்தை நிறப்பித் தமது கிருபை ரூபமான அமிர்தத்தை வர்ஷித்துத் தூக்கத்திலிருந்த ஞான அலைகளை மேலெழுந்து பூர்ணமாக பாயும்படி செய்து ஸம்ஸ்கிருத-கன்னட சாஹித்யங்கள் சிகரத்தின் உச்சியை எட்டும்படி செய்து பேருபகாரம் செய்தார். இந்த காலத்தில் த்வைத சித்தாந்த இலக்கியமும் ஹரிதாஸ ஸாஹித்யமும் பெருமளவில் வளர்ச்சியடைந்தன. மாத்வ க்ரந்தகாரர்களின் மற்றும் அபரோக்ஷக் க்ஞானிகளான ஹரிதாஸர்களின் ஏராளமான க்ருதிகளினால் ஸவதிக-தாஸ ஸாஹித்ய பொக்கிஷம் நிரம்பிவழிந்தது. ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன ப்ரவேசத்திற்குப் பிந்தின காலத்தை த்வைத ஸித்தாந்த ஹரிதாஸ பரம்பரையினரின் "பொற்காலம்" என்று தாராளமாகச் சொல்லலாம். இந்தப் பொற்காலத்திலேயே (Golden age) "ஹரிகதாம்ருதஸாரம்" போன்ற அபூர்வமான அமூல்யமான (invaluable) விலைமதிக்கவொண்ணாத மகத்தான க்ருதியை இயற்றி கன்னட ஸாரஸ்வத ப்ரபஞ்சத்திற்கு அருளிய ஸ்ரீ ஜகந்நாத தாஸர் வாழ்ந்திருந்தார்.

## 55. ஜகந்நாத தாஸர்

தாஸதீக்ஷை பெறுவதற்கு முன்பு ஸ்ரீ ஜகந்நாததாஸர் ஸ்ரீநிவாஸாசார்யரென்னும் பெயரால் பெயர் பெற்றிருந்தார். இவர் ப்யாகவாட (ब्यागवाट) ந்ருஸிம்ஹ பாகவதரின் புத்திரர். இவரது காலம் கி. பி. 1727லிருந்து 1809 வரை.

ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் மஹாபீடத்தில் வீற்றிருந்த ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் சிஷ்யர். சிறுவயதிலிருந்தே பெரிய மேதாவிகளாயிருந்த ஆசார்யரின் மீது ஸ்ரீகளவர்களின் அனுக்ரஹம் நிறைந்த கடாக்ஷம் விழுந்தது. ஒரு சமயம் தகப்பனார் நரஸப்ப, தாயார் லக்ஷ்மீக்கர்களுடன் மந்த்ராலயத்திற்கு வந்த பொழுது ஸ்ரீவரதேந்த்ர தீர்த்தரின் தரிசனமானபொழுது பாலகன் ஸ்ரீநிவாஸன் ஸ்ரீகளவரின் மீது ஸமஸ்கிருதத்தில் "ஸ்ரீவரதேந்த்ர பஞ்சரத்னம்" என்னும் உத்தம கவிதைகளை யியற்றி ஸ்ரீபாதங்களவருக்குச் சமர்ப்பணம் செய்தான். ஸ்ரீநிவாஸனின் கவிதா ஸாமர்த்தியம், சமஸ்கிருத மொழியிலுள்ள க்ஞானம் முதலியவைகளைக்கண்டு மகிழ்ச்சியடைந்து ஸ்ரீகளவர் ஸ்ரீநிவாஸாசார்யரைத் தமது வித்யா சிஷ்யனாக ஏற்றுக்கொண்டார். தாய் தந்தையர்கள் குருகளின் அனுக்ரஹத்தினால் ஆனந்த மடைந்து மகனின் வித்யாப்யாஸத்தின் பொறுப்பை குருகளுக்கு ஒப்புவித்து க்ருதார்த்தராயினர். ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்ரீவரதேந்திரரிடம்ந்யாய - வேதாந்த - மீமாம்ஸா - வ்யாகரணம் முதலிய சாஸ்திரங்களைப் பயின்று சதுஸ் சாஸ்திரங்களில் ப்ரகாண்ட பாண்டித்யம் பெற்று குருவர்யரின் ஆசீர்வாதம் பெற்று 'ப்யாகவாட'த்திற்கு வந்து பாடப்ரவசனம் செய்து கொண்டு வந்தார். ஏராளமான சிஷ்யர்கள் ஸ்ரீநிவாஸாசார்யரிடம் வித்தை பயின்று வந்தனர். இவர் ஸதாசார ஸம்பன்னர். மேலும் பண்டிதோத்தமர். இவரை எல்லோரும் வெகுவாகக் கௌரவித்தனர்.

வ்யாதி-பரீக்ஷை : என்ன காரணமோ ! அவருக்கு ஹரிதாஸர்கள் பரம்பரையைக் கண்டாலே ஒரு வெறுப்பு.

அவர்களிடம் இவருக்கு ஒரு அசட்டை; மரியாதை கிடையாது. இந்த துர்க்குணம் அவர் மனதில் குடிகொண்டிருந்தது. இவர் தந்தையார் நரஸப்பனவர்கள் ஸ்வயம், "நரஸிம்மவிட்டல" னென்ற நாமாங்கிதத்துடன் ஹரி தாஸராயிருந்தும் ஸ்ரீநிவாஸாசார்யர் தாஸர்களுக்கு அவ்வளவு கௌரவம் கொடுக்கவில்லை. ஒரு சமயம் ஊழ்வினையின் பலனாக ஸ்ரீநிவாஸாசார்யர் மானவி க்ஷேத்திரத்திற்கு வந்திருந்த ஸ்ரீ விஜயதாஸருக்கு அபசாரம் செய்து உதரவ்யாதிக்கு இலக்கானார். அப்ரோக்ஷ க்ஞானி களுக்குச் செய்த துரோகத்தின் பலனாக இவருக்கு "பரிணாமசூலி" மஹோதரவ்யாதி வந்தது. ஸ்வோத்தம த்ரோஹத்திற்கு பாத்திரரான ஸ்ரீநிவாஸாசார்யர் வ்யாதியினால் வெகுவாக அவஸ்தைப்பட்டு மெலிந்து போனார். வாழ்க்கையே வெறுத்து விட்டது. வியாதி பரிகாரத்திற்கு வழி தெரியாமல் ஆசார்யர் முதலில் கடிகாசலம், பிறகு மந்த்ராலயத்தில் சேவை செய்தார். ஸ்ரீ குரு ராஜரிடம் சரணடைந்தார். அதனால் எந்தப் பலனும் கிடைக்காததால் மறுநாள் துங்கபத்திரையில் சரீரத்யாகம் செய்யத் தீர்மானித்து ஸ்ரீராயரிடம் காப்பாற்றும்படி முறையிட்டார்.

## 56. ஸ்ரீ ஜகந்நாததாஸர் கண்ணுற்ற ஒளி:

கருணைக்கடலான ஸ்ரீராயர் இரவில் தோன்றி "ஸ்ரீநிவாஸ! இது தானே தேடிக்கொண்ட விபத்து. நீ க்ஞானிகளான ஸ்ரீ விஜயதாஸரை அசட்டை செய்து அவருடைய துரோகத்தைச் சம்பாதித்துக் கொண்டாயப்பா. அவருடைய அனுக்ரஹத்தை சம்பாதித்துக்கொள். அதனால் தான் வியாதிக்கு நிவாரணம் கிடைக்கும் என்று ஆணையிட்டார்.

## 57. பரிதாபம். (பொறுக்க முடியாத துக்கம்)

ஸ்ரீநிவாஸாசார்யர் வெகு துக்கத்தோடு அவஸ்தைப் பட்டுக்கொண்டு தான் செய்த செயலுக்காக பச்சாத்தாப மடைந்து "சிகலபரி"க்கு வந்து ஸ்ரீ விஜயதாஸரைச்

சரணடைந்தார். மன்னிப்புக் கோரினார். கருணையுடன் ஸ்ரீ விஜயதாஸர் அவரை மன்னித்து ஆசார்யரை ஸ்ரீ கோபாலதாஸரிடம் அனுப்பினார். குருகளான விஜய தாஸருக்கு அபசாரம் ஏற்பட்டதினால் துக்கமடைந்த கோபாலதாஸர் உபவாஸ விரதத்தை மேற்கொண்டார். ஆசார்யர் தாஸரிடம் சென்று மன்னிப்பு கோரினார். தாஸர் ஆசார்யரை மன்னித்து அவருக்கு ரொட்டி ஒன்றை மந்திரித்து கொடுத்தார். அந்த வர அனுக்ரஹத்தினால் ஸ்ரீநிவாஸாசார்யரின் உதர வ்யாதி நீங்கிற்று. பிறகு கோபாலதாஸருடன் திருப்பதிக்கு வந்தார். வியாதியால் மெலிந்த துர்பலமாக இருந்த ஸ்ரீநிவாஸாசார்யர் திருப்பதியில் மரணமடைய ஸ்ரீ விஜயதாஸர் கண்ணுக்குத் தெரியாத உருவத்தில் அங்கு வந்து ஸ்ரீநிவாஸாசார்யருக்கு நாற்பது வருட ஆயுளைத் தானம் செய்யும்படி கோபால தாஸருக்கு ஆக்ஞாபித்தார். தாஸர் தமது ஆயுளில் 40 வருடங்களை ஸ்ரீநிவாஸசார்யருக்குத் தானமளித்து ஆசார்யரைப் பிழைக்கச் செய்தார்.

ஸ்ரீநிவாஸாசார்யருக்கு ஹரிதாஸரின் மகிமை தெரிய வந்தது. தாமும் தாஸராக விரும்பி ஆசார்யரைத் தனக்குத் தாஸதீக்ஷையளிக்க ப்ரார்த்தித்தார். கோபாலதாஸர் உமக்கு ஸ்ரீ ஹரியே தாஸதீக்ஷை அளிப்பானென்று அவரைப் பண்டரீ புரத்திற்கு அனுப்பினார். பீமரதி நதியில் ஸ்நானம் செய்யும் பொழுது ஆசார்யருக்கு, "ஸ்ரீ ஜகந்நாதவிட்டல" என்னும் நாமாங்கிதம் எழுதப்பட்ட சிலை ஒன்று கிடைத்தது. ஸ்ரீநிவாஸாசார்யர் அன்றிலிருந்து ஜகந்நாததாஸரானார். தாஸரான உடனே பகவந்தன் அவருக்கு விசேஷ அனுக்ரஹம் செய்தான். பண்டரீநாதன் தாஸருக்குத் தானே நேரில் விருந்து ஏற்பாடு செய்து காப்பாற்றினான். மற்றும் திருப்பதியில் ஸ்ரீநிவாஸப் பெருமாள் கோபாலதாஸரின் வேஷத்தில் ஜகந்நாததாஸருக்கு விருந்திற்கேற்பாடு செய்து அனுக்ரஹம் செய்தார். ஸ்ரீபாண்டுரங்க, ஸ்ரீநிவாஸப் பெருமாளின் கருணைக்கு, வாத்ஸல்யத்திற்குப் பாத்திரரான ஜகந்நாததாஸர் "ரங்க ஒலித தாஸ"ரென்று ப்ரசித்தி

பெற்றார். அன்றிலிருந்தே தாஸர் அநேக பதங்களை "ஜகந்நாத விட்டல"வெனும் நாமாங்கிதத்துடன் இயற்ற வாரம்பித்தார். சது:சாஸ்திரத்தில் மேதையாக விருந்த தாஸர் ஹரிதாஸ ஸாஹித்யத்திலும் இணையற்ற பண்டித ராகக் கீர்த்தி பெற்றார்.

### 58. தனிச்சிறப்பான கௌரவமும் இடமும் :

த்வைதஸித்தாந்தத்தில் ஸ்ரீராகவேந்தர ஸ்வாமிகளுக்கு எந்த ஒரு மகத்தான இடம் உள்ளதோ ஹரிதாஸ பரம்பரையில் ஸ்ரீஜகந்நாத தாஸருக்கு அதே சிறப்பான இடமும் கௌரவமும் உள்ளன. கன்னட ஹரிதாஸ பரம்பரையின் உன்னத காலத்திலிருந்து ஹரிதாஸ ஸாஹித்யத்தின் பொற்காலத்தை நிர்மாணம் செய்த மஹான்களில் ஸ்ரீஜகந்நாத தாஸரின் தனிச்சிறப்பு மிகப்பெரியது. ஜகந்நாத தாஸர் ஏராளமான பதங்கள்—பத்யங்கள்-ஸுளாதிகளை "ஹரிகதாம்ருதஸார", "தத்வஸுவாலி" முதலிய உத்தமமான தத்வ கிரந்தங்களை இயற்றி பேருபகாரம் செய்தார். இவருடைய க்ருதிகளிலெல்லாம் "ஸ்ரீஹரி கதாம்ருதஸாரம்" அதி உத்தமமான க்ரந்தம். தாஸரின் இந்த க்ரந்தத்தில் உபநிஷத்துகள், புராணம், பாஞ்சராத்ராகம, ப்ரகாசஸம்ஹிதா முதலிய அநேக ஸமஸ்க்ருத ஸாஹித்யத்தில் அடங்கி உள்ள சாஸ்த்ரார்த்த ஸாரமெல்லாம் ஸங்க்ரஹிக்கப்பட்டுள்ளன. இப்பேர்பட்ட அதி உத்தமமான க்ருதி ஹரிதாஸ ஸாஹித்யத்தில் முன்பு இயற்றப்படவில்லை. பிறகும் இயற்றப்படவில்லை. மத்வமதத்தின் மிக சிக்கலான (Complicated) தத்வங்களெல்லாவற்றையும் இந்த க்ரந்தத்தில் எளியநடையில் விஸ்தாரமாக விவரித்திருக்கிறார். இந்த க்ரந்தத்தின் மீது நான்கு கன்னட வ்யாக்யானங்களும் ஒரு ஸம்ஸ்கிருத வ்யாக்யானமும் ஆக ஐந்து வ்யாக்யானங்கள் எழுதப்பட்டுள்ளன என்றால் இதனுடைய மகத்துவம் எவ்வளவு என்பது புலனாகிறது.

### 59. அபார பக்தி :

ஸ்ரீஜகந்நாத தாஸருக்கு ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளிடம் அபார பக்தி, சது:சாஸ்திர பண்டிதரான தாஸர் த்வைத

சாஸ்திரத்தின் மீது ஸ்ரீ குருராஜர் இயற்றிய 'டிப்பணி' களின் பாட ப்ரவசனத்தினால் வைதீக த்வைத ஸித்தாந்தத்திற்கு ஸ்ரீராயரின் க்ரந்தங்களினாலான உபகாரத்தை நன்றாகப் புரிந்து கொண்டிருந்ததினால் அவரிடம் முதலிலிருந்ததை விட அதிக பக்தி சிரத்தைகளை வைத்திருந்தார். தாஸதீக்ஷை ஏற்றுக்கொண்டு பகவதனுக்ரஹத்திற்குப் பாத்திரராய் அபரோக்ஷ க்ஞானிகளான பிறகு ஜகந்நாத தாஸருக்கு ஸ்ரீ குருராஜரின் மகத்துவம் அவரது அவதார, லோகக்ஷேமம் முதலான அற்புத விஷயங்கள் உள்ளங்கை நெல்லிக் கனியான தால் ஸ்ரீராயரிடம் அவருடைய பக்தி அஸாதாரணமான தாய் அபிவிருத்தியாயிற்று. ஸ்ரீ குருராஜரின் சரித்திர மகிமையின் சிறப்பை தாஸர் தமது அநேக பத·ஸுளாதி களில் மனதில் பதியும்படி ஆலோசனையுள்ள ஜனங்களுக்கு பக்தி தூண்டப்படும் முறையில் வர்ணித்துப் பாராட்டி யுள்ளார்.

### 60. ஜகந்நாத தாஸருக்கு க்ருபை, ஆசீர்வாதம்:

ஸ்ரீஜகந்நாததாஸர் ஸாமானியரல்ல, அவரை ப்ரஹலாத ராஜரின் சகோதரரான "ஸஹ்லாத ராஜ"ரின் அவதார மென்று அநேக ஞானிகள் பாராட்டியுள்ளனர். ஞானி களான ஸ்ரீ ஜகந்நாத தாஸர் முன்பு க்ருதயுகத்தில் தமக்கு அண்ணனாயிருந்த ஸ்ரீப்ரஹலாதராஜரே இப் பொழுது ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் ரூபத்தில் அவதரித்துள்ளாரென்பதை அறிந்திருந்தார். ஜகத்திற்கு ஸ்ரீ நரஹரியின் அற்புத உருவத்தைத் தூணில் காண்பித்துக் கொடுத்த பாகவதோத்தமரான ஸ்ரீ ப்ரஹலாத ராஜருடன் கூட விளையாடினவர் (play-mate) அன்புக்குப் பாத்திரரும் ஆய் அவரது மகிமைகளை நன்றாக அறிந்தவராக இருந்ததினாலேயே ஸ்ரீ ஜகந்நாத தாஸவர்யர் ஸ்ரீ குரு ராஜரின் அகம்ய மகிமைகளைத் தமது ஒவ்வொரு க்ருதி யிலும் ஸஜ்ஜனரிடம் கருணை கூர்ந்து மனமார வர்ணித்து ஆடிப்பாடி நர்த்தனம் செய்துள்ளார்.

முன்பு நரஸிம்மஸ்வாமி ப்ரத்யக்ஷமாய் 'वरं वरय भद्रंते' "वत्स ! प्रहलादा ! உனக்கு மங்களமுண்டாகட்டும். உனக்கு

வேண்டிய வரங்களை கேளப்பா! அனுக்ரஹிப்போம். சாச்வதமான சுகத்தைத் தரும் மோக்ஷத்தையளிக்கட்டுமா! மகனே!'' என்ற பொழுது ப்ரஹலாதன் 'नैतान विहाय कृपणान् न विमोक्ष एक:' ஸ்வாமி, '' என்னொருவனின் உயர்வே எனது லக்ஷியமல்ல! உன்னை சாக்ஷாத்காரம் செய்து கொண்டு உயரும் வழிகாணாமல் ஸம்ஸாரச். சுழியில் சிக்கித் தத்தளித்துக்கொண்டிருக்கின்ற; என்னையே நம்பிக் கொண்டிருக்கும், இதோ, என் கூடப்பிறந்த ஸஹ்லாதன் முதலான என் அன்பிற்குரிய பந்துக்களை விட்டு நான் ஒருவனே எவ்வாறு மோக்ஷ பதவியை இச்சிக்க முடியும்? இவரெல்லோரும் உய்யவேண்டாமா? தேவா'' என்று சொன்னாரே ப்ரஹலாதர்! ஆஹா, எப்பேர்ப்பட்ட அண்ணன் ப்ரஹலாதன்! தம்மை சரணடைந்தவர்பால் அவருக்கு எவ்வளவு அன்பு, கருணை! சகோதரனாயிருந்த ப்ரஹலாதரிடம், இன்னும் மற்ற பந்துக்களின் க்ஷேமத்திற்காகவல்லவா மோக்ஷம் வேண்டாம் என்றார். ஸ்ரீ நரஹரி இவரது லோக க்ஷேம தீக்ஷையைக் கண்டு பக்த ராஜனான அவருக்கு 'मद्भक्ताः त्वामनुव्रताः' என்று இன்னெவருக்கும் கொடுக்காத அஸாதாரணவரத்தைக் கொடுத்தருளினார்.

**61. மலரும் நினைவுகள்:**

அதே ஸஹ்லாதரே ஜகந்நாத தாஸராக அவதரித்து ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவனத்தினெதிரில் நின்ற பொழுது அவருக்கு அந்த முந்தின விஷயங்களெல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்திருக்க வேண்டும். அவ்வாறே பாகவதோத்தமரும், கருணாநிதிகளும், விச்வமானவருமான ஸ்ரீ ப்ரஹலாவதாரரான ஸ்ரீ குருராஜரின் அஸாதாரண நற்குணங்களை நினைத்து நினைத்து பக்தி சிரத்தைகளினால் மனமார குருராஜரை வர்ணித்திருப்பது ஆச்சரியமானதல்ல.

ஸ்ரீ குருராஜரின் அந்தரங்க பக்தரான ஜகந்நாத தாஸர் தனிமையில் ஒவ்வொரு நாளும் ப்ருந்தாவனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ குருராஜருடன் சம்பாஷித்துக் கொண்

டிருந்தார். ஸ்ரீ ராயர் அவருக்கு ப்ரத்யக்ஷ தரிசனமளித்துப் பேசுவது வழக்கம். தாஸருக்கு வெறும் ப்ருந்தாவனம் மாத்திரம் கண்ணிற்குத் தென்படவில்லை. காஷாய வஸ்திரம், தண்டகமண்டலுதாரியாக, ஊர்த்வபுண்ர கந்தாக்ஷதைகளினால் ஒளிவீசுகிற ஸ்ரீ குருராயரின் அழகான உருவத்தின் தரிசனமே ஆகிக்கொண்டிருந்தது.

இந்த அபூர்வ ஸகோதரரிடம் அடிக்கடி பகவத் தத்வ விஷயத்தைப் பற்றி, ஸ்ரீ ஹரிவாயுகளின் மகிமை, பகவத் பக்தர்களின் சிறப்பு, ஸ்ரீ ஹரியின் லீலாவிநோதங்களைப் பற்றி ரஸமான சம்பாஷணைகள் நடந்துகொண்டிருந்தன. இந்த விஷயங்கள் வெகுகாலம் ரகஸியமாக இருக்கவில்லை. இதர ஜனங்களுக்கும் இது தெரிந்து விட்டது. பக்த ஜனங்கள் தங்களது இஷ்டபூர்த்தி, வியாதி நிவாரண விஷயங்களை ஸ்ரீ ராயரிடம் ப்ரார்த்தனை செய்து தமது விருப்பங்களை நிறைவேற்றித் தரும்படி தாஸரை மண்டி யிட்டு ப்ரார்த்தித்தனர். இதன் பலனாக அன்றிலிருந்து தாஸருக்கும் ஸ்ரீ குருராஜரின் தரிசனம் கிடைக்காமல் போயிற்று. பிறகு சம்பாஷணை ஏது ?

இதனால் ஜகந்நாத தாஸருக்கு அபார துக்கம் உண்டா யிற்று. ஸ்ரீ ராயரின் தரிசன பாக்யமில்லாமல் போயிற்றே என்று அதிக வருத்தத்தினால் தாஸர் இளைத்துக் கண்ணீர் விட்டு ஸ்ரீ ராயரின் ப்ருந்தாவனத்தின் முன் நின்றுகொண்டு, "ப்ரபு ! குருஸார்வபௌம ! ஏன் இவ்வாறு பாராமுகமா யிருக்கிறீர் ? உமது தாஸனான என்னிடம் இவ்வாறு இரக்கமற்றிருக்கலாமா ? இது உமக்கு அடுக்குமா ? பக்தா தீனரென்னும் விருதிற்கு இதனால் குறைவு வராதா ? தயை செய்யுங்கள் குருதேவா ! என்றெல்லாம் விண்ணப்பித்து வேண்டினார். ஆயினும் ஸ்ரீ ராயர் தரிசனமளிக்கவில்லை.

### 62. அனுதினமும் ப்ரார்த்தனை :

தாஸராயர் துக்கம்மேலிட்டு அன்னாகாராதிகளைப் புறக்கணித்து தினசரி பிரார்த்தனை செய்துகொண்டே இருந்தார். சகோதரனின் மீதுள்ள அன்பு மிகுதியால்

மனமிளகி குருராஜர் ஒரு நாள் முன்போலவே தாஸருக்கு தரிசனம் கொடுத்தார். ஸ்ரீராயரின் தரிசனத்தினால் புளகாங்கிதரான தாஸர் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ப்ரார்த்தனை செய்யத் தொடங்கினார்.

"ஸ்ரீ குரு ஸார்வபௌம! வாதி கஜஸிம்ம! தங்களை நினைத்து வேண்டுகிறேன். என்றும்போல எப்பொழுதும் என்னைக் காப்பாற்ற வேண்டும். தைத்யராஜனான ஹிரண்யகச்யபனின் மகனாய் தேவரிஷிநாதரரிடம் உபதேசம் பெற்று ஹரியின் மகிமையைத் தந்தைக்குத் தெரிவித்தபொழுது 'உனது கடவுளைக் காண்பி' என்று தைத்யராஜன் கர்ஜனை செய்தபொழுது தூணில் ஸ்ரீ நரஹரியை வரவழைத்து காண்பித்த ப்ரஹ்லாதராஜர் தாங்களல்லவா? ஏழாவது வயதில் யதி ஆச்ரமத்தை ஏற்று விஜய நகரத்தின் கிருஷ்ணதேவராயருக்கு வந்திருந்த குஹ யோகத்தை பரிகாரம் செய்து, மாயாவாதிகளை ஜயித்து, சந்த்ரிகா க்ரந்தத்தை இயற்றி ஸிம்மாஸனம் ஏறி சோபித்த ஸ்ரீ வ்யாஸராயர் தாங்களல்லவா ஸ்வாமி? தாங்கள் காமாரி பிதாவான ஸ்ரீ மூலராமனின் (சரணகுமுதசந்திரன்) பாதாரவிந்த சேவை செய்பவர். ஸ்வர்ணமயமான காந்தியினால் சோபிக்கும் திவ்யதேகமுள்ள புனித சரித்திரர்தாம். ஊமையாகிக் குருடராய், செவிடரா ய்துக்கப்படுபவர்களைக் காப்பாற்றவல்ல மகா மகிமையுள்ளவர் தாங்கள் ஒருவரே! ஸ்ரீ ஜகந்நாத விட்டலனின் சரணார விந்தத்தின் வண்டான தாங்கள் என் விருப்பத்தை நிறைவேற்றுங்கள்."

"ஸ்ரீ ராகவேந்திரா, தங்களது அழகிய திருவடிகளுக்கு வந்து சேர்ந்துள்ளேன். சரணாகதவத்ஸலனான தாங்கள் கருணை காட்டவேண்டும் ....... எனது ஸர்வஸ்வமும் தங்கள் ஆதினமாயுள்ளன ஸ்வாமி, மனுஷ்யனான என்னை அனுதினமும் திருப்திப்படுத்துவது கடினமா? மூலராமரின் பாதத் தாமரையின் ப்ருங்கராஜர் தாம்! இந்தப் பாலகனின் விண்ணப்பத்தை கேளுங்கள், ஹே முனிபுங்கவரே! தங்களையே நம்பியுள்ளேன். ஸ்ரீ ராகவேந்திரா! என்னைக் காப்பாற்றுங்கள் கயமீந்திரா!"

## 63. குருகளிடம் முறையிடுதல் :

ஸ்ரீ ராகவேந்த்ர குருராய! எனது கோர பாபங்களைப் புறக்கணித்து விடாமல் என்னை ரக்ஷிக்க வேண்டும். ஸ்வாமி, தாங்கள் கருணைக் கடல் பக்தர்களிடம் தங்களுக்கு அபார கருணை. இதைத் தங்களுடைய திவ்ய வரலாறே சொல்லுகின்றது — முக்தியை வேண்டிய வெங்கண்ணனுக்கு மோக்ஷம் பெறச் செய்தீர். எந்த அரசன் தம்மை பரீக்ஷை செய்ததற்காக வருந்தி பச்சாதாபப்பட்டானோ, அவனிடமிருந்து மந்த்ராலயத்தைப் பெற்று அவனைத் தமது சிஷ்யனாக்கி கொண்டீர்கள். பதிதனை காப்பாற்றினீர்கள். பன்னிரண்டு வருஷங்கள் தஞ்சாவூர் ப்ராந்தியத்தில் ஏற்பட்ட பஞ்சகாலத்தில் மடத்தின் ஐச்வர்யத்தைச் செலவு செய்து ப்ரஜைகளுக்கு அன்னதானம் செய்து காப்பாற்றினீர்கள். ப்ராம்மணரின் மந்த்ரமகிமையை உலக்கையைக் கொழுந்து விடும்படி செய்து, அதன்மூலம் ' சிரசங்கி'' யின் தேசாயிகுக் காண்பித்துக் கொடுத்தீர்கள். காட்டின் வழியில் சூர்யனின் கடுவெய்யிலினால் தளர்ந்துபோன தங்கள் சேவகனின் பத்னி ப்ரஸவிக்கவும் தண்டத்தினின்று தண்ணீர் பெருகச்செய்து, கைவஸ்திரத்தினால் நிழல் உண்டாக்கி சிசுவையும், தாயையும் காப்பாற்றினீர். தண்ணீரில்லாத காட்டில் குற்றுயிராய்க் கிடந்த ப்ராம்மணனை, தண்ணீர் வரச் செய்து, உயிர்ப்பித்தீர்கள். விஜயராகவநாயகன் சமர்ப்பித்திருந்த ரத்னமாலையை அக்னிக்கு அர்ப்பித்து மறுதினம் அக்நியந்தர்கத பரசுராம தேவனிடமிருந்து அதைப்பெற்று ராஜனுக்குக் காண்பித்து மஹிமையை வெளிப்படுத்தினீர்கள். தங்கள் சேவகனின் துர்மரணத்தைப் பரிகாரம் செய்தீர்கள். மாம்பழக் குழம்பில் விழுந்து இறந்துபோன வெங்கடதேசாயின் மகனைப் பிழைக்கவைத்து புத்ரதானம் வழங்கினீர்கள். ஹஸ்தோதகம் பாதோதகம் மஹிமைகளை ஒவ்வொரு நாளும் காண்பித்து வருகிறீர். தங்களது இந்த மஹிமைக்குச் சமமானது மெதுவுமில்லை. அனுக்கிரஹத்திற்கு எந்த இடையூறுமில்லை. தங்கள் மூலம் ஜகந்நாத விட்டலன் ஜகத்தின் ஜனங்களைக் காப்பாற்றித் தமது கீர்த்தியை ஜகத்தில் வளர்த்துக் கொண்டிருக்கிறான். ஸ்வாமி

லோக குருகளே! தங்களுக்கு அளந்த நமஸ்காரங்கள் ...... தாஸருடைய வாயினின்றும் அநேக பதங்கள் ரூபமாக ஸ்ரீ குருமஹிமை அலையலையாக வெளிப்பட்டு கேட்டவர்களுடைய மெய் மற்றும் மனம் புனிதமாயின.

**64. அனுக்ரஹம் :**

ஜகந்நாத தாஸரின் பக்தியின் ஸ்துதியால் மகிழ்ச்சி யடைந்து மந்த்ராலயத்தின் முனீந்திரர் 'புத்ரா, உனது பக்திக்கு மெச்சினோம். இனிமேல் ஹரிதாஸ பரம்பரை உன்னால் எல்லா வகையிலும் அபிவிருத்தியடையும். உனது க்ருதிகள் ஸ்ரீ ஹரியைத் தரிசிப்பதற்குச் சாதனமாக ஸஜ்ஜனர்களுக்கு வழிகாட்டியாக விளங்கும். உனது சாஹித்யம் சூரிய சந்திரருள்ளவரைப் பிரகாசிக்கும். உனது கீர்த்தி என்றென்றும் அழியாது நிலை நிற்கும். பாகவத தர்ம ப்ரசாரகனாக சிரஞ்சீவியாகி வாழ்வாய் சகோதரா! இனிமேல் உனது சந்தேகங்களுக்கெல்லாம் கனவில் தரிசன மளித்துச் சமாதானப்படுத்துவோம். உனக்கு மங்கள முண்டாகட்டும்'' என்று அபயமளித்து ஆசீர்வாதம் செய்து மறைந்தார். தாஸரின் பார்வையில் இப்பொழுது ப்ருந்தா வனம் மாத்திரம் தெரிந்தது. அன்றிலிருந்து ஸ்ரீ குருராஜர் கனவில் தாஸருக்குத் தரிசனம் கொடுத்து அனுக்ரஹிக்க வாரம்பித்தார்.

**65. யோகசக்திக்கு ப்ரிடிஷ் அதிகாரி சரணடைந்தான் :**

ஸச்சரீராக (சரீரத்துடன்) ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து 150 வருஷங்கள் கழிந்த பிறகு ஸ்ரீ குருராஜர் ப்ரிடிஷ் அதிகாரி ஒருவனுக்குக் காண்பித்த அற்புத மஹிமை பாரத நாட்டின் ஸாது மஹாத்மாக்களின், பகவத் பக்தர்களின், யோகிகள் சித்தர்களின் வரலாற்றில் பொன்னெழுத்துக் களால் பொறிக்கத் தகுந்த சிறந்த நிகழ்ச்சியாக மாத்திர மில்லாமல், மயிர்க் கூச்சலுண்டாக்கும் ஸ்ரீ ராயரின் அந்த மகிமை இன்றும் தேசத்தில் ஒவ்வொரு வீட்டிலும் பேசப் படுகிறது.

கி. பி. 1820-ல் ஸ்ரீமத்வாசாரியரின் முக்ய ஸமஸ் தானாதிபதிகளான ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளவரின்

பீடத்தில் ஸ்ரீ ஸுபோதேந்த்ர தீர்த்தர் வீற்றிருந்தார். சிறியபட்டத்தில் ஸ்ரீ ஸுஜனேந்திர தீர்த்தர் இருந்தார். ஸ்ரீபாதங்களவர்கள் ஸ்ரீ மடத்தின் மூலஸ்தானமான மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்தக்யாதி வாய்ந்த க்ஷேத்திரமான நஞ்ஜன்கூடிலிருந்தார். அநேகமாக அந்தச் சமயத்தில் தான் பாரததேசம் ப்ரிடிஷ் ஆட்சியின் கைக்குள்ளாயிற்று.

66. ஸர்வே அதிகாரியின் மீது அற்புதம் :

ஈஸ்ட் இந்தியா கம்பனியார் நாட்டை தம் வசப்படுத்திக் கொண்டு பாரத நாட்டின் முந்தைய ஆட்சியினர் கோவில், மடங்களுக்கு எழுதிக் கொடுக்கப்பட்டிருந்த தானமாக அளிக்கப்பட்டிருந்த ஜமீன்கள், இனாம் கிராமங்கள் ஜாகீர்கள் இவைகள் எந்த உத்தேசத்துடன் கொடுக்கப் பட்டுள்ளனவோ அதைச் சரியான முறையில் நிறைவேற்று கின்றார்களோ இல்லையோ? கிராமம், பூமி, இனாம் களையெல்லாம் முன்பு தானம் செய்தது சரியோ அல்லவோ? உரிமையில்லாமலேயே அவைகளை அனுபவிக்கின்றனரோ அல்லவோ? அந்த க்ராமம் பூமிகளின் தானத்தை தாங்களும் மதித்து நடக்க வேண்டுமா கூடாதா? என்பதை ஆலோசித்து அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்க முடிவு செய்வதற்காக சர்வே செட்டில்மெண்டு (Survey Settlement) இனாம் கமிஷன் (Inam Commission) களை ஏற்படுத்தி யிருந்தனர். பாரத நாட்டின் எல்லா பாகங்களிலும் கம்பெனி அதிகாரிகள் இந்தக் காரியத்தை ஆரம்பித்திருந்தனர். (Thomas Munro) ஈஸ்ட் இந்தியா கம்பனியின் சென்னை ஆதிபத்தியத்தின் சர்வே செட்டில்மெண்டு அதிகாரியாக இருந்தார்.

பல்லாரியில் முகாம் போட்டிருந்த தாமஸ் மன்றோ பல்லாரி ஜில்லாவின் மந்த்ராலய கிராமத்தின் விசாரணைக் காக தனது ப்ரைவேட் செக்ரடெரி (Private Secretary) சிரஸ்ததார் முதலான அதிகாரிகளுடன் மந்த்ராலயத்திற்கு வந்து முகாம் செய்தார். ஆங்கிலேய அதிகாரி மந்த்ராலய க்ராமத்தை ஜப்தி செய்ய வந்திருக்கிறார் என்றறிந்து ஊர் ஜனங்கள் திடுக்கிட்டனர். மடாதிபதி நஞ்ஜன்கூடிலிருந் தார். கிராம சம்மந்தமான தஸ்தாவேஜுகள் ரிக்கார்டுகள்

ஸ்ரீ மடத்திலிருந்தன. மந்த்ராலயத்தின் ஸ்ரீ மடத்தின் ப்ரதிநிதிகளொருவரிருந்து கொண்டு ஸ்ரீ குருராஜரின் பூஜாராதனை முறைப்படி நிறைவேறும்படி மேற்பார்வை செய்து கொண்டிருந்தார் அவரிடம் கிராம ஸம்மந்தமான ரிகார்டுகள் இருக்கவில்லை. அவருக்கு மந்த்ராலய கிராமம் ஸ்ரீ மடத்திற்கு வந்த விவரத்தைப் பற்றிய சமாசாரங்கள் தெரியாததினால் இனி என்ன செய்யவேண்டுமென்று தெரியாமல் கௌடகுல கர்ண கிராமஸ்தர்களுடன் கலந்தாலோசித்து அதிகாரிகளிடம் நிலமையை விண்ணப்பித்தனர்.

ஈஸ்ட் இந்தியா கம்பனியின் ஸர்வே செட்டில்மெண்ட் இலாகாவில் அநேக இந்திய அதிகாரிகள் இருந்தனர். அவர்களுக்கு ஸ்வாமி, குருகள் மீது நம்பிக்கை உண்டு. மேலும் பக்தியுமுண்டு. இருந்தபோதிலும் ஸ்ரீ ராயருக்குக் கிராமம் சொந்தத்திலிருக்க வேண்டுமென்னும் விருப்பமிருந்தாலும் பெரிய ஆங்கில அதிகாரியின் முன் நின்று வாதிக்கும் தைரியமிருக்கவில்லை. மடத்தின் பிரதிநிதி, அர்ச்சகர்கள் கௌடகணக்கர் (கர்ணம்), மந்த்ராலயவாசிகள் அதிகாரிகளிடம் ஸ்ரீராயரின் மகிமை அவரின்றும் உயிருடன் ப்ருந்தாவனத்திலிருந்து கொண்டு அவரை நம்பி வந்து சேவை செய்த பக்தரைக் காப்பாற்றிக் கொண்டு வேண்டிய வரங்களை அளித்துக் கொண்டிருப்பது, 150 வருஷகாலமாக மந்த்ராலய க்ராமம் ஸ்ரீ மடத்திற்கு சொந்தமாயிருந்து வருவது, மடாதிபதிகள் நஞ்ஜன்கூடிலிருப்பதினால் ரிகார்டுகள் ஆஜர்படுத்த ஸாத்யமில்லையென்று எல்லா விஷயங்களையும் தெரிவித்து மன்றோ துரையவர்களை நேரில் கண்டு இந்தக் கிராமத்தை மடத்திற்கு ஒதுக்கித்தரவேண்டும் என்று மன்றாடிக்கேட்டுக் கொண்டனர். மன்றோதுரையவர்களின் உதவி அதிகாரியான சிரஸ்த்ததார் முதலான அதிகாரிகள் ஏதாவது ஒரு உபாயம் செய்து மஹாமஹிமை பொருந்திய ஸ்ரீராயரின் கிராமம் ஜப்தியாகாமலிருக்க வேண்டுமென்று தைரியங் கொண்டு எல்லா விஷயங்களையும் துரையிடம் தெரிவித்தனர்.

**67. ஆச்சரியமானமாலை :**

மன்றோ துரையவர்கள் பேச்சுக்களைக் கேட்டுப் புன்னகை செய்து, "எனக்கும் கடவுளிடமும் ஸாது மஹாத் மாக்களிடம் நம்பிக்கை உள்ளது. ஆனால் 150 வருஷங் களுக்கு முன்னால் ஸமாதியான ஒரு யோகிகள் இன்னும் உயிருடன் ஸமாதியிலிருக்கின்றாரென்று நீங்கள் சொல்வது விசித்திரமாயுள்ளது. அதை நம்ப முடியாது. அது மாத்திர மல்ல; இப்படிப்பட்ட கற்பனை மற்றும் மூடநம்பிக்கை, நகைக்கிடமான விஷயம் இவைகளை நீங்கள் இந்தியர்கள் கபடமற்ற சுபாவத்தவர்களாகையால் எதை வேண்டு மானாலும் நம்பிவிடுகின்றீர்கள். உங்களுக்கு எல்லாமே ஸாத்தியம்தான். பகுத்தறிவுக் கெட்டாத இந்தப் பேச்சுக்களை நான் நம்புவது எப்படி? ப்ரத்யக்ஷமானதும், சாக்ஷியுடன் கூடிய விஷயத்தை மாத்திரம் நம்பமுடியும். அல்லது சரியான ரிகார்டுகள், தஸ்தாவேஜுகளை ஆஜர் செய்தால் யோசித்து நான் முடிவு எடுக்கிறேன். இவை யெதுவும் இல்லாவிடில் ஆங்கிலேய சர்க்காரின் ஆணைப்படி நடக்காமலிருப்பதற்கில்லை. நீங்கள் இவ்வளவு சொல்லி யிருப்பதினால் நான் நேரில் ஒரு முறை உங்களது குருபாதரின் ஸமாதியைத்தரிசித்துப் பிறகு தீர்மானம் செய்கிறேன்" என்று சொன்னார். அதிகாரிகளின் மூலம் இந்தச்செய்தி யறிந்த கிராமத்திய ஜனங்கள் வருத்தத்துடன் ஸ்ரீகுருராஜரே இந்த ஆங்கில அதிகாரியின் மீது தன் செல்வாக்கை உபயோகித்து அவனைத் தூண்டி தனது க்ராமத்தைத் தக்க வைத்துக் கொள்ளட்டும் என்று குருராஜரை வேண்டிக் கொள்ளவாரம்பித்தனர். இந்த சந்தர்ப்பத்தில் தான் ஸ்ரீகுருராஜர் தமது யோகசக்தியின் மகத்துவத்தைக் காண்பித்து அதிகாரியை வியக்கும்படி செய்தார். அது இவ்வாறு நடந்தது :-

**68. மஹாபாக்யசாலி மன்றோ !!**

மந்த்ராலய கிராமத்தின் சந்து பொந்துகளிலெல்லாம் சுற்றிப் பெரிய கதவிலுள்ளிருக்கும் சிறு கதவிற்குள் நுழைந்து வந்து கொண்டிருக்கின்றார் மன்றோ துரையவர்கள் நூற்றுக் கணக்கில் கிராம ஜனங்கள், ஸ்ரீ மடத்தின்

ப்ரதிநிதி, அர்ச்சகர்கள், பண்டிதர்கள், கௌடகுலகர்ணம், மன்றோதுரைகளின் கீழ் வேலை செய்யும் அதிகாரிகள் அவரைப் பின்தொடர்ந்து வருகின்றனர். ஒருவருடைய முகத்திலும் காந்தியில்லை ஏதோ கலக்கம், பயம் ; ஆயினும் ஸ்ரீ ராயரின் மகிமையின் ஞாபகத்தினால் சற்று தைரியம். இவ்வாறு எல்லோரும் பலவித உணர்ச்சிகளுடன் காணப் படுகின்றனர்.

சிறிய கதவு வழியாக இறங்கி வருகின்ற மன்றோ துரையவருக்குக் காலை நேர சூர்யனின் பொற் கிரணங் களினால் பளபளவென்று மின்னுகின்ற கலகலவென்ற ஓசையுடன் ஓடுகின்ற துங்கபத்திரையின் தரிசனமாயிற்று. ஏதோ ஒரு சக்தி அவருடைய நரம்புகளில் சஞ்சரிப்பதைப் போலுணர்ந்தார். பரமபவித்ரமான வராஹ நந்தினி (துங்கா) பெரும்பாலும் தனது தரிசனத்தினாலேயே மன்றோ துரையவர்களின் உடல், மனம் இவைகளைப் புனிதமாக்கி விட்டாளோ ! அவஸர அவஸரமாக துங்காநதியின் பக்கம் விரைந்து துங்காவைத்தொட்டு புனிதமான குளிர்ந்த ஜலத்தினால் கை கால் முகம் கழுவிக் கொண்டார். என்றும் கண்டிராத மன்றோதுரையின் செயல்களினால் அதிகாரிகள் ஆச்சரியமடைந்தனர். மன்றோ தனது அந்தரங்கக் காரியதரிசி (Private Secretary)யின் பக்கம் திரும்பிக் கேட்டார், " அந்த குருகளின் சமாதி எங்கிருக்கிறது ? என்று அவர் குருகளின் ஆலயத்தின் பக்கமாகக் கையைக் காண்பித்தார். கௌடகுலகர்ணம் முன்னால் வந்து வழி காட்டினார். பாறாங்கற்கள் மற்றும் முள்ளுகளினால் சூழப்பட்ட ஒற்றையடிப்பாதையில் நடந்து மன்றோதுரை இடுப்பளவு உயரமுள்ள மண்சுவரால் சூழப்பட்ட ஸ்ரீ குரு ராஜரின் ஆலயத்தினருகே வந்தார்.

அழகான கல்மண்டபத்துடன் சோபிக்கும் இரண்டு ப்ருந்தாவனங்களின் கர்ப்பக்ரஹங்களும் எதிரிலிருக்கும் ஸ்ரீவாயுபகவானின் மண்டபமும் மன்றோதுரையவர்களுக்கக் காணப்பட்டது. ஆலயத்தினருகில் வந்த உடனேயே அவருக்கு இதற்கு முன் என்றும் ஏற்படாத ஒருவித மன நிம்மதி, சமாதானம், முதலிய உணர்சவுகளின் அனுபவ

முண்டாயிற்று. உடலில் மயிர்க்கூச்சலினனுபவம்! உடனே அணிந்திருந்த காலணிகள், தொப்பியை நின்று கொண்டே கழற்றி வேலையாளின் கையில் கொடுத்து வெறுங்காலுடன் முன்னே சென்றார்.

### 69. ப்ரத்யக்ஷ தரிசனம் :

மேல் பாகத்தில் மேஷமஸ்தகமுள்ள (ஆட்டின் தலை) முக்கிய நுழைவாயில் அருகில் வந்து நின்றபொழுது பக்கத்தில் நின்றிருந்தவர்கள் '' எதிரில் காணுவதுதான் ஸ்ரீ குரு ராகவேந்திர ஸ்வாமிகளின் ஆலயம்; பக்கத்திலிருப்பது ஸ்ரீவாதீந்திர தீர்த்தரென்னும் மற்றொரு மஹானின் ஆலயம் '' என்று தெரிவித்தார்கள். ஸ்ரீ குருராஜரின் கர்பக்ரஹத்தின் மரக்கதவு மூடியிருந்தது. மன்றோ துரை குருகளின் ஸமாதியைத்தாம் பார்க்க விரும்புவதாகத் தெரிவிக்கவும், அர்ச்சகர் ஸ்ரீ மடத்தின் பிரதிநிதியின் அனுமதிபெற்று மரக்கதவுகளைத் திறந்து விலகி நின்றனர்.

இந்திர நீலமணியின் அற்புத ஒளியுடன் நாம-முத்ரைகள், துளசிமணிகளுடன் காணுகின்ற ஸ்ரீ குருராஜரின் அழகான ப்ருந்தாவனம்: இருபுறங்களிலும் " இங்கு சரணாகதி என்று வந்தால் அஞ்ஞான இருளை விலக்கி ஞான ஒளியை இந்த மஹானுபாவர் அளிக்கிறார் '' என்று சொல்லுகின்றனவோ என்பது போல நந்தாதீபங்கள் ஒளிவிட்டு ப்ரகாசிக்கின்றன. ஸ்ரீ குரு தரிசனத்தினால் புளகாங்கிதரான ஜனங்கள் ராஜாதிராஜ ஸ்ரீ ராகவேந்த்ர குருஸார்வ பௌம கோவிந்தா கோவிந்தா '' என்று ஜயகோஷம் செய்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து கை கூப்பி நின்றனர்.

### 70. மன்றோ துரை கண்ட மாபெரும் அதிசயம் (Miracle)

என்ன நடந்ததோ என்னவோ, இருந்தாற் போல் மன்றோ துரை ராணுவ முறைப்படி இருகால்களையும் ஒன்றுசேர்த்து நின்று நிமிர்ந்த மார்புடன் வந்தனை செலுத்தி (Military Salute) கை கூப்பி நின்றார். சுற்றிலும் நின்றிருந்தவர்கள் வியப்படைந்தனர். அன்யமதத்தைச் சார்ந்த ஆங்கிலேய ஸாம்ராஜ்யத்தின் மேலதிகாரியொருவன்

பாரத நாட்டு ஸாது மஹாத்மாவின் ப்ருந்தாவனத்திற்குக் கௌரவம் செலுத்துவது ஒரு பெரும் அதிசயமல்லவா?

மன்றோதுரையவரின் முகத்தில் ஏதோ ஒரு அற்புதத்தைக்கண்ட திக்ப்ரமை கொண்ட உணர்ச்சி ஏற்பட்டிருப்பது தெரிகிறது. ஏதோ முணு முணுத்துக்கொண்டிருக்கிறார். அவர் வாயினின்று புறப்படும் வார்த்தைகளொன்றும் அங்கிருந்தவர்களுக்குச் சரியாகக் கேட்கவில்லை. ஆனாலும் அவரென்னமோ பேசிக்கொண்டிருக்கிறாரென்பது மாத்திரம் தெரியவருகிறது. மன்றோவின் பக்கத்திலிருந்த அவரது அந்தரங்கக் காரியதரிசி, சிரஸ்ததாரவர்களை ஏதோ கேட்டார். அவரும் ஒருமுறை துரையையும் மற்றொருமுறை ப்ருந்தாவனத்தையும் பார்த்துத் தலை ஆட்டிக் கொண்டிருந்தார்.

**71. மாறுதல் :**

மன்றோதுரையின் இந்த நடத்தைக்கும், கேள்விக்கும் காரணமில்லாமலில்லை. அவர் கண்ட காட்சியைப் பக்கத்திலுள்ளவர்கள் காணவில்லை. மன்றோதுரையவர்கள் முன்பு என்றும் கண்டோ கேட்டோ அறியாத மாபெரும் அற்புதத்தையே கண்டு கொண்டிருக்கின்றார். என்ன அதிசயம்! தான் கண்டு கொண்டிருப்பது இவர்கள் யாவருக்கும் காணவில்லையே? தனது கண்ணே தம்மை ஏமாற்றுகிறதா என்ன? அல்லது தாம் கண்ணுறுவது உண்மைதானா? என்று கண்களைத்துடைத்துக்கொண்டு மறுபடியும் மறுபடியும் பார்த்துக்கொண்டு அபார ஆச்சரியத்தில் மூழ்கி எழுகின்றார் மன்றோ! அவர் அங்கே கண்டது என்ன? மன்றோதுரையவர்களின் கண்ணில் தென்பட்ட காட்சி இதோ :

மன்றோ அவர்கள் ஸ்ரீ குருராஜரின் அழகான ப்ருந்தாவனத்தை கூர்ந்து நோக்கிக் கொண்டிருக்கும் பொழுது இருந்தாற்போல ஒரு மின்னல் வெளிச்சம் மின்னிற்று. நீலதிற அழகான ப்ருந்தாவனம் இரண்டு பாகமாயிற்று! கண்கூசுகின்ற ஒளிபொன்று வீசுகிறது. அந்த ஒளியின் நடுவே வேறு எதுவும் தெரியவில்லை. ஆச்சரியத்துடன்

மெய்மறந்து மன்றோ பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அந்தப்பேரொளி வர வர சாந்தமான உருவமாக மாறியது. இந்த அழகான ஒளி மண்டலத்தின் நடுவே ஸ்ரீ குருஸார்வ பௌமரின் அழகான உருவம் காணப்பட்டது. ஆங்கில அதிகாரிக்குப் பயம், பக்தி, மரியாதைகள் உண்டாயின. நடுங்கின உடலுடன் மன்றோ-திக்ப்ரமை கொண்டு பார்த்துக்கொண்டு நிற்கிறார். அந்த அபூர்வமான தெய்வீகக் காட்சியைக் கண்டு மறுபடியும் மறுபடியும் அவருக்கு மெய்சிலிர்க்க ஆரம்பித்தது.

புண்யசாலி மன்றோவிற்குத் தரிசனம் அளித்த முனிச்ரேஸ்டர் மங்களகரமான உருவம் எவ்வாறிருந்தது? ஆஹா! அது எப்படிப்பட்ட அழகான உருவம்! அதெப்படிபட்ட தேஜஸ்! ஸாத்வீக குணமே உருவமெடுத்து நின்றதைப் போல் அனுபவ மேற்பட்டது. ஆறடியுள்ள பொன் மேனி ஸகல லக்ஷணங்களுடன் அழகு பொருந்தியதாக உள்ளது. அந்த ஸுந்தரமூர்த்தி ஆஜானு பாஹுவாக இருக்கின்றார். தாமரையைப் போன்ற வட்ட வடிவமுள்ள முகம், விசாலமான நெற்றி, நீண்ட நாசி, நட்சத்திரத்தைப் போல் காந்தி கிரணங்களை வீசுகின்ற விசாலமான கண்கள். மாதுளை முத்துக்களைப் போன்ற பற்களின் வரிசை, சிவந்த உதடுகளில் மின்னும் புன்னகை நிலாவின் அழகை வெட்கப் படச் செய்வதைப் போலுள்ளது. காஷாயவஸ்திரம், தண்டகமண்டலு, தவாதச நாமங்கள், முத்திரைகளுடன் கூடியவைகளாயுள்ளன. மஹான்! நெற்றியில் ஊர்த்வ புண்ட்ரம், கந்தாக்ஷதைகள் வசீகரமாக விளங்குகின்றன. துளசி கமலாக்ஷ மாலைகள் கழுத்தை அலங்கரிக்கின்றன. பச்சை வர்ணமுள்ள பகவானுக்கர்ப்பித்த துளசி மாலை ஸாத்வீக தேஜஸைஅதிகரிக்கச் செய்கிறது. ஆஹா! அதைப் பார்ப்பதே கண்ணுக்கு ஒரு விருந்தாயுள்ளது. முகம், சிரஸ்ஸில் வளர்ந்துள்ள நிறைந்த கேசங்கள் யதிகளின் ஞானம்-தபஸ்ஸுகளை எடுத்துக் காட்டுகின்றன. சிரஸின் பின்பக்கம் பிரபை சோபிக்கின்றது. ஸ்ரீ குருராஜரின் இப்படிப்பட்ட அழகான உருவத்தைக் கண்ணாரக் கண்டு மன்றோதுரை புனிதரானார். அவர் மனதின் கல்மஷங்

களெல்லாம் விலகின. பவித்ரமான எண்ணங்கள் பிறந்தன. அவருக்குத் தெரியாமலேயே அவரது இதயத்தில் பக்தி ப்ரவாஹம் பாய ஆரம்பித்தது.

## 72. கிடைப்பதற்கரிய தரிசனம் :

ஸ்ரீ குருராஜரின் கிடைப்பதற்கரிய தரிசனத்தினால் சரீரத்திலும் மனதிலும் ஸாத்வீக உணர்வுகள் நிலையாகக் குடிகொண்டு அலைபாய்ந்து கொண்டிருக்கின்றன. குருகளிடம் பக்தி, கௌரவம், மரியாதை முதலிய குணங்கள் உண்டாயின. ஒருக்கால் அவர் மனதில் இவ்வாறு உணர்ச்சி அலைகள் பாய்ந்து கெகண்டிருக்கலாமல்லவா ?

"பாரத நாட்டின் உயர்ந்த யோகிகள் இவர். இவருடைய தரிசனத்தினால் புனிதமானேன். எனது ஜன்மம் ஸார்த்தகமாயிற்று. 150 வருஷங்களுக்கு முன் சமாதியில் ப்ரவேசித்த இந்த யோகிகள் எப்பேர்ப்பட்ட தீரர்! தமது யோக சக்தியினால் இன்னும் ஜீவித்திருக்கின்றாரே! மானவனின் (மனுஷ்யனின்) புத்தி சக்தி, தைரியங்களையும் மீறின ஏதோ ஒரு சக்தி இவரிடம் குடிகொண்டிருக்க வேண்டும். பகவந்தனின் தாஸரானரிவர்களுக்கு எது தான் முடியாத காரியம்! ப்ரபஞ்சமே தமதென்று அறிந்து லோக க்ஷேமத்திற்காக தவத்திலீடுபட்டுள்ள இப்படிப்பட்ட மஹான்களாலே தான் ஜகத்தின் உத்தாரம் (உன்னதி) ஸாத்யமாகும்! அபூர்ணமும் அற்பமுமான பௌதிக விஞ்ஞான பலத்தையே நம்பி அற்ப சக்தனான மனிதன், த்வேஷம், பழிக்குப்பழி, யுத்தஉணர்வு, சுயநலமே லக்ஷியமாகக் கொள்ளுதல் முதலியவைகளினால் ஸர்வ சக்திமானான பகவானிடமிருந்து விலகித் தனது அழிவின் பாதையில் நடைபோட்டுக் கொண்டு வருகிறான். அதனால் அவனுடைய அல்லது ஜகத்தின் க்ஷேமமுண்டாகாது. இந்த இந்தியர்கள் முதலிலிருந்தே பகவானின் சரண்அடைந்து சுகமாக உள்ளனர். அதனால் தான் அநேக தாக்குதல்களுக்குள்ளான போதிலும் அவைகளையெல்லாம் ஆத்ம சக்தியின் பலத்தினால் எதிர்த்து இன்றும் உலகத்திற்கு நல்லதையே போதித்துக் கொண்டு பாரதம் தலைநிமிர்ந்து நிற்கிறது!

இப்பேர்ப்பட்ட மஹான்களைப் பெற்றிருப்பதினாலே தான் பாரதம் ஜகத்திற்கு அமைதி, அன்பு முதலியவைகளின் மகத்துவத்தை உபதேசித்துக் கொண்டு ஜகத்தின் உத்தமமான தேசமெனப் பெயரெடுத்துப் பிரஸித்தமடைந்துள்ளது.''

மன்றோதுரை மற்றொரு முறை குருபாதரை நமஸ்கரித்து கைகூப்பி நின்றார். குருஸார்வ பௌமர் மன்றோவுடன் பேசி '' 'यतो धर्मस्ततो जय.' என்ற திவ்யமந்திரத்தை உபதேசித்து பலமந்த்ராக்ஷதையளித்து ஆசீர்வதித்து, அவர் பார்வையிலேயே மறைந்தார்.

73. மந்த்ராக்ஷதை அனுக்ரஹம் :

குருராஜர், மன்றோ துரையவர்கள் என்ன பேசிக் கொண்டார்களென்பது யாருக்கும் தெரியவில்லை. குருகளின் தரிசனமானது மன்றோதுரைக்கு மாத்திரம். ஆனால் துரையின் கையில் சிவப்பாக விளங்கும் மந்த்ராக்ஷதையை மாத்திரம் எல்லோரும் கண்டு ஆச்சரியமடைந்தனர். தமது கிராமத்தைத் தக்க வைத்துக் கொள்வதற்காக ஸ்ரீராயர் ஐரோப்பிய அதிகாரிக்கு அனுக்ரஹம் செய்தாரென்று தெரிந்து பக்தி பரவசமாய் குருகளின் மஹிமையைப் பாராட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

மன்றோ துரையவரின் முகத்தில் திருப்தியின் புன்னகை வெளிப்பட்டது. தன் கீழ் அதிகாரிகளுக்கு மந்த்ராக்ஷதையைக் காண்பித்து, ''குருகள் எனக்கு தரிசனம் கொடுத்துப் பேசி இதைக் கொடுத்தார். இதை என்ன செய்யவேண்டும்? என்று கேட்டார். பக்கத்திலிருந்தவர்கள் குருதரிசனம் செய்த மன்றோ துரையவர்களைப் புகழ்ந்து, ஸ்வாமி, இது குருகளின் ஆசிர்வாத ரூபமானது. யாருக்கும் கிடைக்காத இது உமக்குக் கிடைத்துள்ளது. நீங்கள் மிக புண்யசாலிகள். நல்ல ஆத்மா ; எங்கள் யாருக்கும் கிடைக்காத பாக்யம் தங்களுக்குக் கிடைத்துள்ளது! இது மந்த்ராக்ஷதை இதைத் தலையில் போட்டுக் கொள்ள வேண்டும். இதைப் பத்திரமாக உங்களிடம் வைத்துக் கொள்ளுங்கள்.

இதனால் உமது எல்லா விருப்பங்களும் ஸித்திக்கும் '' என்று சொன்னார்கள். மன்றோதுரை பாதி மந்திராக்ஷதையை அன்றைய தமது போஜனத்திற்கு உபயோகிக்க உத்தரவிட்டு மிஞ்சினதைத் தனது கைக்குட்டையில் பத்திரப்படுத்தி ஜேபியில் வைத்துக் கொண்டு குருகளின் ப்ருந்தாவனத் திற்குக் கைகூப்பி எல்லோருடன் முகாமிற்குச் சென்றார்.

அன்று ஸ்ரீ குருராஜர் அனுக்கிரஹம் செய்த மந்த்ரா க்ஷதையினால் தயாரிக்கப்பட்ட போஜனத்தை உண்டு மன்றோதுரை அங்கேயே மந்த்ராலயக்ராமம் ஸ்ரீ ராக வேந்திர ஸ்வாமி களவர்களுக்கு சாச்வதமாகச் சொந்த மாகும்படி எழுத்து மூலம் உத்தரவிட்டு மறுநாள் பல்லாரிக்கு ப்ரயாணமானார்.

பிறகு சில நாட்களுக்கப்பின் மடத்தின் ப்ரதிநிதிகளின் மூலம் ஸ்ரீ குருராஜர் மன்றோதுரையவர்களுக்கு ப்ரத்யக்ஷ தரிசனம் கொடுத்துத் தமது க்ராமத்தைத் தக்க வைத்துக் கொண்ட மஹாமகிமையைக் கேட்ட மடாதிபதி பரமானந்த மடைந்து ஸ்ரீராயரின் மகிமை ஸ்வஸ்தான க்ஷேம, சிந்தனைகளைக் கொண்டாடி மகிழ்ந்தார்.

### 74. கவர்னர் பதவி :

ஸ்ரீ குரு க்ருபைக்குப் பாத்திரரான மன்றோதுரை சில நாட்களிலேயே ப்ரிடிஷ் ஸர்க்காரினால் '' ஸர் '' என்னும் பட்டம் (Title) பெற்று மதராஸின் கவர்னராக்கப்பட்டு ஸர் தாமஸ் மன்றோ ஆனார். ஸ்ரீ குருராஜரின் இந்த அற்புதச் செயலின் செய்தி பல்லாரி கெஜட்டில் (Beliary Gazette) பதிவாகியுள்ளதை இன்றும் காணலாம். ஸர் தாமஸ் மன்றோ என்னும் கிரந்தத்தில் மந்திராலயத்தில் ஸ்ரீ குருராஜர் காண்பித்த இந்த மஹாமகிமையை மன்றோ துரையவர்கள் லண்டனிலிருக்கும் தமது மகளுக்கு எழுதிய கடிதத்தில் எழுதியிருப்பதாக எழுதப்பட்டிருக்கிறது.

பாரதீயர்கள் (இந்தியர்கள்) ஸ்ரீ குருராயரின் பக்தர்கள் ஸ்ரீராயரின் அபார மகிமையைக் கொண்டாடுவது, ஒப்புக்

கொள்வது பெரிய விஷயமல்ல. ஆனால் இந்தியனல்லாத ஸ்ரீ குருராஜருக்கு எந்த விதத்திலும் சம்மந்தப்படாத ஒரு ப்ரிடிஷ் ஸாம்ராஜ்யத்தின் உயர்ந்த பதவியிலிருந்த அந்நிய நாட்டவனொருவன் ஸ்ரீ குருராஜர் 150 வருஷங்களான பிறகும் ஜீவித்திருந்து தரிசனமளித்துப் பேசி, மந்த்ராக்ஷதை அளித்து மந்த்ராலய க்ராமத்தைத் தக்க வைத்துக்கொள் வதற்காக அபார அதிசயத்தைக் காண்பித்தாரென்று மன மாரப் புகழ்ந்து எழுதி வைத்திருப்பது உண்மையாக மகத்தான விஷயம். அது இந்தியர்களுக்கு, ஸ்ரீ குரு பக்தருக்கு மகத்தான கௌரவத்தைத் தரும் பெருமையான விஷயம். ஸர். தாமஸ்மன்றோவின் விருத்தாந்தம், நேர்மை ஸ்ரீ குருராயரின் மகிமைக்கு பலமான சான்றுகளாகும். இந்த நோக்குடன் யோசிக்கும் பொழுது ஸ்ரீராயர் சரீரத் துடன் ப்ருந்தாவன ப்ரவேசமான பிறகு 200-வது வருட மத்தியில் காண்பித்த அந்த மகிமை மாபெரும் மகத்துவ முள்ள நிகழ்ச்சி என்று பறையறைவித்துச் சொல்லலாம்.

**75. "ஸ்தானம்" வேண்டிக் கொண்ட முனிவருக்கு "தினம்" அருளிய மாபெரும் மகிமை :**

ஸ்ரீ குருராஜர் அநேக ரூபத்தில் அநேக வட்டாரங்களில் தனது மகிமைகளை வெளிப்படுத்தியுள்ளார். சக்ரவர்த்தி, ராஜா, பாளையக்காரர், தனவந்தன், ஏழை என்னும் வித்தி யாஸமின்றி எங்கெங்கும் மகிமையைக் காண்பித்துள்ளார், காண்பித்து வருகிறார். ப்ருந்தாவன ப்ரவேசமான 190 வருடங்களுக்கப்புறம் தமது பீடாதிபதியவர்களுக்குச் செய் துள்ள அஸாணதாரண அனுக்ரஹத்தை வெளிப்படுத்தின மகிமை அற்புதமாயுள்ளது.

ஸ்ரீ ராயரின் மகனின் பேரனான—ஸ்ரீவாதீந்திர தீர்த் தரின்பூர்வாச்ரம புத்திரரான ரித்தியின் மஹாமஹிமையுள்ள திரேந்திர தீர்த்தரின் மகனின் பேரனான ஸ்ரீ ராகவேந்த்ரா சார்யா கி. பி. 1936-ல் ஸ்ரீ ஸுக்ஞானேந்த்ர தீர்த்த ரென்னும் நாமத்துடன் ஸ்ரீ குருராஜரின் புனிதமான பீடத்தில் அமர்ந்து கி. பி. 1836—1861 வரை த்வைத சாம்ராஜ்யத்தை பரிபாலனம் செய்து வந்தார். நான்கு

சாஸ்திரங்களில் ப்ரகாண்ட பண்டிதரான ஸ்ரீகளவரிடம் அநேகர் ந்யாய வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களை அத்யயனம் செய்து உத்தம பண்டிதரானார்கள். ஸ்ரீகளவர் ஒன்பது தடவைகள் ஸாதாமங்களம் செய்ததல்லாமல் "சந்த்ரிகா மண்டன" என்னும் உயர்ந்த க்ரந்தத்தை இயற்றி ஸ்ரீ ராயருக்கு ஸமர்பித்து வித்வான்களினால் கௌரவம் பெற்றிருந்தார். உத்தம பண்டிதராய் இருந்தது போலவே ஸ்ரீகளவர்கள் மஹா தபஸ்விகளாகவுமிருந்தார் அநேக மஹா மந்த்ரங்கள், ஸ்ரீ ராகவேந்திரஷ்டாக்ஷரமந்த்ரம் அவருக்கு சித்தித்தன. ஸ்ரீயவர் தபஸ்ஸித்தி யோகஸித்திகள் வெளிப்பட்டது எவ்வாறென்பது மிக ரஸமானதாயுள்ளது.

## 76. யோகஸித்தி :

ஸ்ரீ யவர்கள் அனுதினமும் மஹாமந்த்ரங்களை அனுஷ்டானத்தில் வைத்துக்கொண்டிருந்தார். ஒரு நாள் ஜப-தப அனுஷ்டானம் முடித்துக் கண்ணைத் திறந்த பொழுது தர்ம கர்ம சம்யோகத்தினால் அவரது பார்வை முன்னாலிருந்த ஒரு குருவியின் மீது விழுந்தது. ஆச்சரியம் ! உடனே குருவி தகதகவென்று எரிந்து பஸ்மமாகிவிட்டது'! ஸ்ரீயவர்களின் தரிசனத்திற்காக காத்துக் கொண்டிருந்தவர் எல்லோரும் இந்தக்காட்சியைக் கண்டு வியந்து மஹா தபஸ்விகளென்று ஸ்ரீகளவர்களைப் பாராட்டினர். அன்றிலிருந்து ஸ்ரீகளவர்கள் திரைமறைவிலிருந்து ஆன்ஹிகம் செய்ய ஆரம்பித்தார். இந்த மஹாமந்த்ரம் அவருக்கு ஸித்தித்தது ஸ்ரீகுருராஜரின் அனுக்ரஹத்தினால்.

அப்பொழுது மைசூரின் மஹாராஜாவாயிருந்த மும்மடி கிருஷ்ணராஜ ஒடையார் ஸ்ரீகளவரின் பிரியாத பக்தராகியிருந்தார். ஸ்ரீகளவரின் உபதேசம் முதலியவைகளினால் மும்மடி அரசர் ஸ்ரீகுருராஜரின் அந்தரங்க பக்தரானார். உத்தமபண்டிதரான கிருஷ்ணராஜர் "ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமி அஷ்டோத்தரம்' என்ற உயர்ந்த ஸ்தோத்திரத்தை இயற்றி ஸ்ரீ குருராஜரின் மகிமையை மனத்தில் பதியும்படி

வர்ணித்துள்ளார். ஒரு தடவை ஸ்ரீக்ருஷ்ணராஜர் ஸ்ரீமடத்திற்கு மைசூரின் டிப்டி கமிஷணராயிருந்த (Deputy Commissioner) ஒரு ஆங்கிலேயரை அனுப்பி அவர் மூலம் மடத்தின் சில முக்கியமான காரியங்களைச் செய்து கொள்ளும்படி ஸ்ரீபாதபுத்திரரும் தமது மித்திரருமாயிருந்த ராஜா ஸ்ரீராஜகோபாலாசார்யரின் மூலம் ப்ரார்த்தித்தார். ஸ்ரீகளவர்களுக்கு என்னமோ ஆங்கில அதிகாரிக்கு தரிசனம் கொடுக்கமனம் இல்லை. மடத்தின் அதிகாரிகளின் மஹாராஜரின் விக்ஞாபனத்திற்கு பதில் கொடுப்பதற்காகத் தடை சொல்லாமல் ஒப்புக் கொண்டார்.

## 77. அனுக்ரஹம் போதும்:

நஞ்ஜன்கூடிற்கு ஆங்கிலேய அதிகாரி தமது பரிவாரங்களுடன் வந்தார். ஸ்ரீ மடத்தின் அதிகாரிகள் அவரை மரியாதையுடன் வரவேற்று மடத்திற்கு அழைத்து வந்தனர். மடத்தில் ஸ்ரீதுளஸி ப்ருந்தாவனத்தினெதிரில் ஸ்ரீகளவர் அமர்ந்திருந்தார். ஆங்கிலேய அதிகாரிகளை ஸ்ரீகளவரின் சந்நிதிக்கு அழைத்து வந்தார்கள். ஆங்கிலேய துரை, ''குருபாதர் எங்கிருக்கிறார்?'' என்று கேட்டார். எல்லோரும் இப்படி ஏன் கேட்கிறாரென்று ஆச்சரியப்பட்டனர். ஸ்ரீபாதபுத்திரர் ''குருவர்யர் தமக்கெதிரில் பீடத்தில் வீற்றிருக்கிறார்'' என்று சொல்லவும் ஆங்கிலேய அதிகாரிகள் கோபத்துடன், ''பொய், இங்கு வெறும் ஆஸனம்தான் உள்ளது குருபாதரில்லை! என்றார். அதைக்கேட்டு ஸகலரும் திக்ப்ரமையடைந்தனர். ஆங்கிலேய அதிகாரிகளின் பரிவாரத்தைச் சேர்ந்தவர்கள்,'' குருவர்யர் பீடத்தில் அமர்ந்திருக்கிறார் ஸ்வாமீ!'' என்று விக்ஞாபித்தனர். ஆங்கிலேய துரை ஆச்சரியமடைந்து கடைசியில் நின்று கொண்டே தமக்குக் கண்ணுற்ற பீடத்திற்கு நமஸ்கரித்து வெளியே வந்து மடத்தவரை ''உமது பெரியகுருகளான ராகவேந்திரஸ்வாமிகள் நமது ப்ரிடிஷ் அதிகாரி ஸர். தாமஸ் மன்றோ அவர்களுக்கு சமாதியாகி நூறு வருஷங்களுக்குப் பிறகும் தரிசனம் கொடுத்துப் பேசினாரென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த மஹாத்மாவின் பீடத்தில் வந்துள்ள

உமது குருவர்யர் எனக்கு தரிசனமளிக்காமல் மகிமை காண்பித்துள்ளார்! மஹாத்மாக்களை நாம் பலவந்தம் செய்யக்கூடாது ஒருக்கால் நீங்கள் அவருக்கு இஷ்டமில்லா திருந்த போதிலும் எனக்கு பேட்டி கொடுக்கும்படி கட்டாயப் படுத்தியிருக்க வேண்டும். பெரியோர்களைப் பலவந்தப் படுத்தக் கூடாது. உமது மடத்தின் காரியம் எதுவாயினும் நான் செய்து தருகிறேன். அவர் தரிசனமளிக்கா விடினும் பரவாயில்லை. என்னை அனுக்ரஹித்தால் போதும் என்று சொல்லி பரிவாரங்களுடன் மைஸூருக்குச் சென்று விட்டார் அன்று ஸகலருக்கும் ஸ்ரீ ஸுக்ஞானேந்திர தீர்த்தர் யோகஸித்தர், மஹாதபஸ்விகளென்று இரண்டாவது முறை சந்தேகமறப்புரிந்தது.

ஸ்ரீ ஸுக்ஞானேந்த்ர தீர்த்தரின் காலத்திலேயே ஆதியிலிருந்து கடைசிவரை மடத்திற்குச் சொந்தமான ஆஸ்தி-பாஸ்திகளெல்லாம் சாச்வதமாக அதற்குச் சேர்ந்தது உறுதியாகி விட்டது அவர் காலத்திலேயே ஆங்கிலேய சர்க்காரினால் அந்த விஷயத்தில் ரிகார்டுகள் தஸ்தா வேஜுகள் சாச்வதமாக்கப்பட்டன (Permanent) ஜனங்கள் ஸ்ரீயவர்களை தபஸ்விகள், சாபானுக்ரஹ சக்தியுள்ளவர் என்று புகழுவது ஸ்ரீயவருக்குத் தேவையாயிருக்கவில்லை. ஆகையால் அவர் மனம் நொந்தார். ஸ்ரீ ஹரிவாயுகளின் அனுக்ரஹத்தினால் தமக்குக் கிடைத்திருக்கும் ஸித்தியை லௌகிக கார்யங்களுக்காக விநியோகம் செய்ய வேண்டிய தாயிற்றேயென்ற கலக்கத்தினால் ஸ்ரீகளவர்கள் ஸ்ரீ குருராஜரின் தரிசனத்திற்குப் போய் அவரிடம் மன்னிப்புக் கோருவதற்கு நிச்சயித்து மந்த்ராலயத்திற்கு எழுந்தருளினார்.

### 78. மந்த்ராலயத்தில் சேவை :

ஸ்ரீ குருராஜரின் தரிசனத்தினால் புனிதரான ஸ்ரீ களவர்கள் சிலகாலம் மந்த்ராலயத்திலிருந்து ஸ்ரீராயரவர்களின் சேவை செய்து கொண்டிருந்தார். நாட்கள் செல்லச் செல்ல அவருக்கு ஸ்ரீராயர் ப்ருந்தாவன ஸந்நிதி மிகப் பிரியமாயிற்று.அங்கிருந்து புறப்பட மனம் வரவில்லை. தனது

வம்சத்தின் பூர்வாசார்யரும் குல குருகளுமான ஸ்ரீராயரின் ஸந்நிதியிலேயே தான் தேக த்யாகம் செய்து ப்ருந்தாவனஸ் தராக விரும்பி ஒவ்வொரு நாளும் ஸ்ரீராயரைத் தமக்கு ப்ருந்தாவனஸ்தராவதற்கு 'ஸ்தானம்' (இடம்) தர வேண்டிக் கொண்டிருந்தார். அதற்காகக் கடும் தவத்தையே செய்ய வாரம்பித்தார். ஒரு தினம் இரவில் கனவில் ஸ்ரீராயர் தரிசனமளித்து,'' உமது சேவையினால் நாம் மகிழ்ச்சி யடைந்தோம். நமது ஸந்நிதியில் தாங்கள் ''ஸ்தானம்'' தரவேண்டுகிறீர். உமது விருப்பத்தை நிறைவேற்றுவோம்: ஆனால் அது நஞ்ஜன்கூடில்; இங்கல்ல! மந்த்ராலயத்தில் நாம் சரீரத்துடன் இருந்த போதிலும் உமக்காக நாம் நஞ்ஜன்கூடுக்கு வேறொரு ரூபத்தினால் வருகிறோம். அங்கு உமக்கு ஸ்தானம் அளிக்கிறோம். மற்றும் நமது ஒரு நாளையே உமக்கு அனுக்ரஹிக்கிறோம். என்று அனுமதி யளித்து பல மந்த்ராக்ஷதையளித்து மறைந்தார்.

எச்சரிக்கையானதும் ஸ்ரீ களவர் கனவின் பலனை உயர்ந்ததாகக் கருதி ராயரின் அபயவரத்தை நினைத்து நினைத்து புளகாங்கிதராய் மகிழ்ச்சியினால் ஸ்ரீ ராயருக்கு ஹஸ்தோதகம் ஸமர்ப்பித்து நஞ்ஜன்கூடிற்குப் ப்ரயாண மானார்.

**79. நஞ்ஜன்கூடில் கற்பாறையில் ப்ரத்யக்ஷம்:**

நஞ்ஜன்கூடிற்கு வந்த சில தினங்களிலேயே ஸ்ரீஸுக்ஞா னேந்திர தீர்த்தருக்கு ஸ்ரீ குருராஜர் கனவில் தரிசனமளித்து ''உமது ஆசை நிறைவேறும் காலம் நெருங்கியுள்ளது. இன்றைக்கு மூன்றாம் நாள் நாம் வருவோம். ஸகல ஏற்பாடுகளும் செய்து கொள்ளுங்கள்.'' என்று உத்தரவு கொடுத்தார். அதன்படியே மைசூரில் மும்மடி க்ருஷ்ணராஜ ஒடெயருக்கு ''நாம் நஞ்ஜன்கூடிற்கு வருகிறோம் நாளை மறுநாள் மத்தியானம் நம்மை எதிர்கொண்டு நஞ்ஜன் கூடிற்கு அனுப்புங்கள்'' என்றும் ஸ்ரீரங்கபட்டணத்திலிருந்த தர்மவ்ரதானுஷ்டானங்களைச் செய்து வைக்கும் ஒரு நிபுண ப்ராம்மணனுக்கு, ''நாம் இவ்வூரின் காவேரி நதியின்

கரையிலிருக்கிறோம். நாளை நம்மை அழைத்துக் கொண்டு நஞ்சன்கூடிற்குப் போய் ஸ்ரீமடத்திற்கு வந்து சேர வேண்டும்'' என்றும் ஒரு வண்ணானுக்கு ''அப்பா, தினந்தோறும் உனது அடிவாங்கி நமக்குப் போதும் போது மென்றாய்விட்டது. நாளைக் காலையில் ஒரு ப்ராம்மணன் நீ இருக்கும் இடத்திற்கு வருவான். அவனுக்கு என்னை ஒப்புவித்துவிடு. உனக்கு மங்களமாகட்டும்'' என்றும் கனவில் தெரிவித்தார். இந்த விஷயங்கள் பிறகு மூன்று தினங்களில் எல்லோருக்கும் தெரியவந்து ஜனங்கள் ஸ்ரீ ராயரின் மகிமையைக் கொண்டாடும்படியாயிற்று.

80. கல்லில் காணப்பட்டார் :

இரவில் ஸந்நியாஸியொருவர் கனவில் சொன்ன விஷயத்தை நினைத்து வண்ணான் மறுநாள் காலை வழக்கம் போல் தனது துணிகளுடன் காவேரி நதிக்குப் போய்த் தான் அனுதினமும் துவைத்துக் கொண்டிருந்த கல்லினருகே போனான். அங்கு அவனுக்கு 'ஓம், ஓம்' என்னும் சப்தம் கேட்டது! ஆச்சரியத்துடன் அவன் அந்தக் கல்லைத் திருப்பிப் போட்டதும் அங்கு அவனுக்கு ஒரு ஸந்நியாஸிகள் பத்மாஸனம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கும் வரை-படம் கல்லின்மேல் பாகத்தில் கிளம்பி வருவது காணப் பட்டது! கனவு கண்டதற்கனுகுணமாக ஸந்நியாஸிகள் மேல் பாகத்தில் வரையப்பட்டிருப்பதைக் கண்டு என்ன இனி செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கையிலேயே ஒரு ப்ராம்மணன் அவனிடம் வந்தான். வண்ணான் தனது கனவில் ஸந்நியாஸி சொன்ன ப்ராம்மணன் இவனே என்று அறிந்து அவனுக்கு எலலா விவரங்களையும் சொன்னான்.

ப்ராம்மணன் வியந்து கல்லின்மேல் வரையப்பட்டிருந்த ஸ்ரீராயரைக் கண்டு வண்ணானைப் புகழ்ந்து குருகளின் அனுக்ரஹம் உனக்காயிருக்கிறதய்யா, என்று சொல்லி ஸ்ரீராயரின் கற்பாறையை எடுத்துக்கொண்டு குரு ஸ்தோத்திரம் சொல்லிக்கொண்டே வீட்டிற்கு வந்து அன்று பூஜாராதனை செய்து மறுநாள் தலைமீது ராயரைச் சுமந்து கொண்டு நஞ்ஜன்கூடுக்குப் புறப்பட்டான். மாலை

வேளையில் மைசூருக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு அவன் கண்ட காட்சி ஆச்சரியத்தை உண்டு பண்ணிற்று. அங்கு நூற்றுக்கணக்கான ஜனங்கள் கூடியுள்ளனர். ராஜ மரியாதைகளெல்லாம் வந்துள்ளன. கிருஷ்ணராஜாதானே ப்ரபுகள் வந்திருக்கிறார். ராஜ ப்ரதிநிதி ப்ராம்மணனிடம் வந்து பரஸ்பரம் பேச்சு வார்த்தைகளினால் ஸ்ரீராயரின் கற்பாறையின்மீது உற்பத்தியான விக்ரஹத்தை அவர் நஞ்சன்கூடுக்கு எடுத்துக்கொண்டு போய்க்கொண்டிருப்பதை அறிந்து மஹாராஜருக்கு விக்ஞாபனம் செய்தனர். கிருஷ்ண ராஜனுக்கான ஆச்சரியம், மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து வாத்ய வைபவத்துடன் அந்த ப்ராமணனைப் பூர்ணய்யாவின் சத்திரத்திற்கு அழைத்து வந்து ராத்ரி பூஜாராதனை நிறைவேற்றி மறுநாள் காலையில் இரட்டைக் குதிரை ஸாரட்டில் ராஜ கௌரவத்துடன் ஸ்ரீராயரை நஞ்சன்கூடுக்கு அனுப்பினார்.

இங்கு நஞ்சன்கூடில் ஸ்ரீ ஸுக்ஞானேந்திரதீர்த்தர், ஸ்ரீகுருராஜர் வருகிறாரென்று ஸகல ஏற்பாடுகளையும் தயார் செய்துகொண்டு ஸ்ரீ மடத்தின் முன் காத்திருந்தார். சற்று நேரமானபிறகு கொம்பு வாத்ய ஓசை கேட்டது. எல்லோரும் ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே ராஜ வைபவத்துடன் குதிரை ஸாரட் வந்து மடத்தின்முன் நின்றது. கற்பாறையை தலையில் சுமந்திருந்த ப்ராம்மணன் கீழே இறங்கி வந்தான். அவன் மூலம் விஷயங்களையறிந்து ஜனங்கள் ராயருக்கு ஜெயகோஷம் செய்தனர். ஸ்ரீ ராயர் அபயமளித்தவாறே தயை செய்ததைக் கண்டு ஸ்ரீகளவர் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தார். ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. ஸ்ரீகளவரிடம் ஸ்ரீராயர் செய்த அனுக்ரஹத்தை அறிந்த ஜனங்கள் யாவரும் ஸ்ரீராயரின் மகிமை, ஸ்ரீகளவரின் குரு பக்திகளைப் புகழ்ந்தனர். ஸ்ரீகளவர்கள் ஸ்ரீகுரு ராஜரின் சிலையை ஸ்ரீவாயு தேவரின் இடதுபுறம் அன்றே சம்ப்ரதாயப்படி வைபவத்துடன் ப்ரதிஷ்டை செய்து, பூஜாராதனை ஆயிரக் கணக்கானவர்களுக்குச் சந்தர்ப்பணை செய்வித்தார். ஸ்ரீஸுக்ஞானேந்திர தீர்த்தருக்காக ஸ்ரீராயர்

நிலைமீது உற்பவித்து நஞ்சன்கூடின் ஸ்ரீ மடத்தில் தமது திவ்ய ஸந்நிதியுடன் அமர்ந்தார்.

81. சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் :

துர்மதி ஸம்வத்ஸரத்தின் சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் நெருங்கினது. ஸ்ரீகளவர் சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்திற்கு உட்கார்ந்தார். சிராவண மாதத்தில் ஸ்ரீகளவர்களுக்கு தேகம் தளர்ந்துவிட்டது. கிரமப்படி ஸ்ரீமூலராமருக்குப் பூஜாராதனைக்கு இடையூறு வரக்கூடாதென்று ஸ்ரீகளவர் உத்தம பண்டிதரும் ஸ்ரீவிஜயீந்திர தீர்த்தரின் தௌஹித்ர (மகள் மகன்) வம்சத்தவரும் தமது வம்சத்தின் பூர்வா சார்யரான ஸ்ரீ தீரேந்திரதீர்த்தரின் தௌஹித்ரன் (மகள் மகன்) ஸந்ததியின் பந்துகளும் ஆன ஸ்ரீ கணேசாசார்ய ரென்பவருக்கு ஸந்யாஸாச்சரமம் அருளி, "ஸ்ரீஸுதர்மேந்த்ர தீர்த்தரென்று நாமகரணம் செய்து வாரிசாக நியமித்தார். ச்ராவண க்ருஷ்ண ப்ரதமை, த்விதியை, த்ருதியை இந்த மூன்று தினங்களிலும் ஸ்ரீ ராயரின் ஆராதனை க்ரமப்படி ஸ்ரீ மடத்தில் சிறப்பாக கொண்டாடப்பட்டது. பூர்வா ராதனை, ஆராதனை நல்ல உத்தம முறையில் நிறை வேறின, ஸ்ரீராயரின் உத்தராராதனையன்று காலை ஸ்ரீகளவர்களுக்குத் தேகநிலை மோசமாகத் தொடங்கியது. ஸ்ரீஸுக்ஞானேந்திர தீர்த்தர் ஸ்ரீ ஹரிவாயு, ஸ்ரீ குருராஜர் களின் பாதஸ்மரணை செய்து கொண்டே தமது பஞ்சபூத தேகத்தைவிட்டு நீங்கி நாராயண த்யானத்திலாழ்ந்தார்.

ஸ்ரீஸுதர்மேந்த்ர தீர்த்தர் மஹாஸமஸ்தான வழக்கப் படி குருகளவர்களுக்கு ப்ருந்தாவன ப்ரதிஷ்டை செய்வித்து அன்றே ஸ்ரீஸுக்ஞானேந்திரனின் மஹா ஸமாராதனை யையும், ஸ்ரீ ராயரின் உத்தராராதனையையும் வெகு சிறப்பாக நிறைவேற்றினார்.

ஸ்ரீ ராயரின் உத்தராராதனை மற்றும் ஸ்ரீ ஸுக் ஞானேந்திரரின் ஆராதனை ஒரேநாளில் நிறைவேறின! ஸ்ரீ குருராஜர் "ஸ்தானம்" வேண்டின ஸ்ரீ ஸுக்ஞானேந் திரருக்குத்தாம் வரமளித்த ப்ரகாரம் "ஸ்தானத்தை"யும்

மற்றும் தமது ஆராதனை தினத்தையும் அனுக்ரஹித்து மாபெரும் மகிமையை வெளிப்படுத்தினார்! ஒருக்கால் அவ்வருஷத்திய த்ருதீயா திதி மேல் சதுர்த்தி வந்திருக்கலாம். அவ்வாறே ஸ்ரீ ராயரின் உத்தராராதனை, ஸ்ரீ ஸுக்ஞானேந்திரரின் ஆராதனை ஒரே நாளில் நிறைவேறி ஸ்ரீ ராயரின் வரமும் ஸத்யமாயிற்று? அன்றிலிருந்து இன்றைய வரை ஸ்ரீ ராயரின் உத்தராராதனை ஸ்ரீ ஸுக்ஞானேந்திரரின் பூர்வாராதனையாக நிறைவேறி வருகிறது.

## 82. பாறைக்கல்லில் :

இப்பொழுதும் கூட ஸ்ரீ மந்த்ராலயத்தில் மற்றும் நஞ்ஜன் கூடிலும் ஸ்ரீ ஸுக்ஞானேந்திரரின் ஆராதனை ஸ்ரீ ராயரின் ஆராதனை காலத்தில் வெகு சிரத்தா-பக்தி களினால் நடைபெறுகிறது. ஸ்ரீ ஸுக்ஞானேந்திரருக்கு 'அபயம்' அளித்த பிரகாரம் ஸ்ரீ மந்த்ராலயத்தில் சரீரத் துடன் வீற்றிருக்கும் ஸ்ரீ குருஸார்வபௌமர் நஞ்ஜன்கூடில் பாறைக்கல்லில் உற்பவித்தும் பத்மாஸனத்தில் அமர்ந்த வராய் க்ஞான அபயமுத்ரை அங்கிதராக காட்சி தந்து பக்தர்களைக்காப்பாற்றி வருகிறார். வரைபட ரூபத்தி லிருந்த ஸ்ரீ ராயர் இப்பொழுது சம்பூர்ணமாக வெளிப்பட்டு ப்ரதிமை உருவத்தில் பக்தருக்கு தரிசனம் அருளி வரு கின்றார். ஸ்ரீராயர் அநேக இடங்களில் ம்ருத்திகா ப்ருந்தா வனங்களில் ஸந்நிஹிதராயிருக்கின்றார். ஆனால் ஸ்வய மாக உற்பவித்து ப்ரதிமை உருவத்தில் வீற்றிருப்பது நஞ்ஜன் கூடில் மாத்திரமே! ஸ்ரீ ராயர் இன்றும் தம் அன்பரான ஸ்ரீ ஸுக்ஞானேந்திரரிடம் தமக்குள்ள கருணையை அதன் மூலம் தமது அபாரமான மகிமையை ஜகத்திற்கு காண்பிக் கின்றார்! "ஸ்தானம்" வேண்டிய முனிவருக்கு "தினம்", அளித்து மஹாமகிமையுள்ளவரின் பக்தவாத்ஸல்யத்தை எவ்வளவு வர்ணித்தாலும் அது மிகக்குறைந்ததே!

## 83. மஹிமாப்ரசாரக ரவி உதயமானான் :

ஸ்ரீ குருராஜரின் மகிமை இன்று நாட்டின் வீடுகள் தோறும் பரவியுள்ளது. அவரது மகிமை ஜகத்திலெல்லாம்

வியாபித்துள்ளது. லக்ஷக்கணக்கானவர்கள் ஜாதி, மதம், பரம்பரை, தேசம், மொழிகளின் வித்தியாசம் பாராட்டா மல் அந்த யதிபுங்கவரின் பக்தர்களாகி, சேவித்து, அவரது அனுக்ரஹத்தினால் தம் விருப்பங்களையெல்லாம் நிறை வேறப்பெற்று சுகமடைகின்றனர். பட்டிக்காடாக இருந்த மந்த்ராலயம் தேவேந்திரனின் ஆலயத்தைப்போல் காணப் படுகிறது. உலக மக்களை (People of the Universe)யும் புத்திமான்களையும் (Thinkers) தன்னிடம் ஆகர்ஷித்து பாரத நாட்டின் மிகப்ரஸித்தி பெற்ற யாத்திரை ஸ்தலங்களி லொன்றாகத் திகழுகின்றது.

ஸ்ரீ ராயர் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்த பிறகு இருநூறு வருஷங்களின் கடைசி பாகத்திலேயே கன்னட நாட்டில் ஸ்ரீ குருராஜரின் பூர்வாச்ரம வம்சத்தில் ஸ்ரீராயரின் வர பலத்தினால் இப்படிப்பட்ட அற்புத முன்னேற்றத்திற்குக் காரணரான ஸ்ரீ ராயரின் மகிமா ப்ரசாரக பாக்ய சூரியன் உதித்தானென்று சொல்லலாம். அந்த மஹானின் அனு க்ரஹத்திற்குப் பாத்திரராவதற்குக் காரணமான அந்த சந்தர்ப்பங்களை விவரிப்பது மிகமிக அவசியமாகிறது.

## 84. ஸ்ரீ ஸுப்ரக்ஞேந்திர தீர்த்தர் :

அன்று ஸ்ரீ ராயரின் மஹா பீடத்தில் ஸ்ரீ குருஸார்வ பௌமரால் "ஸ்தானம் மற்றும் தினம்" இவைகளைப் பெற்ற மஹானுபாவரான ஸ்ரீ ஸுக்ஞானேந்திர தீர்த்தர் கி. பி. 1884-1903 வரை அமர்ந்திருந்தார். ஸ்ரீபாதரின் அண்ணனின் மகனான ஸ்ரீ வேணுகோபாலாசார்யர் (இவர் பிறகு ஸ்ரீ ஸுக்ருதேந்த்ர தீர்த்தரென்று ஸ்ரீ ராயரின் பீடத்திலமர்ந்தவர்) ஸ்ரீ மடத்தின் முக்ய பண்டிதரும், அதிகாரியுமாய் ஸ்ரீயவர்களின் விசேஷ அன்பிற்குப் பாத்திரராயிருந்தார். வேணுகோபாலாசார்யரின் தர்ம பத்னி கங்காபாயி. ஆசார்ய தம்பதிகளுக்கு ஒரு மகள் பிறந்திருந்தாள். ஆனால் பிறகு வெகுகாலம் சந்தானம் உண்டாகவில்லை. ஸ்ரீ குருராஜரின் தாய்-தந்தையர் குல தேவனான ஸ்ரீநிவாஸப் பெருமாளிடம் வம்சவிளக்கிற்காக

மகன் வேண்டி சேவை செய்த பிறகு ஸ்ரீ வேணுகோபாலா சார்யர் தம் வம்சத்தின் பூர்வாசார்யரும் லோக குருகளுமான ஸ்ரீ குருராஜரைச் சரணடைந்து பத்னி ஸஹிதமாக மந்திராலயத்திற்குச் சென்று வ்ரத நியம உபவாஸம் முதலியவைகளினால் பக்தி சிரத்தா பூர்வகமாய் ஸ்ரீ ராயரை சேவிக்க ஆரம்பித்தனர்.

ஸ்ரீ வேணு கோபாலாசார்யர் ஸ்ரீ ராயரிடம் அஸாதாரண விசேஷ குணமுள்ள ஸத்புத்ரனையே அடைய அருளும்படி வேண்டிக் கொள்ள ஆரம்பித்தார். ஆசார் யருக்கு ஸாதாரணமான புத்திரன் குலவிளக்காகப் பிறக்க வேண்டுமென்பது போதவில்லை, அவர் விரும்பின புத்ரன் ஸ்ரீ குருராஜரின் இடைவிடாத பக்தனாக இருக்கவேண்டும்; வேறு யாரும் செய்யாத முறையில் ஸ்ரீ ராயரின் சேவை செய்ய வேண்டும். மந்த்ராலயத்தைத் தாஸராயர் சொன்ன படி ஸுரபதி தேவேந்திரன் (பகவானுடைய) ஆலயமாகவே செய்யவேண்டும்; ஸ்ரீ ராயரின் மகிமை கீர்த்திகளின் கொடியை ஜகத்தில் விளங்க வைத்து உலகமெங்கும் ஸ்ரீராயரின் மகிமைப் பிரசாரம் செய்து லோகத்தில் ஜனங்கள் ஸ்ரீராயரின் பக்தராய் அவரைச் சேவித்து அவரது அனுக்ரஹத்திற்குப் பாத்திரராகிக் கீர்த்தி பெறுபவர்களாக லோக க்ஷேமத்தையே விரும்பும் ஸத்புத்ரன் அவருக்குத் தேவை. அதுவே அவருடைய சேவையின் லக்ஷ்யமாயிருந் தது. இப்பேர்ப்பட்ட குமாரனைக் கருணை செய்ய வேண்டுமென்று ஆசார்யர் ஸ்ரீராயரை ஒவ்வொரு நாளும் அனன்ய பாவத்துடன் ப்ரார்த்தித்து வந்தார்.

48 நாட்கள் ஆசார்ய தம்பதிகளின் சேவை நல்ல முறையில் கிரமப்படி நடந்தது. ஆசார்யரின் சேவையினால் மகிழ்ச்சியடைந்த ஸ்ரீராயர் அன்றிரவில் தம்பதிகளுக்குக் கனவில் அபய-வரத ஹஸ்தங்களுடன் புன்னகை புரிந்து தரிசனமளித்து, "ஆசார்ய! குமாரி, உங்களது உயர்ந்த லக்ஷ்யம், குருபக்தி, ஸேவைகளினால் ப்ரீதியடைந்துள் ளோம்! உமது மனவிருப்பம் பலிக்கும். இதோ வரம் தருகிறோம்! நமது பரமானுக்ரஹத்திற்குப் பாத்திரரும்,

நமது அந்தரங்க பக்தரும், ஸாத்வீக தெய்வீக ஸம்பத்துடன் கூடியவனும், நமது வம்சம் மற்றும் மஹாஸமஸ்தானங்களின் கீர்த்தியை விளங்க வைப்பவனும், ஆன ஒரு புத்ரன் உங்களுக்கு என் சார்பாகப் பிறப்பான். உங்களுக்கு மங்கள முண்டாகட்டும் '' என்று சொல்லி தம்பதிகளிருவருக்கும் ஒரு ஸ்ரீ ராமவிக்ரஹம், பூச்சரம், சந்தனம் மற்றும் பல மந்த்ராக்ஷதைகளை அனுக்ரஹம் செய்து மறைந்தார். விடியற்காலம் எச்சரிக்கையானதும் ஆசார்ய தம்பதிகள் கனவின் சமாசார்த்தை ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டு ஸ்ரீ ராயரின் க்ருபையாயிற்றென்று மகிழ்ச்சியடைந்து ஸ்ரீ குருராஜருக்கு ஹஸ்தோதகம் ஸமர்ப்பித்து உத்திரவு பெற்று நஞ்ஜன்கூடிற்குத் திரும்பினர்.

ஸ்ரீ வேணு கோபாலாசார்யர் ஸ்ரீ ஸுப்ரக்ஞேந்திர தீர்த்தரிடம் ஸ்ரீ ராயரின் அனுக்ரஹம், கனவின் விஷயங்களை விக்ஞாபித்தார். ஆனந்தமடைந்த ஸ்ரீகளவர்கள் புன்னகை செய்து இவ்வாறு சொன்னார் :- '' வேணு ! நீ மாஹாபாக்ய சாலியப்பா ! விச்வ கல்யாண மூர்த்திகளான ஸ்ரீராயரின் மகிமை ப்ரசாரத்தில் உனக்கு எவ்வளவு தீக்ஷை ? ஸ்ரீராயர் ஸ்ரீராமப்ரதிமை, பூச்சரங்களை உனக்கருளியுள்ளாரல்லவா ? அதன் அர்த்தம் புரியுமா ? ஜகன் மங்கள மூர்த்தியான ஸ்ரீ மூலராமனை பூஜிக்கும், அதாவது வருங்காலத்தில் நமது மஹாபீடத்திற்கு அதிபதியாகப் போகும் • புத்திரனையே உனக்கு அளித்துள்ளோம் என்று ஸ்ரீராயர் உனக்கு ஸூசனை செய்துள்ளார் ! நீ விரும்பினபடியே உன் புத்ரன் ஸ்ரீராயரின் மகிமையின் ப்ரசார காரியத்தை பூமாலையை எவ்வளவு சுலபமாக கையிலெடுக்க முடியுமோ அவ்வளவு சுலபமாக நிறைவேற்றுவானென்பது கனவின் கருத்து. இதில் சந்தேகமில்லை. இப்பேர்ப்பட்ட மகனைப் பெறப்போகும் நீ உண்மையாகப் போற்றத் தகுந்தவன்.

ஸ்ரீ ராயரின் கருணை கிடைத்த பிறகு கேட்க வேண்டுமா ? சில நாட்களிலேயே கங்காபாயி கர்பமுற்றாள். ஒன்பது மாதங்கள் பூர்த்தியான பிறகு சுபமுகூர்த்தத்தில் (கி. பி. 1896) துர்முகி வருடம் மார்கசிர சுக்ல பூர்ணிமா

தினத்தன்று ஸ்ரீ குருராயரின் வரபலத்தினால் சத்புத்திரனைப் பெற்றெடுத்தாள். ஸ்ரீ குருராஜரின் மஹிமாப்ரசாரக சூரியன் உதித்தான்! ஸ்ரீஸுப்ரக்ஞேந்திர தீர்த்தர் உத்தரவின்படி வேணு கோபாலாசார்யர் வைதிக நியமப்ரகாரம் புத்ரனுக்கு ஜாத கர்ம, நாமகரணங்களை வைபவத்துடன் நடத்திக் குலதேவனான வேங்கடேச்வர, இஷ்டதேவ நஞ்ஜன்கூடின் ஸ்ரீகண்டேச்வர, வம்சத்தின் பூர்வாசார்யரான ஸ்ரீ ராக வேந்த்ர ஸ்வாமிகளின் பெயர்கள் வரும்படியாக மகனுக்கு "ஸ்ரீநிவாஸ நஞ்சுண்ட ராகவேந்திரன்" என்று பெயர் சூட்டினார். ஸ்ரீகுரு கருணையில் பிறந்த இந்தப் பாலகனே பிறகு ஸ்ரீநிவாஸமூர்த்தி ஆசார்யரென்னும் பெயரினால் வளர்ந்து கி. பி. 1933-ல் ஸ்ரீராகவேந்த்ர ஸ்வாமிகளின் மடாதிபதிகளாயிருந்த ஸ்ரீ ஸுப்ரதீந்த்ரதீர்த்தரின் வர குமாரராய், "ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தர்" என்னும் பெயருடன் ஸ்ரீ ராயரின் பீடத்தில் 33 வருடகாலம் அமர்ந் திருந்து, இடைவிடாமல் 25 வருடங்கள் காலம் தன் கைகளி னாலேயே ஸ்ரீ குருராஜரைச் சேவித்து ஸ்ரீ மந்த்ராலயத்தை எல்லாவகையிலும் அபிவிருத்தி செய்தார். ஸ்ரீ ராயரின் மகிமை தேசவிதேசங்களிலும் பரவும்படி செய்து, "ஸ்ரீ ராயரின் கருணையின் புத்ரன்" "மந்த்ராலய மஹாசிற்பி" யென்று கௌரவமடைந்தார்.

## 85. மந்த்ராலயத்தின் மஹாசிற்பி :

மந்த்ராலய க்ஷேத்திரத்தின் அபிவிருத்தி, ஸ்ரீகுருராஜரின் மஹிமை ப்ரசாரம் செய்த கீர்த்தி, நான்கு மஹான்களைச் சாரும், முதலாவது ஸ்ரீ சுசீலேந்திரதீர்த்தர். இரண்டாவது ஸ்ரீ ஸுப்ரதீந்திர தீர்த்தர், மூன்றாவது ஸ்ரீ ஸுயமீந்த்ர தீர்த்தர், நான்காவது ஸ்ரீ ஸுஜயீந்திரதீர்த்தர்.

## 86. ஸ்ரீ குருராஜரின் ப்ரதீமாஸ்தானியர் :

ஸ்ரீ ஸுக்ருதீந்திர தீர்த்தரின் (ஸ்ரீ ஸுயமீந்திரனின் பூர்வாச்ரம தந்தை) பூர்வாச்ரம சகோதரரான ஸ்ரீசுசீலேந்திரதீர்த்தர் கி.பி. 1912—1926 வரை ஸ்ரீராயரின் பீடத்தில் அமர்ந்த புண்ய புருஷர். இவர் திகந்த பண்டிதர்

ஸ்ரீ குருராஜரின் பரமானுக்ரஹத்திற்குப் பாத்திரரான அந்த ரங்க பக்தர். இவருடைய காலத்தில் ஸ்ரீமடத்தின் கீர்த்தி திக்குகளெல்லாம் பரவிற்று. இவர் தமது வாழ்க்கையையே ஸ்ரீராயரின் சேவை, மடஅபிவிருத்தி, மந்தராலயத்தின் அபிவ்ருத்தி, ஸ்ரீராயரின் மகிமைப்ரசாரம், வித்வான்கள் பண்டிதர்களுக்கு ஆதரவு, பக்த ஜனங்களை ரக்ஷிப்பது ஆதி காரியங்களில் ஒதுக்கி வைத்த மஹான். பாரத நாட்டில் எல்லா இடங்களிலும் சஞ்சாரம் செய்து, தத்வ தர்ம ப்ரசாரம், ஸ்ரீராயரின் மகிமை ப்ரசாரம், வித்வத்சபா (ஸதஸ்)க்களை நிர்மாணம் செய்து இவ்வாறு '' ஸ்ரீராயரின் ப்ரதிமாஸ்தானீய ''ரென்று எல்லோராலும் புகழப்பட்டார். வெகுகாலம் மந்த்ராலயத்திலிருந்து அவ்விடத்திய ஸ்ரீராயரின் பூஜை முதலியன கிரமமாக நடக்கும்படி செய்து யாத்ரீகர்களுக்குச் சாப்பாடு முதலிய ஏற்பாடுகள், அனுதினமும் அலங்காரம், ஹஸ்தோதகம் க்ரமங்களை ஏற்படுத்தி, கட்டட அபிவ்ருத்தி செய்து ஸ்ரீராயரின் ஆராதனையை 3 நாட்கள் வைபவத்துடன் நிறைவேற்றிக் கொண்டு, அதேகாலத்தில் ஸ்ரீ ஸமீரஸமய ஸம்வர்த்தினீ வித்வத் சபையைச் சிறப்பாக நடத்தி, தத்வம், தர்மப்ரசாரம், ஸ்ரீராயர் அகம்ய மஹிமை ப்ரசாரங்களையும் செய்து மந்த்ராலயத்தின் கீர்த்தி பரவும்படி செய்தார். இவர் பிறகு தார்வாட்ஜில்லாவைச் சேர்ந்த ரித்தி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ திரேந்த்ரதீர்த்தரின் ஸந்நிதியில் மஹா மஹாபண்டிதரான ஸ்ரீராயரின் வம்சத்திய தௌஹித்ரர் (மகள் மகன்) ஸந்ததிய ரான ஸ்ரீ துர்கத்தின் கிருஷ்ணாசார்யருக்கு சந்யாஸாச்ரமம் அளித்து ஸ்ரீஸுப்ரதீந்திரதீர்த்தரென்னும் பெயரால் ஸர்வஜ்ஞ பீடாதிபதியாக்கி கி.பி. 1926இல் ப்ருந்தாவன ஸ்தரானார். ப்ருந்தாவனஸ்தராகும் முந்தினநாளன்று ஸாக்ஷாத்தாக ஸ்ரீ குருராஜர் அவருக்கு தரிசனமளித்து அனுக்ரஹித்தார்.

**87. அஜாத சத்ரு :**

ஸ்ரீஸுப்ரதீந்த்ரதீர்த்தர் ஸ்ரீராயரின் பீடத்தில் கி.பி. 1926 –1933 வரை அமர்ந்திருந்து தமது குருகளைப் போலவே ஸ்ரீமடத்தின் அபிவிருத்தி செய்து ஸ்ரீராயரின்

மஹிமாப்ரசாரம் செய்து வந்தார். இவர் மிக சாந்த மூர்த்திகளாயிருந்தார். ப்ரகாண்ட பண்டிதர், மஹா தபஸ்விகள். இவருடைய காலத்திய வித்வத் சபைகள் வரலாற்றுப் பிரஸித்தி பெற்றவை. ஏழே வருட காலம் பீடாதிபதிகளாயிருந்தாலும் இவர் செய்த காரியங்கள் மகத்துவம் வாய்ந்தவை. தக்ஷிணபாரதத்தில் ஸ்ரீராயரின் வெற்றிக் கொடியைப் பறக்கச் செய்த தீரர். ஜகத்தே தமது என்ற உயர்ந்த லக்ஷியத்தையுடைய இந்த மஹானுபாவர் அஜாதசத்ருவென்று எல்லோராலும் கௌரவம் பெற்றவர்.

1933ல் ஸ்ரீமுக வருஷம் வைசாக சுக்ல சதுர்த்தியன்று ஸ்ரீகளவர் தமது குருகளின் ஆக்ஞைப்படி ஸ்ரீராயரின் வம்சத்தினரும், ஸ்ரீ ஸுக்ரு தேர்த்ததீர்த்தரின் பூர்வாச்ரம புத்திரரும் ஸ்ரீஸுக்ருதேந்த்ரதீர்த்தரின் பரம ப்ரீதிபாத்ரரு மானவரும் மடத்தின் திவானருமாயிருந்த, ராஜா ஸ்ரீநிவாஸ மூர்த்தியாசார்யருக்குப் பரமஹம்ஸாச்ரமம் அளித்து வைசாக சுக்ல பஞ்சமி தினம் ஸ்ரீமத்வாசார்யரின் திக்விஜய வித்யா சிம்மாஸனத்தில் அவரை அமர்த்தி, "ஸ்ரீஸுயமீந்திர தீர்த்த"ரென்னும் பெயரினால் ஸாம்ராஜ்யாபிஷேகம் செய் வித்து மஹா ஸமஸ்தானத்தை அவருக்கு ஒப்புவித்து, "ஸ்ரீகுருராஜரின் மகிமையை ஜகத்தில் நன்றாக ப்ரசாரம் செய்து மந்த்ராலயத்தை அபிவிருத்தி செய்து வெகு காலம் ஸ்ரீராயரின் சேவை செய்து கீர்த்தி பெறுவாய்" என்று மகிழ்சியுடன் ஆசிர்வதித்து வைசாக சுக்ல ஏகாதசி தினத்தன்று ஸ்ரீகுருராயரின் ஸந்நிதியில் ஸ்தானம் பெற்றுக் கொண்டதே இவரது மஹிமைக்கு சாக்ஷி. ஸ்ரீ ஸுவ்ரதீந்திர தீர்த்தர் மனமகிழ்ச்சியுடன் அந்த: கரணபூர்வகம் ஸ்ரீஸுயமீந்திர தீர்த்தருக்குச் செய்த ஆசிர்வாதம் சீக்கிரத் திலேயே பலித்தது!

**88. ஸ்ரீகுருராஜரின் மகிமை ப்ரஸாரகர் :**

ஸ்ரீராயரின் வரப்ரஸாதத்தினால் அவதரித்த ஸ்ரீ ஸுய மீந்திர தீர்த்தர் ஸ்ரீ குருராஜரின் பீடத்தில் கி.பி. 1933-1967 வரை (1967 ஜனவரி 12ந்தேதி வரை) 33 வருஷங்கள்

அமர்ந்திருந்தார். ஸ்ரீ ஸுக்ருதேந்திரர் பூர்வாச்ரமத்தில் எந்த மகத்தான கார்யத்திற்காக ஸ்ரீராயரிடமிருந்து வர புத்ரராக ஸ்ரீஸுயமீந்திரரைப் பெற்றாரோ அந்தக் கார்யத்தை வெற்றியுடன் நிர்வகிக்க வேண்டிய தகுதியும் திறமையும் அவருக்குக் கிடைக்கும்படி பால்யத்திலிருந்தே பழக்கிக் கொடுத்தார். பிறகு ஸ்ரீ ஸுசிலேந்திரர் இவருக்கு ஸ்ரீராயரின் பைத்தியம் உண்டு பண்ணி (அதாவது ஸ்ரீராயரிடம் பக்தி உண்டு பண்ணி) இவரை ஸ்ரீராயரின் ஏகாந்த பக்தராக்கி ஸகல விதங்களிலும் பயிற்சி கொடுத்து அனுக்ரஹம் செய்தார். பிறகு ஸ்ரீஸுவ்ரதீந்திரர் இவருடைய ஸ்ரீ குருராஜ பக்தி ரூபமான கொடிக்குத் தண்ணீர் பாய்ச்சி அதை பலவகையிலும் துளிர்த்துப் புஷ்பிக்கும்படி செய்தார். இவ்வாறு முனித்ரயர்களின் கையில் தயாரான ஸ்ரீஸுயமீந்திரர் ஸ்ரீ குருபக்த வார்ப்படத்தில் புடம் போட்டுப் பத்தரை மாற்றுத் தங்கம்போல் காந்தியுள்ளவராகவும் தேஜஸ்விகளாகவும் அந்த மூன்று யதிவர்யர்களின் உபதேசம் பயிற்சி பரமானுக்ரஹத்தினால் நிகரற்ற தனிச் சிறப்பைச் சம்பாதித்து ஸ்ரீ குருராஜரின் மஹிமை ப்ரசாரக சிரோமணியாக உருவானார். ஸகல சாஸ்த்ரார்த்தஸாரத்தை வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும் (Step நடைமுறையில் கொண்டு வந்து ஸ்ரீ குருராஜரின் இரண்டு வம்ச விளக்காக உத்தம குருகளாக எல்லோருடைய கௌரவத்திற்கும் பாத்ரரானார்.

ஸ்ரீ ப்ரஹ்லாதாவதாரரான ஸ்ரீ குருராஜர் 'श्री कृष्णग्रह गृहीतात्म' ரானால் சுயமீந்திரர் श्री राघवेंद्रग्रह गृहीतात्म ரானார். ஸ்ரீ ராயர், 'हरिपादकंज निषेवणाल्लब्ध समस्त संपद' ரானால் இவர் ஸ்ரீ குருராஜரின் சரணக் கமலாராதனையினால் ஸகலவித ஸம்பத்தைச் சம்பாதித்து அதை 33 வருஷ காலம் ஸ்வஜன-பரஜன சிஷ்ய பக்த, பண்டித, பாமரரின் க்ஷேமத்திற்கும் முன்னேற்றத்திற்காகவும் வினியோகம் செய்தார். பரிபக்குவமான மனம், நிர்மலமான இதயம், கருணை, ஸஜ்ஜனர்களிடம், சரணடைந்தவரிடம் இயற்கையான வாத்ஸல்யம் (புத்ரப்ரேமை) இவை எல்லாவற்றிற்கும்

கலசம் வைத்தாற்போலப் பல ஜன்மங்களில் ஸம்பாதித்த பரமாத்ம விஷயஞானம், திடபக்தி, வைராக்யம், தவம், ஸ்ரீ வாயு பகவான், ஸ்ரீ குருராஜர்களில் அஸாதாரணமான பக்தி இந்த மனோவ்ருத்தி இவரை அஹங்கார, மமகாரம், கர்வம் முதலியவைகளுக்குக் காரணமான அர்த்தமில்லா பைத்தியக்காரத்தனமான கீர்த்தியை விரும்பாமல், ஸ்ரீ நரசிம்ம ஸ்வாமி சொன்ன, 'मद्भक्तास्त्वामनुव्रताः என்னும் ஜபத்திலேயே லயித்திருக்கும்படி செய்தது.

89. அஸாதாரண பக்தி :

ஸ்ரீராயரிடம் இவருக்கிருந்த பக்தி அஸாதாரணமும் உறுதியுள்ளதுமாயிருந்தது. எழுந்திருக்கும் பொழுதும் உட்காரும் பொழுதும் ஸதா ஸ்ரீராயரின் த்யானம்தான் எல்லா இந்திரியங்களும் ஸ்ரீ குருபக்தியில் ஈடுபட்டிருந்தன. இவரின் மூச்சு ஸ்ரீராயரின் ஸ்தோத்திரமாயிருந்தது. ஸ்ரீராயரின் மகிமை, தனிச்சிறப்பு, இவைகளை எவ்வளவு உபதேசித்தாலும் இவருக்கு த்ருப்தியே கிடையாது. அவ்வாறே ஸ்ரீ மந்த்ராலயத்தை விட்டுவருவதற்கு இவருக்கு மனம் வருவதில்லை. எவ்வளவோ முறை ஸ்ரீராயரின் பிருந்தாவனம் முன்நின்று ஸத் பக்தி உணர்வு நிறைந்தவராய் ஆனந்தக் கண்ணீர் பெருக ப்ரார்த்தனை செய்து கொண்டிருந்த காட்சியைக் கண்டு வியந்த எவ்வளவோ ஜனங்கள் இன்று கூட வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். பக்தி செய்வதைக் கற்க வேண்டும் ஸ்ரீஸுயமீந்திரரிடம் என்பது லோகோக்தி (பழமொழி) யாக வழங்க ஆரம்பித்தது.

தாம் ஒருவரே ஸ்ரீராயரின் பக்தராய், குருபக்தி பரவசராய் ஆனந்தமடைந்திருப்பதிலேயே இவர் ஆழ்ந்திருக்க வில்லை; திருப்தியடையவில்லை. அந்த பக்தி தம் வரைக்கும் நிலைக்க வேண்டுமென்று விரும்பவில்லை. எல்லோரும் ஸ்ரீராயரின் பக்தராகவேண்டும் என்று இவர் விரும்பினார். ஸ்ரீகளவரின் மனம் பூரித்தது. கலியின் தோஷத்தினால் களங்கமாகியுள்ள ஜகத்தானது கண்களைக் கட்டிவிட்டது. பாரத நாட்டின் உயர்ந்த கலாசாரம், பரம்பரைகளை

மறந்து தர்ம ப்ரஷ்டராய் (தர்ம நெறியைப் புறக்கணித்து) எல்லாம் வல்ல இறைவனையே மறந்து அதோகதிக்கு அழைத்துச் செல்லும் மார்க்கத்தில் புகுந்து கொண்டிருக்கும் ஜனங்களின் பயங்கரக் காட்சி இவருடைய மனக் கண்ணாடியில் தோன்றி இந்த ஜனங்கள் என்று, எவ்வாறு இந்த நிலையிலிருந்து விடுதலை பெற்றுத் தப்புவார்களோ என்ற கவலை இவரைப் பிடிக்கத் தொடங்கிற்று. இந்தக் கலி யுகத்தில் இப்பேர்பட்ட மிக கஷ்டமான காலத்தில் ஜனங்களைக் காப்பாற்றி உய்வித்து அவர்களுடைய மறு மலர்ச்சி, க்ஷேமங்களை உண்டாக்கிக் காப்பாற்றுவதற்கு ஸ்ரீ ப்ரஹ்லாதாவதாரரான ஸ்ரீ ராகவேந்திர குருக ளொருவரே சக்தியுள்ளவர். அவரே கதி, இன்றைய தர்மக்ஞானிக்கு ஸ்ரீராயரே காயாகல்பம் (ஸஞ்சீவி மருந்து) என்று ஸ்ரீகளவர்கள் உணர்ந்தார்.

''ப்ரஹ்லாதா! உனது பக்தராய், உன்னைப் பின்பற்றினால் எனது பக்தராவதற்கு அருகதை உள்ளவர், உன்னை முதலில் ஸ்மரணை செய்து பிறகு என்னை ஸ்மரணை செய்தவர் எல்லா துக்கங்களிலிருந்தும் விடுபட்டு (त्वां च मां च स्मरन् काले कर्म बन्धात प्रमुच्यते) நிரந்தரமான ஸுகத்தை அனுபவிப்பார்கள்'' என்று ஸ்ரீ நரசிம்மஸ்வாமி வரமளித்துள்ளாரல்லவா? அந்த ப்ரஹலாதனே நம்ம ஸ்ரீ குருராஜர்! ஜகத்தின் ஜனங்கள் ஸ்ரீ குருராயரை பின்பற்றும்படி செய்தால், அவருடைய பக்தராகும்படி செய்தால் ......ஆஹா! அவ்வாறு ஆனால் இவருடைய பக்தர்கள் ஸ்வபாவத்திலேயே ஆஸ்திகர்கள், பகவத் பக்தர்கள், தார்மீகர்கள் ஆகிவிடுவார்கள் ஆகையால் ஜனங்கள் இவரைச் சரண்புகும்படி செய்தால் போதும். லோகம் க்ஷேமமடையும். இந்த மகத்தான காரியம் வெற்றிபெற முதலில் ஜனங்கள் இவருடைய பக்தராக வேண்டும். ஜனங்கள் இவரது பக்தராகவேண்டுமானால் ஸ்ரீ ராயரின் மகிமை ஜகமெல்லாம் பரவவேண்டும். அந்த மகத்தான காரியம் ஒன்று உம்மாலாகுமானால் நமது வாழ்க்கை அர்த்த முள்ளதாகும். இனி வருங்காலத்தில் இதே நமது வாழ்க்கை யின் லக்ஷியம்! என்று சுயமீந்திரர் நிச்சயித்தார். அவ்வளவு

தான். மந்த்ராலயத்தில் அன்றிலிருந்தே ஆரம்பமாயிற்று இவரது தவம்! ஸகல சுயநலம், கீர்த்தி கௌரவங்களைப் புறக்கணித்து, ஸ்ரீ ராயரின் சேவை மஹிமையைப் பரவச் செய்வதில் ஈடுபட்டார்.

மந்த்ர ஸித்தி க்ஷேத்ரமாயிருந்த மந்த்ராலயம் ஸ்ரீ ராயர் ஸந்நிதானத்திலிருந்து அபீஷ்டஸித்தி க்ஷேத்திரமாய் தீர்த்த யாத்திரை க்ஷேத்திரமாக மாறினால் ஸ்ரீ சுயமீந்திரரின் தவத்தினால் அது "பக்தி மந்திரம்" ஆயிற்று. தேவேந் திரன் (தேவாதி தேவனின்) ஆலயமாயிற்று. காடு நந்தவன மாயிற்று. அங்குள்ள மரங்கள், கொடிகள், செடிகள் கற்பக விருக்ஷமாயின. பசு-பக்ஷிகள் காமதேனுகளாயின. துங்க-பத்ராவோ தேவ கங்கையானாள். துங்காவின் தரங்கங்களி (அலைகளி) லிருந்து புனிதமான விசாலமான பாறைக் கற்கள் சிந்தாமணிகளாயின. ஸாக்ஷாத் ராகவேந்திரரே இந்திரனானார். ஸ்ரீமூலராமர் உபேந்த்ரனானார்! வாதீந் திரர் முதலானவர்கள் ரிஷிமுனிகளானார்கள். மந்த்ராலயத் திற்கு வருகின்ற பக்த பூஸுரர்கள் (அந்தணர்கள்) தேவர் களானார்கள். ஹரிதாஸர்கள் வந்திமாதரானார்கள். (புகழ் பாடும் பக்தர்கள்) ஸ்ரீஸுயமீந்திர குருமஹா உபதேசமே அமிர்தமானது! ஸ்ரீஸுயமீந்திரரின் தவத்தின் செல்வாக்கினால் தேவதைகளின் ஸ்வர்க்கம் பூமிக்கு இறங்கி வந்தது!

ஒவ்வொரு நாளும் இங்கு புதிய புதிய உற்சவங்கள் நடக்கும். தினசரி இங்கு புதிய மகிமை உண்டாகும். ஒவ்வொரு நாளும் புதிய பேச்சுகள் நடக்கும் என்னும் அபரோக்ஷக்ஞானிகளின் பவிஷ்ய வாணிகள் (Prophecies) அனுதினமும் காணப்பட்டது.

ஏறக்குறைய 25 வருஷகாலம் இடைவிடாது ஸ்ரீ ஸுய மீந்திரர் தன் கைகளால் ஸ்ரீ ராயரின் சேவை செய்து கொண்டு நிகரற்ற பக்தி-சிரத்தைகளினால் ஆராதித்துக் கொண்டு ஜகத்தின் க்ஷேமத்திற்காக, மங்களத்திற்காக ப்ரார்த்தனை செய்யவாரம்பித்தார். ஸ்ரீயவர்களின் தவம்,

இடைவிடாத முயற்சியின் பலனாக அவருடைய அவதார காரியம் வெற்றி பெற்றது. மந்த்ராலயம் மஹா தீர்த்த க்ஷேத்திரம், யாத்திரை ஸ்தலமாக லக்ஷக்கணக்கான ஜனங் களை ஆகர்ஷித்து ப்ரதிதினமும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஸ்ரீ ராயரிடம் சரணடைய வந்து சேவை செய்யவாரம் பித்தனர். வரும் ஜனங்களின் எண்ணிக்கை கூடிக்கொண்டே போயிற்று. யாத்ரீகர்களுக்கு வஸதி, போஜன வஸதி, செய்ய வேண்டியதாயிற்று. அதற்காக அநேக கல் மண்டபங்கள், கட்டிடங்களாயின. ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான வர்களுக்கு உணவுக்கு ஏற்பாடாயிற்று. ஸ்ரீயவர்களுக்குப் பலவித பக்வான்னங்கள் செய்வித்து ஸ்ரீ ஹரி வாயு குரு ராஜருக்கு ஸமர்ப்பித்து ஆயிரமாயிரம் ஜனங்களைச் சேர்ந் தாற்போல் உட்கார வைத்து சாப்பிடச் செய்வது ஸ்ரீயவர் களின் ஒரு பைத்தியக்காரத்தனம் என்று சொல்வதைப் போலாயிற்று. அந்த வைபவத்தை, பக்தர் வாத்ஸல்யத் தைப் பார்த்து ஸ்ரீகளவர்கள் மெய்மறந்திருப்பார். ஆயிரக் கணக்கான குரு பக்தர்கள் ஒன்றாக உட்கார்ந்து குரு ப்ரஸாதத்தை உண்ணும் புனிதக் காட்சியைக் கண்டு ஸ்ரீயவர்கள் பக்தியால் புளகாங்கிதராய் ஆனந்தக் கண்ணீர் விடுவார்.

ஸ்ரீகளவர் ஸ்ரீ குருராஜரின் ஸேவைக்ரமங்கள் சரிவர நடந்து பூஜாராதனை ஸாங்கோபாங்கமாக நிறைவேற ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன ஸந்நிதிக் காரியாலயம் (office) நிறுவினார். சைத்ர மாதத்திலிருந்து பால்குண மாதம் வரை நித்ய, நைமித்திக, உற்சவம், பண்டிகை, ஹரிதினம், குருபர்வங்கள், நல்லமுறைப்படி நிறைவேற்றும் க்ரமம் ஏற்படுத்தினார். 3 நாட்கள் நடந்து வந்த ஸ்ரீராயரின் ஆராதனை "ஸப்தராத்ரோத்ஸவ"மென்ற பெயரினால் ஸ்ரீராயரின் ஆராதனையை ஏழுநாட்கள்வரை அநேக நிகழ்ச்சிகளுடன் நீடித்தார். அதே சமயம் ஸ்ரீ மடத்தின் பரம்பரையாக நடந்து வந்து கொண்டிருந்த ஸ்ரீ ஸமீர ஸமய ஸம்வர்த்தினி வித்வத் சபையை விசேஷ முறையில் நடத்தி தேச தேசங்களிலிருந்து வந்து கொண்டிருந்த த்ரிமதஸ்த பண்டிதோத்தமர்கள், மாணவர்கள், ஹரிதாஸர்கள்,

உபந்யாஸகர்கள், சங்கீத வித்வான்கள், கலைஞர்களுக்கு விசேஷ முறையில் தாராளமாக சம்பாவனைகள் அளித்து பண்டிதோத்தமர்களுக்குத் தங்கப்பதக்கம், சரிகை சால்வை, சம்பாவனைகளுடன் வித்யா பட்டங்கள் அனுக்ரஹித்து, வாக்யார்த்த விசாரகோஷ்டி, பண்டிதர்களின் உபந்யாஸம், ஹரிகதா, சங்கீதம், பஜனை முதலான அநேக கலாசார, தார்மீக, மற்றும் உற்சவ நிகழ்ச்சிகளில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் பங்கேற்று ஸ்ரீ குருராஜரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவதற்கு வாய்ப்பளித்தார். ஸ்ரீ குருராஜரின் பஞ்சாம்ருதம், ஸ்ரீமூலராமரின் பூஜாராதனை, அலங்காரம், ஸ்ரீ குருராஜரின் பூஜை, தீர்த்த ப்ரஸாதம், பூரிபோஜனம் (भूरि भोजनं) ராத்ரி தீபாராதனை, வாகன உற்சவம், ஸ்வஸ்தி வாகனம், மஹாமங்களாரதிகளில் பங்குபெற்று ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஸ்ரீ குருராஜரின் ஜயகோஷம் செய்து கொண்டு மெய்மறந்து நிற்கும் அந்தக் காட்சி இன்றும் எல்லோருடைய கண்களுக்கும் தெரிவதைப் போல் உள்ளது.

ஸ்ரீ களவரின் காலத்தில் மந்த்ராலயத்தின் நாலாதிசையிலும் முன்னேற்றமாகியிருந்தது. கட்டிடங்கள், மின்சார விளக்குகள், மருத்துவ வஸதி, வங்கி வசதி, கணக்கு ஆய்வு (Auditing of Accounts). வெள்ளி ரதம், மஹாபாடசாலை, முதலானவைகள் ஏற்பட்டு ஜகத்தை மந்த்ராலயம் தன்னிடம் ஆகர்ஷிக்கும்படி ஆயிற்று, இது பாரதநாடு முழுவதிலும் ஸ்ரீ குருராஜரின் பக்தர் இருப்பது ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தரின் காரியங்களில் ஈடுபாடு, 30 வருடங்களின் இடைவிடாத உழைப்பு, தபஸ்ஸின் பலனென்று பறை சாற்றலாம். அவ்வாறே பக்தகோடிகள் அவரை ''மந்த்ராலயத்தின் மஹாசிற்பி''களென்று கௌரவிக்கின்றனர். தேச தேசங்களிலிருந்து பலவித கஷ்டங்களினால் நொந்துபோய் வருகின்ற ஜனங்கள் மந்த்ராலயத்தில் சேவை செய்து பரம கருணைக் கடலான ஸ்ரீ குருராஜரின் அனுக்ரஹத்தினால் தம் எல்லாக் கஷ்டங்களையும் இடையூறுகளையும் பரிகாரம் செய்து கொண்டு மகிழ்ச்சியுடனும் நிம்மதியுடனும்

ஸ்ரீ குருராஜரை ஒரே உணர்ச்சியுடன் சேவிக்கும், ஆடிப்பாடி மகிழ்கின்ற காட்சியை இன்று அங்கு ஒவ்வொரு நாளும் காணமுடிகிறது. இதற்கு ஸ்ரீ ஸுயமீந்த்ர தீர்த்தரே காரண மாயிருக்கின்றார். அவர் அங்கு வருகின்ற ஆயிரக்கணக் கான ஜனங்களுக்கு வஸதிபோஜனம் முதலிய ஸகல வஸதி களையும் ஏற்படுத்திக் கொடுத்து மற்ற எந்தக் கவலையையும் விட்டு ஒரே உணர்வுடன், பக்தி சிரத்தையுடன் ஸ்ரீ குருராஜ ரைச் சேவிக்கும்படி செய்து அதன் மூலம் குருராஜரின் மகிமை ஜகத்திலெல்லாம் பரவும்படியும் பகவான் குருகளிடம் நம்பிக்கையும் உண்டாகும்படி இந்த நாஸ்திக காலத்திலும் அதிகரித்து அதன் மூலம் ஆஸ்திக, தர்மம் செழிக்கக் காரண மான ஸ்ரீகளவரின் பேருபகாரம், லோக க்ஷேமத்தின் தீக்ஷை களை எவ்வளவு பாராட்டினாலும் அது போதாது.

இந்த மஹானுபாவரின் காலத்தில் மந்த்ராலயம் எல்லாத் திசைகளிலும் விருத்தியடைந்திருந்தது. அங்கு உற்பத்தி அநேக லக்ஷரூபாய்களாக உயர்ந்தது போல ஸ்ரீமடத்தின் அபிவிருத்தி எல்லா வகையிலும் உண்டாகி சுமார் பத்து பன்னிரண்டு லக்ஷரூபாய் வருமானம் வரும்படி யான நிலைமை ஏற்பட்டது. ஸ்ரீமடத்தின் கைவிட்டுப் போய் பராதீனமான அநேக க்ராமங்கள், பூமிகள், கட்டிடங்கள், முதலிய ஆஸ்திகள் மறுபடியும் ஸ்ரீமடத்தின் வசம் வந்தன. புதிய புதிய சொத்துக்கள் சேர்ந்தன. ஸ்ரீரங்கம், கும்பகோணம், பெங்களூர், மைசூர், சித்ர துர்கா, மதராஸ் முதலான இடங்களில் சொத்துக்கள் விருத்தியடைந்தன. மைசூர் பெங்களூரில் ஸ்ரீராயரின் ப்ருந்தாவனங்கள் நிர்மாணமாயின. ஸ்ரீசுயமீந்திர, தீர்த்தர் அஜாதசத்ருவாயிருந்தார். வெண்ணெயைப் போன்ற இதயம், துக்கங்களைப் பார்த்தால் ஒரு பொழுதும் பொறுக்க மாட்டார். பரம விரோதியாயிருந்தாலும் அப்படிப் பட்டவரின் நன்மைக்கும், மங்களத்திற்கும் உடனே பரிகாரம் ஏற்படும்படி செய்யும் தாராளகுணம் படைத் தவர். எவ்வளவு துரோகம் செய்தவரானாலும் வந்து நமஸ்கரித்தால் போதும், முந்தின விஷயங்களையெல்லாம் மறந்து அவருடைய க்ஷேமலாபங்களை விசாரித்து அன்புடன்

பேசி அனுக்ரஹித்து அனுப்புவார்! அப்படிப்பட்டவரிடமும் கருணைகூர்ந்து, ஸ்ரீ குருராஜரும், ஸ்ரீஹரிவாயுகளும் அவரை அனுக்ரஹிக்கும்படி ப்ரார்த்தனை செய்யும் மானவ (மனுஷ்யத்தன்மை) குணம் அவருடையது.

ஸ்ரீமதாசார்யரின் பரம்பரையில் வந்த பீடத்தை 33 வருடங்கள் அதி புத்திக் கூர்மையுடனும் திறமையுடனும் பரிபாலனம் செய்து கொண்டுவந்து ஆதர்சபீடாதிபதி (பின்பற்றத்தகுந்த) (ideal) பண்டிதர்-பாமரர் எல்லோ ராலும் புகழ் பெற்று எல்லோருடைய மரியாதை (homage) அவருக்குக் கிடைப்பதற்கு அவருடைய சாந்த குணம், உதார குணம் ஆகிய இரண்டு ஸத்குணங்கள் மற்றும் அவருடைய குருவான ஸுவ்ரதீந்திரரின் பூர்ணானுக்ரஹம் மற்றும் ஸ்ரீஹரிவாயு மற்றும் ஸ்ரீ குருராஜரிடம் ஸாத்விக பக்திகளே காரணமென்று சொல்லுவதில் ஆச்சரியமில்லை.

ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தர் தாம் ஸ்ரீ குருஸார்வ பௌமருக்குச் செய்யவேண்டியிருந்த சேவை பூர்ணமாயிற் றென்று அறிந்து சமாதான மனதுடன் ஆமுஷ்மிக (பரலோக சம்மந்தமான) சாதனையில் ஈடுபடலானார். ஸதா பகவத் பூஜை, ஸச்சாஸ்திரபாராயணம், லோகக்ஷேமங்களிலேயே ஈடுபட்டார். அனுதினமும் ஸ்ரீஹரிதத்வம்-மகத்துவங்களின் ச்ரவண-மனன-நிதித்யானத்திலாழ்ந்து பெங்களூரின் சிஷ்ய பக்த சமுதாயத்தைக் காப்பாற்றிக் கொண்டு தாமே ஏற்படுத்திப் ப்ரதிஷ்டை செய்த சீதாபதி அக்ரஹாரத்தின் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளவரின் புனித ப்ருந்தாவன ஸந்நிதியில் ஸ்ரீகுருராஜரின் அந்தர்கதரான ஸ்ரீபாரதீரமண முக்யப்ராணாந்தர்கதரான ஸ்ரீ மூலராமசந்த்ரரை, ஸ்ரீஹரியின் ஆநந்ததாம (आनंदधाम) த்தில் உத்தமஸ்தானம் மற்றும் ஸவரூபானந்த அனுபவத்தைப் பெறுவதற்காகவும் அத்யர்த்த ப்ரஸாதத்திற் (अत्यर्थ प्रसाद) காக தவத்தினால் மகிழ்வித்துக் கொண்டு தமது அவதாரத்தின் முடிவை எதிர் பார்த்தவராய் காலங் கழிக்கவாரம்பித்தார்.

பராபவ ஸம்வத்ஸரம், புஷ்ய சுக்ல. ப்ரதமை (11-1-1967) ஸ்ரீஜிதாமித்ர தீர்த்தரின் புண்யதிவஸம் அன்று விடியற்கால ஜாமத்தில் ஸ்ரீகளவரின் கனவில் ஸ்ரீகுருஸார்வ பௌமர் ஒரு வெள்ளித்தட்டு நிறைய மந்த்ராக்ஷதை, பழங் கள், பூமாலைகளை ஸ்ரீகளவருக்குக் கொடுத்து "உடனே மந்த்ராலயத்திற்கு வரவேண்டும்" என்று ஆக்ஞாபித்தார்! எச்சரிக்கையானதும் ஸ்ரீகளவர்கள் கனவின் அர்த்தத்தை அறிந்து பேரானந்தமடைந்து ஆனந்தக் கண்ணீர் ததும்ப ஸ்ரீ குருராஜரைத்யானிக்கத் தொடங்கினார்.

அன்று ஜித்ராமித்திரரின் ஆராதனையை மிக வைபவத்துடன் நிறைவேற்றினார். அன்று அவர் நடத்திய மூலராமரின் பூஜை அற்புதமாகவும், அழகாகவும், ஸ்ரீமூல ராமனின் சேவையில் ஆழ்ந்த மஹனீயரின் முகம் ஸாத்விக காந்தியுடன் சோபித்தது. அந்தக்காக்ஷி அதிமனோஹர மானது! எல்லோருடன் சிரித்துக் கொண்டே பேசி எல்லோரையும் ஆசிர்வதித்தார். அது ஊருக்கும் போய் வருகின்ற பெரியவர் குடும்பத்தினரால் விடைபெறுவது நினைவுக்கு வந்தது மாலையில் இருந்தாற்போல் திடீரென்று அதிகமான ஆயாஸம் (களைப்பு) காணப்பட்டது. டாக்டர்கள் வந்து பரீக்ஷித்து ஸ்ரீகளவர்கள் இனி அதிக காலம் ஜீவிக்கமாட்டார் என்று சொன்னபொழுது எல்லோரும் திடுக்கிட்டனர். (startled) பயத்தினால் என்ன செய்வது என்று தோன்றவில்லை துக்கத்தினால் தவித்தனர். ஆனால் ஸ்ரீகளவர் மாத்திரம் சந்தோஷமான மனதுடன் புன் சிரிப்புடன் "மந்த்ராலயத்திற்கு நமக்கு அழைப்பு வந்துள்ளது புறப்படுவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்று ஆணையிட்டார். "சற்று ஆரோக்யம் தேறினதும் ஒன்றிரண்டு தினங்கள் கழித்துப் போகலாமே" என்று மடாதிகாரி ஸ்ரீபாதபுத்ரரும், பூர்வாச்ரம பந்துகளும் விக்ஞாபித்தனர். ஸ்ரீயவர்கள் "நாளை ஸ்ரீமூலராமரின் பூஜை மந்த்ராலயத்தில்! ஸ்ரீ ராயரின் உத்தரவு! உம் புறப்படத்தயார் செய்யுங்கள்." என்று ஆணையிட்டார். வேறு வழியில்லாமல் இரவு 11 மணிக்கு பங்களூரிலிருந்து

இரண்டு மோடார்கார்களில் அழைத்துக் கொண்டு புறப்பட்டனர். ப்ரயாண காலத்தில் ஸ்ரீஹரிவாயு குருகளின் தியானத்திலீடுபட்டிருந்த ஸ்ரீயவர்கள் மந்த்ராலய எல்லையை அடைந்த உடனே மஹாத்வார (Main Gate) த்தின் பள்ளத்திலிறங்கி முகம் கழுவிக்கொண்டு அங்கிருந்தே ஸ்ரீ குருராஜருக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து காரில் ஏறி உட்கார்ந்தார். கண்ணைமூடிக் கொண்டு த்யானத்தில் ஈடுபட்டிருந்த ஸ்ரீகளவர் மந்த்ரரலயத் தையடையுமுன்பே, "நாராயண, நாராயண" என்று உச்சரித்தது மாத்திரம் பக்கத்திலிருந்தவர்களுக்குக் கேட்டது. ஆனால் ஸ்ரீபாதங்களவர் அவதாரத்தை முடித்துக் கொண்டு ஸ்ரீஹரி மந்திரத்திற்கு ப்ரயாணம் செய்து விட்டார்! ஸ்ரீ குருராஜரின் பரமாக அவதரித்த மஹானுபாவர் ஸ்ரீராஜரின் ஸந்நிதிக்கே வந்து அவதார காரியத்தை முடித்தார். ஸ்ரீமந்த்ராலயத்திலிருந்து புறப் பட்ட ஜோதி மந்திராலயத்திலே லயமாயிற்று!

ப்ரிய சிஷ்யரான ஸ்ரீஸுஜயீந்திர தீர்த்தர் குருவர்யரின் ப்ருந்தாவன ப்ரதிஷ்டை செய்வித்து, ஸ்ரீயவர்களின் மஹா ஸமாராதனையை நிறைவேற்றி ஸ்ரீஸுயமீந்திர ப்ருந்தா வனத்தின் மீது ஸ்ரீமூலராமரை அமர்த்திக் கனகாபிஷேகம் செய்வித்து சரமஸ்லோகத்தை இயற்றி அர்பித்தார். இவ்வாறு 33 வருஷகாலம் மஹா ஸமஸ்தானாதிபதிகளாக இருந்து அநேக உத்தமமான காரியங்களைச் செய்து தனது வாழ்க்கையின் லக்ஷியத்தைச் சாதித்து "குருராஜரின் க்ருபாபாத்ரர்" ஆன பரமபூஜ்ய ஸ்ரீஸுயமீந்திரதீர்த்தர் ஸ்ரீகுருராஜரின் ஸந்நிதியில் நாராயணத்யான பரராக அமர ரானார். அஸாதாரணமானதும், வேறொருவருக்குக் கிடைக்காத மந்த்ராலயத்தில் ஸ்ரீகுருராஜரின் ஸந்நிதியில் ப்ருந்தாவனஸ்தராயிருப்பதே ஸ்ரீகளவரின் மகிமைக்குச் சான்றாகும்.

ஸ்ரீஹரி வாயு ஸ்ரீ குருராஜ மகிலமயைப் பரவச் செய்த வராய் லக்ஷக்கணக்கான ஸுஜனர்கள் மந்த்ராலய குருகளின் பக்தராய் அவருடைய அனுக்ரஹத்திற்குப் பாத்ரராகும்படி

செய்த மற்றொரு மாபெரும் உபகாரம் என்னவென்றால் மஹாபண்டிதரும், லௌகிக காரிய நிபுணரும், வித்யா பக்ஷபாதிகளும் (அதாவது வித்யா போஷகர்) ஆன ஸ்ரீஸுஜயீந்திர தீர்த்தரைப் போன்ற ச்ரேஷ்ட குருகளை தமது பீடத்திலமர்த்தி அனுக்ரஹித்தது! ஸ்ரீ மடத்தின், ஸ்ரீமந்த்ராலயத்தின் அநேக தமது திட்டங்களை நிறைவேற்றும்படி ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்த ஸ்ரீபாதர் கொடுத்த ஆணையின்படி ஸ்ரீ ஸுஜமீந்திர தீர்த்தர் தமது குருகளின் எல்லாத் திட்டங்களையும் நிறைவேற்றி, மந்த்ராலய க்ஷேத்ரத்தை நாலா விதங்களிலும் அபிவிருத்தியடையச் செய்து, "குருகளின் நிர்மலமான மனதினால் ஆசீர்வதித்து அனுக்ரஹித்தாரே அது எப்பேர்ப்பட்ட மகத்தான காரியத்தைச் சிஷ்யர் பூர்த்தி செய்வதற்குத் தகுதியுடையவர்" என்பதற்கு திருஷ்டாந்தமாய் இன்று ஸகல சிஷ்ய பக்த ஜனங்களின் பக்தி கௌரவங்களுக்குப் பாத்ரராகவிருக்கின்றார்.

ஸ்ரீ குருராஜரின் மகிமைக் கொடி என்றழைக்கப்பட்டு பிரஸித்தியடைந்த ஸ்ரீஸுயமீந்திர தீர்த்தரின் அன்பிற்கு உகந்த வரகுமாரரான பூஜ்யஸ்ரீ ஸுஜயீந்திர தீர்த்தர் ஸ்ரீஸுயமீந்திரரின் அனுக்ரஹத்தினால் ஸ்ரீ குருராஜரின் கருணையால் மஹாபீடத்தில் வெகுகாலம் அமர்ந்திருந்து சிஷ்ய—பக்த ஜனங்களைக் காப்பாற்றிக் கொண்டுவரும்படி, ப்ராதஸ்மரணீய ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தர் அனுக்ரஹிக்கட்டுமென்று பக்தியுடன் வேண்டிக்கொண்டு ஸ்ரீ குருசேவை செய்து க்ருதார்த்தராவோம். ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்த குருவர்யர் எல்லோருக்கும் மங்களத்தைக் கருணை புரிய வேண்டுமென்று வேண்டுவோம். ததாஸ்து.

सुव्रतीर्थमताब्धीन्दुं सुधीन्द्र सुत सेवकं ।
सुधा परिमळासक्तं सुयमींद्रगुरुं भजे ।।

## 90. ஸ்ரீ குருராஜரின் பக்தவாத்ஸல்யம்

ஸ்ரீ ராகவேந்த்ர குருஸார்வபௌமர் இன்று லோக க்ஷேமதீக்ஷாபத்தராய் (दीक्षाबद्ध) தீன-தலித (நலிவுற்ற) ஜனங்களைக் காப்பாற்றிக் கொண்டு வரும் ஒரே குருகள்

என்று லோகப்ரஸித்தராக உள்ளார், உலகத்தின் பலவித கஷ்ட நஷ்டங்களிலும் அஞ்ஞானத்திலும் அகப்பட்டுக் கஷ்டப்படுபவர்களுக்கு, அஞ்ஞானம், அமைதியின்மை, நிம்மதியின்மை, புத்திரப்பேரின்மை, தலைதூக்க முடியாத ஏழ்மை, பற்பல கவலைகள். சந்தேகங்கள், மயக்கம், ஞாபக மறதி முதலிய மனநோய்கள் மற்றும் குஷ்ட, அபஸ்மார (fits, epilepsy) மற்றும் பல வியாதிகளினால் நொந்து உழன்று கொண்டிருப்பவர்களுக்கு ஒரே நம்பிக்கை ஒளியாய் விளங்குகிறார் ஸ்ரீ குருராஜர். இவ்வாறு ஜனங்களின் வெவ்வேறு விதமான பீடைகளைப் பரிகாரம் செய்து அவரவர்களின் விருப்பங்களை நிறைவேற்றி கருணையினால் காப்பாற்றும் குருகளாகையினாலேயே கடவுள் ஸ்வர்க்க நரகம் முதலிய இந்திரியங்களுக்கெட்டாத வஸ்துக்களில் நம்பிக்கையிழந்துத் தற்கால உலகத்திலும் (Modern World) ஆஸ்திக-நாஸ்திகர்கள், ஏழை-பணக்காரன், ஸ்ரீமந்தன்-பாமரனென்னும் வித்தியாஸமில்லாமல் வயது, ஆண்-பெண் வித்தியாசமில்லாமல் எல்லோரும் அந்த மகானைச் சேவித்துத் தமது ஸகல கஷ்டங்களிலிருந்து விடுபட்டு மன விருப்பங்களை அடைந்து சுகமாயிருக்கின்றனர்.

ஞானம், வைராக்யம், தவப்புங்கவரான ஸ்ரீ குருராஜர் லோகக்ஷேமத்திற்காகவே பூமியிலவதரித்த தேவதை. மனிதத்தன்மை (humanism)யே உருவெடுத்து வந்த அவருக்கு மானிட மக்களிடம் அளவற்ற கிருபை, கருணை, கஷ்டப்படுபவரை, நொந்து போனவர்களைக் கண்டால் புஷ்பத்தைப் போன்ற மென்மையான இதயம் உருகி விடும். எல்லோரும் மனிதராக ஸுகசந்தோஷத்துடன் வாழவேண்டுமென்பதே அவருடைய விருப்பம். துவேஷம், பொறாமை, அமைதியின்மையான சகதியில் அகப்பட்டு உழலுபவர்களைக் கரையேற்றி மனிதப் பிறப்பின் ரகஸியத்தை அறிவுறுத்தி அவனது ஸ்வரூப உன்னதிக்காகக் கவலைப்பட்டுத் தமது திவ்ய உபதேசங்களினால் சன்மார்க்கத்தில் கையைப் பிடித்து நடத்தி ஸகல ஜீவர்களின் முக்கியமான லக்ஷ்யமான துக்கத்திலிருந்து விடுவித்து நிரந்தர

ஸௌகம் பெறச் செய்வதற்குத் தேவையான ஸாதன மார்க்கத்திற்கு அழைத்துச் சென்று ஜகந்நாதனான பகவந்தனின் பரமப்ரஸாதத் (மோக்ஷம்)தின் பங்கு பெறும்படி (மோக்ஷமடையும்படி) செய்வதே அவரது அவதாரத்தின் நோக்கமாயுள்ளது. ஆகையால் தான் த்யாக மூர்த்திகளான, லோக பந்துக்களான இந்த மந்த்ராலய முனிபுங்கவரைத் தற்கால உலகம் (Modern World) சரணடைந்து பக்தி சிரத்தைகளுடன் சேவித்து விருப்பங்களைப் பெற்று சுகமடைந்துள்ளது.

**91. விச்வகுரு (Universal Guru) (லோக குரு) (ஜகத் குரு)**

மனித உருவெடுத்து வந்த அந்த தேவதை சரீரத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து 319 வருஷங்களான போதிலும் உலக மக்களின் ஆசை, விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொண்டு அழைத்த விடத்திற்கு வந்து காப்பாற்றிக் கொண்டு விச்வகுரு (லோக குரு) ஜகத் குருகனென்றும் தமது விருதை உண்மையாக்கிக் கொண்டிருக்கிறார். ஸ்ரீகுரு ராஜருக்கு அகண்ட ஜகத்தின் ஜனங்களை ரக்ஷிக்கும் இந்தத் திறமை, சக்திகள் எவ்வாறு வந்தது ? இது இன்று விஞ்ஞானிகளைத் திகைக்க வைக்கும் பிரச்சினையாக உள்ளது.

'' ஸ்ரீ ராகவேந்த்ரோ ஸ்ரீ ஹரிபாதகஞ்ஜ நிஷேவணால் லப்த ஸமஸ்தஸம்பத் '' (श्री राघवेंद्रो हरिपादकंज निषेवणाल्लब्ध समस्त संपत) इंदिरेयरसन सुंदर चरणारविंदगळ चेंदद सेवनेयिंदे श्री राघवेंद्रगुरु चंद्रमरु वसुन्दरेय जन संदोहव निखिल वांछितार्थगळन्नु पोरेसललवाद अगाध सात्विक संपदव पोंदिहरु। அதாவது இந்திரேசனான ஸ்ரீமந்நாராயணின் சுந்தரமான பாதாரவிந்தங்களைப் பாந்தமாகப் பக்தி சிரத்தையுடன் சேவித்ததின் பல ஸ்வரூபமாக ஸ்ரீ குருராகவேந்திர குருசந்திர வஸுந்தரையெனும் பூமாதேவியின் மக்கள் சமுதாயத்திற்கு, அவர்கள் விரும்பிய இஷ்டார்த்தங்களையெல்லாம் கருணையுடன் அளிக்குமளவிற்கு எல்லையில்லாத ஸாத்வீக சம்பத்தைப் பெற்றார். இந்த நிகரற்ற (கிடைக்கப் பெறாத)

ஐச்வர்யம், திறமைகள், அவருக்கு ஸ்ரீமந்த்ராலய ப்ரபுகளாக அவதரித்த பொழுது மாத்திரம் கிடைத்ததல்ல; அந்த மஹா சக்தியை அவர் யுக யுகங்களில் சம்பாதித்துள்ளார்.

ஸ்ரீ குருராஜர் தமது முந்திய அவதாரங்களிலும் ஸாத்விக, நிஷ்காம பக்தியினால் பகவந்தனை ஆராதனை செய்து, அவருடைய ஸர்வச்ரேஷ்ட பக்தனெனப்பட்டு ஸ்ரீரமா ரமணனின் பரம ப்ரீதிக்குப் பாத்திரராய் பிறர் எவருக்கும் கிடைக்காத உயர்ந்த வரங்களைப் பெற்று அதன் மூலம் அற்புத சக்தி சம்பத்துகளை அடைந்து அவை எல்லா வற்றையும் லோக க்ஷேமத்திற்காகவே செலவு செய்து வருகிறார். சாமானிய மானிடனால் செய்ய முடியாத அஸாத்ய காரியங்களைச் செய்யும் அவர் மானவோத்தமர் மாத்திரமல்ல. உயர்ந்த தேவதையே. இதை நரசிம்ம புராண வசனம் எடுத்துச் சொல்லுகிறது. அபரோக்ஷ ஞானிகள் அவரை தேவதையென்றும், ஸர்வச்ரேஷ்ட பாக வதனென்றும், ஜகத்ரக்ஷக குருகளென்றும் பாராட்டி யுள்ளனர். ஸ்ரீஹரியின் ஸங்கல்பப்படி லோக க்ஷேமத்திற் காக அவதரித்த அவர் ஸத்ய லோகத்தில் ப்ரம்ம தேவனின் சேவையிலிருந்த சங்குகர்ணனெனும் கர்மஜ தேவதை. பிறகு ப்ரஹலாதராய், பாஹ்லீகராஜனாய், ஸ்ரீவ்யாஸராய ராக அவதரித்து இன்று கலியுகத்தின் காமதேனு, கல்ப விருக்ஷமாக ஸ்ரீ குருராஜராயவதரித்து, ப்ருந்தாவனாந்தர் கதராய் ஸ்ரீமந்த்ராலயத்தில் தவம் செய்து கொண்டிருந் தாலும் நமஸ்காரம் செய்து கொண்டிருக்கும் ஜன ப்ருந்தா வனராய் அனந்த வ்ருந்தாவனாந்தர்கதராய் சோபித்துக் கொண்டு, ஜாதி, மதம், பரம்பரை, தேசம், மொழி, வயது, ஏழ்மை, படித்தவன்-படிக்காதவன் என்னும் வித்தியாசம் பாராமல் சரணடைந்து சேவிப்பவர்களுக்கு "சரண ஜன மந்தார"ராய்க் காப்பாற்றி வருகிறார்.

ஸ்ரீ ராகவேந்திர குருகளாக அவதரித்தபொழுது ஏறக் குறைய 50 வருடகாலம் வேதாந்த ஸாம்ராஜ்ய சிம்மா ஸனத்தில் வீற்றிருந்தபொழுது அநந்த சரீரத்துடன்

ப்ருந்தாவன ப்ரவேசம் செய்த சென்ற 300 வருஷங்களில் அவர் சரணம் என்று வந்த பக்த ஜனங்களிடம் செய்துள்ள கருணை, காண்பித்துள்ள கிருபை, அன்பு, இரக்கங்கள் இன்று ஒவ்வொரு பக்தனின் அனுபவத்திற்கு வந்த, வருகின்ற விஷயமாயுள்ளது.

## 92. பீடாதிபதிபத்ய காலத்தில்

பீடாதிபதியாக இருந்த காலத்தில் 1. அனாதையாயிருந்த வெங்கண்ணனைத் திவானாகச் செய்து கருணை புரிந்தது. 2. நீர், நிழலில்லாத வெங்காட்டில் கமண்டலத்திலின்று தண்ணீரையும், கை வஸ்திரத்தினால் நிழலை உண்டாக்கி அப்பொழுதே பிறந்த குழந்தையையும் தாயையும் காப்பாற்றினார். 3. தாமிரபரணிதீரத்தில் சமூகத்திலிருந்து பஹிஷ்காரம் செய்யப்பட்ட ப்ராம் மணனொருவன் ஸ்ரீ ராயரைச் சரணடைந்தபொழுது ப்ராயச்சித்தம் செய்வித்து சங்கோதக ப்ரோக்ஷணத்தினால் அவனைச் சுத்தனாக்கி பதிதபாவனரென்னும் கீர்த்தி பெற்றார். 4. கனகன் தீண்டாதவனாய்ப் பிறந்து "காப்பாற்று தந்தையே" என்று கடுகைக் காணிக்கையாகக் கொடுத்து வேண்டினபொழுது ஸ்ரீ பகவத் ப்ரஸாதம், தீர்த்தம் முதலியவை கருணையுடனளித்து அவனுக்கு ஸத்கதி அளித்து தமது கருணை வெள்ளம் எந்த ஜாதி-மதங்களின் தடைக்கும் வணங்காது என்று காண்பித்தார். இவ்வாறு எவ்வளவோ மஹிமைகளைக் காண்பித்திருப்பது அவருடைய வரலாற்றின் ஒவ்வொரு பக்கங்களிலும் புலப்படும்.

ஸ்ரீ குருராஜர் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து 260 வருடங்களான பிறகு சென்ற நாற்பது ஐம்பது வருஷங்களில் அவர் ஏராளமான மகிமைகளைக் காண்பித்துள்ளார். அந்த நிகரற்ற வரலாற்று மகிமை-காருண்யங்களை வர்ணித்துக் கொண்டே போனால் அவை அநேக பெரிய க்ரந்தங்களாகும். இங்கு அவருடைய பக்தவாத்ஸல்யத்தை எடுத்துக் காட்டும் சில பக்கங்களை மாத்திரம் தெரிவிக்க விரும்புகிறோம்.

## 93. அன்னமளித்து உயிர்ப்பித்தார்

இது ஏறக்குறைய 50 வருடங்களுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சி. மைசூர் ராஜ்யத்தில் "ஸ்ரீஸஹஸ்ரமுகி" ராம குமார் என்ற கலைஞர் மிகப்பெயர் பெற்றிருந்தார். ஸ்ரீ குருராஜரின் அந்தரங்க பக்தரான அவர் ஒரு முறை மந்த்ராலயத்திற்கு வந்தபொழுது பீடத்திலமர்ந்திருந்த ஸ்ரீ சுயமீந்திரதீர்த்த குருகளின் முன் ஸ்ரீராயர் தம்மிடம் காண்பித்த காருண்ய வாத்ஸல்யங்களைப் பக்தி மேலிட்டு கண்ணீர்த் ததும்பச் சொன்னதை இங்கு எழுதியுள்ளோம் :—

நான் அப்பொழுது ஜப்பானிலிருந்தேன் ஒரு சமயம் என்னிடமிருந்த பணமெல்லாம் செலவழிந்து போய்க் கையில் பணமில்லாமல் சாப்பாட்டிற்கும் கஷ்டமாய் விட்டது. எனது கலையைக் காண்பித்துத் தான் பணம் சம்பாதித்து ஜப்பானில் ப்ரயாணம் செய்து கொண்டிருந் தேன். அடுத்த ஊருக்குப் போயாவது சற்று பணம் சம்பாதிக்க மத்யானம் புறப்பட்டேன். ஊரைவிட்டு 4-6 மைல்கள் தூரம் போகவேண்டியிருந்தது. ஆகாரமில்லாமல் பசியினால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்த எனக்கு வழி நடந்த சிரமும் சேர்ந்து நான் மிக்க களைத்துப் போய் விட்டேன். அப்பொழுது நான் ஒரு காட்டின் வழியே நடந்து கொண்டிருந்தேன். அடுத்த ஊருக்குப் போக மேலும் 15-20 மைல்கள் ப்ரயாணம் செய்ய வேண்டிய தாயிற்று. அப்பொழுதே சூரியனும் மறைந்தான். இருட்டு எங்கும் வியாபித்தது. ஒரு அடி முன்வைக்க வழி காணாமல் பசி தாகத்தினால் தவித்துக் கொண்டிருந்தேன். என்ன செய்வது என்று தெரியவில்லை. கண்கள் இருண்டு வந்தன. எனது மனதில் அப்பொழுது பலவித யோசனைகள் உண் டாயின. நான் இனிப் பிழைக்கப் போவதில்லை. இவ்வாறு அந்நிய நாட்டில் அனாதையாகச் சாகவேண்டி வந்ததே! என்ன செய்யட்டும்? என்று கவலைப்படும் பொழுது திடீரென்று ஸ்ரீ குருராஜரின் நினைவு வந்தது. "குருராஜா. அனாதரக்ஷகா, பக்த பந்து, நீங்களே கதி, காப்பாற்றும்" என்று உரத்த குரலில் முறையிட்டேன். அவ்வளவே

எனக்கு ஞாபகம் தலை சுற்றி மூர்ச்சையடைந்து விழுந்து விட்டேன். பிறகு கண் திறந்தபொழுது நான் ஒரு குடிசையில் கட்டிலில் படுத்திருந்தேன்! லாந்தல் (lantern) மூன் மங்கலான வெளிச்சத்தில் சுற்றிக் கண் திறந்து பார்த்தேன். எனது முன்னால் ஒரு மேஜையிருந்தது! மிக வயதான ஒரு ஜப்பானியன் என்னையே பார்த்துக் கொண்டு புன்னகை செய்து கொண்டிருக்கிறான். நான் ஜப்பானிய மொழியில் "நான் எங்கிருக்கிறேன்" என்று கேட்டேன். "நம்மவர்கள் பக்கத்திலேதான் இருக்கிறாய், குழந்தாய். பேசாதே! இதோ இந்தப் பழங்களைத் தின்று, பால் குடி, பிறகு பேசலாம்", என்று சொன்னான். பசியினால் தவிக்கின்ற எனக்குண்டான மகிழ்ச்சியை வர்ணிக்கவே முடியாது. உடனே மெல்ல எழுந்து உட்கார்ந்து பால், பழங்களைச் சாப்பிட்டேன். வயிறு நிரம்பிற்று. அந்தக் கிழவனுக்கு நன்றி தெரிவிப்பதற்குள்ளேயே எனக்குத் தெரியாமலே நான் தூங்கிவிட்டேன். மறுபடியும் எச்சரிக்கையானதும் நான் முந்தினதினம் மூர்ச்சையாகி விழுந்த காட்டிலேயே இருந்தேன்! சூரிய உதயமாயிற்று மெதுவாக முந்தின தினத்தின் நிகழ்ச்சிகள் நினைவிற்கு வந்தன. அந்தக் கிழவனெங்கே? குடிசை எங்கே? மறுபடியும் நான் இங்கு எப்படி வந்தேன்? வெகு ஆச்சரியமாக இருந்தது! நான் மூர்ச்சையாகும் முன்பு, 'குருராஜா, நீயே கதி, காப்பாற்று', என்று ப்ரார்த்தித்தது ஞாபகத்திற்கு வந்தது. இந்த அதிசயத்தைக் காண்பித்தவர் ஸ்ரீராயரே தவிர வேறுயாருமல்ல! என்று அறிந்ததும் எனது கண்ணிலின்று ஆநந்தக் கண்ணீர் பெருகிற்று. இதயம் பக்தியினால் நடுங்கியது.

## 94. கருணையின் அறிவு :

நின்ற இடத்திலேயே ஸ்ரீ குருராஜருக்குக் கை கூப்பினேன். இருந்தாலும் மனிதனுக்கு இயற்கையான சந்தேகம், ஆர்வம் முதலியவைகளினால் காட்டில் சுற்றிலும் நான்கைந்து மைல்களில், குடிசை. வயதான ஜப்பானியனைக் கண்டுபிடிக்க முயற்சித்தேன். அந்த அடர்ந்த காட்டில் குடிசையாகட்டும், அந்த கிழஜப்பானியனாகட்டும்

எனக்குக் கிடைக்கவேயில்லை! அப்பொழுது இன்னும் அதிகமாக ராயரின் கருணை அறிவாயிற்று. அவர் நாம ஸ்மரணை செய்து கொண்டே வழி நடந்து மாலை நேரம் அடுத்த ஊரையடைந்தேன்.

ஸ்ரீ குருராயரின் இந்த பக்தவாத்ஸல்யத்திற்கு இதைவிட வேறு திருஷ்டாந்தம் தேவையா?

95. வ்ருஷபத்திற்கு (எருதிற்கு) உயிருட்டினார்:

ஸ்ரீ குருராஜரின் தயை மனித சமூகத்துடன் மாத்திரம் நின்றுவிடவில்லை; அவர் ஸர்வபூதஹிதேரதராய் இருந்தார். அதாவது எல்லாப்ராணிகளிலும் அவர் கருணை காட்டினார். ஆகையினால்தான் ஸமஸ்த சேதன வர்க்கத்தையே தமது கிருபாமிர்தத்தினால் உஜ்ஜீவித்து மங்கள பரம்பரையைக் கருணித்து 'अत्यंत दयालवे' (அத்யந்த தயாலவே) என்னும் தமது விருதை ஒவ்வொரு நாளும் நிருபித்து காண்பித்து வருகிறார். ஒரு காளை மாட்டிற்கு உயிர் கொடுத்தருளிய அவருடைய கருணையின் கதை மனதைத் தொடும்படியாக உள்ளது. இது 38 வருஷங்களுக்கு முன் ஹுப்ளியில் நடந்தது.

ஹுப்ளியில், (Hubli) ஸ்ரீ S. N. கெம்பாவி என்பவர் பயிர்களின் உரத் (Fertiliser Factory) தொழிற்சாலை நடத்துகிறார். அவர் முன்பு மத்திய ஸர்க்காரின் மந்திரியான ஸ்ரீ காட்கில் (Gadgil) அவர்களின் மருமகன்; ஆரம்பத்திலிருந்து கெம்பாவியவர்கள் ஸ்ரீ ராயரின் பக்தர். ஒவ்வொரு வருஷமும் ஒன்றிரண்டு முறையாவது மந்த்ராலயத்திற்குப் போய் குருராஜருக்குச் சேவை செலுத்தி வருவது வழக்கம். தம் வீட்டில் நடந்த இந்த அதிசயத்தை அவரே எனக்குத் தெரிவித்திருந்தார். (அப்பொழுது இந்த நூலாசிரியன் மந்த்ராலயத்தின் ஸ்ரீப்ருந்தாவன ஸந்நிதியின் மானேஜராக இருந்தான்).

ஸ்ரீ S. N. கெம்பாவியவர்கள் ஸ்ரீ ராயரின் பக்தர். அவருக்கு ஸ்ரீ ராயரிடம் அபாரபக்தி, நம்பிக்கை, கௌரவங்

களிருந்தன. ஆனால் அவர் தர்மபத்னிக்கு முதல் முதலில் அவ்வளவு நம்பிக்கையிருக்கவில்லை. கெம்பாவியவர்களின் பத்னிக்கு அநேக சமயங்களில் ஸ்ரீ ராயரின் அபாரமகிமைகளை, மூலமிருத்திகையின் சக்தியை சொல்லக் கேட்டிருந்தாள். அவர் வீட்டில் ஒரு நல்ல எருது இருந்தது. அதன் மீது ஸ்ரீமதி கெம்பாவியவர்களுக்கு மட்டற்ற அன்பு. ஒரு நாள் மாட்டுக்கொட்டகைப் பக்கம் வந்தபொழுது தனது அன்பான எருது பாம்பு கடித்து மரணத்தின் வாயில் சிக்கி உயிருக்கே அபாயம் ஏற்படும் நிலையில் இருப்பதைக்கண்டு திடுக்கிட்டாள். அதை உயிர்ப்பித்துக் கொள்ளுவது எப்படியென்று தோன்றவில்லை. விஷத்தின் வேகத்தினால் தவித்துக் கொண்டு மரிக்கும் தறுவாயிலுள்ள தனது அன்புமிக்க எருதைப்பார்த்து அவரது இதயம் துடித்தது. கண்ணீர் பெருகிற்று. என்ன செய்வதென்றே தோன்றவில்லை. மௌனமாக நின்றிருக்கிறார். அப்பொழுது தமது பதி சொல்லிக்கொண்டிருந்த ஸ்ரீ ராயரின் நினைவு வந்தது. உடனே கை கால் அலம்பிக்கொண்டு சுவாமி அறைக்குச் சென்று ஸ்ரீ ராயரின் படத்திற்கு முன்னால் விளக்கேற்றி வைத்து நமஸ்காரம் செய்து, "ஸ்வாமி, தாங்கள் மஹாமகிமையுடையவர், கருணைக்கடலென்று என் பதி அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார். அதென்னமோ எனக்குத் தெரியாது. தாங்கள் உண்மையாக மஹாத்மாவாக இருந்தால் எனது எருதைப் பிழைக்கச் செய்யுங்கள். தாங்களே காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு அங்கேயே இருந்த மூலம்ருத்திகையை ஒரு பாத்திரத்தில் தண்ணீருடன் கலந்து கொட்டகைக்கு வந்து மரணத்தை நெருங்கிக்கொண்டிருக்கும் எருதிற்குப் பலவந்தமாக ஊட்டினாள். பத்து நிமிஷங்களாயிருக்கலாம். ஆச்சரியம்! காலனின் பிடியிலிருந்து எருது திடீரென்று எழுந்து நின்றது! விஷபாதையின் எந்த சின்னமும் காணப்படவில்லை. இருந்தாற்போல தனது அன்பான எருது சுகமாக எழுந்து நின்றதைக்கண்டு ஸ்ரீமதி கெம்பாவியவரின் மனம் பூரித்தது. ஸ்ரீராயரின் அபார கருணை மகிமைகளைக் கண்ணாரக்கண்டு அவருக்கு குருராஜரிடம் விசேஷ பக்தி

ஸிரத்தைகள் உதயமாயின. ஸ்ரீ ராயரைப் பாராட்டிக் கொண்டே, "உண்மை, குருபாதரே, தாங்கள் மஹா மஹிமையுள்ளவர். பக்தவத்ஸலர், தயாநிதிகள்; உமக்கு எனது அனந்தகோடி நமஸ்காரங்கள்" என்று மனமார உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னார். பத்னியினிடமிருந்து ஸ்ரீ ராயர் காண்பித்த அதிசயத்தை அறிந்து ஸ்ரீயுதகெம்பாவியரவர்கள் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தவராய் ஸ்ரீ ராயரைத் துதித்தார்.

மேற்சொன்ன நிகழ்ச்சியினால் ஸ்ரீ குருராஜரின் கருணை எப்படி எல்லையில்லாமல் பரவுகிறது என்பது புலப்படும். எல்லா சேதன வர்க்கத்தின் மீதும் அவரது கருணையுள்ளது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. சரணடைந்து நீயே கதி என்று நம்பி பஜித்தால் தயாமயரான ஸ்ரீராயர் பக்தரின் எல்லா சங்கடங்களையும் பரிகாரம் செய்து மனோ பீஷ்டங்களை நிறைவேற்றி காப்பாற்றுகிறார் என்பது முற்றிலும் உண்மை.

**96. யந்திரத்தை வசப்படுத்திய மந்த்ராலய மாந்திரீகன் :**

இது ஒரு அற்புதரம்யமான, ஸத்யமான நிகழ்ச்சி. இது நடந்தது 1945-46-ல். ஸ்ரீ குருராஜரின் மகாமஹிமைக்கு இது மற்றொரு உதாரணம்.

ஸ்ரீ குருராஜரின் ஆராதனைக்கு எட்டு நாள் முன்பு எம்மிகனூரின் ஆரோக்ய இலாகா (Health Department) அதிகாரிகளின் ரிபோர்ட்டின்படி பள்ளாரி கலெக்டராயிருந்த ஸ்ரீ ப்ரேஜர் (Frazer) துரையவர்கள் மந்த்ராலயத்தின் ஆராதனை மகோற்சவத்தை விவரித்து உற்சவத்தைத் தடுத்து ஜனங்கள் சேரக்கூடாதென்று 144 வது செக்ஷன் தடை உத்தரவு போட்டார். மந்த்ராலயத்தில் ஸ்ரீ குரு ராஜரின் ஆராதனை உற்சவத்தின் ஏற்பாடு முழுமையாக நடந்திருந்தது. கலெக்டர் தடை உத்தரவு அமுலிலிருந்த தினால் ஸ்ரீ சுயமீந்திர தீர்த்தருக்கு மட்டில்லாதுக்க முண்டாயிற்று. ஸ்ரீ ராயரின் ஆராதனைக்கா தடை? இது என்ன அநியாயம்! மந்த்ராலயத்தின் நாலாபுறத்திலும் காலரா வியாதி தீவிரமாக உள்ளதென்று நலவாழ்வுத் துறை

ஆணையாளர்கள் தப்பாக ரிபோர்ட் அனுப்பியிருப்பதைச் சரியாக விமரிசிக்காமல் 144 வது செக்ஷன் தடை உத்தரவு போட்டிருப்பது தப்பு என்று தெரிந்தது ஸ்ரீ களவர்களுக்கு. ஸ்ரீ ராயரிடம் பிரார்த்தித்து மடத்து ஏஜெண்டு ஸ்ரீ ஆர். வெங்கோபராயரின் மூலமாக செக்ஷனை ரத்து செய்யும்படி ஸ்ரீகளவர் முயற்சி செய்தார். அது பலனளிக்க வில்லை. 8-10 தினங்களாக ஆதவானி எம்மிகனூர் தாலூக் காக்களில் எந்தக் காலராகேசுகளும் ஆகவில்லை. எம்மிகனூ ரின் ஏதோ தூரத்திலுள்ள பட்டிக்காட்டில் அஜீரணத் தினால் யாரோ மரணமடைந்ததால் அதைக் காலரா என்று நினைத்து நலவாழ்வு இலாகா அதிகாரிகள் கலெக்டருக்கு ரிப்போர்ட் அனுப்பி விட்டிருந்தார்கள். அவர்கள் நன்கு ஆராயாமல் செய்த காரியத்தினால் ஸ்ரீ ராயரின் உற்சவத் திற்கு இடையூறு விளைந்தது.

மந்திராலயத்தில் ச்ராவண சுக்ல சதுர்தசி ஸப்தராத் ரோத்ஸவம் ஆரம்பமாயிற்று. துங்கபத்ரா, ஆதோனி ரயில்வே நிலையங்களில் போலீஸ் பந்தோபஸ் திருந்ததினால் ஆயிரக்கணக்கான ஜனங்கள் மந்த்ராலயத்திற்குப் போவ தற்கு வாய்ப்பில்லலாமல் முழிக்கவாரம்பித்தார்கள். ஜனங்களை ரயிலிலிருந்து இறங்கவிடாமல் திருப்பி அனுப்பிக் கொண்டிருந்ததினால் பக்தர்களுக்கு அபாரதுக்கம் உண்டா யிற்று. இவ்வளவு பக்கத்தில் வந்தும் ஸ்ரீ ராயரின் தரிசனம் செய்யும் பாக்கியமில்லாமல் போகிறதே என்று நொந்து கொள்ள ஆரம்பித்தனர்.

ஸ்ரீபாதங்களவருக்கு இந்த விஷயம் தெரிந்து மனதிற்கு வியாகூலம் உண்டாயிற்று. ஸ்ரீ குருராஜரிடம் வெகுவாக ப்ரார்த்தனை செய்து மற்றும் தானே கலக்டரை பேட்டி கண்டு உண்மையான நிலைமையைத் தெரிவித்து 144 தடை யுத்தரவை ரத்து செய்வதற்காக ஏஜெண்ட் ஸ்ரீ R. வெங்கோபராயரை பல்லாரிக்கு அனுப்பினார். வெங்கோப ராயர் கலக்டரைக் கண்டு எல்லா விஷயங்களையும் சொல்லி ஸ்ரீ ராயரின் மகிமை, ஸர்தாமஸ் மன்ரோ துரையிடம் ராயர் செய்த அனுக்ரஹங்களை விவரித்து பத்திருபதனா

யிரம் ஜனங்கள் உற்சவத்திற்கு தேசத்தின் வெவ்வேறு பாகங்களிலிருந்து மந்த்ராலயத்திற்கு வந்திருப்பதனால் இங்கு 144 தடையுத்தரவு அமலிலிருப்பதால் அந்த ஜனங் களுக்காகும் கஷ்டங்களைத் தெரிவித்துக் காலரா வியாதி இல்லாமலிருப்பதால், உத்தரவை ரத்து செய்யவேண்டு மென்று கோரிக்கை விடுத்தார். திரு. ப்ரேஜர் (Frazer) துரையவர்கள் "நீங்கள் சொல்லுவதெல்லாம் சரி, நல் வாழ்வுத்துறை இலாகாவின் ரிபோர்ட்டின்படிக்குத் தடை யுத்தரவு போட்டிருக்கிறேன். நான் போட்ட உத்தரவை வாபஸ் வாங்கிக்கொள்ளுவது பிரிட்டிஷ் ஆட்சியின் உச்ச அதிகாரியான எனக்கு அகௌரவமானது. மன்னிக்கவும், நானெதுவும் செய்வதற்கில்லை" என்று சொன்னார். அப்பொழுது மடாதிகாரி "ஸ்வாமி, சரியாக விசாரணை செய்யாமல் தடையுத்தரவு போட்டிருக்கிறீர்கள். அதை ரத்து செய்வது அகௌரவமென்று நினைக்கிறீர்கள். ப்ரிடிஷ் அதிகாரிகள் "நியாயவான்கள்" என்று நான் நம்பி யிருந்தேன். அது இன்று பொய்யாய்விட்டது. காலரா வ்யாதி எங்குமே இல்லை. நீங்கள் இப்பொழுதுகூடப் புனராலோசனை செய்து உத்தரவை ரத்து செய்வது நியாயம். நீங்கள் அவ்வாறு செய்யாதிருந்தால் எங்கள் ஸ்வாமிகள் (ஸ்ரீராயர்) நீங்கள் போட்ட உத்தரவை நீங்களே வாபஸ் பெறும்படி செய்து உற்சவத்திற்கு அனுகூலம் செய்யும்படி செய்வார். இது ஸத்தியம்! என்று சொல்லி நம்பிக்கையிழந்து வீட்டிற்குத் திரும்பினார்.

அன்று பௌர்ணமி சாயங்காலம். ஸ்ரீ R. வெங்கோப ராயர் புறப்பட்டுப்போன உடனே ஸ்ரீ ப்ரேஜர் (Frazer) துரைக்கு மனநிம்மதி யில்லாதபடியாயிற்று. பலகாரம், காபி எதுவும் பிடிக்கவில்லை. ஒரு நிமிஷம் கூட உட்கார்ந் திருந்த இடத்தில் உட்கார்ந்திருக்க முடியவில்லை. ஏதோ வ்யாகூலம், அமைதியின்மை, கவலை மனத்தில் குடி கொண்டன. ஆபீஸைவிட்டு வீட்டிற்குப் புறப்பட்டார். அங்கும் மனநிம்மதியில்லை. வீட்டில் சும்மா அங்குமிங்கும் உலாவ ஆரம்பித்தார். கட்டிலில் படுத்தார். அதுவும்

சரிப்படவில்லை. தலைமீது ஏதோ பளு வைத்தாற்போ லாயிற்று. கடைசியில் இரவு 9 மணிக்கு உடம்பை உதறிக் கொண்டு எழுந்திருந்து தந்திபாரம் எடுத்துக்கொண்டு, "மந்த்ராலய உற்சவம் நடைபெறலாம். 144 தடை யுத்தரவு ரத்தாய்விட்டது" என்று எழுதி கையெழுத்திட்டு விட்டார்! அப்பொழுது அவரது மனதிற்கு மிக்க சமாதானம் மற்றும் மகிழ்ச்சியுண்டானது. தனது ஜவானையழைத்து மடத்தின் ஏஜன்டை அழைத்துவரும்படி யனுப்பினார். ஏஜன்ட் வந்தவுடன் தந்தியை அவரிடம் கொடுத்து, "இப்பொழுது தங்களுக்கு சந்தோஷம்தானே?" என்றார். ஸ்ரீ வெங்கோபராயர் கலெக்டரின் இந்த நடவடிக்கையினால் ஆச்சரியமடைந்து மட்டற்ற மகிழ்ச்சி. உணர்ச்சிவசமாய் ஸ்ரீ ப்ரேஜர் துரையின் கைகளைக் குலுக்கி, "இப்பொழுது தாங்கள் உண்மையான பிரிடிஷ் அதிகாரி என்று சொல்ல மகிழ்ச்சி யடைகிறேன். உமது பாரபக்ஷமற்ற புத்திக்கு நன்றி" என்றார். அப்பொழுது கலக்டர் தமது அனு பவத்தைச் சொல்லி, "உமது குருகளவர்கள் உண்மையாக மஹான்தான். என்னையறியாமலே என் கையினாலேயே தடையுத்தரவு ரத்து செய்ய வைத்துள்ளார். எனக்கும் இப்பொழுது நிம்மதியாயுள்ளது. நீங்கள் இப்பொழுதே மந்த்ராலயத்திற்குப் போய் குருகளுக்குத் தெரிவியுங்கள். எனது இந்த உத்தரவை தந்தி மூலம் நாம் எல்லா இடங் களுக்கும் அனுப்புகிறோம். இந்தக் கையாலெழுதப்பட்ட உத்தரவை நீங்கள் எடுத்துக்கொண்டு போங்கள் என்று ஏஜென்டின் கைகுலுக்கி அனுப்பினார். அப்பொழுது ராத்திரி 10 மணி. உடனே மந்த்ராலயத்திற்குப் போவ தற்குக் கார், பஸ், ரயில்கள் வஸதியில்லாதிருந்ததால் காலை 6 மணிக்குக் காரில் மந்த்ராலயத்திற்குப் போய், தடை யுத்தரவு ரத்தானது, ஸ்ரீ ராயரின் மஹிமைகளை ஸ்ரீ சுய மீந்திர தீர்த்தருக்குத் தெரிவித்தார். ஸ்ரீகளவர்களுக்கான ஆனந்தம் வர்ணிக்க முடியாதது!!

ஸ்ரீ குருராஜரின் பூர்வாராதனைக்குத் துங்கபத்ரா ரெயில்வேஸ்டேஷன் மதராஸ்-பாம்பே மெயில் வண்டி 11 மணிக்கு வந்து நின்றது. அந்த ரயிலில் சுமார் 2000

ஜனங்கள் ராயரின் பக்தர்களிருந்தனர். ரயில்வே அதிகாரிகளுக்கும் போலீஸுக்கும் இன்னும் 144 தடையுத்தரவு ரத்தான உத்தரவு வரவில்லை. ஆகையால் அவர்கள் பக்தர்களை ரயிலிலிருந்து இறங்கவிடவில்லை. ராயரின் பக்தர்கள் 2000 பேர்கள் இதனால் மிகுந்த துக்கமடைந்து மனம் நொந்து அழத்தொடங்கினர். ஆனால் சர்க்கார் உத்தரவாயிற்றே, ரயில் துங்கபத்ரா ஸ்டேஷன் விட்டு நகர்ந்தது. ஜனங்கள், "ஐயோ ஐயோ, இவ்வளவு தூரம் வந்து ஸ்ரீ ராயர் தரிசனம் தங்களுக்குக் கிடைக்காமற் போயிற்றே, குருராஜரே! தரிசனம் அருளிக் காப்பாற்றுங்கள் தந்தையே!" என்று கண்ணீர் விட்டுக் கொண்டே ப்ரார்த்தனை செய்யவாரம்பித்தனர்.

வேகமாகப் புறப்பட்ட ரயில் ஸ்டேஷனை விட்டு கைகாட்டி மரம் வரை போய்க் கொண்டிருக்கும் பொழுது திடீரென்று நின்று விட்டது? அதிசயம்! ஆச்சரியம்! நன்றாயிருந்த ரயில் இஞ்ஜின் திடீரென்று கெட்டுவிட்டது. இஞ்ஜின் டிரைவர் எவ்வளவோ முயற்சி செய்தும் ரயில் நகரவேயில்லை. இஞ்ஜினின் எந்தப் பாகமும் கெடவில்லை. இது எத்தகைய அதிசயம்! ஓடிக்கொண்டிருந்த மெயில் வண்டி நின்றதினால் பக்த ஜனங்களின் மனதில் ராயர் அனுக்ரஹிப்பாரோ என்ற நம்பிக்கை பிறந்தது. எல்லோரும் ஒருமுறை "ராஜாதி ராஜ குருஸார்வ பௌம கோவிந்தா! கோவிந்தா! என்று பக்தியினால் உரக்கக் கூவினர். அந்த ஓசை ஸ்டேஷனிலிருந்தவர்களுக்கெல்லாம் கேட்டது. ஜனங்கள் ஆச்சரியப்பட்டனர். இதற்கிடையே அரை மணி நேரம் கழிந்துவிட்டது. அதே நேரத்தில் "144 தடையுத்தரவு ரத்து செய்யப்பட்டுள்ளது. மந்த்ராலயத்திற்குப் போகிறவர்களைப் போகவிடலாம்" என்று கலக்டரின் தந்தி வந்து சேர்ந்தது. எல்லோருக்கும் மட்டற்ற மகிழ்ச்சி, ஆச்சரியம். ஸ்டேஷன் மாஸ்டர், போலீஸார் தந்தியை எடுத்துக்கொண்டு ரயில் அருகில் ஓடினார்கள். அங்கிருந்த பக்தர் கூட்டத்திற்கு ஆர்வத்துடன் 144 தடையுத்தரவு ரத்து செய்யப்பட்டுள்ளது. நீங்கள் யாவரும்

மந்த்ராலயத்திற்குப் போகலாம் என்று சொன்னார்கள். அப்பொழுது பக்தர்களுக்கான மகிழ்ச்சியும், ஆவேசமும் (excitement) வர்ணனை செய்ய இயலாதவை. எல்லோரின் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. ஆஹா! ஸ்ரீ குருராஜர் 30 நிமிட காலம் ரயிலை நிற்கும்படி செய்து, 144 தடையுத்தரவை ரத்தும் செய்யவைத்து நம்மை அனுக்ரஹித்து விட்டாரென்று மட்டற்ற மகிழ்ச்சியிலாழ்ந்தனர். ஸ்ரீ ராயரின் மகிமையைக் கொண்டாடவாரம்பித்தார்கள். ரயிலிலிருந்து தபதபவென்று கீழேயிறங்கி ஆர்வத்துடன் "ஸ்ரீ ராஜாதி ராஜ குருஸார்வ பௌம கோவிந்தா கோவிந்த" என்று ஜயகோஷம் செய்து உற்சாகத்துடன் ஸ்டேஷனருகிற்கு ஓடினார்கள். பக்தர்களின் அந்த ஜய கோஷம் வானையே பிளக்கும் போலாயிற்று. ஸகலரும் ஸ்ரீ குருராஜரின் அபார மகிமையைப் பாராட்டினர். 2000 ஜனங்கள் ரயிலிலிருந்து இறங்கிய உடனே ஆச்சரியம்! அற்புதம்! ரயில் தன்னிஷ்டப்படிதானே நகர்ந்து புறப் பட்டது! இந்த மாபெரும் அற்புதத்தைக் கண்ணாரக் கண்ட ஸகல ஜனங்களும் யந்திரத்தை அடக்கின மந்த்ரா லயத்தின் மஹா மாந்திரீகனின் மகிமையை வர்ணித்துக் கொண்டே ஆநந்தமாக மந்த்ராலயத்திற்குச் சென்று ஸ்ரீ குருராஜரின் ஆராதனையில் பங்கேற்று ஸ்ரீ களவர்களின் கிருபைக்குப் பாத்திரராயினர்.

### 97. துர்மரணத்தைப் பரிகாரம் செய்து தாஸனாக்கிக் கொண்டார்.

ஸ்ரீ குருராஜர் காண்பித்த இந்த மகிமை இந்த க்ரந்த கர்த்தாவின் சொந்த அனுபவம்! இன்றைக்கும் அந்த சம்பவம் எனது மனச் சுவரில் பசுமரத்திலறைந்த ஆணி போல் பதிந்துள்ளது. அதை நினைத்தால் மெய்சிலிர்த்து அந்த மஹான் என்னிடம் காண்பித்த அபார கருணைக்குப் பக்தி மிகுதியால் தொண்டையடைத்து நா தழுதழுக்கக் கண்ணீர் பெருகுகின்றது. இது நிகழ்ந்த வரலாறு கேவலம் கற்பனைக் கதையல்ல. உத்ப்ரேக்ஷாலங்காரங்களினால் (Imagination) ரஸிகர்களின் மனம் குளிரச் செய்யும் காவிய மல்ல. யாரையோ மெச்சுவதற்காகத் தற்புகழ்ச்சி செய்து

கொள்ளும் அதிக ப்ரஸங்கமல்ல. இது ஸத்யமான நிகழ்ச்சி. நிர்மலமான மனதுள்ள குருபக்தரின் மனதில் பகிரங்கமான சொற்களினால், மூடி மறைக்காது குரு மகிமையை வார்ப் படம் செய்து முழு நம்பிக்கையுள்ளவராய் நன்றாக பஜிக்கும் படி செய்வதே இந்த வரலாற்றின் லக்ஷியம்.

இந்த எழுத்தாளனினால் ஸ்ரீ ஹரி-வாயு-குருகளின் ஆராதனை வைதிக ஸாஹித்ய சேவை முதலிய ஏதாவது மிகச்சிறிய அளவில் காரியங்கள் நடந்து கொண்டிருந்தால், ஸ்ரீ குருராஜர் மெச்சும் காரியங்களாயிருந்தால் அதற்கு அன்றைய அந்த நிகழ்ச்சி மந்த்ராலய முனிபுங்கவரின் அனுக்ரஹங்களே காரணமென்று மனமார விஞ்ஞாபனம் செய்ய விரும்புகிறேன்.

ஏறக்குறைய 50 வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவம். எனக்குத் திருமணமாகி ஒன்றிரண்டு வருஷங்களே ஆகி யிருந்தன. ஸ்ரீ குருராஜரின் பவித்ரபீடத்தில் அவருடைய பரமானுக்ரஹத்திற்குப் பாத்ரராக இருந்த கீர்த்திசேஷ ஸ்ரீ சுயமீந்திர தீர்த்தர் அமர்ந்திருந்தார். நான் அப்பொழுது மந்த்ராலய ஸ்ரீ குருராகவேந்திர ஸமஸ்க்ருத காலேஜில் மதராஸ் பல்கலைக்கழகத்தினரின் "வேதாந்த சிரோமணி" வித்வத் பரீக்ஷையில் முதல் பாகத்தில் தேர்ச்சி பெற்று உத்தம பாகத்தின் க்ரந்தங்களைப் பயின்று கொண் டிருந்தேன். ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன ஸந்நிதிக் காரியாலயத்திலும் என் தகுதிக்கேற்றாற்போல் சேவை செய்து வந்தேன்.

ஸ்ரீராயரின் ஆபரணங்களை வைப்பதற்காக பெங்களூரிலிருந்து 6 அல்லது 7 அடிகள் அளவுள்ள இரண்டு இரும்புப் பீரோக்களை வரவழைத்திருந்தோம். வர்ணம் பூசி அதை மடத்திற்கு ஒப்புவிக்க இரண்டு "மெகானிக்" குகள் வந்திருந்தனர். இரும்புப் பெட்டியின் உள் அறைகளை (Drawers) எடுத்து வர்ணம் பூசிக் கொண்டி ருந்தனர். ஒருநாள் நானும் சின்ன நைவேத்ய சமையல் செய்யும் தீர்த்தஹள்ளி ராகவேந்த்ராசார் இருவரும் அந்த

இரும்பு பீரோவைப் பரிசீலித்துக் கொண்டிருந்தோம். மத்யானம் நான்கு மணியிருக்கலாம். வேலையாட்கள் இளைப்பாறிக் கொண்டிருந்தனர். அநேக பக்தர்கள் ஸ்ரீ ராயருக்குப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது ராகு இரும்புப் பீரோவில் நிற்பதாகச் சொல்லி பீரோவிற்குள் நின்றான். பிறகு நானும் நிற்பதாகச் சொல்லி இரும்புப் பீரோவிற்குள் நின்றேன். பிறகு "ராகு, கதவை மூடு பார்க்கலாம்" என்றேன். அவன் முன் பின் பார்க்காமல் கதவை மூடிவிட்டான்! அவ்வளவு தான்! தானியங்கிப் பூட்டு (Automatic Lock) பூட்டிக் கொண்டு விட்டது!! சாவிக் கொத்து எனது இடுப்பிலிருந்தது! இரும்புப் பெட்டியில் நான் சிக்கிவிட்டேன்.

பூட்டு பூட்டிக் கொண்ட உடனே ராகு பயந்து போனான். சிக்கிக் கொண்ட நான் கதவைத் திறக்கும்படி சத்தம் போட ஆரம்பித்தேன். ஆனால் என்ன ப்ரயோஜனம்? தானியங்கிப் பூட்டு (Automatic Lock) விழுந்துள்ளதே! சாவி என்னிடம் தான் இருந்தது. பூட்டைத் திறப்பது எப்படி? இந்த விஷயம் சேவார்த்திகளெல்லோருக்கும் மடத்தின் சிப்பந்திகளுக்கும், கடைசியில் ஸ்ரீகளவர்களுக்கும் சற்று நேரத்திற்குள்ளேயே எட்டிவிட்டது. எல்லாரும் ஆரவாரம் செய்து கொண்டிருந்தனர். தொடிப் பொழுதில் ஸ்வாமிகளின் பூர்வவாச்ரம புத்திரன் ராஜா குருராஜாசார்யர் இரும்புப் பெட்டிக்குள் அகப்பட்டு விட்டாராம்! என்னும் செய்தி பெரியளவில் பரவி, ஊர் ஜனங்கள், வெளியூரார்கள் மடத்தவர்கள் ஸேவார்த்திகள் நூற்றுக்கணக்கானவர்கள் கூடிவிட்டனர்!

ஸ்ரீகளவர்கள் மெக்கானிக்கரையழைத்து "எப்படியாவது கதவைத் திறக்க ஏற்பாடு செய்யுங்கள்" என்று சொன்னார். அதற்கவர்கள், "ஸ்வாமி, இது மிக பத்திரமான இரும்புப் பீரோ: தாங்கள் ஒவ்வொரு பீரோவிற்கு 2-3 ஆயிரம் ரூபாய்கள் கொடுத்துத் வரவழைத்திருக்கிறீர்கள். அவ்வளவு சுலபமாகத் திறப்பது முடியாத காரியம். இதை உடைப்பதற்கோ அல்லது காற்றுப் போக த்வாரம் செய்வ

தற்கோ எங்களிடம் அதற்குத் தேவையான சாமான்கள் (Tools) இல்லை. மின்சாரத்தினால் இயங்கும் கருவியினால் இதைக் குடைந்து த்வாரம் செய்யலாம். அதுவும் 3-4 மணி நேரம் உழைத்தால் மாத்திரம் முடியும். அந்த யந்திரங்கள் (Machines) எங்களிடமில்லை. ஆகையால் நாங்கள் எதுவும் செய்யும் நிலையிலில்லை. மன்னிக்க வேண்டும்'' என்று சொல்லி விட்டார்கள்.

ஜனங்கள் ''கிசு கிசு'' என்று காதோடு காதாகப் பேசிக் கொண்டனர். எல்லோரும் என்ன நடக்கப் போகிறதோ என்று கலவரமடைந்தனர். ஸ்ரீ சுயமீந்திர குருகள் ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன ஸந்நிதிக்கு விரைந்து ஸ்ரீராயருக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து ப்ரார்த்தனை செய்யவாரம்பித்தார். ''குரு ஸார்வபௌமரவர்களே! இந்தச் சம்பவம் தங்களது கௌரவம் மகிமை, கீர்த்திகளின் ப்ரச்னையாயுள்ளது. 'मृत पोतप्राणदात' ரென்னும் தங்கள் விருதைத் தக்க வைத்துக் கொள்ளவேண்டும் ப்ரபோ! நமது பூர்வாச்ரம புத்திரனைப் பிழைக்க வைத்துக் கொடுங்கள்'' என்று சுயநலத்திற்காக ப்ரார்திக்கவில்லை! ஹே மந்த்ராலய ப்ரபோ! முன்பு கிரீடகிரி தேசாயி வெங்கடராயரின் புத்ரன் மாம்பழ ரஸாயனத்தினால் (மாம்பழக் குழம்பு) நிறைந்த ஜோடுதவலையில் விழுந்து மரணமடைந்த பொழுது மந்த்ர உதக ப்ரோக்ஷணம் செய்து தாங்கள் அந்தச் சிறுவனை உயிர்ப்பித்தீர்-என்று அபரோக்ஷ க்ஞானிகள் தங்கள் மகிமையைப் பாராட்டியுள்ளனர். அந்தத் தங்கள் திவ்ய மகிமைக்கு, கீர்த்திக்குக் களங்கம் வரக்கூடாது. குருராஜா! தாங்கள் கருணைக்கடல்! இரும்புப் பீரோவில் சிக்குண்டு மரணத்தின் வாயிலகப்பட்டதைப் போல் ஆபத்திலுள்ள குருராஜனைக் காப்பாற்றுங்கள். இல்லாவிடில்—'' ஸ்ரீ ராயர் மஹிமையுள்ளவர் என்பது பொய், தமது வம்சத்தில் பிறந்த குருராஜனை தமது பீடத்தை அலங்கரித்துக் கொண்டிருக்கும் குருவர்யரின் பூர்வாச்ரம புத்திரனை, அதுவும் தமது ப்ருந்தாவன சந்நிதியிலுள்ளவனைப் பிழைப்பிக்க முடியாதவரென்றும்,

மாம்பழக் குழம்பில் விழுந்த மரணமடைந்த குழந்தையைப் பிழைக்க வைத்தார் என்பது கொண்டாடுவதெல்லாம் வெறும் பொய்'' என்று சொன்னால், அந்தப் பேச்சை மாத்திரம் நாம் கேட்க முடியாது. கேட்கமாட்டோம். நமது சுயநலத்திற்காகத் தங்களை வேண்டிக் கொள்ள வில்லை ப்ரபோ! தங்கள் களங்கமற்ற கீர்த்திக்குப் பங்கம் விளையாமல் இருக்கவேண்டுமே என்பதற்குத்தான், அது என்றைக்கும் ப்ரகாசித்துக் கொண்டே வளரவேண்டும் என்றுதான் ப்ரார்த்திக்கின்றேன். கருணை காட்டுங்கள் குருராஜா!'' என்று ப்ரார்த்திக்க ஆரம்பித்தார். ஆஹா! ஸ்ரீ ஸுயமீந்திரருக்கு ஸ்ரீ ராயரிடம் எப்பேர்பட்ட அஸா தாரண பக்தி! அவருடைய அமரகீர்த்திக்கு பங்கம் வரக் கூடாதென்பதில் எவ்வளவு தீக்ஷை! பூர்வாச்ரம புத்திரன் மரணத்தின் வாயில் சிக்கி மரணத்தை நெருங்கிக்கொண் டிருக்கும் தறுவாயிலும் கூட அதற்காகக் கவலைப்படாமல் ஸ்ரீ ராயரின் புனிதமான கீர்த்திக்குக் களங்கம் வரலாகா தென்று வேண்டிக்கொண்டிருக்கின்றாரே! என்று அங்கு கூடியிருந்த ஜனங்கள் ஸ்ரீகளவரின் இதரரிடம் காண முடியாத குருபக்தியைக்கண்டு மந்திரத்தால் கட்டுப்பட்டவர் களைப் போல் பாராட்டத் தொடங்கினர்.

ஸ்ரீ குருராஜருக்கு ஸ்ரீகளவர்களின் முறையீடு கேட்டு விட்டது என்று காணுகிறது. அந்த மஹானுபாவர் தனது கிருபாகடாக்ஷமான அமிர்த மழையை ஸ்ரீயவர்களின் மீது வருஷித்தார். சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ப்ரார்த்தனை செய்து கொண்டிருந்த ஸ்ரீகளவர்கள் தலைமாட்டில் கர்ப்ப க்ரஹத்தின் மரக்கதவு வழியாக ஆறு அங்குலமுள்ள ஒரு பருமனான கம்பி வந்து விழுந்தது! ''டண்'' என்று ஓசை கேட்டதும் ஸ்ரீகளவர்கள் அது என்ன என்று தலை நிமிர்ந்தார். முன்னால் விழுந்திருந்த கம்பி அவரது பார்வைக்குப்பட்டது. உடனே எழுந்திருந்து குருராஜரின் அனுக்ரஹமாயிற்றென்று பக்தி மேலிட்டுக் கண்ணீர்விட்டுக் கொண்டு அந்த கம்பியை எடுத்துக்கொண்டு இரும்புப் பீரோ இருந்த இடத்திற்கு ஓடினார்.

நான் இரும்புப் பெட்டியிலகப்பட்டு 40 நிமிஷங்களா யிருக்கலாம். வெளியே உள்ளது எதுவும் தெரியாது. வெளியில் என்ன நடக்கிறதென்பதும் தெரியாது. ஆனால் 15—20 நிமிஷமும் ஆனதும் எனக்கு மூச்சடைத்து மூச்சு நின்றுவிடும் போலாயிற்று. அவ்வளவுதான், இனி நான் பிழைக்கப் போவதில்லை, என்று தோன்றிற்று. ஆனால் என்னதான் செய்ய முடியும்? பயந்தேன். உடம்பு நடுங்க வாரம்பித்தது. இறப்பதென்னமோ உறுதி; பகவத்யானம், ஸ்ரீ குருராஜரின் ஸ்மரணை செய்து கொண்டாவது இறக்கலாமென்று மனதில் ஸ்ரீ ஹரிவாயுகளை ஸ்மரணை செய்து பிறகு ஸ்ரீ குருஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்யவாரம்பித்தேன். ஸ்ரீ ராகவேந்திரோயதிராட் குருர்மே ஸ்யாத்பயாபஹ: | க்ஞான பக்திஸுபுத்ராயு: யச: ஸ்ரீ புண்யவர்த்தன:'' என்னும் ச்லோகத்தைச் சொல்லும் பொழுதே கண்ணிருண்டு மூச்சு விடுவதே கடினமாய் மூர்ச்சையாகிவிட்டது. அவ்வளவுதான் எனக்குத் தெரியும்.

ஸ்ரீகளவர் இரும்புப் பீரோவின் மெகானிக்குகளுக்கு இரும்புக் கம்பியைக் கொடுத்து ''இதனால் பூட்டைத் திறவுங்கள்'' என்று சொன்னார். அப்பொழுது அவர்கள், ''ஸ்வாமி, இது முடியாத காரியம், இந்தக்கம்பியினால் பூட்டு திறக்க வருவதானால் இதற்கு இரண்டு மூன்றாயிரம் ரூபாய்களைத் தாங்கள் கொடுத்திருப்பீர்களா? தங்களுக்காக இதற்கு விசேஷ பத்திரமான பூட்டு ஏற்பாடு செய்து கொண்டுவந்திருக்கிறோம் (Special Safety arrangement). பூட்டுத் திறக்க முடியவே முடியாது.'' என்று சொல்லவும் ஸ்ரீகளவர்கள், ''அய்யா, பூட்டுத் திறப்பவன் நீயில்லை; அதற்கு ஸமர்த்தர் ஸ்ரீ ராயர்தான். அவர் தானே வந்து திறப்பதில்லை! நடுவில் ஒருவன் வேண்டும். அந்தக் காரியத்தை நீ செய்தால் போதும். மற்ற விஷயத்தை ஸ்ரீ ராயரிடம் விட்டுவிடு'' என்றார். அவனும் ராயரின் பக்தன்தான். அப்பொழுது அவன் ''குருகளே, உமது இந்த திடமான நம்பிக்கை ஆச்சர்யகரமானது. உம். ஆகட்டும். முயற்சிக்கிறேன்.'' என்று அவன் கம்பியைச்

சற்று வளைத்து பூட்டின் துவாரத்தில் வைத்ததுதான் தாமதம், ஆஹா! என்ன ஆச்சரியம்!! இரும்புப் பீரோவின் மூடின இரண்டு கதவுகளும் உள்ளிருந்து திறந்ததைப் போல் அந்த நொடியிலேயே தானே திறந்துகொண்டன!!

இந்த மாபெரும் ஆச்சரியத்தைக் கண்ணாரக் கண்ட நூற்றுக்கணக்கான ஜனங்கள் திகைத்து ஆச்சரியத்தில் ஆழ்ந்து "துங்காதீரவாஸ கோவிந்தா, கோவிந்த, ம்ருத பாதப்ராண ரக்ஷக கோவிந்தா கோவிந்த, ஸ்ரீ ராகவேந்த்ர குருஸார்வபௌம கோவிந்தா கோவிந்த" என்று மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். ஜயகோஷம் வானைப் பிளந்தது!

நான் மூர்சையானேன். தண்ணீர் தெளித்து காற்று வீசி ஐந்து நிமிஷ உபசாரம் செய்த பிறகு எச்சரிக்கையாயிற்று. மெதுவாக எழுந்திருந்து உட்கார்ந்தேன். சுற்றிலும் 500-600 ஜனங்கள் கூடியுள்ளனர். ஸ்ரீகளவர்கள் சிரித்த முகத்துடன் நின்றிருக்கிறார். என் கண்ணையே நான் நம்பவில்லை! எல்லோரும் என்னைக் கேட்பார்களே, எனது நிலைமையைக் கண்டு சிரிப்பவர்களும் இல்லாமலில்லை! சுருக்கமாக நடந்த விஷயத்தை நான் சொன்னேன். ஸ்ரீகளவர்கள் தமது ப்ரார்த்தனைக்கு இணங்கி ஸ்ரீராயர் காண்பித்த அற்புதத்தை வர்ணித்து ஆனந்தக் கண்ணீர விட்டு ஸ்ரீ ராயரைக் கொண்டாடினார். ஜனங்களின் மகிழ்சிக்கு ஓர் எல்லையேயில்லை. கண்ணார நேரில் கண்ட ஸ்ரீராயரின் மகிமையை வர்ணித்துப் புகழ வாரம்பித்தனர். எனக்கு ஆனந்தம்! ஆச்சரியம்! ஏதோ வைபவம் இதனாலாகி எதுவும் பேச முடியாமல் பேசாமல் நின்றேன்.

ஸ்ரீ ஸ்ரீபாதங்களவர் என்னை ஸ்ரீ ராயரின் ப்ருந்தாவன ஸந்நிதிக்கு அழைத்துக் கொண்டு போய், "உம், நமஸ்காரம் செய், ஸ்ரீராயர் உன்னைக் காப்பாற்றியிருக்கிறார். முன்னிருந்த குரு இறந்தான்; இப்பொழுது பிழைத்திருக்கும் "குரு" ஸ்ரீ குருராஜரின் கருணையில் ஜீவிக்கிறான்! உனது இந்த தேகம் குருராஜரின் அம்ருதமய க்ருபாத்ருஷ்டியினால் பிழைத்துள்ளது. உனது தேகத்தில்

கடைசி மூச்சுள்ளவரை உனது இந்த சரீரம், உயிர் எல்லாம் ஸ்ரீ ராயருக்கு சொந்தமாயுள்ளது !

நீ உயிருள்ளவரை குருராஜரின் சேவை, அவர் உபதேசித்த ஸ்ரீமதாசார்யரின் த்வைத தத்வ, தர்மங்களின் மற்றும் குரு ராஜரின் மகிமையைப் பரப்புவதற்காகவே வாழ வேண்டும். உம் நாம் சொன்னபடி சபதம் செய்'' என்று உத்தரவிட்டார். ஸ்ரீயவர்கள் சொன்னபடியே ஸ்ரீ குருராஜரை நமஸ்கரித்து சபதம் செய்தேன்.

அன்று சபதத்தால் கட்டுண்ட நான் ஸ்ரீயவர்களின் குருகளான ஸ்ரீஸுவ்ரதீந்தர தீர்த்தரின் பூர்வாச்ரம புத்திரரான திவங்கத டாக்டர் ஹுலி. க்ரு. வேதவ்யாஸா சார்யர் அவர்களுடன் கலந்தாலோசித்து ஸ்ரீ குருராஜரின் பூர்வாச்ரம வம்சத்தவரான ஊக்கமுள்ள வாலிபர்களின் ஒத்துழைப்பினால் ஸ்ரீ ஸ்ரீசுயமீந்திர தீர்த்தரின் அனுக்ரஹ ஆசீர்வாதங்களைப் பெற்று 1945-ல் நஞ்ஜன்கூடில் நமது வீட்டில் ''ஸ்ரீ பரிமள சம்சோதன மற்றும் ப்ரகாசன மந்திரம்'' என்னும் வித்யா நிறுவனத்தை ஸ்தாபித்தோம்.

அன்று முதலாரம்பித்து ப்ராசீன கிரந்தங்களைச் சேகரிப்பது, காப்பாற்றுவது, ஆராய்ச்சி, பிரசுரம் முதலிய காரியங்களிலீடுபட்டு சுதந்திரமாக நாங்கள் ஸ்ரீ குருராஜர் முதலான ப்ராசீன ஆசார்யர்கள் இயற்றிய க்ரந்தங்களின் ப்ரசுரம் அவைகளின் மொழிபெயர்ப்பான க்ரந்தங்களை வெளியிடுவது — ''பரிமள'' கலாசாரப் பத்திரிகை வெளியிடுவது முதலான க்ஞான ப்ரஸார காரியங்களைச் செய்து வந்தோம். இந்த ஒரு மகத்தான காரியம் என் மூலம் நடப்பதற்கு ஸ்ரீராயரே காரணமான தினால் இவையெல்லாவற்றையும் அவருக்கு அர்ப்பிக்கப் பட்டன. எங்கேயோ மூலையில் கிடந்த அற்பனான என்னை தமது புனித வம்சத்தில் பிறக்கச்செய்து துர்மரணத்திற்கு இலக்காகவிருந்த என்னைப் பிழைப்பித்துத் தனது தாஸனாக ஆக்கிக்கொண்டு க்ஞான-பக்தி-வைராக்யம், திறமை எதுவும் இல்லாத அக்ஞானியான என்னில் இருந்து கொண்டு ஊக்கு

வித்து ஞானவான்கள் ஒப்பும்படியான க்ரந்த ப்ரகரம். தத்வ தர்மங்களின் மற்றும் கலாச்சார ப்ரசாரம் முதலிய க்ஞான காரியங்களைச் செய்வித்து இந்த அற்பனின் சேவையை ஏற்றுக்கொண்டிருக்கும். குருராஜரின் ஸ்வஜன வாத்ஸல்யம், பக்தானுக்ரஹம், கருணைகளுக்கு நிகர் உண்டா? ஸ்ரீ குரு ராஜரின் அகம்ய மகிமைக்கு நானும் ஒரு திருஷ்டாந்தமாக உள்ளேன்.

உயிர்ப்பிச்சையளித்த குருகளுக்கு இந்த சரீரம் ஒதுக்கப் பட்டுள்ளது. அவருடைய சேவை செய்வதே எனது வாழ்க்கையின் லக்ஷியம், க்ரந்த ப்ரகாசனம் முதலிய உத்தம காரியங்களை அந்த மஹானுபாவரே செய்விக்கிறாரென்றே நான் செய்து கொண்டிருக்கிறேன் இது யாரோ மனிதரை மெச்சுவதற்காகவாவது, கீர்த்திக்காகட்டும் பணம் சம்பாதிப் பதற்காகவுமல்ல! யார் மெச்சினாலும் சரி, தூஷித்தாலும் சரி, ஸ்ரீ குருராஜர், ஸ்ரீ ஹரிவாயுகள்மெச்சி அனுக்ரஹித்தாலே போதுமானது. "सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ', ' कर्मण्येवाधिकारस्ते माफलेषु कदाचन", "मदाज्ञाकारिभिः विद्या संबंधिभिः देह संबंधिभिश्च त्वत्सेवं कर्तृत्व कारयित्वाद्यनुसंधान पूर्वकं करिष्ये, कारयिष्ये च" முதலியவைகள் ஸ்ரீ க்ருஷ்ண பரமாத் மாவின் ஆக்ஞை. ஸ்ரீ குருராஜரின் ப்ரதிக்ஞைகளை ஸதா ஸர்வதா நினைவில் வைத்துக்கொண்டு அந்த மஹானுபாவர் ஸேவையை ஏற்றுக்கொள்ளுபவருக்கு அவருடைய அனு க்ரஹம், ஸ்ரீ ஸுயமீந்திரரின் ஆசீர்வாத பலத்தினால் யோக்யதைக்குத் தகுந்தவாறு ஞானப்ரஸாரம் முதலிய சேவை செய்வதே என் வாழ்க்கையின் லக்ஷியமாயுள்ளது. இந்த தாஸனைக் காப்பாற்றியபரம மங்களமூர்த்திகளாவார் மாபெரும் கருணைக்கடல். அவருடைய கருணைக்கு வரம்பு எல்லையொன்றுமில்லை, அந்த மஹானுபாவரின் பரமானு க்ரஹத்திற்குப் பாத்திரராயுள்ள ஆயிரக்கணக்கான ஜனங்களில் அற்பனான நானும் ஒருவன். இப்படிப்பட்ட மஹானுபாவரின் சேவகனாயிருப்பதே நமக்கு ஒரு பெருமை ஸ்ரீ குருஸார்வபௌமர் எல்லோருக்கும் மங்கள முண்டாக் கட்டும்.

## 98. தேகமென்னும் தேரை ஓட்டின தயாநிதிக்கு வெள்ளி ரதம் சமர்ப்பித்தது

இது ஒரு அற்புதமானஸத்யமான நிகழ்ச்சி. இது நடந்தது கி. பி. 1947ல். ஸ்ரீ குருராஜர் காண்பித்த இந்த அதிசயம் நடந்தவிதம் இது :

தமிழ் நாட்டின் செட்டி நாடு பணக்காரர்களுக்குப் பெயர் பெற்றது. கோட்டையூரின் ஸ்ரீ K.V.A.L M. ராமநாதன் செட்டியார், ப்ரஸித்தி பெற்ற டாக்டர். அழகப்பச் செட்டியாரின் சகோதரர். ஸ்ரீ ராமநாதன் செட்டியாரின் வியாபாரம் மலேயாவரையிலும் பரவியிருந்தது. கோடீச்வரரான செட்டியாருக்கு இரண்டு மனைவிமார்கள்; நிறைந்த குடும்ப வாழ்க்கை. ஆனால் ராமநாதனவர்களுக்கு இருதய நோய் வந்திருந்தது. பல டாக்டர்கள் சிகிச்சை செய்தும் பலனேற்படவில்லை. வியாதி வலுத்தது. பம்பாய், மதராஸ் வைத்ய நிபுணர்கள் பரீக்ஷித்தனர். சென்னையின் பிரஸித்த இதயநோய் நிபுணர் நோய் வலுத்திருக்கிறது, ஆபரேஷன் (அறுவைசிகிச்சை) ஆக வேண்டும் என்றார். பணக்காரர் நிராசை, கவலையுடன் தமது சென்னை இல்லத்திற்கு புறப்பட்டு வந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். பாக்யவசமாக ஸ்ரீ செட்டியாரின் அறிமுகமான ஸ்ரீ கிருஷ்ணாசார்யரைச் சந்தித்தார். செட்டியார், தமது வியாதியைப்பற்றின விஷயம் தெரிவித்தார் கிருஷ்ணாசார்யர். "ஸ்வாமி, அதற்கேன் கவலைப்படுகிறீர்கள்? நமது ராகவேந்திர குருவர்யரை நம்பி சேவை செய்யுங்கள். உமக்கு மங்களமுண்டாகும்" என்றார். கடவுள், குருகளென்றால் செட்டியாருக்கு நம்பிக்கையில்லை. அதனால், "என்ன ஆசார்யரே! என்றைக்கோ ப்ருந்தாவன ப்ரவேசம் செய்த குருகளை நம்பிஸேவித்தால் நோய் பரிகாரமாகி விடுமா என்ன? இது விஞ்ஞான யுகம். நிபுணரான டாக்டர்களாலாகாத காரியத்தை உமது குருகள் பரிகாரம் செய்து விடுவாரா? எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை." என்றார். அப்பொழுது ஆசார்யர் புன்னகை செய்து, "செட்டியாரவர்களே, இதுவரை

நாங்கள் பத்திருபது ஆயிரம் ரூபாய்கள் சிலவு செய்துள்ளீர்கள். நமது குருகளுக்கு உமது பணம் தேவையில்லை; பக்திபென்னும் பணம் ஒன்று கொடுத்தால் போதுமானது. எப்படியும் தங்களுக்கு குருகளிடம் நம்பிகையில்லை; பணமெதுவும் சிலவில்லை; அவரை சேவியுங்கள். அனுகூலமானால் நம்பி பஜனை செய்யுங்கள். இல்லாவிட்டால் விட்டு விடுங்கள். அதனால் நமக்கு ஒரு நஷ்டமுமில்லையல்லவா?'' என்றார்.

ஸ்ரீ ராமநாதன் செட்டியார் ஸ்ரீ ராயரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராகும் யோகமிருந்தது போல் தோன்றுகிறது. செட்டியார், ''உம், ஏன் பரீக்ஷித்துப் பார்க்கக் கூடாது'' என்று யோசித்து, ''ஆகட்டும், முயற்சி செய்பலாம், உமது குருகள் என்ன செய்கிறாரோ பார்க்கலாம், சொல்லுங்கள். நாஸென்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார். மகிழ்ச்சியுடன் க்ருஷ்ணாசார்யர் ஸ்ரீராயரின் மூலம்ருத்திகை, மந்த்ராக்ஷதை, புகைப்படம் இவைகளைச் செட்டியாருக்குக்கொடுத்து ஸ்ரீராயரின் சில ஸ்தோத்ர மந்த்ரங்களை எழுதிக்கொடுத்து சேவிக்கும் முறையையும் தெரிவித்துவிட்டுச் சென்றார்.

அன்று வியாழக்கிழமை. செட்டியார் இரவில் குருகளின் படத்தை புஷ்பங்களினால் அலங்கரித்து இரண்டு நந்தா தீபங்கள் ஏற்றி வைத்து பழங்கள் சமர்ப்பித்துக் கற்பூர ஆரதியெடுத்து ப்ரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்து பக்தியுடன் தமது வியாதியைப் பரிகாரம் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டார். சிற்றுண்டி அருந்திப் படுத்தார்.

அதிகாலையில் செட்டியாருக்கு ஒரு கனவு; கனவில் திவ்யதேஜஸ் (ஒளிவீசுகின்ற) காஷாயவஸ்திரம், தண்டம், கமண்டலம் ஸஹிதமாக முனிபுங்கவர் ஒருவர் சிரித்த முகத்துடன் தரிசனமளித்து அபயப்ராதனம் செய்து ''ஏனப்பா; ராமநாத! நம்மை நம்பி ஆயிரக்கணக்கான ஜனங்கள் நன்மையடைந்துள்ளனர். ஸ்ரீ ஹரிவாயுகள்

ப்ரஸாதத்தினால் தீனர். நமித்தோரான பக்தர்களைக் காப்பாற்றுவதற்காகவே நாம் மந்த்ராலயத்தில் சிரத்துடன் ப்ருந்தாவனத்திலிருக்கின்றோம். அது மாத்திரமல்ல, நினைத்தவர்களின் மனதிலும் நாமிருக்கிறோம். உன்னை ஆஸ்திகனாகச் செய்து அனுக்ரஹிக்க வந்துள்ளோம்; நீ தருந்த ஜீவன். உன்னைக் காப்பாற்றுவோம். கவலைப்படாதே. நாளைக்கே உமது இதய நோய் நிபுணர்களிடம் அறுவை சிகிச்சையைப் பற்றிப் பேசிக்கொள். உனக்கு எந்தக் கஷ்டமுமில்லாமல் உன்னைக் காப்பாற்றுகிறோம். இது ஒரு பெரிய விஷயமல்ல; பலமுறை அறுவை சிகிச்சையாகும். எல்லாச் சமயத்திலும் காப்பாற்றுகிறோம், உனக்கு மங்களமாகட்டும்'' என்று சொல்லி மறைந்தார்.

ஸ்ரீ ராமநாதனவருக்கு எச்சரிக்கையானதும் கனவின் விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. அவர் ஆநந்தம், ஆச்சரியம், பயபக்தியுடன் ஸ்ரீராயரை நினைத்துக் கை கூப்பினார். அன்று அவர் புதிய மனிதரானார். தன்னை அறியாமலேயே அவருக்கு ஸ்ரீராயரிடம் பக்தி சிரத்தைகளுண்டாயிற்று. பத்தினிகளிடம் கனவின் விருத்தாந்தங்களை விவரித்துக் காலையில் ஸ்ரீ குருராஜரைப் பூஜித்துவிட்டு பத்னிகளுடன் டாக்டரிடம் சென்று அறுவை சிகிச்சை செய்யும்படி சொன்னார். சில நாட்களில் அறுவை சிகிச்சை நடந்தது. ஸ்ரீராயர் செட்டியாரைக் காப்பாற்றினார். டாக்டருக்கு ஆச்சரியம்! இவர் எப்படிப் பிழைத்தாரென்று! 15-20 தினங்கள் ஆஸ்பத்திரியிலிருந்து செட்டியார் வீட்டிற்கு வந்தார். அன்றே கிருஷ்ணாசார்யரும் அவரைக்காண வந்தார். அப்பொழுது அவர் சொன்னார், ''என்னப்பா, இப்பொழுது என்ன சொல்லுகிறீர்!'' என்று கேட்கவும், செட்டியாரவர்கள் ''ஸ்வாமி, ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் கலியுகத்தின் ஒரு அற்புதம்! உண்மையாக அவர் கண்கண்ட தெய்வம்: மாபெரும் மகிமையுள்ள மஹான்!'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டார். ''நீங்கள் மந்த்ராலயத்திற்குப் போய் தரிசனம் செய்து கொண்டு வாருங்கள்'' என்று சொல்லி கிருஷ்ணாசார்யர் சென்றார்.

பல காரணங்களினால் செட்டியாருக்கு மந்திராலயம் போக இயலவில்லை. 1-2 வருஷங்களில் மறுபடியும் மறுபடியும் செட்டியாரவர்களுக்குப் பலமுறைகள் அறுவை சிகிச்சை நடைபெற்றது. ஒவ்வொரு முறையும் ஸ்ரீ குருராஜர் அவரை ரக்ஷித்துவந்தார். பூர்ணமாகக் குணமான உடன் செட்டியாரவர்கள் குடும்ப சமேதராக மந்திராலயத்திற்குச் சென்று மூன்று நாட்களிருந்து ஸ்ரீராயரின் சேவை செய்து கிருதார்த்தரானார் அப்பொழுது பீடாதிபதிகளாயிருந்த பூஜ்யஸ்ரீ சுயமீந்திர தீர்த்தர் மந்திராலயத்திலேயே இருந்தார். குருராஜரின் அபார மகிமையைச் செட்டியாரின் வாயால் சொல்லக் கேட்டு ஸ்ரீகளவர்கள் ஆனந்தக் கண்ணீர் ததும்ப ராயரின் அகாதமான மஹிமைகளைச் செட்டியாருக்கு உபதேசித்தார்.

ஊருக்கு புறப்படும் பொழுது செட்டியாரவர்கள் "ஸ்வாமி, என்னைக் காப்பாற்றிய குருராஜருக்கு ஏதாவது நிரந்தரமான சேவை (சாச்வதஸேவா) என் பெயரில் நடைபெற வேண்டுமென விரும்புகிறேன். தாங்கள் ஆக்ஞாபிக்கும் சேவையை நிறைவேற்றுகிறேன்." என்று அறிவித்தார். ஸ்ரீகளவர்கள் ஸ்ரீராயருக்குத் தாம் செய்விக்கப் போகும் வெள்ளி ரதத்தைப் பற்றிய விஷயம் தெரிவித்தார். செட்டியாரவர்கள் "குருகளவர்களே, இந்தச் சேவகனின் தேக ரதத்தை ஓடவைத்துக் கொண்டிருக்கும் தயாநிதியவர்களுக்கு வெள்ளி ரதத்தை நானே செய்வித்து சமர்ப்பிக்கிறேன். தாங்கள் எனக்கு அந்த வாய்ப்பைக் கருணை செய்ய வேண்டும்" என்று ப்ரார்த்தனை செய்தார். ஸ்ரீகளவர் மகிழ்ச்சியுடன் சம்மதித்து அவரை ஆசீர்வதித்து பலமந்த்ராக்ஷதைகள் அருளினார். ஸ்ரீயவரின் உத்தரவு பெற்று செட்டியாரவர்கள் சென்னைக்குப் போய் அங்கிருந்து சொந்த ஊரான கோட்டையூருக்குப் போய்ச் சேர்ந்தார்.

முதலாளி ராமநாதர் ராயருக்கு வெள்ளிரதம் செய்து தரும் விஷயத்தை மறந்துவிட்டார்! ஒரு நாள் கனவில் "என்ன முதலாளி! நமக்கு வெள்ளிரதம் ஸமர்ப்பணை செய்யப் போவதில்லையா?" என்று ஸ்ரீ குருராஜர்

சிரித்துக் கொண்டே கேட்கவும், செட்டியார் கனவிலேயே, "ஸ்வாமி, மலேயாவில் எனது வ்யாபாரத்தில் பத்துப் பன்னிரண்டு லக்ஷம் ரூபாய்கள் முடங்கிக் கிடக்கின்றன. அதை எனக்குச் சுலபமாகக் கிடைக்கச் செய்யுங்கள். பிறகு கண்டிப்பாக ரதம் செய்து தருகிறேன்" என்றார். அப்பொழுது ஸ்ரீராயர் புன்சிரிப்புடன், "உம், ஆகட்டும் உங்கள் பணம் சீக்கிரம் உங்களுக்குக் கிடைத்துவிடும், கவலை வேண்டாம்" என்று சொல்லியருளி மறைந்தார்.

செட்டியாருக்கு அதில் ஏனோ நம்பிக்கை உண்டாக வில்லை! இரண்டாவது மஹாயுத்த காலத்தில் ஜப்பானியர்கள் மலேயாவை கைப்பற்றினபொழுது செட்டியாரவர்கள் வியாபாரத்தில் அவர் போட்ட மூலதனமெல்லாம் ஜப்பானிய நாணயமாக மாற்றப்பட்டுவிட்டது (Foreign currency). பிறகு ப்ரிடிஷார் மலேயாவை ஜயித்துத் தன் வசமாக்கிக்கொண்ட பிறகு அநேக தொழிலதிபர்களின் ஜப்பான் நாணயத்தை ப்ரிடிஷ் நாணயமாக மாற்றிக் கொடுப்பதற்கு ப்ரிடிஷ் அதிகாரம் ஒப்பவில்லை. இவ்வாறு பத்திருபது லக்ஷ ரூபாய்கள் கைவிட்டுப் போய்விட்டது. தொழிலதிபர்களின் வேண்டுகோளை இன்னும் ப்ரிடிஷ் ஆட்சியாளர்கள் ஒப்பாதிருந்ததால் அந்தப் பணம் தமக்குக் கிடைப்பது கஷ்டமென்று செட்டியாரவர்கள் நினைத் திருந்தார். ஸ்ரீராயர் கனவில் தோன்றி அனுக்ரஹித்த ஒரு மாதத்தில், "ப்ரிடிஷ் ஆட்சியாளர்கள் ஜப்பானிய நாணயத்தை ப்ரிடிஷ் நாணயமாக மாற்றுவதற்கு (exchange) ஒப்புக்கொண்டுவிட்டனரென்றும் பணம் சீக்கிரமாகவே வரும்" என்று மலேயாவிலிருந்து செய்தி வந்தது. அதைக் கேட்டு செட்டியாரவருக்கு உண்டான ஆச்சரியத்திற்கும் மகிழ்ச்சிக்கும் எல்லையே இல்லை. அப்பொழுது அவருக்குக் குருராஜரிடம் முழுநம்பிக்கை வந்துவிட்டது. ஸ்ரீராயர் நடக்க முடியாத காரியங்களை நடத்திக் கொடுப்பதில் வல்லவ ரென்பதை மனதிலுணர்ந்து அவருடைய அந்தரங்க பக்த ரானார். குருவாரம் ஒரு பொழுதுதான் போஜனம் நியமம் செய்து கொண்டார். ஸ்ரீராயருக்கு விசேஷ பூஜா

ராதனைகள் செய்ய ஆரம்பித்தார். எப்பொழுதும் அவரது படத்தின் எதிரில் நெய் விளக்கு எப்பொழுதும் எரிய ஆரம்பித்தது. மந்த்ராலயத்திற்கு வெள்ளிரதம் செய்து கொடுக்கத் தாம் சித்தமாக இருப்பதாகவும், ரதத்தின் உயரம், அகலம் முதலிய விவரங்களை அனுப்பவேண்டு மென்று ஸ்ரீ களவர்களுக்கு விஞ்ஞாபனக் கடிதம் எழுதி யனுப்பினார். ஸ்ரீ சுயமீந்திர தீர்த்த குருவர்யர் எல்லா விவரங்களுடன் இந்த புத்தகாசிரியருடன் ஸ்ரீ ராஜாராவ் என்னும் நண்பருடனும் காரைக்குடிக்கு அனுப்பினார். ஸ்ரீ ராமநாதன் செட்டியாரவர்கள் இந்த எழுத்தாளரை கௌரவத்துடன் வரவேற்று பேச்சுவார்த்தைகள் நடத்தி தாம் எழுதின அழகான வெள்ளி ரதத்தின் வரை படத்தை ஸ்ரீயவர்களுக்குக் காண்பித்து ஸ்ரீ குருராஜரின் உற்சவ மூர்த்தி பீடம், பிரபையுடன் பீடத்திலயர்த்துவதற்கு அனுகூலமாகும்படி அவைகளின் அளவுகளை உயரம் அகலம் தெரிந்து ஸ்ரீயவர்களின் உத்தரவைப் பெற்று வரும்படி மந்த்ராலயத்திற்குத் தெரிவித்தார். ஸ்ரீகளவர் ரதத்தின் வரை படத்தை அங்கீகரித்தார். நான்கைந்து தினங்களில் நாங்கள் மறுபடியும் கோட்டையூருக்குச் சென்று எல்லா விஷயங்களையும் செட்டியாரவர்லளுக்குத் தெரிவித்து ஸ்ரீகளவர்கள் கொடுத்தருளிய பல மந்த்ராக்ஷதைகளைக் கொடுத்தோம். மட்டற்ற மகிழ்ச்சியுடன் ஸ்ரீ செட்டியார வர்கள் சீக்கிரமே ரதத்தை செய்விப்பதாகச் சொல்லி அப் பொழுதே தாம் வரவழைத்திருந்த 10 ஆயிரம் தோலா வெள்ளிக் கட்டிகளைக் காண்பித்தார்.

மறுநாள் ஸ்ரீமத்வ நவமி, இந்த விஷயமறிந்த ஸ்ரீ செட்டி யாரவர்கள் தம்பதிகள் அதே ஊரில் வாஸம் செய்து கொண்டிருந்த உத்தம பண்டிதராயிருந்த ஸ்ரீ எலத்தூர் க்ருஷ்ணாசார்யரின் மருமகனின் வீட்டில் இந்த எழுத் தாளனுக்கு விருந்துக்கு ஏற்பாடு செய்து கௌரவித்து அனுப்பினார்.

1947-ம் வருஷத்திய ஸ்ரீராயரின் ஆராதனைக்கு வெள்ளி ரதத்தைக் கொண்டு வந்து அர்ப்பணம் செய்து விடுவதாக

ஸ்ரீ செட்டியாரவர் விக்ஞாபனக் கடிதம் எழுதியிருந்தார். ஸ்ரீபாதங்களவர் மிக்க மகிழ்ச்சியுடன் "இந்த வருஷம் ஸ்ரீகுருராஜர் ரதத்திலமர்ந்து பக்தர்களை அனுக்ரஹிப்பார்" என்று பத்திரிகைகளின் மூலம் பக்த மண்டலிகளுக்குத் தெரிவிக்கும்படி ஆக்ஞாபித்தார். மடாதிகாரிகள் அவ்வாறே பத்திரிகையில் பிரசுரித்தனர், இதனால் தேசாந்தரங்களிலும் ஸ்ரீராயரின் பக்தர்கள் மகிழ்ந்தனர்.

ஸ்ரீ ராயரின் ஆராதனை நெருங்கியது. வெள்ளி ரத விஷயமறிந்த பக்தர்கள் நாட்டின் மூலை மூலைகளிலிருந்து வந்து கூடினர். ஏறக்குறைய 20-25 ஆயிரம் ஜனங்கள் மந்த்ராலயத்தில் கூடிவிட்டனர். ஸ்ரீராமநாத செட்டியாரவர்கள் இரண்டு நாட்கள் முன்னதாகவே வெள்ளி ரதத்தின் பாகங்களுடன் அதை ஜோடிப்பதற்கு வேண்டிய சாமக்ரியைகள் (Tools) தச்சாசாரிகள் (Carpenters), வேண்டிய வேலையாட்களுடன் வந்து சேர்ந்தார். வெள்ளி ரதத்தின் ஜோடிப்பு ஆரம்பமாயிற்று. ச்ராவண, க்ருஷ்ண த்விதியை தினத்தன்று அதியழகான உயர்ந்த வெள்ளி ரதம் ராயரின் சேவைக்காகத் தயாராக நின்றது. ஸ்ரீயவர்களின் ஆணைப் படியே ஹவன ஹோமம் முதலிய விதிகள் நிறைவேறின. அன்று ஆராதனையின் பூரா சிலவும் ஸ்ரீ ராமநாதன் செட்டியாரவர்கள் ஏற்றுக்கொண்டார். மத்தியானம் வெள்ளிக் காசுகள் ஸஹிதம் செட்டிவாரவர்கள் தம்பதிகள் வெள்ளி ரதத்தை ஸ்ரீ ஸ்ரீபாதங்களவர்களுக்குத் தாரை வார்த்துத் தானம் செய்தனர். ஸ்ரீகளவர்கள் செட்டியார் தம்பதிகளிடம் ஸ்ரீராயர் செய்துள்ள அனுக்ரஹம் முதலியவைகளைத் தமது அருள் மொழிச் சொற்பொழிவில் எடுத்துச் சொல்லி செட்டியார் தம்பதிகளை ஆசீர்வதித்தார்.

அன்றிரவு வண்ணவண்ண மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப் பட்டது. பக்தகோடிகள் ஸ்ரீராயரின் வெள்ளிரத உற்சவத்தைக் கண்டு கிருதார்த்தராவதற்காக நிரம்பி வழிந்தனர். அலங்கரிக்கப்பட்ட ஸ்ரீ குருராஜரின் விக்ரஹத்தை வெள்ளி ரதத்தில் எழுந்தருளச் செய்து கற்பூரமங்களாரதிகளான உடனே ககனபேதிஜயகோஷ ஆரவாரம் (வானைப்

பிளக்கும் ஜயகோஷ ஆரவாரம்) செய்தனர். இன்னொரு முறை மங்கள ஹாரதி ஆனவுடன் ஸ்ரீகளவர்களும் செட்டியாரவர்களும் சாமரங்கள் வீச, பண்டிதர்கள் வேத கோஷம் செய்ய, ஹரிதாஸர்கள் பஜனை செய்ய, நடனமாட, இன்னிசை நாகஸ்வர வாத்தியம் முழங்க ஸ்ரீ குருபக்தர்கள் பக்தி உணர்ச்சி பொங்கி ஜயகோஷம் செய்ய அபயவரத முத்ராங்கிதராய் பக்தகோடிகளின் மனோபீஷ்டத்தை நிறைவேற்றுவதற்காக ஸ்ரீ குருராஜர் வெள்ளி ரதத்தில் எழுந்தருளி பவனி வந்த காட்சி, வைபவம், குதூகலம், கோலாகலம், பக்தர்களின் கூட்டம், குருபக்தியின் உச்சகட்டம் முதலியவைகளைக் கண்டு மகிழ்ச்சி கொண்டவர்கள் தன்யர், க்ருதார்த்தர். அது ஒரு தேவலோக விழாவை ஞாபகப் படுத்தும் மங்களகரமான அற்புதக் காட்சியாக சோபித்தது.

ஸ்ரீ குருராஜர் தமது தேகரதத்தை ஓடச் செய்தவர் என்று ஸ்ரீ ராமநாதன் செட்டியாரவர்கள் லக்ஷக்கணக்கான திரவியம் செலவு செய்து அழகுமிக்க வெள்ளி ரதத்தை ஸ்ரீராயருக்கு அர்ப்பித்து தன்யரானார். இன்றுகூட மந்த்ராலயத்தில் அதைக் கண்டு ஆநந்திக்கலாம். இதுவரை ஸ்ரீராயர் ஆயிரத்திற்கு மேற்பட்ட தடவைகளில் வெள்ளி ரதத்தில் எழுந்தருளி சேவை ஏற்றுக்கொள்ளுகிறார். இப்படிப்பட்ட சாச்வத சேவை செய்த ஸ்ரீராமநாதன் செட்டியாரவர்கள் ஸ்ரீராயரின் பக்தர்களின் வரிசையில் முதன்மை பெற்றிருக்கிறார். அவரது பெயர் ஸ்ரீராயரின் புனித நாமத்துடன் இணைந்து நிலைப்பதில் ஸந்தேகமில்லை.

## 99. ஸ்ரீராயரின் ப்ரத்யக்ஷ தரிசனம்

ஸ்ரீராம சாஸ்திரிகளெப்படிப்பட்ட பாக்யசாலிகள்! அவர் செய்த புண்யம் எத்தகையது! ஆஹா! ஸ்ரீ குருராஜரை கண்ணாரக் கண்ட அவரது புண்யம்தானென்னே? அந்த ஸௌபாக்யத்திற்கிணையுண்டா என்ன? கலியுகத்தில் மனோரம்யமான இணையற்ற அற்புதம்! 'मूकोऽपि यत्प्रसादेन मुकुंद शयनायते' (மூகோபி யத்ப்ரஸாதேன முகுந்தசயனா

யதே) என்னும் குருஸ்தோத்திரத்தின் வாக்கை உண்மை யாக்கிக் காண்பித்த ஸ்ரீராயரின் மகிமையைப் பக்கத் திலிருந்து கண்ட ஜனங்களே உண்மையான பாக்யவான்கள்.

கர்நாடகத்தின் சென்னபட்ணத்தருகில் ஸங்கலகெரெ என்பது ஒரு கிராமம். அங்கு ஸ்ரீராமா சாஸ்த்ரி என்னும் வாலிபன் தனது சித்தப்பா வீட்டில் வசித்து வந்தான். சித்தப்பா கர்ணம் ராமா சாஸ்திரி வேதாத்யன சம்பன்ன, சதாசாரசீல, அனுஷ்டானங்கள் தவறாத ப்ராம்மணன். மண்ட்யா ரயில் நிலையத்தினருகில் உம்மடி என்ற பட்டிக் காட்டில் ஸ்ரீ தத்தாத்ரேய உபாஸகரொருவர் பன்னிரண்டு வருஷமாக மௌனவ்ரத மேற்கொண்டு அவதூத சர்யையில் ஆச்ரமம் நிறுவிக் கொண்டு வசித்து வந்தார். நூற்றுக் கணக்கான ஜனங்கள் அவருடைய தரிசனத்திற்காகப் போய் வருவது வழக்கம். ராமாசாஸ்திரிகள் ஒருநாள் அங்கு சென் றார். அன்றிரவு அந்த அவதூதர் வந்தவர்களுக்கு தன்கையா லேயே அன்னமளித்துக் கொண்டிருந்தார். ராமாசாஸ்த்ரிகள் ஒருவேளை போஜனம் செய்பவர், மடி-விழுப்பு இவை களை மதிப்பவர். ஆகையால் அவதூதர் போஜனத்திற்கு அழைத்தும் இவர் சம்மதிக்கவில்லை. அவதூதர் அன்னத்தைக் கையில் வைத்துக் கொண்டு ஏதோ த்யானம் செய்து சாஸ்த்ரி களின் கையில் போட்டார். சாஸ்திரிகள் மந்திரத்தால் கட்டுப் பட்டவர் போல் அதைச் சாப்பிட்டு விட்டார். இரவில் ஊருக்கு வந்தார். சாஸ்திரிகளின் மித்திரர் அவரிடம் பேசினார். எவ்வளவு முயற்சித்தாலும் அவர் பேசவில்லை. பேசுவதற்கு மனம் தூண்டினாலும் பேச்சு உதடுவரை வந்து மனம் பின் வாங்க புத்தி மௌனமாயிற்று. பேச மாத்திரம் முடியவில்லை. பந்து-மித்திரர்கள், சாஸ்திரிகள் மௌன வ்ரதம் கொண்டிருப்பதாக நினைத்தனர். ஆனால் பேச முடியாமல் சாஸ்திரிகள் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந் தார். 3-4 மாதங்களாகப் பேசாமலிருந்ததினால் சாஸ்திரி ஊமையாகி விட்டாரென்று நினைத்தனர். வைத்யருக்குக் காண்பித்தனர். இது வ்யாதியின் காரணமாக அல்லவென்று அவர் சொன்னார். யந்த்ரம்—மந்த்ரங்கள் செய்தும் பல

னெதுவுமில்லாமல் போய் விட்டது. பேச்சு வரவேயில்லை. நாட்கள், வாரங்கள், மாதங்கள் கழிந்தன. ஊமையாகி விட்ட சாஸ்திரிகளுக்கு மிக வருத்த முண்டாயிற்று. இனி யென்ன ஆகும்? எவ்வளவு நாட்கள் இந்தக் கஷ்டத்தை அனுபவிப்பது? என்றெல்லாம் கவலைப்பட்டு சாஸ்திரிகள் இளைத்துப் போய்க் கொண்டிருந்தார்.

சில நாட்களான பிறகு யோகானந்தன் என்னும் வைத்தியர் மந்த்ராலயத்திற்குப் போய் குருராஜரைச் சேவித்தால் குணமாகுமென்று சாஸ்திரிகளுக்குத் தெரிவித் தார். ஒரு வருஷத்திற்குப் பிறகு மறுபடியும் யோகாநந்த வைத்தியர் மந்த்ராலயத்திற்குப் போகும்படி சொன்னார். சாலிவாஹன சகா ஆண்டு விக்ருதி ஸம்வத்ஸரம் அதிக ஆஷாட க்ருஷ்ண த்ரயோதசி புதன்கிழமை 13—7—1950 அன்றைய தினம் ஸ்ரீராமா சாஸ்திரிகள் மந்த்ராலயத்திற்கு வந்து சதுர்தசி தினத்திலிருந்து குருராஜரை சாக்ஷாத்கரிக்க தான் கொண்டு வந்த எல்லாவஸ்துக்களையும் துங்கபத்ரா நதியில் போட்டுவிட்டு, சுயநலமற்றவராய் பக்தி சிரத்தை களினால் ராயரின் சேவையை ஆரம்பித்தார். முதலில் ஒரே தடவை போஜனம் செய்து சேவித்தார். ஸ்ரீராயர் கனவில் தோன்றி அனுக்ரஹிப்பாரென்று மிக்க மகிழ்ச்சி யுடன் இருந்தார். கனவு ஆகாததினால் சாஸ்திரிகளுக்கு மிகவும் அஸமாதானம் ஆயிற்று. ஒரு ராத்திரியில் நாளை காலையில் கனவில் எதுவும் தெரிவிக்காவிட்டால் தான் பிழைப்பதில்லை; துங்க பத்திரையில் ப்ராணனை விட்டு விடுவதாக நிச்சயித்துப் படுத்துக் கொண்டார். ஸ்ரீராயரைப் பலவிதமாக அனுக்ரஹம் செய்யும்படி ப்ரார்த்தனை செய்தார். ஏழாவது நாளும் கனவாகவில்லை. எந்த சூசனையுமாகவில்லை. சாஸ்திரிகளுக்கு மிக வருத்த முண்டாயிற்று. ஊமையாக வாழ்வதை விட உயிர் நீத்தலே நல்லதென்றெண்ணினார். ஸ்ரீராயர் தம்மை கைவிட்டு விட்டாரென்று துக்கத்தினால் கண்ணீர்விட்டார்.

பத்தாவது நாள் காலை துங்காவில் முழுகி ராயரின் சேவை செய்தார். இன்று அனுக்ரஹமாகாவிட்டால்

ப்ராணத்யாகம் செய்வதாக நிச்சயித்து ஸ்ரீராயரின் ஆலயத்தில் உள்பாகத்தில் ப்ருந்தாவனத்தினெதிரில் உட்கார்ந்து ஸ்ரீராயரை த்யானிக்க ஆரம்பித்தார். ஸ்ரீராயரின் வம்சத்தினரும், ஸ்ரீசுயமீந்திர தீர்த்தரின் பெரிய தகப்பனாரின் புத்திரரும், மடத்தின் ஆசார்யரும் ஆக இருந்த ஸ்ரீ ராஜ கோபாலாசார்யர் ஸ்ரீராயருக்கு ஹஸ்தோதகம் கொடுத்து முடித்தார். இனி மஹாமங்களாரதியாகும் சமயம் அப்பொழுது ஒரு விசித்ர அதிசயம் நிகழ்ந்தது. ஸ்ரீராயரின் த்யானத்தில் மூழ்கியிருந்த ஸ்ரீராமாசாஸ்திரிகள் திடீரென்று "குருராஜ குருராஜ" என்று கூக்குரலிட்டார். மற்றும் ஸ்ரீராயரைப் பாராட்ட ஆரம்பித்தார். மெய் மறந்து நர்த்தனம் செய்யத் தொடங்கினார். அங்கு கூடியிருந்த நூற்றுக் கணக்கான ஜனங்கள், ஸ்ரீராஜகோபாலாசார்யர், மடத்தின் சிப்பந்திகள் ஊமையாகியிருந்த சாஸ்திரிகள் ஸ்ரீராயரைப் பார்த்துப் பேசிக் கொண்டிருக்கிறாரே! இதென்ன அதிசயமென்று சாஸ்திரிகளை அதைப் பற்றி கேட்டனர். சாஸ்திரிகளின் கண்களிலிருந்து ஆநந்தக் கண்ணீர் பெருகிற்று. தொண்டை அடைக்கிறது. உடலில் மயிர்க் கூச்சலுண்டாயிற்று பக்தி மேலிட்டு ஸ்ரீராயர் தமக்கு வாக் சக்தியைக் கருணை செய்து, ப்ரத்யக்ஷதரிசனமளித்த சங்கதியை எல்லோருக்கும் விவரித்தார். எல்லோரும் ஸ்ரீராயரின் அபார மகிமையைக் கேட்டு பக்தியுடன் ராயரைப் பாராட்டவாரம்பித்தனர்.

ராமாசாஸ்திரிகள் நடந்த அற்புதநிகழ்ச்சியை விவரித்தது இதோ :—

"நான் ஸ்ரீராயரின் ப்ருந்தவனத்தையே பார்த்துக் கொண்டு த்யானம் செய்து கொண்டிருந்தேன், திடீரென்று மின்னலொன்று மின்னியதைப் போலாயிற்று. பயந்து போனேன். ப்ருந்தாவனத்தைப் பார்த்தேன். ஆஹா! என்ன அற்புதம்! எத்தகைய ஆச்சரியம்! நான் கண்ட காட்சி எப்படிப்பட்டதய்யா? அதை வர்ணிக்கமுடியாது!! எனக்கு குருராஜர் தரிசனம் கொடுத்தருளினார்! அற்புத

மனோகர ப்ரகாசம்; மின்னுகிறது. ப்ருந்தாவனத்தின் முன்னால் விலை மதிக்கப் பெறாத ரத்னஸிம்மாஸனம்! தளதளவென்னும் வெண்கொற்றக்குடை! ரத்ன ஸிம்மாசனத்தின் மேல் வலது காலை இடது தொடை மீது வைத்து இடது காலைக் கீழே தொங்கவிட்டு ஸ்ரீ குருஸார்வ பௌமர் அமர்ந்திருக்கிறார்; காதில் ரத்ன குண்டலங்கள், கழுத்தில் துளசி மணிமாலை, பக்கத்தின் தண்டகமண்டலம் மற்றும் ராஜத்வ ஸூசகமான ரத்னவாள்! காஷாய வஸ்திரத்தைத் தலை மீது போர்த்தியுள்ளார். அதன் மீது நவரத்ன மய கிரீடம் மின்னுகிறது. மிக அழகான பொன்நிறமான மேனி. த்வாதச நாமங்கள், ஊர்த்வபுண்ட்ரம், கந்தாக்ஷதைகளினால் அலங்க்ருதராயிருக்கிறார். இன்னும் இளம் ப்ராயம், முகத்தில் புன்னகை. ஸாத்வீகமான ஒளிமயமான தேஜஸ். வெள்ளை, சிவப்பு, நீலம் முதலிய வர்ணங்களுடன் விளங்கும் குருராஜர்! கண்கூசும்படியான அற்புத தேஜஸ்ஸினால் காணுகின்ற ஸ்ரீ குரு ஸார்வபௌமரைக் கண்டு நான் ஆச்சரியம்; ஆநந்தம், திக்ப்ரமையினால் எழுந்து ஓடிப்போய் ஸ்ரீராயரை பயபக்தியுடன் நமஸ்கரித்து ஸ்துதி செய்ய வேண்டுமென்று வாய் திறந்தேன். ஆச்சரியம்! ஸ்ரீராயரின் திவ்ய தரிசனமான உடனே ஏதோ ஒரு சக்தி எனது நாவிற்குச் சலனம் உண்டாக்கி, "குருராஜா! என்னும் வார்த்தையைப் புறப்பட வைத்தது. உடனே தங்கு தடையின்றி பேச்சு புறப்பட்டது. இவையெல்லாம் நடந்தது இரண்டே நிமிஷங்களில் தான்! கேவலம் இரண்டே நிமிஷங்களில்! எனக்கு ஸ்ரீராயரின் தரிசன பாக்யம் உண்டாயிற்று. ஸ்ரீ குருராஜர் புன்னகை செய்து ஒருமுறை என் பக்கம் பார்த்தார். இந்த மாபெரும் அற்புத மங்களகரமான காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே ஸ்ரீராயர் மறைந்து விட்டார்! திடுக்கிட்டு பயந்து போய்ப் பார்த்தேன். மறுபடியும் இதே நீலநிற அழகான ப்ருந்தாவனம்; எனக்கு ஸ்ரீராயரின் தரிசனமாகும்பொழுது நான், "ஓம் ஸ்ரீராகவேந்த்ராய நம:" என்று த்யானித்துக் கொண்டிருந்தேன். ஸ்வாமி, நான் எப்பேர்ப்பட்ட பாக்யசாலி! ஸ்ரீராயர் மூன்று வருஷங்களுக்கு முன் நின்று போன

எனது வாக்சக்தியை மறுபடியும் கருணை செய்து நான் ஒரு மனுஷ்யனாக வாழும்படி கருணை கூர்ந்துள்ளார். எவருக்கும் கிடைக்காத தமது திவ்ய தரிசனமளித்து அனுக்ரஹம் செய்த ஸ்ரீராயரைப் போன்ற மஹா மஹிமரானவர் ஜகத்தில் வேறு யாருமில்லை'' என்று ஸ்ரீராமா சாஸ்திரிகள் தமது அனுபவத்தை நூற்றுக்கணக்கான பக்த ஜனங்களின் முன்னிலையில் விவரித்தார்.

ஸ்ரீராமா சாஸ்திரிகள் 13—7—50 லிருந்து மந்த்ராலயத்திற்கு வந்து சேவை ஆரம்பித்தார். விக்ருதி ஸம்வத்ஸரம் நிஜ ஆஷாட சுக்ல நவமி, சனிக்கிழமை 22—7—50 அன்று மத்யானம் 12 மணிக்கு ஹஸ்தோதகமாய் மஹாமங்களாரதி ஆவதற்கு முன் ஸ்ரீகுருராஜர் ஸ்ரீராமா சாஸ்த்ரிகளினால் சந்தோஷமடைந்து ப்ரத்யக்ஷ தரிசனம் கொடுத்து நின்று போயிருந்த வாக்சக்தியை மீண்டும் வரச்செய்தருளி தமது அபார மஹிமையைக் காண்பித்தார். இதனால் ஸ்ரீராயர் சரீரத்துடன் இப்பொழுதும் ப்ருந்தாவனத்தில் நிலைத்திருக்கிறார். ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து 279 வருஷங்களுக்குப் பிறகு தரிசனம் கொடுத்து தாம் 700 வருஷங்கள் வரை ப்ருந்தாவனத்தில் சரீரத்துடன் இருந்து பக்தரின் மனோபீஷ்டங்களையருளிக் கொண்டு லோக க்ஷேமம் செய்கின்றாரென்பது நிரூபணமாகிறது. அது மாத்திரமல்ல: அபரோக்ஷ ஞானிகளின் விசேஷ சந்நிதானம் ஸ்ரீ ராம, நரஹரி க்ருஷ்ண வேதவ்யாஸ நாராயணர்களின் ஸாக்ஷாத் திவ்ய ஸந்நிதானத்தினால் கூடியதும் ப்ரஹலாத, பாஹ்லீகன், வ்யாஸராஜரவருடைய அவதாரரான தாம் யோக சித்தர், விக்ஞானத்திற்கும் அப்பார்ப்பட்ட மஹாசக்தி நிறைந்தவர். ஹரிதாஸர்கள், பக்தர்கள், நடக்க முடியாத நிகழ்ச்சிகளை நடத்தும் நிபுணர்கள் என்பதை ப்ரத்யக்ஷமாகக் காண்பித்து ஜகத்தின் ஜனங்களை ஆஸ்திக உணர்ச்சி நிறைந்தவர்களாகச் செய்து காப்பாற்றி வருகின்றனர். இப்பேர்ப்பட்ட மஹா மஹிமையுள்ளவரை குருகளாக அடைந்த நாமே கிருதார்த்தர்கள்.

## 100. ஸ்ரீ குருராஜரின் ஆலயத்தின் ஜீர்ணோத்தாரணம்

ஸ்ரீ மல்லப்ப ஸிந்தேயும் அவரது சகோதரர் இருவரும் ஸ்ரீ குருராஜரின் பரமபக்தர்கள். ஸ்ரீ மந்த்ராலய ஸ்ரீபாதங்களவர்கள் அவர்களுக்குச் செய்துள்ள அனுக்ரஹம் அவரது மாபெரும் மகிமைக்கு மற்றொரு உதாரணம்.

பூனாவின் ஸிந்தேயின் வம்சத்தினர்கள் வம்ச பரம்பரையாக தார்மீகர்களும் தர்மகாரியங்களில் ஈடுபட்டவர்கள். உயர்ந்த தொழிலதிபர்கள், பணக்காரர்கள், இப்படிப்பட்ட வம்சத்தினர் அநேக தான தர்மங்களைச் செய்து பெயர் பெற்றுள்ளனர். தக்ஷிணபாரதத்தில் ப்ரஸித்தி பெற்றவரான ஸ்ரீ மல்லப்ப ஸிந்தேயின் பந்துக்கள் எக்சைஸ் (Excise) கண்ட்ராக்டராய், பிலிம் (Film Distrlbutor) டிஸ்ட்ரிப்யூடராய் ப்பிரஸித்தி பெற்றவராயிருந்ததோடு கூட, பூனா, சிக்கந்தராபாத், பெங்களூர் முதலிய இடங்களில் அவருடைய நடராஜ், நர்த்தகி, ஸந்தோஷ், முதலிய தியேட்டர்களும் (Theatres) ப்ரஸித்தமாயுள்ளது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

ஸிந்தே பந்துக்களில் மூத்தவரான ஸ்ரீ மல்லப்ப ஸிந்தேயவர்களுக்கு ஸ்ரீ குருராஜரிடம் நிகரற்ற பக்தி. எந்தக் காரியம் செய்தாலும் ஸ்ரீராயரைப் பிரார்த்தனை செய்து காரியத்திலிறங்குவது அவரது முறை. துரதிருஷ்டவசமாக ஸ்ரீ மல்லப்பஸிந்தேயவர்கள் அஜீர்ணத்தினால் வயிற்றுவலி நோய்க்கு இலக்காய் அறுவை சிகிச்சைக்குள்ளாக வேண்டிவந்தது. ப்ராணாபாயகரமான அந்த அறுவை சிகிச்சை பம்பாயின் "பீச்க்யாண்டி" ஆஸ்பத்திரியில் 7—8—1967ல் நடந்தது. அந்த அறுவை சிகிச்சை சுமார் ஐந்து மணி நேரங்கள் நடந்து ஸ்ரீ குருராஜரின் கருணையினால் ஸ்ரீ மல்லப்ப அவர்கள் உயிருக்கு ஆபத்தினின்று தப்பினார். ஆபரேஷனுக்கு முந்தின நாளன்று இரவு 9—8—67 ஸ்ரீ மல்லப்பஸிந்தேயவர்கள் தமது ஸ்வரூபோத்தாரக குருகளான ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளவரிடம் பக்தி சிரத்தையுடன்

அவரே கதியென்று ப்ரார்த்தனை செய்து அறுவை சிகிச்சை வெற்றிகரமாக நிறைவேறும்படி செய்யுமாறும் ஸ்ரீராயரைச் சரணடைந்தார்.

அன்றிரவு கனவில் த்யானத்திலாழ்ந்திருந்த ஸ்ரீ குரு ராஜரின் தரிசனமாயிற்று. ஒரு ஆலயத்தில் கர்ப்பக்ருஹம் போலிருக்கும் அறையில் ஸ்ரீராயர் த்யானத்திலாழ்ந்து அமர்ந்துள்ளார். ஸ்ரீ மல்லப்ப ஸிந்தேயவர்கள் தமது தோழரான ஸ்ரீ கொண்டப்பா மற்றும் ஸ்ரீ வெங்கட்ஸ்வாமி களுடன் ஸ்ரீ குருராஜரின் ஆலயத்திற்குப் போகின்றார்கள். அங்கு தியானத்திலாழ்ந்துள்ள ஸ்ரீ ராயரின் முன்னால் ஒரு சிஷ்யர் இவர்களைக் கண்டு "ஓஹோ! வாருங்கள். குருகளின் பூஜைக்கு நீங்கள் வருவதாக ஸ்ரீ குருராஜர் எனக்குத் தெரிவித்திருந்தார், பாருங்கள் உங்களுக்காக ஸ்ரீராயர் ப்ரசாதம் வைத்திருக்கிறார், இதை உண்ணுங்கள். குருகள் த்யானத்திலிருப்பதினால் அவருக்குத் தொந்தரவு கொடுக்கவேண்டாம்." என்று சொல்லி அறையின் முன் பக்கத்தில் வைத்திருக்கும் ரொட்டி நெய் மற்றும் சர்க்கரையை காண்பித்தார். ஸ்ரீ மய்லப்பஸிந்தேயவர்கள் அந்த ப்ரஸாதத்தை உண்டு நமஸ்கரித்து விட்டு வந்தனர். இவ்வாறு கனவாயிற்று.

காலையில் விழித்துக் கொண்ட உடனே ஸிந்தேயவர்கள் கனவின் அர்த்தத்தை யோசித்து ஸ்ரீ கோதண்டராமரே கொண்டப்பாவின் உருவத்திலும், திருப்பதி ஸ்ரீ வேங்க டேச்வரனே ஸ்ரீ வெங்கடப்பனின் உருவத்திலும் தம்முடன் வந்து 'अप्यच्युतो गुरुद्वारा' (ஸ்ரீ ஹரியும் குருகளினாலேயே அனுக்ரஹம் செய்விப்பவன்") என்னும் ப்ரமாணத்தைப் போல, ஸ்ரீராயர் மூலமே எனக்கு அனுக்ரஹம் செய்வதற்கு குருராஜரிடம் என்னை அழைத்துப்போய் ரொட்டி, நெய், சர்க்கரை ப்ரஸாதம் வழங்கச் செய்து, "உனது அறுவை சிகிச்சை ரொட்டியைப் போல் கடினமாயிருந்தாலும், அதை நாம் நெய்போலக் கரைந்து, சர்க்கரை போல மகிழ்ச்சி உண்டாகும்படி செய்வோம்" என்று சுட்டிக் காட்டி

யுள்ளார். 'ஆயுர் க்ருதம்' என்று ப்ராமணமிருப்பதினால் ஆயுள் அபிவிருத்திக்கு நெய் முக்கியம். அதைக் கொடுத்துள்ளார். வெறும் ஆயுளிலிருந்து என்ன பிரயோஜனம்? வாழ்க்கை இன்பத்துடன் நடைபெறவேண்டும். அதனால் தான் சார்க்கரையை அருளியிருக்கின்றார் ஆஹா! நான் எத்தகைய பாக்யசாலி! ஸ்ரீ ஹ்ரீ குருகளின் விசேஷ கிருபைக்குப் பாத்திரனாயுள்ளேன். எனக்கு இனி எந்தவித பயமுமில்லை'' என்று ஸ்ரீ ராயரின் அனுக்ரஹமானதற்கு ஆனந்தக் கடலில் மூழ்கினார்.

குறிப்பிட்ட நேரத்தில் ஸ்ரீ மல்லப்ப ஸிந்தேயவர் அறுவை சிகிச்சைக்குத் தயாரானார். மிகக் கடினமான அறுவை சிகிக்சை ஐந்து மணி நேரம் நடந்து வெற்றி கண்டது. குருராஜர் தமது பக்தரைக் காப்பாற்றினார்.

மல்லப்பஸிந்தேயவரின் சம்பூர்ண சுகமான பிறகு தமது சகோதரரான ஸ்ரீ அசோக்ஸிந்தே, மித்திரரான ஸ்ரீ M. S. நாகராஜராவ் இவர்களுடன் 1968 ஆகஸ்ட் முதல் வாரத்தில் மந்த்ராலயத்திற்குச் சென்று தமது ரக்ஷகரான குருகளான ஸ்ரீ குருராஜரின் தரிசனம் செய்து சேவை செலுத்தினார். அதே காலத்தில் பீடாதிபதிகளான ஸ்ரீ ஸுஜயீந்திர தீர்த்தரின் தரிசனம் பெற்று "ஸ்ரீ குரு ராஜரின் ஆலயத்தின் ஜீர்ணோத்தாரண சேவையை செய்வதற்கு குருகள் ப்ரேரித்திருக்கிறார், அந்தச் சேவையை நான் நிறைவேற்ற அனுமதியளிக்கவேண்டும்'' என்று ப்ரார்த்தனை செய்தார். ஸ்ரீகளவர்கள் மகிழ்ச்சியுடன் சம்மதித்துப்பலமந்த்ராக்ஷதை யளித்து ஆசிர்வதித்தார். ஒரு வேளை மல்லப்பனின் ஜீர்ண தேக ரூபமான ஆலயத்தைக் காப்பாற்றிய குருராஜர் தம் முடைய ஆலயத்தின் ஜீர்ணோத் தாரண சேவை தமது பக்தரான மல்லப்பனவரினாலேயே ஏற்றுக் கொண்டு அவருக்குச் சாஸ்வதமான கீர்த்தியளிக்க வேண்டுமென்று விரும்பினாரோ என்று தோன்றுகிறது! அதன்படியே அந்த மாபெரும் சேவை ஒப்புக் கொள்ள அவருக்குப் பிரேரணை செய்தாரென்றால் தவறில்லை. ஸிந்தே பந்துக்கள் ஆனந்தமாக ஸ்ரீ குருராஜரின் ஆலயத்தின்

ஜீர்ணோத்தாரண காரியத்தை மேற்கொண்டு மூன்று நான்கு லக்ஷ ரூபாய்களைச் செலவு செய்து ஸ்ரீ குருராஜரின் மூன்னூறாவது ஆண்டு உற்சவ ஞாபகார்த்தம் மற்றும் சேவையென்று அழகான ஆலயத்தைக் கட்டி ஸ்ரீ குரு ராஜருக்கு சமர்ப்பித்து கிருதார்த்தரானார்.

உயிருக்கு ஆபத்தை விளைவிக்கக்கூடிய அறுவை சிகிச்சை நிறைவேறும்படி செய்து ஸிந்தேயவரைக் காப் பாற்றி அவரால் தமது ஆலய ஜீரணோத்தாரண சேவையை மூன்னூராவது ஆண்டு உற்சவ சேவை ரூபமாய் ஏற்றுக் கொண்டு தமது அபார மகிமையைக் காண்பித்த குருராஜரின் கருணைக்கு ஈடு இணையேதுமில்லை.

ஸ்ரீ குருராஜர் தமக்குச் செய்த மாபெரும் அனுக்ரஹத் திற்கு ஸ்ரீ ஸிந்தே பந்துக்கள் ஸ்ரீ ராயரின் ப்ரீதிக்காக அநேக சாச்வத தர்ம காரியங்களை நிறைவேற்றி எல்லோருடைய கௌரவத்திற்கும் மரியாதைக்கும் பாத்திரரானார். அவர் செய்த தர்ம காரியங்களில் கீழேகொடுக்கப்பட்டுள்ள சேவைகள் முக்கியமானவை.

1. பூனாவில் ஸ்ரீ பாண்டுரங்க தேவாலயம் கட்டினது.
2. "ஸ்வதத்தி"யில் ஸ்ரீ எல்லம்மனின் தேவாலயம்.
3. கொப்பளத்தில் ஸ்ரீ ராயரின் ஆலயம் கட்டினது.
4. "ஷாபாதில்" குருராஜரின் மடத்தின் கட்டடம்.
5. ராய்ச்சூரில் ஸ்ரீராகவேந்திரஸ்வாமிகளின் மடத்தின் கட்டடம் முதலியன.

இதைப்போல் ஸ்ரீ ஸிந்தே பங்களூர், ராயசோடியில் "ஸ்ரீ குருராகவேந்திர ட்ரஸ்ட்" (நிதி) என்னும் நிறுவனத்தை ஆரம்பித்து அதன் மூலம் ஸ்ரீ ராயரின் க்ரந்தங்கள், அவைகளின் வெவ்வேறு மொழிகளில் மொழி பெயர்ப்பு, கிரந்தங்களின் பிரசுரம் முதலிய காரியங்களை நிறைவேற்றுவதற்கு ஏற்பாடு செய்துள்ளார். ஸ்ரீ குரு

ராஜரின் முன்னூறாவது ஆண்டு விழாக்காலத்தில் நஞ்சன் கூடின் ஸ்ரீ பரிமள சம்சோதனம் மற்றும் பிரகாசன மந்திர நிறுவனத்தால் வெளியிட்ட 14 க்ரந்தங்களில் ஸ்ரீ ராயர் இயற்றிய "ஸ்ரீ க்ருஷ்ணசாரித்ர மஞ்சரி" என்னும் க்ரந்தத்தின் கன்னட மொழிபெயர்ப்பு க்ரந்தம், ஸ்ரீ மல்லப்ப ஸிந்தேயவர்களின் பண உதவியினால் வெளியிட்டதை இங்கு ஞாபகத்திற்கு கொண்டுவந்துள்ளது.

இவ்வாறு ஸ்ரீராயரின் அனுக்ரஹத்திற்குப் பாத்ரரான ஸ்ரீ ஸிந்தே பந்துக்கள் குருபக்த வ்ருந்தத்தில் சாசுவத இடங்கள் பெற்று கீர்திசாலிகளாயுள்ளார்களென்று தாராள மாகச் சொல்லலாம்.

## 101. ஸ்ரீ குருராஜரின் முன்னூறாவது ஆண்டு விழா :

பாரதநாடு எப்பொழுதுமே தார்மீக தேசமாய் விளங்கி வந்துள்ளது. மற்ற தேசங்களில் தர்மமானது மற்ற சமூகக் கார்யாலயங்களைப் போல் சாதாரண விஷயமாக இருந்தால், நம் நாட்டில் தர்மம் தனி மனிதனின் மற்றும் சமூகத்தில் எல்லாத்துறைகளிலும் தனது செல்வாக்கையும் நிலைநிறுத்தியுள்ளது. "பகவந்தனென்னும் தெய்வீக வஸ்து உள்ளது. அவனது விருப்பத்தின் படியே இந்த உலகம் இயங்குகிறது. பரமாத்மனைத் தவிர மனிதன் ஜீவிப்பது முடியாது. தனது அசகாய நிலைமையை அறிந்து மனிதன் பகவானைச் சரணடைய வேண்டும், பகவந்தனின் ஆணைப் படியே, இந்த உலகம் இயங்குகிறது. பகவந்தனின் ஆக்ஞை யின்படி உள்ள வேதம் முதலியவைச் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும்படி நடந்துகொள்ள வேண்டும்" என்ற இவைகளே தர்மத்தின் மூல அம்சங்கள். இதை வாழ்க்கையில் நடைமுறையில் கொண்டுவந்து கிருதார்த்த ரான மஹான்கள் நம் பாரத நாட்டில் எண்ணற்றவர்கள் இருந்திருக்கின்றனர். இந்த மதத்தைப் போதிக்கும் வேதம் முதலிய சாஸ்திரங்களை ஏற்றுக்கொண்டு நம் நாட்டில் அநேக மதங்கள் வளர்ந்துள்ளன. இந்த மதங்களிலும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு ஆசார்யர்களினால்

ஸ்தாபிக்கப்பட்டவைகளாக இருந்தாலும், अनादि कालतोवृत्ता समया: हि प्रवाहत: ' என்று ஆசார்யர் சொல்லியுள்ளபடி எல்லா மதங்களும் முக்கிய தத்வங்களின் கொள்கைகளும் முதலிலிருந்து பரவிவந்துள்ளன. வெவ்வேறு ஆலோசகர்கள் (Thinkers) தங்கள் தங்கள் சுபாவத்திற்குப் பொருந்திலபடி வெவ்வேறு சித்தாந்தங்களை அங்கீகரித்து அவைகளைப் பின்பற்றி லக்ஷியத்தை அடைவதில் முயற்சி செய்துள்ளனர். இவ்வாறு உதயமான ஸநாதன தர்மத்தின் வெவ்வேறு மதங்களில் அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்னும் மூன்று மதங்கள் மிக முக்கியமானவை. இந்த மூன்று ஸித்தாந்தங்களையும் ஸ்தாபித்த மஹான்கள் ஸ்ரீ சங்கராசார்யர், ஸ்ரீ ராமானுஜாசார்யர், மற்றும் ஸ்ரீ மத்வாசார்யர். இவர்கள் ஜகத்தின் ஆசார்யத்ரயர்கள் என்று கியாதி பெற்றவர்கள். இந்த ஆசார்யத்ரயர்களில் மூன்றாவதானவரான (கடைசியானவரான) ஸ்ரீ மத்வாசார்யரின் மஹா ஸமஸ்தானாதிபதிகளே நமது ஸ்ரீராகவேந்திர குரு ஸார்வபௌமர். இந்த மஹா பரம்பரைக்குப்பின் பெரிய இதிகாசம் (வரலாறு) உள்ளது. அதையறிய வேண்டியது மிக முக்கியம்.

இதிஹாஸமென்றால் ஒரு தேசத்திய அரசனின் வரலாறு; அவர் செய்த யுத்தங்கள்; அது மாத்திரமல்ல ஒரு தேசத்தில் வெவ்வேறு காலத்திய ஜனங்களின் பொருளாதார சமூக, ஆன்மீக, மதம் மற்றும் கலாச்சார நிலைமைகளை அதற்கு ஊக்கமளித்த மகான்களின் வாழ்க்கை, மகிமை முதலியவைகளைத் தெரிவிப்பதே உண்மையான இதிஹாஸமெனப்படும். எந்த ஒரு நாட்டின் கலாச்சாரம், மதங்களின் உன்னதிக்காக உழைத்து மகான்களின் நினைவே தலைமுறை விட்டுப் போனாலும் ஜனங்களிடம் பழக்கம் மூலம் நிலைந்திருக்கும். இந்த நோக்கத்தினால்தான் இன்றும் பாரத நாட்டின் மக்கள் ஸ்ரீராமசந்த்ரர், க்ருஷ்ணன், பாண்டவர்கள், நளன், அரிச்சந்திரன் முதலிய அரசர்களையும், வஸிஷ்ட, விச்வாமித்ர, கௌதம, ஜமதக்னி, பாரத்வாஜர் முதலிய மகரிஷிகளை மறக்கவில்லை. அவர்களுடைய வரலாற்றி

லிருந்து இவ்வளவு நாட்களாயினும் நமது மக்கள் உற்சாகம் பெறுகின்றனர். பாரத நாட்டில் இன்று கூட ஜனங்களில் ஆன்மீக விஷயத்தில் சிரத்தை காணப்படுவதற்கு நமக்கு ஏற்பட்டுள்ள ஸ்ரீசங்கர, ஸ்ரீராமானுஜ, ஸ்ரீமத்வாசார்யர் இவர்களுடைய மறக்க முடியாத நினைவுகள்தான் காரண மென்றால் ஆச்சரியப்படுவதற்கில்லை. மேற் சொன்ன மகான்களின் வரலாறுகளினால் மக்களின் வாழ்க்கையில் கார்முகில்கள் சூழ்ந்து கொண்டபொழுது இவ்வாறு வெற்றியுடன் அவைகளிலிருந்து விடுபட்டார் களென அறிந்து கொள்ளமுடிகிறது. வருங்கால ஜனங் களுக்கும் இதே வழிகாட்டியாக உள்ளது. ஆகையால் இப்பேற்பட்ட அமரர்களான மகரிஷிகளின் பிறகு சக்ரவர்த்தி களுடைய புண்ய ச்லோகர்களின் வரலாற்றை இன்னும் விசேஷமாக மக்களின் மனம் நாடும்படி செய்யவேண்டியது நமது ஆட்சியாளர்களின் கடமை. கலாச்சார பிரச்சாரத் திட்டம் முதலிய காரியத்தை மேற்கொண்டுள்ளதை நமது ஆட்சியாளர்கள் மற்றும் பாரத நாட்டின் அரசாங்க மதத் தலைவர்கள் நம் பாரததேசத்திய பழம்பெரும் கலாச்சாரம் தேசத்தில் நிரந்தரமாக, உறுதியாக நிலைக்கும்படி செய்ய வேண்டிய வகையில் இந்த விஷயங்களைக் கவனத்திற்கு கொண்டு வந்தது நமது பழம்பெரும் சக்ரவர்த்திகள். ஸாது மஹாத்மாக்கள், மதாசாரியர்களின் வரலாற்றை உள்ளது உள்ளபடியே மக்களிடம் ப்ரசாரம் செய்ய வேண்டியது அவசியமாக உள்ளது. ஜனங்களும் இதை அசட்டையாக எண்ணாமல் ஆதரவளிக்கவேண்டும். இப்படிப்பட்ட ஒரு முயற்சிதான் 1971ல் நடந்த ஸ்ரீ குருராஜரின் மூன்னூறாவது ஆண்டு நினைவு விழாவாகும். மக்களின் வேண்டுகோளை ஈடேற்றி மத நம்பிக்கை வளருவதில் ஜகத்குரு ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் நிகரற்றவரா யிருக்கிறார். இந்த மட்டற்ற மகிமையுடைய ஸ்வாமிகள் ஜனங்களின் கண்களுக்குப் புலப்படாமல் 315 வருஷங்களாக இருந்து வந்தாலும் அவரது தெய்வீக தேஜஸ் இன்றைக்கும் எல்லா இடங்களிலும் பரவியுள்ளது. ஜாதி, மதம் முதலிய

பேதங்கள் இன்றி எல்லா ஸஜ்ஜனர்களும் இவருக்குச் சேவை செய்து புனிதராகியுள்ளனர். முன்பு அரசசக்தி, நாஸ்திக வாதம் மற்றும் சுய நலமே உருவெடுத்து வந்த இரணியகசி புவின் புத்திரராய் துர்மார்க்கியாகிய தந்தைக்கு விரோத மாகக் கடவுளின் மகிமையை அவனுக்குப் போதித்து, இதற்காகத் தந்தையால் சித்திரவதைக்குள்ளாகியும் சற்றும் தளராமல் தமது புனித பக்தியின் செல்வாக்கினால் ஸ்ரீநரசிம்மஸ்வாமியைத் தூணிலிருந்து வெளிக்கொணர்ந்த பக்த ஸ்ரீப்ரஹ்லாதரே ஸ்ரீராகவேந்த்ர ஸ்வாமிகள். அது போலவே அவர் இப்பேர்ப்பட்ட நாஸ்திகமயமான கலியுகத் திலும், இவ்வளவு விரோத சக்திகள் தலை தூக்கி நின்று கடவுள் இல்லை என்று தீவிர ப்ரசாரம் செய்து கொண்டு ஆஸ்திகத்தை ஆட்டி வைத்துக் கொண்டு பகவத் பக்தர்கள், ஆஸ்திகர்கள், ஸஜ்ஜனர்களின் சன்மார்க்கத்திற்கு முட்களா யிருந்தாலும், பகவானின் மகிமையைத் தமது அகாத மகிமையின் மூலமாக ஜனங்களுக்குப் போதித்துப் பாகவத தர்மப்ரசாரம் செய்து கொண்டு கலியுக கல்பதரு வாய் கியாதி பெற்று விளங்குகிறார்.

வாழ்க்கையில் துக்கமயமான ஸம்ஸாரபந்தனத்தில் சிக்கி உலகவாழ்வைத் துறந்து யோகமார்க்கத்தைக் கடைபிடித்து இமயமலையின் சாரலில் ஏகாந்த ப்ரதேசத்தில் சென்று சாந்தி பெறுவதற்கு முயற்சிக்கும் ஸாதகர்கள் இன்றும் இருக்கின்றனர். அப்படிப்பட்டவர் தம்மை அண்டி வந்த ஸாதகர்களுக்கும் ப்ரபஞ்சத்தை விட்டு விலகியிருக்க வேண்டுமென்றே போதிப்பது நிர்ப்பந்தமானது. இதற்கு விரோதமாக க்ஷுத்ர தேவதைகளை (துஷ்டதேவதைகள்) உபாஸித்து அற்பசித்திகளைப்பெற்று அதனால் தங்களது சுய நலத்தைச் சாதித்துக்கொள்வதற்காக ஜகத்தை ஏமாற்றி தம்மிடம் வரும் ஸம்ஸாரிகளுக்குப் பணம்-பொன்-வீடு, உத்யோகங்கள் பெற்றுத்தருவதாகச் சொல்லிக் கொண்டு ஜனங்களை வஞ்சிக்கும், ''ஸித்தர்'' களுக்கும் இந்தக் காலத்தில் குறைவில்லை. ஆனால் இந்த இரண்டு பரமவிரோத மார்க்கங்களும் இக்காலத்தில் நன்மை பயக்கா தென்று சொல்லலாம்.

இந்த ஜகத்தின் நியமங்களுக்குக் கட்டுப்பட்டு இங்குள்ள வரை இதை விட்டுப்போக முடியாமல் இங்கு தனது அற்ப நிலையை உணர்ந்து பகவானைச் சரணடைந்து ஸாதனம் செய்து கொள்ள விரும்புவோருக்கு (ஸஜ்ஜனருக்கு) ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளைக் காட்டிலும் வேறு மார்க்க தரிசி (வழிகாட்டி)யான உத்தம குருகளில்லை. ஸ்ரீ குரு ராஜரிடம் அவரே கதியென்று சரணடையும் பக்தனுடைய ப்ரபஞ்ச துக்கங்களை நிவாரணம் செய்து, அவரது விருப்பங் களை "கல்பதரு"வைப் போல் நிறைவேற்றி அவர்களுக்குக் கொஞ்சங்கொஞ்சமாக இந்த ஜகத்தின் அற்பத் தன்மையை யும், நிலையற்ற தன்மையையும், குறைகளையும் மனதில் பதியவைத்து பகவானால் அருளப்பட்ட ஜனங்களின் மனதின் தளர்ச்சியை உறுதிப்படுத்தி அவரால் தகுந்த சாதனைகள் செய்வித்து அவர்களை எல்லாவகைகளிலும் முன்னேற்ற மடையச் செய்து லக்ஷியத்தை நிறைவேற்றுவார், இப்படிப் பட்ட லோக குரு வேறு யாருமில்லை. இந்த மஹாமகிமை யுள்ள குருவால் இத்தக் கலியுகத்தில் நமது மதம்-கலாச் சாரங்கள் காப்பாற்றப்பட வேண்டுமென்பது பகவந்தனின் இச்சை! அதனால்தான் இன்று அநேக இடங்களில் இந்த குருகளின் ப்ருந்தாவனங்கள் ஸ்தாபிக்கப்பட்டு பக்தர்கள் சேவை செலுத்தி க்ருதார்த்தராய் வாழ்க்கையில் வெற்றி காணுகிறார்கள். இது பாரத தேசத்தின் எல்லா பாகங்களில் மாத்திரமல்ல, நான்கு சமுத்திரங்கள் தாண்டி உலகமெங் கிலும் வியாபித்துள்ளது. இவ்வாறு வியாபிப்பது அவ சியமும் கூட! இப்பேர்ப்பட்ட நல்ல சமயத்தில் ஒவ்வொரு ஸஜ்ஜனனும் எல்லா சிக்கல்களையும் தவிர்த்து பகவானால் அருளப்பட்ட இந்த வாய்ப்பைக் கைவிடாமல் இந்த மகானின் சரணடைந்து வாழ்க்கை பூராவும் இவர் பாதத்தை அனுகி உயர்ந்த நிலையையடையும் படி செய்வதே ஸ்ரீ ராயரின் முன்னூறாவது ஆண்டு கொண்டாடுவதன் நோக்கம்.

இந்த ஒரு முத்தின நிலையை யோசிக்கும் பொழுது 1971ல் பாரதம் முழுவதிலும் தேசியமட்டத்தில் பக்தி—

ஸிரத்தைகளுடன் நடைபெற்ற ஸ்ரீ குருராஜரின் சரீரத்துடன் ப்ருந்தாவனப்ரவேசம் செய்த நினைவு நாளாக முன்னூ றாவது ஆண்டு விழாவானது பாரத நாட்டின் மத (தார்மீக) வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய மகத்துவம் பொருந்திய நிகழ்ச்சியென்று சொல்ல லாம். இந்த முன்னூறாவது ஆண்டு விழா பாரத நாட்டின் கலாச்சார, மத, ஆன்மீக மற்றும் மனு குலத்தின் மறுமலர்ச்சி யின் மங்கள உதயம் (சுப்ரபாதம்) என்றால் தவறாகாது. இந்த விழா குருராஜரின் அகம்ய மஹிமையின் ப்ரசாரத்தின் சின்னம் என்று உண்மையிலேயே சரியாக அலசிப்பார்த்ததில் அது குருஸார்வபௌமரின் மஹிமா ப்ரசாரம் மாத்திரமல்ல; அவருக்கு அப்படிப்பட்ட அற்புத சக்தி, மஹிமை முதலிய வைகளை யாருடைய உபாஸனை-ப்ரஸாதம்—கருணை யினால் கிடைத்துள்ளது. அப்பேர்ப்பட்ட கல்யாண குண பூர்ணனும், ஸகல தோஷவர்ஜிதனும், நினைக்க முடியாத அற்புத சக்தி மஹிமாமயனும், ஸர்வ ஸ்வதந்திரனும், சர்வோத்தமனும் ஆகிய பகவான் ஸ்ரீ ஹரிபரமாத்ம னுடைய மற்றும் ஜகத் ப்ராணரும் ரக்ஷகரும், ஜீவோத் தமரும் ஆன ஸ்ரீ வாயு பகவானின் மஹிமா ப்ரஸாரகமும், வேதோபநிஷத், சத் சாஸ்திர போதக ஸத்-தத்வப்ரஸார மும்தான் என்று இரு கைகளையும் உயர்த்தி கோஷம் செய்து சொல்லலாம்.

இன்று நாஸ்திகத்தைப் பூஜிக்கும் கலியுகம் (நாஸ்திக வாதிகள் நிறைந்த விஞ்ஞானயுகம். இன்று ஜனங்கள் நேரில் கண்டதைத்தான் நம்புவது இயற்கையாகிவிட்டது. கடவுள்-மதம்-ஸ்வர்க்கம்-நரகம், பாவ-புண்ணியம் இவை யெல்லாம் கேவலம் மனிதனின் கற்பனையென்றும் உணர்வு உலகத்தில் நடைமுறையிலிருந்து வருகிறது. பௌதிக விஞ்ஞானம் தனது பல்வேறு ஆச்சரியகரமான கண்டு பிடிப்புகளால் மானிடனின் கஷ்டத்தை நிவாரணம் செய்து மனிதகுலத்தைச் சுகமென்ற மெத்தையில் வாழவைக்கத் திறமை பெற்றுள்ளது. மானிடனின் புத்தி சக்திக்கு எட்டாதது எதுவுமில்லை; மானிடன் இன்று ஸ்வயம்

பூரணனாக (Perfect) ஆகியுள்ளான். அகாத சக்தி நிறைந்தவனான பௌதிக தத்வங்களைக் கைப்பற்றிக் கொண்டு (The values of life) வலிமை பெற்றிருக்கிறான். பூமி, சமுத்திரம், ஆகாயம் இவைகளின் மீது அதிகாரத்தை ஸ்தாபித்துக் கொண்டுள்ளான். அலைகளை தன் வசப்படுத்திக் கொண்டுள்ளான். பௌதிக விக்ஞானத்தின் பலத்தினால் எதை வேண்டுமானாலும் மனிதன் ஸாதிக்க முடியும்! தனது பல முனைகளில் முன்னேற்றம்—ஸுகம், ஸந்தோஷங்களைத் தன் சக்தியினாலேயே மானிடன் அனுபவிக்கமுடியும் என்பதைத் தற்கால விஞ்ஞானிகள் ப்ரத்யக்ஷ ப்ரமாணங்களினால் (experiment) சாதித்துக் காண்பித்துள்ளனர் இவ்விதமாக எந்தவிதமான இடையூறுகளுமில்லாமல் விஞ்ஞானத்தின் வளர்ச்சியினால் மானிடன் தன்னை மாத்திரமல்ல; மானிட இனத்தைக் காப்பாற்றுவதற்கு வல்லவனாயிருக்கும் பொழுது கண்ணுக்குத் தெரியாத யாரும் நேரில் பார்த்திராத கடவுள் மதம் முதலிய இந்திரியத்தின் அறிவுக்கப்பாற்பட்ட வஸ்துக்களை நம்பி உபவாஸம்—சாதனை முதலான உடலுக்குக் கஷ்டமுண்டாக்கக் கூடிய "கற்பனை உலக"த்தில் மெய் மறந்து அதற்காகக் கவலைப் பட்டுக் கொண்டு, இல்லாத வஸ்துவிற்காக முயற்சி செய்துகொண்டு அதனால்தான் காப்பாற்றப்படுவானென்று நம்புவது பைத்தியக்காரத்தனம்; இதைவிட புத்தியில்லாத விஷயம் வேறெதுவுமில்லை. கடவுள்—தர்மம் இவை கற்பனையைத் தவிர வேறெதுவுமில்லை; அதற்காகக் கவலையும் வருத்தமும் கொள்வது முட்டாள் தனம். மானிடனின் புத்தி சக்திக்கு மீறியது எதுவுமில்லை. அதனாலேயே எல்லாவற்றையும் சாதிக்க முடியும் என்னும் உணர்வு உலகத்தில், அதிலும் அந்நிய நாட்டவரைப் பின்பற்றுவதில் ஈடுபட்டுள்ள நமது பாரத மக்களில் பலமாகக் குடிகொண்டுள்ளது. இந்த ஒரு இடைக் காலத்தில் இந்த ஒரு உணர்வின் கீழ்த்தரமான எண்ணத்தை உலகத்திற்குக் காண்பித்துக் கொடுத்து மானிடனின் பலவீனம், அவனுடைய புத்தி சக்தியின்

திறமை, பௌதிக விஞ்ஞானம் இவையாவும் அபூர்ணம், பௌதிக விஞ்ஞானம் தற்காலிக சுகபோக வஸ்துக்களை அளித்தால் அதனால் கண்டிப்பாக மானிட சமுதாயத்திற்கு க்ஷேமம் உண்டாகாது, பௌதிக விஞ்ஞானம் மானவ சமுதாயத்தின் அழிவிற்கு உதவியாய் அதனால் எல்லாம் அழியாமலிருக்காது. இந்த பௌதிக விஞ்ஞானத்திற்கும் மீறின ஒருமாபெரும் சக்தியுள்ளது. அதுவே ஆன்மீக விஞ்ஞானம் (Spiritual Science) அதிலிருந்து வெளிப்பட்ட நினைத்துப் பார்க்க முடியாத அற்புத சக்தி வாய்ந்த ஒன்று உள்ளது. அது ஒன்றே பரிபூர்ணமான வஸ்து (Perfection); அதனால் தான் இந்த ஸகல ப்ரபஞ்சத்தின் ஸகல காரியங் களும் நடைபெறுகின்றன. உலகத்தின் உள்ளும் புறமும் வியாபித்து அந்த மஹா சக்தி லீலையினாலேயே உலக நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. அதுதான் பகவான்! என்பதை ஸ்ரீ குருராஜர் அந்த பகவந்தனினால் கிடைத்த தமது அமோகமான யோக சக்தி, மாபெரும் மகிமை களினால் ப்ரத்யக்ஷமாக காண்பித்துக் கொடுத்து நாஸ்திக வாதம்—பௌதிக விஞ்ஞானம் முதலியவைகளுக்கு விரோதி யாக நின்று ஒரு சவாலாக உள்ளார்.

ஆஸ்திகர்களைக் கடவுள், மதம் இவைகள் பக்கம் திருப்பவது ஒரு மகத்துவமில்லையெனப் படலாம். இன்று மானிடர்கள் ப்ரத்யக்ஷமொன்றை மாத்திரம் நம்புவதனால் கடவுள்-மதம் முதலியவைகள் இருப்பதை ப்ரத்யக்ஷ ப்ரமாணங் (Proof) களினாலேயே நிரூபிக்க வேண்டியதா யுள்ளது. அதைப்போலவே ஸ்ரீ குருராஜர் பௌதிக விஞ் ஞானம் முன்னேற்றத்தின் சிகரத்தை எட்டியிருக்கும் இந்த மாறுதலடைந்துள்ள (Transition period) காலத்தில் சரீரத் துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து ஜனங்களின் கண்ணில் படாது 315 வருட காலம் கழிந்து போன பிறகும் கண்ணிற்குத் தெரியாமலே எல்லா இடங்களிலும் ஸந் நிஹிதராயிருந்து தற்கால அறுவை சிகிச்சை, விஞ்ஞானம் மற்றும் எதிலிருந்தும் காப்பாற்ற முடியாத சரீரம்—மனம் சம்மந்தப்பட்ட பலவகை வியாதிகளைக் குணப்படுத்துவது,

மக்கட்பேறில்லாதவர்களுக்கு மக்கள் அருள்வது, படிப்பில்லாதவர்களுக்கு ஞானம் அருள்வது, ஏழைகளுக்கு ஐச்வர்யமளிப்பது மற்றும் வேண்டியவர்களுடைய இஷ்டார்த்தங்களைவழங்கிக் கருணை செய்வது—இவ்வாறு ப்ரத்யக்ஷமாகத் தமது மாபெரும் மகிமைகளைக் காண்பித்து அதன் மூலம் தமக்கு இப்பேர்ப்பட்ட மஹா சக்தியைக் கருணித்த பகவந்தனொருவனிருக்கிறான் என்றும், வேதம் முதலிய சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ஸத்-தத்வங்களின் அத்யயனம் முதலியவைகளினால், தர்மானுஷ்டானத்தினால் இத்தகைய மஹாசக்தி தாம் அடைந்து இன்று அதன் செல்வாக்கினால் தாம் இப்படிப்பட்ட மகிமைகளைக் காண்பித்துள்ளோம் என்று ப்ரத்யக்ஷமாக அனுபவத்திற்கு தருவித்து சாஸ்திர தர்மங்கள் சத்யமென்று மனதில் பதியவைத்துக் கொண்டிருக்கிறார். ஆகையினாலேதான் இப்படிப்பட்ட நாஸ்திக விஞ்ஞான யுகத்தில் அகண்ட பாரதத்தில் கோடிக்கணக்கான மக்கள் பக்தி சிரத்தையுடன் நடந்தேறிய முன்னூறாவது ஆண்டு விழா அவரது அகாத மகிமைக்கு ஒரு ஒளிமயமான திருஷ்டாந்தமாயுள்ளது.

பரமாத்மா ஒருவனில்லாவிடில் தர்மம் முதலியவைகள் வெறும் கற்பனையாயிருந்தால் 315 வருஷங்களுக்கு முன்பு ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து கண்மறைவான ஒரு யோகிகள் நூற்றுக்கணக்கான ப்ருந்தாவனங்களில், வீடுதோறும் ஸந்நிஹிதராய், அழைத்த இடத்திற்கு வந்து. நாமஸ்மரணை மாத்திரத்தினாலேயே ஜகத்தின் வேறு எந்த சக்தியினாலும் சாதிக்கமுடியாத மாபெரும் காரியங்களைச் சுலபமாக நிறைவேற்றுவதற்கும், வியாதியை குணப்படுத்துவதற்கும், வேண்டிய விருப்பத்தை நிறைவேற்றுவதற்கும், க்ஞானமளிப்பதற்கும் சாதிக்க முடியுமா ?

ஒருவர், இருவர் அல்லது நூற்றுக்கணக்கான ஜனங்கள் ஸ்ரீ ராயரைப் பஜித்து பூஜிக்கலாம். ஆனால் கோடிக்கணக்கான ஜனங்கள் அவரை ஆராதிப்பதென்றால் அவரிடம் ஏதோ ஒரு அப்படிப்பட்ட மாபெரும் சக்தி குடிகொண்டுள்ளது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி, ஒன்றும்

அறியாதவர்கள் அவரைச் சேவிக்கிறார்கள் என்பதல்ல. இன்று பெரிய செல்வாக்குள்ளவர்கள், மேதாவிகள் கற்ற அறிஞர்கள், எழுத்தாளர்கள், கவிகள், வைத்தியர்கள், தொழிலதிபர்கள், அரசாங்க அதிகாரிகள், சமூக சீர்திருத்த வாதிகள், விஞ்ஞானிகள் இப்படி ஒரு மதம், கூட்டம், ஜாதி, தர்மம், மொழி, நாடு முதலிய வித்தியாசமில்லாமல் ஜகத்தின் முன்னேறிய ஜனங்களெல்லோரும் குரு ராஜரை நம்பி, ஆராதித்து அவரநுக்ரஹத்திற்குப் பாத்திரமா யிருப்பதை இன்று கண்ணுக்கு முன்னால் கண்டு கொண் டிருப்பதால் ஸ்ரீ குருராஜர் சாமானியரல்ல; தேவாம்சம் பெற்றவர், பரமாத்மாவின் ப்ரஸாதத்திற்குப் பாத்திரரான மஹாசக்தி பொருந்திய மகாத்மா என்பது நிருபணமாகும். அதனால்தான் பாரதம் முழுவதிலுள்ள கோடிக்கணக்கான ஜனங்கள் மிகபக்தி—சிரத்தையுடன் நடைபெற்ற ஸ்ரீ ராயரின் முன்னூறாவது ஆண்டு விழா குருராஜரின் மாபெரும் மகிமையை நிருபிக்கும், அவரிடம் பக்தி சிரத்தைகளைப் போதிக்கும், மேலும் அதன் மூலம் பகவந்தனின் மாபெரும் மகிமை, நினைத்துப் பார்க்க முடியாத அற்புத சக்தி, ஸர்வோத்தமத்துவங்களைத் தெரிவிக்கும் பாரத வேத, உபநிஷத்து புராணம் முதலிய சாஸ்திரங்களின் சனாதன தர்மம், கலாச்சார ப்ரஸாரகமான பாரதத்தில் உயர்ந்த இதிஹாஸத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்க வேண்டிய மகத்துவம் வாயந்த நிகழ்ச்சியாக உள்ளது என்று பறைசாற்றலாம்.

முன்னூறாவது ஆண்டு விழாவைப்பற்றிச் சில வார்த் தைகள். ஸ்ரீ குருராஜரின் முன்னூறாவது ஆண்டு நினைவு விழாவிற்கு விதையிட்ட மஹான் ஸ்ரீ குருராஜரின் பீடத்தில் 33 வருடகாலம் ஆட்சி புரிந்த "ஸ்ரீ குருராஜரின் மஹிமா ப்ரஸாரக"ரென்று கீர்த்தி பெற்ற ப்ராதஸ்மரணீய (அநு தினம் காலையில் ஸ்மரணை செய்யத்தகுந்த) பூஜ்ய ஸ்ரீ சுயமீந்திரதீர்த்தர்! முன்னூர்றாவது ஆண்டு நினைவு விழாவின் மகத்துவத்தைப்பற்றி அவர் தனக்கு மிக வேண்டியவர்களிடம் (அந்தரங்க சம்மந்தமுள்ளவர்களிடம்)

அநேகமுறை தெரிவித்திருந்தார். அந்த விழா பாரதம் முழுவதும் நடத்தப்படும்படி செய்ய வேண்டுமென்றும் அதனால் ப்ரீதரான குருராஜர் தமது அகாதமஹிமை, கருணை, மனிதத்தன்மை, முதலியவைகளை பன்மடங்கு வெளிப்படுத்தி உலகத்தின் ஸஜ்ஜனரெல்லோரும் அவரின் பக்தராய் வியாதி முதலிய உபத்ரவங்கள், அமைதியின்மை (அசாந்தி), துக்கம், தரித்திரம் முதலியவைகளிலிருந்து விடுபட்டு ஆரோக்கியம், ஞானம், விஞ்ஞானம், சம்பத்து, சுகம், சந்தோஷம், சாந்தி, முதலியவைகளை அடைந்து, கிருதார்த்தராகும்படி செய்வாரென்றும், முன்னூறாவது ஆண்டு விழா நடத்துவதினால் குருராஜரின் கீர்த்தி ஜகத்தி லெல்லாம் பரவச் செய்து, லோகக்ஷேமம் உண்டாகுமென்று சொல்லியிருந்தார். அவரால் அவரது மனதின் ஆசை நிறை வேறுவதற்குள் அந்த மஹான் ஸ்ரீ குருராஜரின் ஸந்நிதியில் ப்ருந்தாவனஸ்தரானார்.

ஸ்ரீ ஸுயமீந்திரதீர்த்தரின் மன விருப்பத்தை அறிந் திருந்த சில நிகரற்ற சிஷ்யர்கள் 1970ல் ஸ்ரீ குருராஜரின் முன்னூறாவது ஆண்டு விழாவை நஞ்ஜன்கூடின் "ஸ்ரீ பரிமள ஸம்சோதன மற்றும் ப்ரகாசன மந்திரம்" மூலம் நிறைவேற்ற வேண்டுமென்று ஆலோசனைகள் நடத்தி மாபெரும் காரியத்தை நிறைவேற்றும் பொறுப்பை எந்தத்தகுதியுமில்லாத இந்த எழுத்தாளனுக்கு ஒப்படைத் தனர்.

பரிமள வித்யா மந்திரம் பணக்காரக் கல்வி நிறுவன மல்ல. அதற்கு ஸ்ரீ குருராஜர் மற்றும் ஸ்ரீ ஸுயமீந்திரரின் அனுக்ரஹம், கிருபை, ஆசீர்வாதம் இவைகளின் பலம் தவிர மற்ற எந்தவிதமான பணபலமில்லை. இப்படிப்பட்ட ஏழை நிறுவனத்தின் மூலம் பல லக்ஷம் சிலவும், லக்ஷக்கணக்கான பலத்தினால் மாத்திரம் ஸாத்யமாகக்கூடிய முன்னூறாவது ஆண்டு விழாவை பாரதம் முழுவதும் என்றும் கண்டிராத முறையில் நிறைவேற்றுகின்ற சைதன்யமில்லையே என்று இந்த ஆசிரியன் கவலை கொண்டிருந்த பொழுது ஒரு நாள்

கனவில் ஸ்ரீ சுயமீந்திர தீர்த்தர் கனவில் தரிசனமளித்து, சாப்பிட்ட எச்சலிலைகளை வாரியெடுத்து வெளியே போடடா தடியா என்றால் சாப்பிட்டவரெவ்வளவு பேர்'' என்று கேட்கும் அதிகப்ரஸங்கியைப்போல உனக்கேன் அதிகப்ரஸங்கித்தனம்? ஸ்ரீ ராயரின் அகம்யமகிமை உனக் கின்னும் புரியவில்லையா, பைத்தியமே, அந்த மாபெரும் விழாவை நடத்துவதற்கு நீ எம்மாத்திரம்? அந்த ப்ரபுகளே அதற்குச் சக்தியுள்ளவர்! ''कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन'' என்னும் பரமாத்மாவின் வாக்கை நினைவிற்குக் கொண்டு வா. ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்பதை மறவாதே கடமையைச் செய். மற்ற விஷயங்களை குரு ராஜரிடம் விட்டுவிடு. அஹங்காரம், கௌரவம் இவைகள் கீர்த்தியை விரும்பிச் செய்யும் காரியம். அதுவரைதான் பரிமளிக்கும். ஆனால் சாயம் வெளுத்தால் ஸ்வரூப நாசமாய்விடும். இந்த நோக்கத்துடன் செய்யும் காரியங்கள் குருராஜருக்குச் சம்மதமல்ல. சுத்தமான மனதினால் சேவாரூபமாகக் கடமையை நிறைவேற்று, அதுவே உனது காரியம்'' என்று உபதேசித்தருளினார். ஸ்ரீயவர்கள் உபதேசப்படியே நடக்க நிச்சயித்தது இந்த ஆசிரியன் பெங்களூருக்குச் சென்றபொழுது ஸ்ரீ ராயரின் அகாதமகிமை நன்றாகப் புரிந்தது. ஸ்ரீ குருராஜரின் பக்தரான ஸ்ரீ T. நாராயண சாஸ்திரிகள் இந்த ஆசிரியனையழைத்து ''ஸ்ரீ ராயர் கனவில் தோன்றி'', ராஜா குருராஜாசார்யர் நமது ஒரு பெரிய உற்சவம் நடத்த ஆரம்பித்திருக்கிறார். அவருக்கு நீ உதவி செய்'' என்று உத்தரவிட்டிருப்பதைத் தெரிவித்து 550 ரூபாய்களைக் கொடுத்தார்! அப்பொழுது இந்த ஆசிரியனுக்கு ராயரின் மகிமை சூர்யப்ரகாசத்தளவு நன்கு புரிந்தது. இந்தக்காரியம் ராயரின் சித்தத்திற்கு வந்துள்ளது என்ற நம்பிக்கை உண்டாயிற்று. ஸ்ரீ சாஸ்திரி களின் வீடு ஸ்ரீ ராயரின் மூன்னூறாவது ஆண்டு விழாக் காரியாலயமாயிற்று. பத்திரிகை ப்ரமுகர்களின் கூட்டம் நடைபெற்றது. அப்பொழுது இந்த ஆசிரியன் ஸ்ரீ குரு ராஜரின் மூன்னூறாவது ஆண்டு விழாவின் மகத்துவத்தை

முதன் முதலில் விவரித்து பாரதம் முழுவதிலுமுள்ள குரு பக்தர்கள் அதை விமரிசையுடன் நடத்துவதற்கு அழைப்பு விடுத்ததை எல்லாப்பத்திரிகைகளும் முன்னூறாவது ஆண்டு விழா விஷயத்திற்கு மகத்துவமளித்து ப்ரகரித்தார்கள். பாரதம் முழுவதிலுமுள்ள கோடிக்கணக்கான பக்தர்கள் வரவேற்று நூற்றுக்கணக்கான கமிட்டிகளை நிறுவி விழாவை நிறைவேற்றத் தயாரானார்கள். பெங்களூரில் 10-1-1971 அன்று குருபக்தர்களின் கூட்டம் கூடி பெங்களூரில் விழாவை ராஜ்ய மட்டத்தில் நிறைவேற்றத் தீர்மானித்து இந்த நூலாசிரியனின் தலைமையில் தற்காலிக விழாக் குழுவை நிறுவி ப்ரசாரத்தின் பொறுப்பைத் தலைவருக்கு அளித்தது. இந்த ஆசிரியன் கர்நாடக, தமிழ்நாடு, மஹா ராஷ்டிரம் முதலான இடங்களில் ப்ரயாணம் செய்து ஆங்காங்கு கூட்டம் கூடி விழாவைப்பற்றிய விவரங்கள் தெரிவித்து எல்லா இடங்களிலும் விழா கொண்டாடும்படி ப்ரசாரம் செய்ததின் பலனாக ஜனங்கள் மகிழ்சி உற்சாகத் துடன் முன்னூறாவது ஆண்டு விழாவைக் கொண்டாட முன்வந்தனர். ஸ்ரீ ராயரின் சித்தத்திற்கு வந்திருந்ததினால் பாரத நாடு முழுவதிலும் இந்த விஷயம் பரவி எல்லா இடங்களிலும் கமிட்டிகள் ஏற்பட்டு காரியத்தில் ஈடுபட்டன. பெங்களூர் ஸ்ரீ D. S. ராகவேந்திராச்சார் I.A.S. இவரின் தலைமையில் ஒரு ரிஜிஸ்டர்டு விழாக்குழுவை ஏற்படுத்தி, நஞ்ஜன்கூடில் பரிமள வித்யாமந்திரத்திலிருந்து நிறை வேற்றத் தேவையான விழா க்ரந்த ப்ரகரம் முதலிய காரியங்களில் ஆசிரியன் ஈடுபட்டான். ஸ்ரீ ராயரின் முன்னூறாவது ஆண்டு விழா ப்ரசாரம், ப்ரசார சுற்று ப்ரயாண விஷயங்களில் மற்றும் நஞ்ஜன்கூடின் க்ரந்தப்ர கரத்திற்காகப் பண உதவிக் காரியங்களில் பல குருபக்தர்கள் நமக்கு உதவினர். முதலிலிருந்து கடைசிவரை உதவியாள ராக நின்று பல விதங்களில் உதவி செய்த பெங்ளூரின் சித்ரா ப்ரிண்டரின் சொந்தக்காரரான ஸ்ரீ H. வெங்கோபராயர் செய்த குரு சேவை, உதவிகள் மறக்க முடியாதவை. இது போலவே சென்னையின் பத்மினி பிக்சர்ஸின் திரு. B. R.

பந்துலு அவர்கள் ஸ்ரீ ராயரின் சரித்திரம் (ஆங்கிலம்) ப்ரசுரத்திற்கு உதவியதல்லாமல் ஸ்ரீ ராயரின் ப்ரேரணையினால் இந்த ஆசிரியன் இயற்றிய ஸ்ரீ ராகவேந்திர சுப்ரபாதத்தை பிரஸித்தி பெற்ற பின்னணிப் பாடகரான திரு. P. B. ஸ்ரீநிவாஸ் மற்றும் ஸங்கீத விதுஷி திருமதி. S. ஜானகி, இவர்களால் பாடவைத்து டேப் ரிகார்டிங் செய்து முன்னூறாவது ஆண்டு விழா சேவை ரூபமாக குருராஜருக்குச் சமர்ப்பித்தார். அதை எல்லா ஆகாசவாணி கேந்திரங்களும் ஒலிபரப்பின. இதனால் பாரத நாடு முழுவதிலும் ஸ்ரீ ராயரின் சுப்ரபாதம் ஸகலரும் கேட்டு மிக்க மகிழ்ச்சியடைந்தனர். அதன் மூலமாகவும் ஸ்ரீராயரின் மகிமை எங்கும் பரவக்காரணமாய் ஸ்ரீராயரின் சுப்ரபாதம் ஜனங்களிடையே பெயர் பெற்று விளங்கியது. இப்படிப்பட்ட அமோகசேவை செய்த ஸ்ரீ B. R. பந்துலு அவரை நாம் என்றும் மறக்க முடியாது.

பாரதம் முழுவதும் 1971வது ஆண்டில் ஸ்ரீ குருராஜரின் முன்னூறாவது ஆண்டு விழா தேசிய மட்டத்தில், ராஜ்ய மட்டம்,ஜில்லாமட்டங்களில் நூற்றுக்கணக்கான இடங்களில் மிக்க விமரிசையாக நிறைவேறியது மந்த்ராலயத்தில் ஸ்ரீ பீடாதிபதி ஸ்ரீகுருராஜருக்குத் தங்கக் கவசம் செய்வித்து விழாவை வெகு விமரிசையாக நடத்தினார். அதே சமயம் ஸ்ரீ மல்லப்ப ஸிந்தேயவர்கள் ஸ்ரீராயரின் ஆலயத்தின் ஜீரணோத்தாரணம் செய்வித்து அழகான ஆலயம் கட்டுவித்து ஸ்ரீராயருக்கு முன்னூறாவதாண்டு விழா ஞாபகார்த்தமாக அர்ப்பணம் செய்தார். பெங்களூரில் ராஜ்யமட்டத்தில் ஸ்ரீ ஸுஜயீந்திரதீர்த்தரின் தலைமையில் நான்கு பேர் பீடாதிபதியின் ஸந்நிதி விசேஷத்துடன் உபராஷ்ட்ரபதி ஸ்ரீ Dr. G. S. Phatak அவர்களால் துவக்கப்பட்டு மூன்று நாட்கள் வெகு விமரிசையாக நடந்தது. பரிமள மண்டபத்தில் சுமார் 40-50 ஆயிரம் பக்த ஜனங்கள் நிரம்பியிருந்தனர். அது ஒரு பக்தி சாம்ராஜ்யமென்றே காணப்பட்டது. அன்றைய அந்த குருபக்தி, உற்சாகங்கள் வர்ணிக்க முடியாததாகும்.

நஞ்ஜன்கூடில் ஸ்ரீ பரிமளாவித்யாமந்திரம் மூலமாக ஸ்ரீ குருராஜரின் முன்னூறாவது ஆண்டு விழா 29.9.71 அன்று விஜயாதசமி தினத்தன்று ஸ்ரீ வ்யாஸ ராஜ மடாதிபதிகள் தலைமையில் கர்நாடக கவர்னராயிருந்த ஸ்ரீதர்ம வீரா அவர்கள் துவக்கிவைக்க அதி விமரிஸையாக நடந்தேறியது. அந்தக்காலத்தில் ஸ்ரீ குருராஜரே முதலான பழம் பெரும் ஆசார்யர்கள் இயற்றிய 16 க்ரந்தங்கள் வெளியீடு, வித்வத் சபை, பண்டித ஸன்மானம் முதலியன நிறைவேறின.

தில்லியில் ராஷ்ட்ரபதியாயிருந்த ஸ்ரீ வி. வி. கிரியவர்கள் தலைமையில் ஆயிரக்கணக்கான ராஜாங்க ஊழியர்கள், மந்திரிகள், வித்வான்கள், குருபக்தர்கள் "National Committee" (தேசிய கமிட்டி) அமைத்து அதன் மூலம் தேசிய மட்டத்தில் விழாவை நடத்தி விச்வ குருகளான ஸ்ரீ குருராஜருக்குத் தம்முடைய பக்தி சிரத்தைகளைச் சமர்ப்பித்தனர். அது போலவே கல்கத்தா, பம்பாய், பூனா, மதராஸ், பெங்களூரிலும் (National Committee) தேசியக் குழுவினர் தேசிய மட்டத்தில் முன்னூறாவது ஆண்டு விழாவை நிறைவேற்றினார்கள். ஸ்ரீ குருராஜரின் ம்ருத்திகா ப்ருந்தாவனங்களுள்ள எல்லா இடங்களிலும் விழா நடந்தேறியது. இவ்வாறு குருராஜரின் முன்னூறாவது ஆண்டு விழா பாரத தேசம் முழுவதிலும் என்றும் கண்டிராத அளவில் கலாச்சார, தார்மீக, நிகழ்ச்சிகளுடன் நிறைவேறி ஸ்ரீ குருராஜரின் மகிமை திக்குகள் தோறும் பரவிற்று. கோடிக்கணக்கான ஸஜ்ஜனர்கள் ஸ்ரீ குருராஜரை ஆராதித்து, குருபக்தர்களாய் அவருடைய விசேஷ கிருபைக்குப் பாத்திரரானார்கள். 1971-வது வருடம் ஸ்ரீ குருராஜரின் முன்னூறாவது ஆண்டு விழா வருஷமென்றே வரலாற்று ப்ரஸித்தமாயிற்று.

ஸ்ரீசுயமீந்திர தீர்த்தரின் மனவிருப்பம் நிறைவேறியது! அவர் சொன்ன பவிஷ்யவாணி (வருங்காலச் சொல்) ஸத்தியமாயிற்று! முன்னூறாவது ஆண்டு விழாவான பிறகு ஸ்ரீ குருராஜர் அற்புதமான மகிமைகளைக் காண்பித்துக்

கொண்டிருக்கிறார். நூற்றுக்கணக்கான ப்ருந்தாவனங்கள் ப்ரதிஷ்டையாயிருக்கின்றன. இன்னும் அநேக ப்ருந்தாவன ப்ரதிஷ்டைக்கு ஏற்பாடாகிக் கொண்டிருக்கின்றன! லக்ஷக் கணக்கான ஜனங்கள் மந்த்ராலயத்திற்கு விரைந்து ஸ்ரீ குரு ராஜரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராகிக் கொண்டிருக் கின்றனர். பாரதத்தில் மாத்திரமல்ல. இன்று அவருடைய மஹாமகிமை தேச விதேசங்களிலெல்லாம் ப்ரஸித்த மடைந்து கோடிக் கணக்கான ஜனங்கள் அவரைப் பூஜித்து மனோபீஷ்டங்களை அடைந்து சுகமடைந்துள்ளனர்.!! ஸ்ரீ குருராஜர் ப்ரபஞ்சத்திலெல்லாம் தமது மகிமை, அற்புதங்களைக் காண்பித்து மானிடகுலத்தைக் காப்பாற்றிக் கொண்டு மங்கள மழைபொழிந்து கொண்டு இருக்கிறார்!

எந்தத் தகுதியுமற்ற பாமரரின் உய்விற்காகக் கங்கணம் கட்டிக் கொண்டுள்ள ஸ்ரீகுரு ஸார்வபௌமர் ஸ்ரீபரிமள வித்யா மந்திரத்தைப் போன்ற ஒரு சிறிய நிறுவனத்தினால் முன்னூறாவது ஆண்டு விழா ப்ரசாரம் செய்வித்து அது பாரதம் முழுவதும் நடைபெறும்படிச்செய்து நடக்க முடியாத காரியத்தை நடத்திவைக்கும் மஹாசக்தி வாய்ந்த நிபுணரென்பதையும் தமது மகிமை அனுக்ரஹங்கள் பரவி யிருப்பதையும் ப்ரத்யக்ஷமாகக் காண்பித்துக்கொண்டு எல்லோரையும் காப்பாற்றி வருகிறார். உண்மை "தேவரெந்தரே திருப்பதி திம்மப்ப,! குருகளெந்தரே மந்த்ராலய ராகப்ப"! தேவனென்றால் திருப்பதி வெங்க டேச்வரன், குருவென்றால் மந்த்ராலயத்தின் ராக வேந்திரன்"!

## 102. ஸ்ரீராகவேந்த்ர தரிசனம் (சமாப்தி)

இன்று ஸ்ரீ குருராஜர் தமது அவதார காரியத்தை முடித்துவிட்டு சரீரத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்த 300 வது வருஷ நினைவு நாளான முன்னூறாவது ஆண்டு நாள், இன்றைய தினம் மஹா மங்களகரமான புனித நாள். ஜகத்தின் ஜனங்களுக்கு ஆன்மீக, கலாசார, நன்னடத்தை முதலியவைகளின் மதிப்பை (உயர்வை) உபதேசித்து அவர்

களுக்கு தார்மீக உணர்வைத் தூண்டி மானிடர்களின் க்ஷேமத்திற்காகத் தமது தவத்தைத் தாலரவார்த்துக் கொடுத்த தபோ மூர்த்தியான ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் 315 வருஷங்களுக்கு முன்பு மந்த்ராலயத்தில் சரீரத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து "இன்னும் 700 வருஷங்கள் வரையில் பக்தர்களைக் காப்பாற்றுவதாக" அபயமளித்த மாபெரும் தினம். அன்றிலிருந்து இன்றுவரை, ஜாதி, மதம், மார்க்கம், மடம், தேசம், மொழி, வயது, ஆண்-பெண் வித்தியாசம் பாராட்டாமல் கோடிக்கணக்கானவர்கள் அந்த மங்கள மூர்த்திகளுக்குச் சரணாகதர்களாகி சேவித்து வியாதிகள், தேக சம்மந்தமானதோ, மன வியாதியோ முதலிய கவலைகளிலிருந்து விடுதலை பெற்று, ஸந்தானம், சம்பத்து, வித்யா, கீர்த்தி, ஆரோக்கியம், பாக்யம்-சாந்தி—சமாதானம் முதலிய தங்களுக்கு வேண்டிய விருப்பங்களை குருவரரின் அனுக்ரஹத்தினால் பெற்று சுகமடைகிறார்கள்; அடைந்துள்ளார்கள், இன்னும் வரப்போகும் 400 வருடங்கள் அந்தக் கருணாமூர்த்திகள் பக்த ஜனங்களின் மீது அனுக்ரஹ அமிர்தத்தை வர்ஷித்துக் கொண்டே மானிட குலத்தின் க்ஷேமத்திற்காகவே வாழப் போகிறார். இது சத்தியம்!

முன்பு கிருத யுகத்தில் நானே ஜகதீச்வரன், என்னைத் தவிர வேறு எந்தக் கடவுளும் கிடையாது. புஜபலம், பராக்ரமம் முதலிவைகளில் எனக்கு நானே நிகர், என்று கர்வங்கொண்ட தைத்ய சக்ரவர்த்தி ஹிரண்ய கசிபுவின் புத்ரராகப் பிறந்து, தந்தைக்கு ஸ்ரீ ஹரி ஒருவனே சர்வ சக்திவானான ஜகதீச்வரன் என்று உபதேசித்து, ஹரிபக்த னென்னும் துவேஷத்தினால், தந்தை கொடுத்த எல்லாவித இம்சைகளையும் மகிழ்ச்சியுடன் அனுபவித்து, ஸ்ரீ ஹரியின் கிருபையினால் அவைகளிலிருந்து விடுபட்டு, கடைசியில் ஸ்ரீ ஹரி ஸர்வவியாபியென்று காண்பித்துக் கொடுப்பதற் காகத் தூணில் ஸ்ரீ நரசிம்மனைக் காண்பித்த ஸ்ரீப்ரஹலாத ராஜனே த்வாபரயுகத்தில் பாஹ்லீக ராஜனாய், கலியுகத்தில் ஸ்ரீவ்யாஸராஜராய், மற்றும் பகவத் சங்கல்பத்தினால் மானிடகுல க்ஷேமத்திற்காக ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளாய்

அவதரித்த தேவதை சங்குகர்ணன் ஸ்ரீ ஹரியின்பரமபக்தன், ஸத்ய லோகவாசியான அவன் ஸ்ரீ ப்ரம்மதேவனின் நம்பிக்கையுள்ள சேவகன். ஸ்ரீ ஹரியின் சங்கற்பப்படி ப்ரம்மதேவனின் சாபப்படி ப்ரஹலாதனாக அவதரித்து பாகவதோத்தமனென்று பகவானாலேயே புகழ்ப்பெற்ற புண்யாத்மா. இப்படிப்பட்ட உத்தம தேவதையான சங்கு கர்ணனின் அவதாரரரான ஸ்ரீ ப்ரஹலாதன், பாஹ்லீகன், வ்யாஸராஜரே ஸ்ரீ மூலராமனின் சரணகமலாராதாகராய் இன்றும் மந்த்ராலயத்தில் ஸ்ரீ ராகவேந்திரஸ்வாமிகளின் ரூபத்தில் விளங்கிக் கொண்டிருக்கின்றார்.

ஸ்ரீ ராகவேந்திர முனிபுங்கவர் கி. பி. 1621 லிருந்து 1671 வரை சுமார் ஐம்பது வருடகாலம் ஸ்ரீமத்வாசார்யரின் வித்யாசிம்மாஸனத்தில் வீற்றிருந்து, வேதம், உபநிஷத், ஸூத்ரம். கீதை மற்றும் த்வைத பாஷ்ய "டீகா"க்களின் மீது உத்தமமான "டிப்பணி" (விளக்கம்)கள் இயற்றி வைதிக சாஹித்யத்திற்கு அஸாதாரணக் கொடையளித்துள்ளார். கன்னட—ஆந்திர—தமிழ்—மஹாராஷ்டிரம் மற்றும் விதர்மி களான முஸல்மான் அரசர்களாலும் சேவிக்கப் பட்டவராய், அந்தந்த தேசங்களின் மறுமலர்ச்சிக்குக் காரணமாயிருந்த தல்லாமல் அந்த தேசங்களில் பரஸ்பரம் நட்பு-அன்பு, அமைதியை ஏற்படுத்தி நாடு, மொழிகளின் சேவை செய்து நூற்றுக்கணக்கான அற்புதங்களையும் மகிமைகளையும் நிகழ்த்தி ஏழை-எளியவர்கள், பண்டிதர்களையும் பாமரர் களையும் காப்பாற்றினார். கடைசியில் பகவத் ஸங்கல்பப்படி சரீரத்துடன் ஸ்ரீ மந்த்ராலய க்ஷேத்திரத்தில் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து இப்பொழுதும்கூட உயிருடனிருந்து கொண்டு தமது யோக சக்தியின் செல்வாக்கை உலகத் திற்குக் காண்பித்து அதன் மூலம் பகவந்தன் இருக்கிறா னென்பதை ஸ்தாபித்துக் கொண்டு காணப்படுகின்றார்.

ஸ்ரீ குருராஜர் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்த தருணத்தில் ஸ்ரீ அப்பணாசார்யரின் "குருஸ்தோத்திர"த் திற்கு साक्षी हयास्य: (ஸாக்ஷீஹயாஸ்ய:) என்னும் ஒப்புதல்

முத்திரையைத் தமது திவ்யவாணியினால் அனுக்ரஹித்துத் தாம் உயிருடன் இருப்பதை நிரூபித்தார். இது நடந்து 50 வருடங்கள் கழிந்தபிறகு ஸ்ரீ விஜயதாஸர், ஸ்ரீ கோபாலதாஸர், ஸ்ரீ ஜகந்நாத தாஸரைப் போன்ற அபரோக்ஷ க்ஞானிகளுக்கு ப்ரத்யக்ஷ தரிசனமளித்துத் தமது யோக சக்தியின் மஹிமையைக் காண்பித்தார் 75 வருடங்கள் கழித்து ஸ்ரீ வாதீந்திரதீர்த்தரின் ''குரு குணஸ்தவன''த்திற்குத் தமது ஒப்புதலைக் காண்பிக்கத் தலையசைத்து (ப்ருந்தாவனம் அசைந்தது) தாமின்னும் சரீரத்துடனிருப்பதை அறிவுறுத்தினார். ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து சுமார் 150 வருடங்களான பிறகு ஸர் தாமஸ் மன்ரோ துரையவர்களுக்குத் தரிசனமளித்து அவருடன் பேசிப் பல மந்த்ராக்ஷதை அளித்து இன்னும் தான் ஜீவித்திருப்பதை உறுதிப்படுத்தியுள்ளார். இந்த சென்ற 316 வருடங்களாக பாக்யசாலிகளான பக்தருக்குத் தரிசனம் அளித்திருப்பது ஸகலருக்கும் அனுபவ ஸித்தமாயுள்ளது. இவ்வாறு ஸ்ரீ குருராஜர் 315 வருஷங்களாகத் தமது தரிசன பாக்யத்தை அளிப்பதன் மூலம் யோகசித்தர், ஸ்ரீ வாயு பகவானின் விசேஷ ஸந்நிதானத்துடன் கூடியவர், ஸ்ரீராம-நரஹரி-க்ருஷ்ண-வேதவ்யாஸ மற்றும் நாராயணனை உபாஸித்துக் கொண்டு ஜீவித்துக் கொண்டு லோகக்ஷேம காரியத்திலாழ்ந்திருப்பதை சந்தேகத்திற்கிடமில்லாமல் மனதில் பதிய வைத்துள்ளார். அவ்வாறிருக்கையில் அந்த மஹான் இப்பொழுதும் ப்ருந்தாவனத்தில் சரீரத்துடன் வீற்றிருப்பதல்லாமல் இன்னும் 400 வருடகாலம் ஜீவித்திருந்து ப்ருந்தாவனத்தில் காட்சியளித்து லோகக்ஷேமம் செய்கிறாரென்னும் விஷயத்தில் சற்றேனும் சந்தேகமில்லையென்று பறை சாற்றிச் சொல்லலாம்.

இப்படி அந்த குரு ஸார்வபௌமர் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்து நூற்றாண்டுகள் கழிந்தாலும் இன்றைக்கும், ''ஸ்ரீராகவேந்திரா நீனே கதி'' என்றால் அழைத்த இடத்திற்கு வந்து கருணை கூர்ந்து லக்ஷக்கணக்கான பக்தர்களைக் காப்பாற்றி வேண்டிக் கொண்ட இஷ்டார்த்தங்களை

அளித்துக் கொண்டிருக்கிறார். அப்படியிருக்கையில் அந்த மாபெரும் தபோநிதிகளின் புண்யராசி மேலும் மேலும் நிரம்பிக் கொண்டேயிருக்கின்றது. உண்மை. அதுகொடுக்க கொடுக்கக் குறையாத புண்யராசி! யுகயுகங்களாக ஸ்ரீ ரமா ரமணனின் பாதஸேவை-ஆராதனை, தவத்தினால் பெற்ற (श्रीराघवेंद्रो हरिपादकंज निषेवणाल्लब्ध समस्तसंपत् !) அவரது பொக்கிஷம் ஆயிற்றே! புண்யத்தின் பொக்கிஷம்! அந்தப் புண்ணிய பொக்கிஷத்திலிருந்து வரம் கிடைக்கப் பெறும் பாக்யவானே தன்யன்!

இன்றைய தினம் லோக க்ஷேமத்திற்காக ப்ருந்தா வனத்தில் சரீரத்துடன் ப்ரவேசம் செய்து தவம் செய்ய உட்கார்ந்த ஸ்ரீராகவேந்திரரின் 300வது புண்யதினம். அந்த மாபெரும் நாளின் ஞாபகார்த்தமாக ஸ்ரீ மந்த்ராலயம், நஞ்ஜன்கூடு, பெங்களூர் மற்றும் நாட்டின் வெவ்வேறு பாகங்களில் ஸ்ரீ ராயரின் 300வது ஆண்டு விழாக்களை இன்று பக்தி சிரத்தைகளுடன் நடத்தி நாமெல்லோரும் குருவர்யரின் பூர்ணானுக்ரஹத்திற்குப் பாத்திரராகி யுள்ளோம்.

இப்படிப்பட்ட மங்கள நாளில் நாம் ஆராதிக்கும் தபோ மூர்த்தியானவர் எப்படியிருக்கிறார்? ப்ருந்தாவனாந் தர்கதரான ஸ்ரீ குருராஜரின் லக்ஷணங்கள் என்ன? அவருடைய ரூபம் எப்பேற்பட்டது? அவரது தரிசனம் நம்மை என்ன செய்கிறது? அவருடைய கம்பீரமான ஸ்வரூப தரிசனத்தினால் புனிதராக முடியுமா என்றெல்லாம் அநேக பக்தர்கள் சிந்தித்துக் கொண்டு இருக்கலாம். அவ்வாறு யோசிக்கும் பக்தகோடிகளுக்கு ஸந்தகுல ஸார்வ பௌமரான மந்த்ராலய ப்ரபுகளானவர் ப்ரத்யக்ஷ தரிசனம் செய்விக்கும் தகுதியில்லா திருந்தாலும் அவரது ஸ்வரூப விஷயம் விவரங்களடங்கிய ஸ்ரீ ராகவேந்திர விஜயம், த்யான ச்லோகங்களைச் சிந்தித்து, அவரது தரிசனத்திற்காக முன்னூறாவது ஆண்டு சுபதினத்தில் இரண்டு நாட்கள் முன்பு தாஸானுதாஸன் இந்த ஆசிரியனுக்குக் கனவில் தரிசனமளித்துக்காத்த கிரமத்தையே விவரித்து ஸகல

பக்தருக்கும் ஸ்ரீ ராகவேந்த்ர தர்சனம் செய்விக்க இந்த ஆசிரியன் இப்பொழுது முயற்சித்துக் கொண்டிருக்கிறான்.

### 103. ஸ்ரீ ராகவேந்த்ர தரிசனம் :

வாரீர் பக்த பந்துக்களே ! ஸ்ரீ ராகவேந்திரரின் தரிசனத்தினால் புனிதராவோம் ! அதோ பாருங்கள்.

ஸ்ரீ ஹரிபாதத்திலிருந்து உற்பத்தியான கங்கையைப் போல ஸ்ரீ வராஹநந்தினி என்று ஸஜ்ஜனர்களால் சேவிக்கப்படும் துங்கபத்திரையின் உயர்ந்த அலைகளின் சங்கமத்தினால் புனிதமான மங்களகர மந்த்ரஸித்தி க்ஷேத்திரமென்று ப்ரஸித்தி பெற்றுள்ள ஸ்ரீ மந்த்ராலய பவித்ரமான க்ஷேத்ரத்தில் ப்ரஹலாதன் செய்த பவித்ரமான யாக குண்டத்தில் ஜகன் மங்களமூர்த்தி ஸ்ரீ ராமசந்திரனின் பாதத்தாமரை பட்டுப் புனிதமான இந்திர நீலமணிகாந்தியினால் சோபிக்கின்ற அழகான ப்ருந்தாவன மந்திரத்தில் அநந்த ப்ருந்தாவன நிலையராக நிச்சயித்து நிகில பக்த வ்ருந்தாவன நிபுணராய், தரிசன மாத்திரத்திலேயே கிடைப்பதற்கரிய, விரும்பின வரங்களின் ராசியை ஆனந்தத்துடன் வாரிவழங்கிக்கொண்டு, வேண்டுபவர்களுக்குக் கல்ப விருக்ஷமாய் பூஸுரர்களுக்கு ஆதாரமாய், வேண்டிய வரன்களை அருளும் காமதேனுவாய், பாபங்களைப்பரிகாரம் செய்து, நினைத்த விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் சிந்தாமணியாய், யோகாஸனத்திலமர்ந்து தனது இதயக்கோவிலில் ஸ்ரீ ராமநரஹரி வேதவ்யாஸ-யாதவேச க்ருஷ்ண-நாராயணவென்னும் ஸ்ரீ ஹரியின் பஞ்ச ரூபங்களை ப்ரதிஷ்டை செய்து பிரம்மா, ருத்ர, இந்திராதி தேவதைகளினால் வணங்கப்படும் கோவிந்தனின் பாதாரவிந்தங்களின் மகரந்தங்களைப் புசிக்கும் மஸ்த வண்டாகி, பக்தபந்து, கருணா ஸிந்து, யோகிகுல சக்ரவர்த்தி, வைதிக வித்யா ப்ரதிஷ்டாபனாசார்ய, நாஸ்திகமத நிவாரக சூரியன், ஆஸ்திக மத ஸ்தாபனாசார்ய, பாகவதோத்தமரின் விஸ்வகுரு முதலான அமோக விருதுகளினால் அலங்கரிக்கப்பட்டவராய், ஞானிகளினால் துதிக்கப்பட்டவராய் சரணடைந்தவர்களுக்கு

ப்ருந்தாவன விஹாரியான ஸ்ரீ கிருஷ்ணனான முகுந்தனின் வரபலத்தினால் நிரந்தர மங்கள மழை பொழிந்து கொண்டு மந்த்ராலயத்தில் சரீரத்துடன் மூல ப்ருந்தாவனத்தில்!. கணக்கற்ற மிருத்திகா ப்ருந்தாவனங்களிலும் ஒளிமயமான ரூபத்தில், நினைத்த இடத்தில் அழைத்த இடத்தில் அபய-வரத ஞான முத்ராங்கிதராய், காஷாயவஸ்திர-தண்ட-கமண்டலு-கமலாக்ஷ-துளசி மாலையினால் அலங்கரிக்கப் பட்டவராய் சோபிக்கும் ஊர்த்வ புண்ட்ரம் கந்தாக்ஷதை-த்வாதச நாமங்களினால் மந்தகாசத்துடன் விளங்கும் முகத் தாமரையுடையவராய்க் காணுகின்ற அந்த மஹாத்மாவே ஸ்ரீ ராகவேந்த்ர குரு ஸார்வபௌமர்! பாருங்கள், பக்த பந்துக்களே, உங்கள் கண், மனம் குளிர ப்பாருங்கள், ஆனந்த மடையுங்கள், சேவித்து கிருதார்த்தராகுங்கள், பரமமங்கள கரரான அணிமா, கரிமா முதலிய திவ்ய அஷ்ட ஐச்வர்யம் படைத்த யோகி ச்ரேஷ்டரை!

ஸ்ரீ ராகவேந்திர யதிசந்தீரர் எப்படியிருக்கிறார்? அவருடைய லக்ஷணங்கள் யாவை? அவரை தியானம் செய்யும் முறை எப்படி? என்று யோசிக்கிறீர்களா? குரு பக்தர்களே! கண்ணை மூடி இதயத்தாமரையில் பக்தியுடன் "ஓம் ஸ்ரீராகவேந்த்ராய நம" என்று ஜபித்தாலேபோதும். 'स्वांतध्वांत दिवाकर' ரான (இதய அந்தகாரத்திற்குச் சூரியனான) ஸ்ரீராகவேந்த்ர யதிபுங்கவரின் சாந்த ரூபத்தின் திவ்ய தரிசனமாகும் உங்களது இதயக்கோவிலில்!!

ஒரு தடவை சொல்லுங்கள்— 'तप्तकांचन संकाशं अक्षमालां कमंडुलं। दोर्भ्यां दधानं काषायवसनं राममानसं ।योगींद्रतीर्थ वंद्यांघ्रि तुलसीदाम वक्षसं। ज्ञान-भक्तितप: पूर्णं ध्याये दिष्टार्थ सिद्धये ।।' "தப்த காஞ்சன ஸங்காசம் அக்ஷமாலாகமண்டலம்! தோர்ப்யாம் த்தானம் காஷாயவஸனம் ராமமானஸம்! யோகீந்த்ர தீர்த்தவந்த்யாங்க்ரிம் துளஸிதாமவக்ஷஸம்! ஞான பக்தி தப:பூர்ணம் த்யாயே திஷ்டார்த்தஸித்தயே!" சொன்னீர்களா? அதோ உமது இதயக்கோவிலில் உதித்துக் கொண்டிருக்கிறார் ஸ்ரீகுரு ஸார்வபௌமர்! பளபளவென்று

ஜொலிக்கும் நவரத்தினங்களினால் இழைக்கப்பட்ட வித்யா ஸிம்மாஸனத்தில் புனிதத் தன்மைக்கும் லோக குருத்வத் திற்கும் எடுத்துக் காட்டாக பால் போன்ற வெண்கொற்றக் குடையின் கீழ் பத்மாஸனம் போட்டு அமர்ந்திருக்கும் சோபித்துக் கொண்டிருக்கும் அந்த வசீகரமான ஒளிமயமான மூர்த்திகளே ஸ்ரீராகவேந்திர குரு ஸார்வபௌமர்!

பாருங்கள், புடம் போட்ட தங்கம் போல் மின்னுகின்ற காந்தியுடன் மனதை வசீகரம் செய்யும் மிருதுவான, அழகுள்ள, சரீரத்தை! வலது கையில் கமலாக்ஷ மாலை (தாமரை மொட்டினாலான) ஏந்தி ப்ரணவ மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருக்கும் குருவை நன்கு பாருங்கள். என்ன ரம்யமாக உள்ளது! இடதுகையில் சாபானுக்ரஹ சக்தி வாய்ந்த மந்த்ரத்தினால் பவித்ரமாயுள்ள ஜலத்தினால் நிரம்பிய கமண்டலம் ஜொலிக்கின்றது! புதிய சிவந்த காஷாய வஸ்திரத்தினால் அலங்கரிக்கப்பட்டுள்ளவராயிருக் கிறார் சுவாமிகள், பாருங்கள்! மார்பில் புத்தம் புதிய பசுமை நிறமுள்ள, பகவானுக் கர்ப்பித்த துளசிமாலை பளிச் சென்று ப்ரகாசிக்கின்றது. இவர் யோகீச்வரரென்று சொல்லப் படும் வெண்மையான ரோமங்களினால் கம்பீரத்தோற்ற மளிக்கும் கன்னங்களின் சோபையைப் பாருங்கள். எவ்வளவு தங்கமயமாய்க் காட்சியளிக்கின்றது! பிரகாசிக்கும் ஊர்த்வபுண்ட்ரம், கந்தாக்ஷதைகளுடன் கூடிய ஒளிவீசும் முகத்தில் புன்னகை மின்னுகிறது. மூடின கண்களுடன் மனதில் மூலராமனைத் தியானித்துக் கொண்டு க்ஞான-பக்தி-தவங்களினால் பரிபூர்ணராய் அபய-வரத முத்திரை களுடன் பக்தர்களின் மனோபீஷ்டங்களை நிறைவேற்று பவராய் கிருபாகடாக்ஷவீக்ஷண்யராய், மங்கள மழைபொழி பவராய் ஸ்ரீ யோகீந்திர தீர்த்த முனிபுங்கவரால் சேவிக்கப் பட்டுக் கொண்டு காணுகிறார். பக்தி நிரம்பிய மனதுடன் பாருங்கள்! மகிழுங்கள்!

கனவில் இந்த ஆசிரியனுக்குக் காட்சியளித்த இந்த ஒரு கம்பீரமான சித்திரம் பக்தர்களின் இதயக்கோவிலில் ப்ரதி

பிம்பத்தால் ஸ்ரீ ராகவேந்திரரின் ப்ரத்யக்ஷ தரிசனமே கிடைத்ததைப் போல் மனம் மலர்ந்து பக்தி மேலிட்டால் பூரித்து, தொண்டை அடைக்கும் நிலையில் நா தழுதழுக்க கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பொழிவதில் சந்தேகம் உண்டா?

ஸாத்விகத்தின் உருவமெடுத்து வந்துள்ள இந்த மகானின் தேஜஸ் வர்ணனைக்கப்பாற்பட்டது. குருராஜரின் அந்த ஸாத்விக தேஜஸின் கண்கூசும் ஒளியினால் ஸகல பாபங்களாகிய மலைகளே மூடுபனியைப்போல் கரைந்து போய்விடும். அடுத்த நொடியிலேயே தயாநிதிகளான மந்த்ராலயப் பிரபுகளவர்களின் அமிர்தத்துளியான கருணைகூர்ந்த பார்வை சரத்ருது சந்திரனின் குளிர்ந்த கிரணங்களைப்போல உங்களிலுள்ள தாபத்தைப் பரிகரித்து தன்னறியாத பேரானந்தத்தின் நீருற்றுகள் புறப்பட்டு (ஆனந்தக் கண்ணீர் விடுகின்ற) நிலை ஏற்படுமளவிற்கு அவர் தேஜஸ் மகிமையுள்ளது.

ஸ்ரீ ராகவேந்திரரின் "உபயவம்சாப்திசந்திரர்" (उभयवंशाब्धिचंद्र) அதாவது இரண்டு வம்சங்களைச் சேர்ந்தவரான ஸ்ரீ வாதீந்திர தீர்த்த குருபாதர் ஸ்ரீ குருராஜரின் தேஜஸின் மகத்துவத்தைத் தமது "குருகுணஸ்தவன"த்தில் வெகு அழகாக வர்ணித்துள்ளார். அவருடைய வம்சத்தில் உதித்த "கமலேசன்" என்ற பெயருடைய தற்கால கவியொருவன் கன்னடத்தில் தெரிவிப்பதை இதோ கேளுங்கள் :—

केंगिरण होंगिरण तंगिरण ग्रहराशि
कंगोलिप नक्षत्र मणि मिचुगळ राशि
अंगविसलिदनेल्ल ओंदागि बेळगुतिह प्रखर तेजवु बंगिसल् ।।
रंगपर, जानिवर राघवेंद्ररे निम्म
मंगळद परम हृदयाकाशदि भरदि
सिगरिसि होरहोम्मितिह ज्योतियू मुंदे खद्योतदंतप्पुवु ।। —कमलेश

கெங்கிரண ஹொங்கிரண தங்கிரண க்ரஹராசி
கங்கொளிப நக்ஷத்ரமணி மிஞ்சுகளராசி
அங்கவிஸலிதநெல்ல ஒந்தாகி பௌகுதிஹ ப்ரகர தேஜவு
பங்கிஸல் ||
ரங்கபர, ஜானிவர ராகவேந்த்ரரே நிம்ம
மங்களத பரமஹ்ருதயாகாசதி பரதி
ஸிங்கரிஸி ஹொர ஹொம்மிதிஹ ஜ்யோதியூ முந்தெ
கத்யோததம்தப்புது || —கமலேச

**தாத்பர்யம் :**

ஸ்ரீ ராகவேந்த்ர குருஸார்வபௌமரே! தங்களுடைய பரம மங்களத்தைக் கொடுக்கும் ஹ்ருதயாகாசத்திலிருந்து வீசுகின்ற ஜோதியின் முன் சூரியன், அக்நி, சந்திரன், க்ரஹராசிகள் நக்ஷத்திரக்கூட்டங்கள், விலை மதிக்க முடியாத மணிகள் (ரத்தினங்கள்) மின்னல்களின் ராசிகள் இவை எல்லாவற்றையும் ஒன்றாக இணைத்து மாபெரும் ப்ரகாசமாக ஆக்கினாலும் அவை ஒரு மின்மினிப் பூச்சியின் அற்ப ப்ரகாசத்திற்குச் சமமானவை

## உபஸம்ஹாரம் (சமாப்தி)

இவ்வாறு தேஜோமூர்த்தியான ஸ்ரீ ராகவேந்திரரின் தரிசனமான பிறகு அவரை மஹாத்மக்ஞான பூர்வகமாக அவரைத்தவிர வேறு கதியில்லையென்று பக்தியுடன் பஜித்தால் கிருபாஸாகாரான அந்த யோகீச்வரர் பந்தனத்திற்குள்ளாக்கும் ஸம்ஸார சாகரத்திலிருந்து நம்மைக் கரையேற்றி, ஸகல ஜீவர்களுக்கும் முக்ய லக்ஷியமான தன் ஸ்வரூபானந்த ரூபமான மோக்ஷம் (சாசுவத சுகம்) சாம்ராஜ்யத்தின் ராஜமார்க்கத்தில் பயமின்றி நடைபோடுவதற்கு நமக்கு உதவி செய்யும் க்ஞானஜ்யோதியை அருளி ஆநந்த தாமத்தின் (வைகுண்டம்) அருகில் நம்மைக் கைபிடித்துக்கொண்டு போய்விட்டு ஆநந்தமளிப்பவனான அந்த லக்ஷ்மிபதியான ஸ்ரீமன் நாராயணனின் பாதாரவிந்தத்தின் ஸந்நிதியில் நிறுத்தி (ஸ்ரீ வாயு பகவானின் விசேஷ ஸந்நிதானத்துடன்

கூடியதாயிருப்பதினால்) "भक्तवत्सलं, भक्तापराध सहिष्णु, दीनं दूनं, अनाथं, शरणागतमेनं उद्धर" என்று நமக்காகப் பிரார்த்தனை செய்து பகவத் ப்ரசாதத்தைப் பெறுவதற்கு உதவி செய்து காப்பாற்றுகிறார். (பக்தவத்ஸலன், பக்தர்களின் அபராதத்தைப் பொறுத்துக் கொள்பவன், ஏழை எளியவர், அநாதை, சரணாகதர்களைக் காப்பாற்று).

ஜனன மரண ரூப சம்சார சக்கரத்திலிருந்து நம்மை விடுவித்து (பகவானே சொல்லியிருப்பது போல (स्वां च मां च स्मरन् काले कर्मबंधनात् प्रमुच्यते) மோக்ஷ சுகத்தையே ஸ்ரீ ஹரியினால் கொடுக்கும்படிச் செய்யும் மஹானுபாவர் நமக்கு இந்த இஹலோக வாழ்க்கையில் வேண்டிய சந்ததி, சம்பத்து, ஆரோக்யம், வித்யா, மகிழ்ச்சி, கீர்த்தி முதலான பலவித விரும்பிய பலன்களை அனுக்ரஹிப்பாரென்று வேறாகச் சொல்லவேண்டியதில்லை! "தேவரெந்தரே திருபதிய திம்மப்ப, குருவெந்தரே மந்த்ராலயத ராகப்ப" என்னும் பழமொழியின் உண்மையை பக்தர்கள் இன்று ஒவ்வொரு நாளும் மனதில் ஆணித்தரமாகப் பதியவைத்துக்கொண்டுள்ளனர்.

மானிடகுல உயர்வு — மங்களங்களுக்காக அவதரித்து தயாநிதியாகிக் காப்பாற்றிவரும் ஸ்ரீ ராகவேந்திர தரிசனத்தை அவருடைய மஹாசமாராதனை மங்கள முகூர்த்தத்தில் பக்தி பூர்வகமாக நிறைவேற்றி அந்த ரக்ஷக குருவர்யரை ஆராதித்து அவரது கிருபையைப் பெற்று சுகிப்போம்.

पूज्याय राघवेन्द्राय सत्यधर्मरताय च ।
भजतां कल्पवृक्षाय नमतां कामधेनवे ॥

பூஜ்யாய ராகவேந்த்ராய ஸத்ய தர்ம ரதாயச ।
பஜதாம் கல்ப வ்ருக்ஷாய நமதாம் காமதேனவே ॥

பக்தர்களின் பஜனையினால் ப்ரீதியடைந்த அந்த பாகவதோத்தமரான கருணைக் கடல், காமதேனு-கல்பதரு போல கணக்கற்ற காலம்வரை மானிட குலத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கட்டும் என்று ப்ரார்த்தனை செய்வோம்.

॥ ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து ॥

# || ஸ்ரீ குரு ராகவேந்த்ர ஸ்தோத்ரம் ||

| ஸ்ரீமதப்பணாசார்யரால் இயற்றப்பட்டது |

லக்ஷ்மி சானிம் ஸௌக்ய தீர்த்தம் ஜயார்யம்
வ்யாஸா சார்யம் ஸ்ரீ ஜயீந்த்ரம் சுதீந்த்ரம் |
வம்சாசார்யம் ராகவேந்த்ரம்ச நத்வா
வக்ஷ்யே பக்த்யா குருஸ்தோத்ர பாவம் ||

ஸ்ரீ மந்த்ராலய ஸ்ரீபாதங்களின் பரமானுக்ரஹத்திற்குப் பாத்திரரும், வித்யா சிஷ்யருமான "பிச்சாலே" யின் ஸ்ரீ மதனப்பணாசார்யர் ஸகலமனோபீஷ்டங்களையும் அளிக்கவல்ல, பரம மங்களகரமான ஸ்ரீ மத்குரு ராகவேந்த்ர ஸ்தோத்திரத்தை இயற்ற ப்ரயத்தனம் செய்யுமுன் இந்த ஸ்தோத்ரம் இடையூறின்றி முடிப்பதற்காக "ஸ்ரீ பூர்ண போத" என்னும் பத்யத்தினால் ஸ்ரீ குருராஜரின் வாக்ப்ரவாஹத்தைத் தேவநதி கங்கைக்கு ஒப்பிட்டு அந்த ஸமர நதியான கங்காவின் ப்ரார்த்தனை ரூபமாக மங்களாசரண ச்லோகத்தை ஆரம்பிக்கிறார்.

ஸ்ரீபூர்ணபோத குரு தீர்த்த பயோப்தி பாரா
காமாரிமாக்ஷ விஷமாக்ஷ சிரஸ்ப்ரு சந்தீ |
பூர்வோத்தராமித தரங்க சரத்ஸ ஹம்ஸா
தேவாவிஸேவித பராங்க்ரி பயோ ஜலக்நா || 1 ||

ஜீவேச பேத குணபூர்த்தி ஜகத் ஸுஸத்வ
நீசோச்ச பாவ முகநக்ர கணைஸ்ஸமேதா ||
துர்வாத்ய ஜாபதி கிளைர் குருராகவேந்த்ர
வாக்தேவதா ஸரிதமும் விமலீ கரோது || 2 ||

தேவநதி கங்கை - காந்தியுள்ள புதக்ரஹத்தின் தகப்பனாரான சந்திரனின் உற்பத்தி ஸ்தானமான சமுத்திரத்தையே போய்ச் சேருவதைப்போல, ஸ்ரீ குரு ராகவேந்திரரின் வாக்ப்ரவாஹம் (வாணிரூபமான வெள்ளம், அதாவது க்ரந்தங்கள்) கூட ஸ்ரீ மத்வாசார்யரென்னும் ஜகத் குருவின்

வாணிகளென்னும் சமுத்திரத்தை அடைவதினால், தேவநதி கங்கை காமதேவனை வென்ற ருத்ரதேவனின் (சிவனின்) சிரத்தைத் தொட்டுக் கொண்டிருப்பதைப்போல், அதாவது அபரோக்ஷக் ஞானிகளால், பூர்வ-உத்தரங்களில் எழுகின்ற அலைகளில் அன்னபக்ஷிகளின் சஞ்சார முள்ளதாக இருப் பதைப்போல், ஸ்ரீ குரு ராஜரின் வாணி என்னும் கங்கா ப்ரவாஹம் பூர்வமற்றும் உத்தரமிமாம்ஸாதி சாஸ்திரங் களில் சம்பூர்ண ஞானமுள்ள, யதிச்ரேஷ்டரான, வேதாந்த நிர்ணயநிபுணரும்; (ஹம்ஸமென்றால் யோகிகள்) யோகி களால் சேவிக்கப்படும் காரணத்தினாலும் ஸுரநதி கங்கை, தேவாதிகளினால் சேவிக்கப்படுகின்ற ஸ்ரீ விஷ்ணுபர மாத்மாவின் பாத கமலங்களே கதியென்று சரணடைந்திருப் பதினாலும் தேவநதி கங்கையும், மிகப்பெரியதும் பல முள்ளதுமான யானையிலிருந்து சிறிய ப்ராணிகள் வரை எல்லாவற்றையும் கபளீகரம் செய்யும் சக்தியுள்ள முதலைகள் முதலான பயங்கர ப்ராணிகளால் நிறைந் திருப்பதைப்போல், ஸ்ரீ குருராஜரின் வாணி (க்ரந்தங்கள்) எனும் கங்காப்ரவாஹம் துர்வாதிகளின் வாக்தாரைகளை (துர்வாதங்களை) எதிர்க்கும் (மறுக்கும்) ஜீவ-ஈச்வர பேதம், ஸ்ரீ பரமாத்மனின் குணபூர்ணத்வம், ஜகத்ஸத்யத்வம், தார தம்யம், முதலான ஸத்தத்வங்களுடன் கூடியிருப்பவராகை யாலும், அந்த கங்கையில் ஸ்நானம் செய்பவனைப்போலி ருக்கும் அடியேனான தாஸனை, ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமி களின் வாணி (க்ரந்தங்கள்) ரூபமான கங்கை என்னைப்பரி சுத்தனாகவும் புனிதனாகவும் ஆக்கட்டும் என்று ஸ்ரீ மதப்பணாசார்யர் ப்ரார்த்திக்கிறார். அதாவது ஸ்ரீ ராக வேந்திர ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட க்ரந்தங்கள் மகிமை பொருந்தியவை; மற்றும் அவரது அமரக்ரந்தங்களை ச்ரவண, மனன, ஜிக்ஞாஸா செய்யும் புண்ணிய காரியத்தைச் செய்கின்ற என்னைப் போல பக்தர்களையும் புனித ராக்கட்டும் என்று கொள்ளலாம்.

ஸ்ரீ குரு ராஜரின் மஹா மஹிமையைத் துதிப்பதன் மூலம், "ஸ்ரீ ராகவேந்திர" என்னும் அடுத்த ச்லோகத் தினால் ஸ்ரீ ராகவேந்திரரை ப்ரார்த்திக்கிறார்.

ஸ்ரீ ராகவேந்த்ரஸ்ஸகலப்ரதாதா—
ஸ்வபாத கஞ்ஜ த்வய பக்திமத்ப்ய : ॥
அகாத்ரி ஸம்பேதன த்ருஷ்டி வஜ்ரோ
க்ஷமா ஸுரேந்த்ரோஅவதுமாம் ஸதாயம் ॥ 3 ॥

தமது இரு பாத கமலங்களில் பக்தியுள்ளவர்களுக்கு அதாவது தமது பக்தர்களுக்கு ஸகல அபிஷ்டங்களையும் கொடுத்தருளுகின்ற, பாவம் என்னும் மலைகளை அழிக்க இந்திரனின் வஜ்ராயுதத்திற்குச்சமமான கடாக்ஷத்துடன் கூடிய பூஸுரோத்தமரான குரு ராஜர் என்னைக் காப் பாற்றட்டும் என்பது தாத்பர்யம்.

ஸ்ரீ ராகவேந்த்ரோ ஹரிபாதகஞ்ஜ
நிஷேவணால்லப்த ஸமஸ்த ஸம்பத் ॥
தேவஸ்வபாவோ திவிஜத்ருமோயம்
இஷ்டப்ரதோமே ஸததம் ஸபூயாத் ॥ 4 ॥

ஸ்ரீ ராகவேந்திரகுரு தமது முந்திய எல்லா அவதாரங் களிலும் ஸ்ரீ ஹரியின் பாதாரவிந்தங்களின் சேவையினால் ஸகல சம்பத்துகள் மற்றும் ஸித்திகளைப் பெற்றிருக்கிறார். அதாவது தர்மம்-அர்த்த-காமம்-மோக்ஷ ரூபமான நான்கு வித புருஷார்த்தங்களைத் தமது பக்தர்களுக்கு அருள வேண்டிய அளவற்ற ஸாத்விக சம்பத்தைப் பெற்றி ருக்கிறார். ப்ரஹ்லாதாவதார காலத்தில் தைத்ய யோனியில் பிறந்த போதிலும் தேவ ஸ்வபாவமான ஸ்ரீ ஹரி பக்தி முதலான சத்குணங்களினால் பூர்ணமாயிருக்கிறார், பக்த ஜனங்களுக்கு கல்பதருவாயிருக்கின்றார். இப்படிப்பட்ட ஸ்ரீ குருராஜர் நமக்கு எப்பொழுதும் விரும்பிய இஷ்டங்களை யெல்லாம் அளிப்பவராய் விளங்கட்டும் என்பது கருத்து. ஸ்ரீ ஹரியின் ந்ருஸிம்ஹாவதார காலத்தில் ஸ்ரீப்ரஹ்லா தரைப்பற்றி, "பவந்தி பூருஷா லோகே மத்பக்தாஸ்த்வா மனுப்ரதா :" அதாவது "என்னை அனுஸரித்துக்கொண்டு உன்னை சேவிப்பவர்களே லோகத்தில் எனது பக்தராகிறார் கள்" என்று ஆஞையிட்டிருப்பதாக பாகவதத்தில் சொல்லப்பட்டிருப்பதனால் அப்பேர்ப்பட்ட பிரஹ்லாதரின் அவதாரமான ஸ்ரீ குருராஜரை ஸதா பக்தியுடன் சேவிப்பவர்

ஸ்ரீ ஹரி பக்தராய் அவனது அனுக்கிரஹத்திற்குப் பாத்தி ராய் தத்தம் மனோபீஷ்டங்களை அடைவார்களென்று 'ரஹிதா ஸம்ரோகஸம்ர :' என்றும் பாகவத வாக்யத்தின் படி குருபக்தியில்லாமல் ஹரி பக்தியும் அதன் மூலம் இஷ்டார்த்த ஸித்தியும் கிடைக்காது என்பது உறுதியாகை யால் ஸ்ரீ ஹரியின் கிருபையினால் மனோபீஷ்டம் நிறை வேற வேண்டுமானால் ஸ்ரீ குருகளின் அனுக்ரஹமே மூல காரணமென்று இந்த ச்லோகத்தினால் தெரிவிக்கிறார். இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்வதினால் இஷ் டார்த்தங்கள் நிறைவேறும்.

'பவ்ய ஸ்வரூபோ' என்று ஆரம்பித்து மூன்றுச்லோகங் களினால் ஸ்ரீ குருராஜரின் குணங்களைத் தெரியப்படுத்து கிறார்.

பவ்யஸ்வரூபோ பவதுக்க தூல
ஸங்காக்னிசர்ய : ஸுகதைர்யசாலீ ॥
ஸமஸ்த துஷ்டக்ரஹ நிக்ரஹேசோ—
துரத்யயோபப்லவ ஸிந்து ஸேது : ॥ 5 ॥

நிரஸ்ததோஷோ நிரவத்யவேஷ :
ப்ரத்யர்த்தி மூகத்வ நிதான பாஷ : ॥
வித்வத் பரிக்ஞேய மஹா விசேஷோ,
வாக்வைகரீ நிர்ஜித பவ்யசேஷ : ॥ 6 ॥

ஸந்தான ஸம்பத் பரிசுத்த பக்தி :
விக்ஞான வாக்தேஹ ஸுபாட வாதீன் ॥
தத்வா சரீரோத்த ஸமஸ்த தோஷான்
ஹத்வா ஸனோவ்யாத் குருராகவேந்த்ர : ॥ 7 ॥

பொருள் :—

பரம மங்கள ரூபமுள்ளவரும் ஸம்ஸாரத்தில் (உலக வாழ்க்கையில்) உண்டாகிற துக்கங்களென்னும் பஞ்சுக் குவியலுக்கு நெருப்பைப் போன்றவரும், அந்த துக்கங் களைப் பரிகாரம் செய்பவரும், சுகம், தைரியம் இவைகள்

நிறைந்தவரும், பூதப்ரேத, பிசாசுகள் முதலிய துஷ்ட க்ரஹங்களைத் தவிடு பொடியாக்குவதில் வல்லவரும், உபத்ரவங்களென்னும் சமுத்ரத்தைத் தாண்டுவதற்கு சேதுவை (அணை)ப்போலவும், சிறிதும் தோஷமற்றவரும், பரம பவித்ரமூர்த்திகளும், ஸகலவாதிகளையும் நிருத்தரர் களாக்க வல்லவரும் (வாதிகளை வெல்ல வல்லவர்) ஞானி களால் நன் அறிந்துகொள்ளக்கூடிய மகிமையுள்ளவரும், தமது (வாக்வைகரீ) பேச்சின் நடையினால் சேஷனென்னும் வாதியை ஜயித்திருப்பதினாலேயே தமது வாக்கு வன்மை யினால் ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனை மீறும்படியான அளவிற்கு வல்லமைபடைத்த ஸ்ரீ குருராஜர் பக்த ஜனங் களுக்கு நல்ல புத்திரர்கள், ஐச்வர்யம், நிர்மலமான ஹரி பக்தி, தத்வக்ஞானம் (ஸத்தத்வக்ஞானம்) வாக்குவல்லமை தேகாரோக்யம், பலம் முதலியவைகளை அனுக்ரஹித்து, தேக சம்பந்தமான மற்றும் மனோவியாதிகளைப் பரிகரித்து காப்பாற்றட்டும் என்பது கருத்து.

பாகவதத்தில் "யஸ்மின் மஹாகுண ராஜன் க்ருஹ்யந்தே கவிபி: ஸாஹ: சில ஸம்பன்ன:" என்று ப்ரஹலா தரைப் பாராட்டியுள்ளனர். இங்கு அதே அர்த்தத்தில்; 'வித்வத் பரிக்ஞேய மஹாவிசேஷ:', 'பவ்ய ஸ்வரூப:' என்று ஸ்ரீ ராயரைப் பாராட்டியுள்ளனர். ஸ்ரீ குருராஜர் ப்ரஹ்லாதாவதாரரென்று தெரிவிக்கவே அப்பணாசார்யர் ஸமானார்த்த பதங்களை இங்கு (ஒரே அர்த்தமுள்ள பதங்கள்) உபயோகித்திருக்கிறாரென்று பெரியோர்கள் சொல்கின்றனர்.

இங்கு ஸ்ரீ குருராஜர் தமது பரமகுருகளான ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தரால் இயற்றப்பட்ட க்ரந்த வசனங்களி னால் கொல்லாபுரத்தில் சேஷ என்னும் ப்ரபல வாதியை ஜயித்தாரென்று ஸ்ரீ ராயரின் சரித்திரத்தில் சொல்லப்பட் டுள்ளது. அதைக் கவிகள் இங்கு தெரிவித்துள்ளார்.

இந்த மூன்று ஸ்லோகங்களைப் பாராயணம் செய்வத னால் பூதப்ரேதங்களின் உபத்ரவம் அழிந்து சுகம்

கிடைக்கும். 'நல்ல கம்பீரமான குரல், பேச்சு மற்றும் சந்ததி, ஐச்வர்யங்கள் முதலிய இஷ்டார்த்தங்கள் ஸித்திக்கும்.

ஸ்ரீ ராஜரின் பாதோதக மஹிமையை (யத்பாதோதக) என்னும் ச்லோகத்தினால் இப்பொழுது வர்ணிக்கிறார்.

யத்பாதோதக ஸஞ்சயஸ்ஸுரநதீ முக்யாபகாஸாதிதா ।
ஸங்க்யானுத்தம புண்யஸங்கவிலஸத் ப்ரக்யாத
புண்யாவஹ: ॥

துஸ்தாபத்ரய நாசனோ புவி மஹாவந்த்யா ஸுபுத்ரப்ரதோ
வ்யங்கஸ்வங்க ஸம்ருத்திதோ க்ரஹமஹாபாபாப
ஹஸ்தம்ச்ரயே ॥ 8 ॥

எந்த ஸ்ரீ குருராஜரின் புனிதமான பாதோதகம், கங்கை முதலிய ஸகல பவித்ரமான நதிகளில் ஸ்நானம் செய்வதனாலுண்டாகும் புண்ணியங்களைக் காட்டிலும் அதிகமான புண்ணியங்களை அருளுகின்றதோ, அங்கஹீனர் களை பூர்ண அங்கமுள்ளவர்களாக்குகின்றதோ, சாகினி முதலான துஷ்ட தேவதைகளை விரட்டியடிக்கின்றதோ, மற்றும் ப்ரம்மஹத்யாதி மஹாதோஷங்களைப்பரிகாரம் செய்கிறதோ அத்தகைய குருராஜரை சேவிக்கிறேன் என்பது தாத்பர்யம்.

இந்தச்லோகத்தைச் சொல்வதினால் கங்கை முதலிய புண்யநதிகளில் ஸ்நானம் செய்த பலன், தாபத்ரயங்களின் (ஆத்யாத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிக) நிவாரணமும், தோல் சம்ஹந்தமான வியாதி, பிசாக ஆதி பாதைகளிலிருந்து பரிஹாரமும் மற்றும் ப்ரம்மஹத்தி முதலிய மஹாபாதகங் களும் நிவர்த்தியும் ஏற்படுகிறது.

இப்பொழுது குருபக்தர்களின் லக்ஷணம் மற்றும் அவருடைய தரிசனத்தினாலுண்டாகும் பலனை விவரிக் கிறார்.

*யத்பாதகஞ்ஜரஜஸா பரி பூஷிதாங்கா*
*யத்பாதபத்ம மதுபாயித மானஸாயே |*
*யத்பாதப த்ம பரிகீர்த்தன ஜீர்ணவாச:*
*தத்தர்சனம் துரிதகானன தாவபூதம் ||*

ஸ்ரீ குருராஜரின் பாததூளியினால் அலங்கரிக்கப்பட்ட சரீரம் உள்ளவர் யாரோ, தேன்வண்டுகள் போல தாமரை மலரின் மகரந்தங்களை ருசித்துக் கொண்டிருப்பவரைப் போல, ஸ்ரீ குருராஜரின் பாதாரவிந்தங்களில் நிரந்தரமாக பக்தி செலுத்துகின்றார்களோ, யாருடைய வாக்குகள் மந்த்ராலயஸ்வாமிகளின் பாதத் தாமரையின் மகிமையைப் பாடி புனிதமாகியுள்ளனவோ, அப்படிப்பட்ட லக்ஷண முள்ளவர்கள்தான் ஸ்ரீ குருராஜரின் பக்தர்களென்று அறிய வேண்டும். அப்பேர்ப்பட்ட குருராஜரின் பக்தரின் தரிசனம் பாவமென்ற காட்டிற்குக் காட்டுத்தீயைப் போலாகும். அதாவது அவர்களின் தரிசனத்தினால் பாவ சமூகங்கள் எரிந்து சாம்பலாகிவிடும். இந்த ச்லோகத்தைச் சொல்வதால் பாபவிமோசனமாகிறது.

இப்பொழுது ஸ்ரீ குருராஜரின் பாண்டித்யம், குணங்கள் முதலானவைகளை வர்ணிக்கிறார்.

*ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரோஸௌ ஸ்ரீமத்வமதவர்த்தன: |*
*விஜயீந்திரகராப்ஜோத்த ஸுதீந்த்ரவரபுத்ரக: ||*

*ஸ்ரீ ராகவேந்த்ரோ யதிராட் குருர்மேஸ்யாத் பயாபஹ: |*
*க்ஞானபக்திஸுபுத்ராயு: யச: ஸ்ரீ புண்யவர்த்தன: ||*

பிறர் உதவியில்லாமலே ஸகலசாஸ்திரங்களில் மஹா பண்டிதரான ஸ்ரீ மத்வாசார்யரினால் ஸ்தாபிக்கப்பட்ட த்வைதமதத்தை தமது நிகரற்ற வ்யாக்யானங்களினால், பாடப்ரவசனங்களினால் அபிவிருத்தி செய்துள்ள ஸ்ரீ விஜயீந்திர தீர்த்தரின் கரகமலங்களினால் ஆச்ரமம் பெற்ற ஸுதீந்திர தீர்த்தரின் வரகுமாரரான க்ஞானபக்தி, ஸத்ஸந்தான, தீர்க்காயுஷ்ய, கீர்த்தி, ஸம்பத்து மற்றும் புண்யங்களைப் பக்தர்களுக்கு அபிவிருத்தி செய்யும் யதிபுங்கவரான ஸ்ரீராகவேந்திரஸ்வாமிகள் எனது ஸகல

பயங்களையும் போக்கட்டும் என்பது தாத்பர்யம். இந்த ச்லோக பாராயணத்தினால் பாண்டித்யம், பாபநிவாரணம், க்ஞானம், பக்தி, ஸந்ததி, ஆயுள்விருத்தி, கீர்த்தி, ஐச்வர்யம் மற்றும் புண்யமும் கிடைக்கும்.

இப்பொழுது ஸ்ரீ குருராஜரின் அஸாதாரண மகாத்மியத்தை வர்ணிக்கிறார்.

ப்ரதிவாதி ஜயஸ்வாந்த பேத சின்ஹாதரோ குரு: |
ஸர்வ வித்யா ப்ரவீணோ- அன்யோ ராகவேந்திரான்ன
வித்யதே || 12 ||

ப்ரதிவாதிகளுடன் வாக்யார்த்தம் செய்யும் பொழுது தமது வாக்வல்லமையினால் அவருடன் மனதில் பதியும் படியாக விமர்சனம் செய்து அவர்களை நிருத்தரராக (பேச முடியாமல் செய்யும் நமது குருராஜரை ஜகத்தில் ஸகல வித்யாவிசாரதர் இனியாருமில்லை என்பது தாத்பர்யம். இந்தச்லோகப்பாராயணத்தினால் வாதிநிக்ரஹ சக்தி (வாதிகளை வெல்லும் சக்தி) மற்றும் பாண்டித்யம் ஸித்தியாகிறது.

அபரோக்ஷீ க்ருத ஸ்ரீச: ஸமுபேக்ஷித பாவஜ: |
அபேக்ஷிதப்ரதா தான்யோ ராகவேந்த்ரான்ன
வித்யதே || 13 ||

ஸ்ரீ பரமாத்மனை சாக்ஷாத்கரித்துக் கொண்டிருப்பவரும் (நேரில் காணுபவரும்) காம, க்ரோதம் முதலியவைகளை வென்றவரும், பக்தர்களுக்கு வேண்டிய வரங்களைக் கருணையுடன் அளிப்பவருமானவர் நம் ஸ்ரீகுருராஜர் ஒருவரே தவிர, வேறுயாரும் கிடையாது என்பது தாத்பர்யம்.

பாகவதத்தில் ப்ரஹலாதராஜர் ஸ்ரீ நரஹரியை நேரில் வரவழைத்தவரென்றும்; ஜிதேந்திரியரென்றும் பாராட்டப் பட்டுள்ளார். இங்கு ஸ்ரீ குருராஜரையும் அதே அர்த்தத்தில் பாராட்டி ப்ரஹலாதரே ஸ்ரீ குருராஜரென்று கவி தெரிவித்திருக்கிறார்கள்.

*தயா தாக்ஷிண்ய வைராக்ய வாக்பாடவ முகாங்கித: ।*
*சாபானுக்ரஹ சக்தோன்யோ ராகவேந்த்ரான்ன*
*வித்யதே ॥ 14 ॥*

(நிர்வ்யாஜமாக) எந்தக் காரணமுமில்லாமல் பக்தரின் கஷ்டங்களை நிவாரணம் செய்யும் தயாதாக்ஷிண்யம், மனம் வாக்கு காயம் இவைகளில் ஒரே நிலை (த்ரிகரணசுத்தி) வைராக்யம் வாக்படுத்வம் முதலான சின்னங்களுள்ள ஸத்குண பூர்ணரான சாபம் அனுக்ரஹம் இரண்டையும் கொடுக்கும் வன்மையுள்ளவர் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளைத் தவிர வேறு யாரும் இல்லையென்று தாத்பர்யம். இப்படிப்பட்ட மஹாகுணங்கள் நிறைந்தவரும் சாபானுக்ரஹ சக்தி படைத்தவருமான ஸ்ரீராயரின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரரானவர் வேறெங்கும் உள்ளனரா என்று உதாரணம் கொடுக்க முடியாது என்பது அபிப்ராயம். இங்கு இன்னொரு விசேஷ அபிப்ராயம் காணப்படுகிறது. சாபம் மற்றும் அனுக்ரஹம் செய்பவரில் ஸ்ரீ ராயரைப் போல் மஹானில்லையென்று ஒரு அர்த்தம். ஆனால் ஸ்ரீராயரின் சிஷ்யரான ஸ்ரீ யோகிந்திர தீர்த்தர் சரம ச்லோகத்தில், நமோऽத்யந்த தயாளவே' என்று ஸ்ரீராயர் மஹாதயாளுகளென்று வர்ணிப்பதினால் குருராஜர் கண்டிப்பாக சாபம் கொடுப்பவரல்ல, அப்படி மாபெரும் குற்றம் செய்து சாபத்திற்கு இலக்காயிருப்பவர்களுக்கும் அனுக்ரஹம் செய்யும் குருகள். ஸ்ரீ குருராஜரை விட்டால் வேறு யாருமில்லையென்று இங்கு விசேஷ அபிப்ராயம் தெரிவிக்கப்பட்டுள்ளது. 'சாபயோக்யேபி அனுக்ரஹ கர்தா ராகவேந்த்ராந் ந வித்யதே' என்னும் வ்யுத் பத்தியினால் இந்த அர்த்தம் வெளிப்படுகிறது.

இந்த ச்லோகத்தைப் பாராயணம் செய்தால் நிக்ரஹிக்கப்பட்டவனும்கூட ஸ்ரீ குருராஜரின் கிருபைக்குப் பாத்திரராவான்.

இப்பொழுது குருராஜரின் சேவையினால் நிவ்ருத்தியாகும் தோஷங்களை விவரிக்கின்றார்.

அக்ஞான விஸ்ம்ருதிப்ராந்தி ஸம்சயாபஸ்ம்ருதி க்ஷயா: |
தந்த்ரா கம்பவச: கௌண்ட்ய முகாயே சேந்த்ரியோத்பவா:
தோஷாஸ்தே நாசமாயாந்தி ராகவேந்த்ர ப்ரஸாதத: ॥ 15 ॥

முட்டாள்தனம், மறதி, ப்ரமை, ஸந்தேகம், புத்தி, மூர்ச்சித்தல்; க்ஷய ரோகம், சோம்பல், நடுக்கம், திக்குவாய் இவை போன்ற மற்றும் இந்திரியங்களின் குறைகளினால் ஏற்படும் தோஷங்கள் ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகளவரின் பரமானு க்ரஹத்தினால் பரிகாரமாகும் என்று அபிப்ராயம் இந்த ச்லோக படனத்தின் பலன் ஸர்வதோஷ நிவாரணம்.

"ஓம் ஸ்ரீ ராகவேந்த்ராய நம:" இத்யஷ்டாக்ஷர மந்த்ரத: |
ஜபிதாத் பாவிதான்னித்யம் இஷ்டார்த்தாஸ்யுர்
நஸம்சய: ॥ 16

பக்தி - ச்ரத்தைகளினால் "ஓம் ஸ்ரீ ராகவேந்த்ராயநம." என்று ஜபம் செய்பவர்களுக்கு, த்யானம் செய்பவர்களுக்கும் இஷ்டார்த்தங்கள் ஸித்திக்கும். ஸரியான குருக்களின் முகத்தினால் புண்ய தினங்களில் ஸ்ரீகுரு அஷ்டாக்ஷர மந்த்ர ஜபத்தின் உபதேசத்தைப் பெற்று அனுதினமும் விதி பூர்வமாக ஜபாதிகளைச் செய்பவர் தமது மனோ பீஷ்டங்கள் யாவையும் அடைவார்கள் என்பது கருத்து.

ஸ்ரீ குருராஜரைப் ப்ரார்த்தனை செய்வதினால் கிடைக்கும் பலன்களை இப்பொழுது விவரித்துள்ளார்.

ஹந்து ந: காயஜான் தோஷாந் ஆத்மீய ஸமுத்பவான் |
ஸர்வானபி புமர்த்தாம்ச்ச ததாது குருராத்மவித் ॥ 17 ॥
இதி காலத்ரயே நித்யம் ப்ரார்த்தனாம் ய: கரோதி ஸ: |
இஹா முத்ராப்த ஸர்வேஷ்டோ மோததே நாத்ர ஸம்சய:
॥ 18 ॥

ஸ்ரீ பரமாத்ம விஷயமான அபரோக்ஷ க்ஞானஸம் பன்னரான ஸ்ரீ குருராஜர் நமது சரீரத்திலிருந்து உண்டான நம் சரீர சம்மந்தங்களினாலுண்டான ஸகல தோஷங்

களையும் பரிஹாரம் செய்து நமக்கு எல்லா புருஷார்த்தங்களையும் (தர்ம, அர்த்த, காம, மோக்ஷம்) அபரோக்ஷ ஞானிகளான ஸ்ரீ ராயர் கொடுத்தருளட்டும் என்று மூன்று வேளைகளிலும் யார் ப்ரார்த்திக்கின்றாரோ அவர் இஹ-பரங்களில் அபீஷ்டங்களைப் பெறுவார்களென்று அபிப்ராயம் ஸர்வதோஷங்களையும் பரிஹாரம் செய்து சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுத்தருளும் சக்தியுடையவர்.

அகம்ய மஹிமாலோகே ராகவேந்த்ரோ மஹாயசா: |
ஸ்ரீ மத்வமத துக்தாப்தி சந்த்ரோவது ஸதாநக: || 19 ||

ஜகத்தினில் யாராலும் பூர்ணமாக இவ்வளவு தானென்று தெரிந்து கொள்ள முடியாத அவ்வளவு மகிமைகளுள்ளவரும், எட்டுத் திக்குகளிலும் கீர்த்திக் கொடியை நாட்டியவரும், ஸ்ரீமத்வாசார்யரினால் ஸ்தாபிக்கப்பட்ட த்வைதமதமென்னும் சமுத்திரத்திற்குத் தமது வ்யாக்யான ப்ரவசனாதிகளினால் பொங்கச் செய்கின்ற சந்திரரும் அதாவது அதன் அபிவிருத்திக்குக் காரணமானவரும், சற்றும் தோஷ மற்றவரும் ஆன ஸ்ரீ ராகவேந்திர குருவர்யர் நம்மைக் காப்பாற்றட்டும் என்று ப்ரார்த்திக்கிறார்.

தற்கால நாகரீகத்தினர் த்வைத தத்வ விஷயத்தில் ஸாத்விக முறையில் செய்யக் கூடிய எல்லாவித தோஷா ரோபணங்களை (பூர்வபக்ஷம்) தாங்களே ஊகித்து அவைகளைத் தாங்கள் வ்யாக்யானம் செய்யும்பொழுது க்ரந்தத்தின் மூலம் கண்டித்து த்வைத ஸித்தாந்த திவ்ய தத்வங்களே அதிஉத்தம தத்வங்களென்று ஸ்ரீராயர் எடுத்துச் சொல்லியிருக்கிறார். மற்றும் நாஸ்திக பக்தி ஞானம் நிறைந்துள்ள இந்தக் கலியுகத்திலும்கூட அனுதினமும் ப்ரத்யக்ஷமாக அனுபவத்திற்குவரும் வியாதி நிவாரணம், சந்ததி மற்றும் ஐச்வர்யம் முதலிய ஐஹிக (இஹலோக) பலன் அருளுபவரும், மற்றும் ஆஸ்திக புத்தியை ஜனங்களில் அபிவிருத்தி செய்பவரும் ஆன ஸ்ரீ ராகவேந்திர குருஸார்வபௌமரின் கல்பலதா நாள்தோறும் வளர்ந்து நாலா திசைகளிலும் பரவியுள்ள தென்பதே க்ஞானிகளான ஸ்ரீ அப்பணாசார்யரின்

உள்ளர்த்தமாகியிருக்கிறது. இந்த ச்லோக பாராயணத்தினால் இஹ-பர பலன்கள் கிடைக்கும்.

இப்பொழுது ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன ப்ரதக்ஷிண நமஸ்காரம் முதலிய சேவையினால் கிடைக்கும் பலன்களை விவரிக்கிறார்.

ஸர்வயாத்ரா பலாவாப்த்யை யதாசக்தி ப்ரதக்ஷிணம் |
கரோமி தவஸித்தஸ்ய வ்ருந்தாவனகதம் ஜலம் |
சிரஸா தாரயாம்யத்ய ஸர்வதீர்த்த பலாப்தயே || 20 ||
ஸர்வாபீஷ்டார்த்த ஸித்யர்த்தம் நமஸ்காரம்
கரோம்யஹம் |
தவஸங்கீர்த்தனம் வேதசாஸ்த்ரார்த்த க்ஞான
ஸித்தயே || 21 ||

ஸகல மஹாயாத்திரைகளின் புண்யம் சம்பாதிப்பதற்காக முடிந்தவரை ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன ப்ரதக்ஷிணம் செய்கிறேன். ஸகலமஹா நதிகளின் ஸ்நான பலனும் ஸித்தரான ஸ்ரீகுரு ராஜரே! தங்களது பாதோதக ஸ்நானத்தினால் ஸகல பலன்களும் கிடைக்கட்டுமென்று தங்கள் ப்ருந்தாவனத்திற்கு அபிஷேகம் செய்யப்பட்ட ஜலத்தை அதாவது தங்கள் பாதோதகத்தை சிரஸில் தாரணம் செய்து கொள்ளுகிறேன். ஸர்வா பீஷ்டங்களும் ஸித்திப்பதற்காகத் தங்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன் ஸ்ரீ குருராஜரின் பிரதக்ஷிணத்தால் ஸகலக்ஷேத்திரங்களின் யாத்திரை செய்த பலனும், ஸ்ரீராயரின் பாதோதக ஸ்நானத்தினால் எல்லா மஹாநதிகளின் ஸ்நானபலனும் ஸ்ரீ குருராஜருக்கு நமஸ்கரிப்பதினால் ஸகல விருப்பங்களும் ஸித்தியாவதுடன் ஸ்ரீ ராயரின் நாமஸ்மரணையினால் ஸர்வ சாஸ்த்ரார்த்த க்ஞானமும் ப்ராப்தமாகுமென்று பக்தி மேலீட்டினால் கவி ப்ரார்த்திக்கிறார்.

இவ்வாறு ஸகல விருப்பங்களையும் நிறைவேற்றுபவரான ஸ்ரீ குருராஜரை பரம பக்தியினால் ப்ரார்த்தனை செய்து காப்பாற்ற வேண்டுமென்று மற்றும் வேண்டுகிறார்.

ஸம்ஸாரேக்ஷயஸாகரே ப்ரக்ருதிதோகாதே ஸதாதுஸ்தரே
ஸர்வாவத்ய ஜலக்ரஹை: அநுபமை: காமாதி பங்காகுலே |
நானாவிப்ரமதுர்ப்ரமே அமிதபயஸ்தோமாதி பேனோத்கடே
துகோத் க்ருஷ்ட விஷே ஸமுத்தர குரோ
மாமக்னரூபம்ஸதா || 22 ||

யூகத்தினால் அறிந்து கொள்ள முடியாத ஆழமுள்ள மற்றும் தாண்ட முடியாத, கொடூரமான தண்ணீரில் வாழும் ப்ராணிகளால் நிறைந்த (தோஷங்களால் நிறைந்த) காம க்ரோதம் முதலிய அலைகளுடன் கூடிய, துக்கரூப மான விஷய சுகங்களில், சுகம் என்ற ப்ரமை முதலான சுழி களால் மூடப்பட்டுள்ள மிகபயம் முதலியவைகளினால் (நுரை களினால்) வ்யாபித்துள்ள, துக்கங்களென்னும் பொறுக்க முடியாத விஷத்தினால் நிரம்பியுள்ள மற்றும் தாண்ட முடியாத இந்த ஸம்ஸாரம் (உலக வாழ்க்கை) மகா சமுத்திரத்தில் மூழ்கிப் போனதைப் போல உள்ள என்னை ஸ்ரீகுரு ராஜரே! காப்பாற்றி, எப்பொழுதும் ரக்ஷிக்க வேண்டும் என்பது அபிப்ராயம். இந்த ச்லோக பாராயணத் தினால் ஸ்ரீராயர் துக்கமயான ஸம்ஸார ஸாகரத்தை எளிதில் தாண்டச் செய்து காப்பாற்றுகிறார்.

ஸ்ரீ அப்பணாசார்யர் இதுவரை அந்தந்த பலன்களை தாத்பர்ய அர்த்தங்களுடன் விவரித்து இப்பொழுது விசேஷ மாக (தனிச்சிறப்பு) ஸ்ரீகுரு ஸ்தோத்திர பாராயணம் முதலிய ஸாமூஹிக பலன்களை எடுத்துச் சொல்லுகிறார்.

ராகவேந்த்ர குருஸ்தோத்ரம் ய: படேத் பக்தி பூர்வகம் |
தஸ்ய குஷ்டாதி ரோகாணாம் நிவ்ருத்திஸ்த்வரயா
பவேத் || 23 ||

ஸ்ரீகுரு ராஜரின் ஸ்தோத்திரத்தை யார் பக்தியுடன் பாராயணம் செய்கிறாரோ அவருக்குத் துன்பத்தைக் கொடுக்கும் குஷ்டரோகங்கள் அந்த நொடியிலே நிவர்த்தி யாகி அவரது விருப்பம் நிறைவேறும்.

அந்தோபி திவ்யத்ருஷ்டி: ஸ்யாதேடமூகோபி வாக்யபதி :—
பூர்ணாயு: பூர்ண ஸம்பத்தி: ஸ்தோத்ரஸ்யாஸ்ய
ஜபாத்பவேத் ॥ 24 ॥

பக்தி சிரத்தையுடன் ஸ்ரீகுரு ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்பவன் குருட னாயிருந்தாலும், அஞ்ஞானி யாயிருந்தாலும், திவ்யத்ருஷ்டி (கண் பார்வை) பெற்று, நல்ல ஞானமும் பெறுவான். பேச முடியாத ஊமையும், காது கேளாத செவிடனும், காதுகேட்க முடிந்து, ப்ருஹஸ் பதியைப்போல் வாக்வன்மை உள்ளவனாவான். இந்த ஸ்தோத்திரத்தை முழுதும் ஜபிப்பவனுக்குப் பூர்ணஆயுளும் அமோக சம்பத்தும் உண்டாகும்.

ய: பிபேஜ் ஜலமேதேன ஸ்தோத்ரேணைவாபி மந்த்ரிதம் |
தஸ்ய குக்ஷிகதா தோஷா: ஸர்வே நச்யந்தி
தத்க்ஷணாத் ॥ 25 ॥

இந்த ஸ்தோத்திரத்தினால் அபிமந்திரித்த ஜலத்தைக் குடிப்பதினால் வயிறு சம்மந்தமான எல்லா வியாதிகளும் பரிகாரமாகும்.

யத்வ்ருந்தாவன மாஸாத்யபங்கு: கஞ்ஜோ அபிவாஜன:
ஸ்தோத்ரேணானேன ய:குர்யாத் ப்ரதக்ஷிண நமஸ்க்ருதி ॥
ஸஜங்காலோ பவேதேவ குருராஜ ப்ரஸாதத : ॥ 26 ॥

ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன ப்ரதக்ஷிண நமஸ்காரங் களினால் கால் நொண்டியாயிருந்தவனாயினும் சரி, கால் களிருந்து நடக்க முடியாதவனாயிருந்தாலும் சரி, இந்த ஸ்தோத்திரத்தைச் சொல்லிக்கொண்டே ப்ரதக்ஷிணம் செய்தால் குருராஜரின் வரப்ரஸாதத்தினால் நடக்கச்சக்தி பெற்று நன்றாக நடப்பான்.

ஸோம ஸூர்யோ பராகேச புஷ்யார்க்காதிஸமாகமே
யோனுத்தமமிதம் ஸ்தோத்திர மஷ்டோத்ர சதம்
ஜபேத் ॥
பூதப்ரேத பிசாசாதி பீடாதஸ்ய நஜாயதே ॥ 27 ॥

ஸூர்ய—சந்த்ர—க்ரஹண காலங்களிலும் மற்றும் புஷ்ய நக்ஷத்ரத்துடன் கூடிய ஞாயிற்றுக்கிழமையன்று அதிஉத்தம மான இந்த குரு ஸ்தோத்திரத்தை யார் 108 தடவை முழுதும் ஜபிப்பார்களோ அவருக்கு எந்தக் காலத்திலும் பூத-ப்ரேத-பிசாசகளினால் உபத்திரவமேற்படாது.

ஏதஸ்த்தோத்ரம் ஸமுச்சார்ய குரோர் ப்ருந்தா
வனாந்திகே |
தீபஸம்யோ ஜனாத் ஞானம் புத்ரலாபோ பவேத்
த்ருவம் ‖ 28 ‖

ஸ்ரீ குருராஜரின் ப்ருந்தாவன சந்நிதியில் இந்த குருஸ்தோத்திரத்தைச் சொல்லிக் கொண்டே யார் விளக் கேற்றி தீபாராதனை செய்வார்களோ அப்படிப்பட்டவர் களுக்கு பரிசுத்தமான ஞான ஸித்தியும் சத் சந்தான மான புத்திரனும் அவசியம் ப்ராப்தமாகும்.

பரவாதி ஜயோதிவ்யக்ஞான பக்தியாதிவர்த்தனம் |
ஸர்வா பீஷ்ட ப்ரவருத்திஸ்யான்னாத்ர கார்யா
விசாரணா ‖ 29 ‖

இந்த ஸ்தோத்திர பாராயணத்தினால் ப்ரதிவாதிகளை வெல்லும் வல்லமை, தத்வக்ஞான அபிவ்ருத்தி, ஸகல மனோபீஷ்டங்களும் நிறைவேறும். இந்த விஷயத்தில் சந்தேகமில்லை.

ராஜசோர மஹாவ்யாக்ர ஸர்ப்பநக்ரர்தி பீடனம் |
ந ஜாயதே அஸ்ய ஸ்தோத்ரஸ்ய ப்ரபாவான்னாத்ர
ஸம்சய: ‖ 30 ‖

இந்த ஸ்தோத்ர பாராயண ப்ரபாவத்தினால் துஷ்டர் களும், குறும்பு நீசத்தனமுள்ள பாளைய காரரினால், திருடர்களால், பெரும்புலி, பாம்பு, மற்றும் முதலைகள் முதலிய இம்சை செய்யும் ப்ராணிகளினால் அபாய மேற் படுவதே இல்லை இந்த விஷயத்தில் சந்தேகப்படவேண்டிய தில்லையென்று ஸ்ரீ அப்பணாசார்யர் ஆணித்தரமாகச் சொல்லுகிறார்.

இப்பொழுது ஸ்ரீ குருராஜரின் பக்தருக்கு மோக்ஷம் வரை ஸகல இஷ்டங்களையும் பெறமுடியும் என்னும் விஷயத்தை விவரித்து அதற்கு ஸ்ரீ குருராஜரே அசரீரி வாக்கு ரூபமான சம்மதத்தைச் சொல்லுகிறார்.

யோ பக்த்யா குருராகவேந்த்ர சரண த்வந்த்வம் ஸ்மரன்ய
படேத்
ஸ்தோத்ரம் திவ்யமிதம் ஸதாநஹி பவேத்தஸ்யா சுகம்
கிஞ்சன |
கிந்த்விஷ்டார்த்த ஸம்ருத்தி ரேவ கமலாநாத
ப்ரஸாதோதயாத்
கீர்த்திர் திக்விதிதா விபூதிரதுலா "ஸாக்ஷீ ஹயாஸ்யோ
அத்ரஹி" | 31 |

யார் பரம பக்தியினால் குருராகவேந்த்ரரின் இரு பாதத்தாமரைகளை நினைவில் வைத்துக் கொண்டு பரம பவித்ரமான இந்த ஸ்ரீ குருஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்வார்களோ அவர்களுக்கு எந்தக் காலத்திலும் துக்கம் பக்கத்தில் நெருங்குவதில்லை. அது மாத்திரமா? பக்தரின் பக்தி நிரம்பிய பாராயணத்தினால் ஸ்ரீ குரு ராஜர் ஸந்தோஷமடையும் காரணத்தினால் ப்ரீதி யடையும் லக்ஷ்மீபதியான பரமாத்மாவின் பரமானுக்ரஹ முண்டாக்கி அதன் மூலம் அவர்கள் நாலாபக்கங்களிலும் நிர்மலமான கீர்த்தியும், பெருமளவில் ஐச்வர்யமும், பெற்று அவர்களுடைய மனோபீஷ்டங்களெல்லாம், கைகூடுகின்றன. இந்த விஷயத்தில் ப்ரத்யக்ஷமான ஸ்ரீ ஹயவதனரூபியான பரமாத்மனே ஸாக்ஷியாயிருக்கிறார் என்று தாத்பர்யம்.

இந்த பரமமங்களகரமான குருஸ்தோத்திரத்திற்கு ஸ்ரீ குருராஜர் "ஸாக்ஷீ ஹயாஸ்யோ அத்ரஹி" என்ற சம்மதத்தை முத்திரையாக (அங்கிதம்) ப்ருந்தாவனத்திற் குள்ளிருந்து திவ்ய வாக்கின் மூலம் அனுக்ரஹித்துள்ளார். இந்த விஷயத்தை இந்த க்ரந்தத்தில் முந்தின பக்கங்களில் விவரித்திருப்பதினால் மறுபடியும் இங்கு விவரிக்கவில்லை.

ஸ்ரீ குரு ஸார்வபௌமருக்கு அதிப்பிரியமான இந்த ஸ்தோத்ரத்தை ஸ்ரீ குருராஜர் சரீரத்துடன் ப்ருந்தாவன ப்ரவேசம் செய்த பிறகு அன்றிலிருந்து இன்றுவரை லக்ஷக் கணக்கான ஜனங்கள் பாராயணம் செய்து தத்தம் மனோ பீஷ்டங்களை அடைந்து சுகம் பெற்றுள்ளனர். இன்று இந்த விஷயம் ஒவ்வொரு பக்தனின் அனுபவத்திற்கும் வந்திருக்கும். இப்பேர்பட்ட மஹாஸ்தோத்ரத்தை குரு அனுக்ரஹத்தினால் ஸகல மனோபீஷ்டங்களைப் பெற்று கிருதார்த்தராக விரும்புபவர்கள் அவசியம் பக்தி சிரத்தை யுடன் பாராயணம் செய்து கீர்த்தியடைய வேண்டும்.

இதி ஸ்ரீ ராகவேந்த்ரார்ய குருராஜப்ரஸாதத : |
க்ருதம் ஸ்தோத்ரமிதம் புண்யம் ஸ்ரீமத்
பிர்ஹ்யப்பணாபிதை : ||

பூஜ்யரான ஸ்ரீ ராகவேந்திர குருச்ரேஷ்டரின் பரமானு க்ரஹத்தினால் மேலே விவரித்த முறையில் பவித்ரமான ஸ்தோத்ரம் பூஜ்யரான ஸ்ரீ அப்பணாசார்யரினால் இயற்றப் பட்டது.

பூஜ்யாய ராகவேந்த்ராய ஸத்ய தர்மரதாயச |
பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே || 1 ||

துர்வாதித்வாந்தரவயே வைஷ்ணவேந்தீவ ரேந்தவே |
ஸ்ரீ ராகவேந்த்ர குரவே நமோத்யந்த தயாளவே || 2 ||

ஸ்ரீ ஸுதீந்த்ராப்தி ஸம்பூதான் ராகவேந்த்ரகலா நிதின் |
ஸேவேஸஜ்ஞான ஸௌக்யார்த்தம் ஸந்தாபத்ரய
சாந்தயே || 3 ||

அகம் த்ராவயதேயஸ் மாத்வேங்காரோ வாஞ்சிதப்ரத: |
ராகவேந்த்ரயதிஸ்தஸ்மால்லோகே க்யாதோ பவிஷ்யதி || 4 ||

வ்யாஸேன வ்யுப்தபீஜ: ச்ருதிபுவி பகவத்
பாதலப்தாங்குரஸ்ரீ: |
ப்ரத்னைரீஷத் ப்ரபின்னோஜனி ஜயமுனினா
ஸம்யுகுத்பின்னசாக: ||

மௌனீச வ்யாஸராஜாதுதித கிஸலய:புஷ்பிதோயம் ஜயீந்த்ராத்
அத்ய ஸ்ரீராகவேந்த்ராத்விலஸதி பலிதோ மத்வஸித்தாந்த சாகீ ॥ 5 ॥

மாயாவாத மஹாடவீ பரிஸரன்மத்தேப பஞ்சானனான்.
சப்தாம்போநிதி மஜ்ஜன்மைக மகரன்யாயாத்ரி வஜ்ராங்குசான்
ஸத்ஸித்தாந்த மஹோர்க்தியுக்தி ரசனாசைலீ ஜகச்சாஸகான்
பூயோஹம் ப்ரணாமாமி திக்விஜயின: ஸ்ரீராகவேந்திரான் குருன் ॥ 6 ॥

மூகோஅபி யத்ப்ரஸாதேன முகுந்த சயனாயதே |
ராஜராஜாயதே ரிக்தோ ராகவேந்த்ரம் தமாச்ரயே ॥ 7 ॥

த்யான ச்லோகம்

தப்தகாஞ்சன ஸங்காசம் அக்ஷமாலாம் கமண்டலும்
தோர்ப்யாம் ததானம் காஷாய வஸனம் ராமமானஸம் ।
யோகீந்த்ரதீர்த்த வந்த்யாங்க்ரிம் துலஸீதாம பூஷிதம் | (வக்ஷஸம்)
க்ஞான பக்தி தப: பூர்ணம் த்யாயேதிஷ்டார்த்த ஸித்தயே ॥

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து

நன்றி ! சமர்ப்பணம் !!

ஸ்ரீராயரின் பரம பக்தரும், அநேக தர்மகாரியங்களுக்குத் தாராளமாக நிதி உதவியவரும், நமது க்ரந்தப்ரசுரங்களுக்கும் பெருமளவில் நிதி உதவி செய்துகொண்டு வந்துள்ளவரும், இந்த நூலின் இரண்டாவது பதிப்பிற்கும், மூன்றாவது பதிப்பிற்கும் நிதி உதவி செய்து உபகாரம் செய்துள்ள மைசூர் ''ஸ்ரீ முகுந்தப்ரிய'' விருது பெற்ற ஸ்ரீ கே. கோவிந்தராஜ் அவர்களுக்கு நாம் மிக மிக நன்றியுள்ளவராக இருக்கிறோம். ஸ்ரீ குருராஜர் அவருக்கு ஸகல சன்மங்களங்களை அளித்துக் கருணை செய்யப் பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீராஜா S. குருராஜாசார்யர்

18

|| ஸ்ரீ குரு ராஜோ விஜயதே ||

# || ஸ்ரீ அப்பணாசார்யர் இயற்றிய ஸ்ரீராகவேந்தர மங்களாஷ்டகம் ||

ஸ்ரீ மத்ராம பதார விந்த மதுப: ஸ்ரீமத்வ வம்சாப: |
ஸச்சிஷ்யோடுகணோடுப: ச்ரிதஜகத்கீர்வாண ஸத்பாதப: ||
அத்யர்த்தம் மனஸா க்ருதாச்யுதஜப: பாபாந்தகாராதப: |
ஸ்ரீ மத்ஸத்குரு ராகவேந்த்ரயதிராட் குர்யாத் த்ருவம்:
மங்களம் || 1 ||

தாத்பர்யம்:— வேதத்தினால் அறியப்படுகின்ற மஹிமாமண்டிதனும், காந்தியுடன் விளங்குபவனும், ஐச்வர்யங்களுடன் கூடியவனுமான மூலராமச்சந்திர ஸ்வாமியின் பாத கமலங்களில் தேன்வண்டுகளைப் போலிருப்பவரும், வேதப்ரதிபாத்ய மஹிமையுடையவரும், காந்தியுடன் விளங்குகின்றவரும், ஐச்வர்யத்துடன் கூடியவரும், மத்வாசார்யரின் பரமஹம்ஸ வம்சத்திற்கு அதிபதிகளான ஸச்சிஷ்யர்களென்னும் நக்ஷத்ர சமூகத்திற்குச் சந்திரரான, தன்னைச் சரணடைந்த ஜகத்திற்கு (பக்த சமூகத்திற்கு) கல்பவ்ருக்ஷரான. அத்யர்த்த ப்ரஸாதத்திற்காக மனதில் எப்பொழுதும் ஸ்ரீமந்நாராயணனின் (அச்சுதன்) ஜபத்தைசெய்து கொண்டிருக்கும், பாவமென்னும் இருளுக்குச் சூரியனான, காந்தியுடன் கூடியவரும் ஸாத்விக சம்பத்து நிறைந்தவரும், ஸத்குருகளுமான ராகவேந்திர யதிச்ரேஷ்டர் நமக்கு எப்பொழுதும் மங்களம் உண்டாகச் செய்யட்டும் என்பது அபிப்ராயம்.

கர்மந்தீந்த்ர ஸுதீந்த்ர ஸத்குரு கராம்போஜோத்பவ
ஸந்ததம் |
ப்ராஜ்யத்யான வசீக்ருதாகில ஜகத்வாஸ்தவ்ய
லக்ஷ்மீதவ: ||
ஸச்சாஸ்த்ராதி விதூஷகாகில ம்ருஷாவாதிப கண்டீரவ: |
ஸ்ரீமத்ஸத்குரு ராகவேந்த்ர யதிராட் குர்யாத் த்ருவம்
மங்களம் || 2 ||

தாத்பர்யம் : பரமஹம்ஸருக்குப் பிரபுகளான ஸ்ரீஸுதீந்திர தீர்த்த ஸத்குருகளின் கரகமல ஸஞ்ஜாதரான (கரகமலங்களினால் ஜனித்த) அதாவது சிஷ்யரான, எப்பொழுதும் மிகமிக த்யானத்தினால், ஸகல ஜகத்தினிலும் வியாபித்துள்ள லக்ஷ்மீபதியான ஸ்ரீமந் நாராயணனை வசப் படுத்திக் கொண்டுள்ள, ஸ்ரீஹரி ஸர்வோத்தமத்வம், பஞ்சபேதம், தாரதம்யம் முதலானவைகளைத் தெரிவிக்கும் தத்வவாத மதத்தை (ஸத் சாஸ்திரத்தை) விசேஷமாகத் தூஷிக்கும் ஸகல மாயாவதிகளென்னும் யானைகளுக்குச் சிம்மத்தைப் போலிருப்பவரும், காந்தியுடன் விளங்கு பவரும் ஐச்வர்யம் நிறைந்தவரும், ஸத்குருகளுமான ராகவேந்திர யதிச்ரேஷ்டர் நமக்கு சாச்வதமான மங்களத்தைச் செய்யட்டும் என்பது கருத்து.

ஸாலங்காரக காவ்ய நாடக கலாகாணாத பாதஞ்ஜல |
த்ரையர்த்த ஸ்ம்ருதி ஜைமினீய கவிதா ஸங்கீத பாரங்கத: ||
விப்ரக்ஷத்ர விடங்க்ரிஜாத முகராநேக ப்ரஜாஸேவித: |
ஸ்ரீமத் ஸத்குரு ராகவேந்திரயதிராட் குர்யாத் த்ருவம்
மங்களம் || 3 ||

தாத்பர்யம் : அலங்காரத்துடன் இயற்றப்பட்ட காவியம், நாடகம், விதவிதமான கலைகள், ந்யாய சாஸ்த்ரம், வ்யாகரண சாஸ்த்ரம் த்ரயீ, என்று ப்ரஸித்த மான ரிக், யஜுர், ஸாமவேதம் முதலியவைகளின் உண்மை யான கருத்து, அதாவது வேதத்ரயங்கள் மற்றும் அவைகளை அனுஸரித்து ஸ்ம்ருதிகள், பூர்வ மீமாம்ஸா, சாஸ்த்ரம், கவிதை, ஸங்கீதம் முதலியவைகளில் பாரங்கதரான அனைத்து ப்ரஜைகளினால் சேவிக்கப்படுபவருமான, காந்தி நிறைந்த வரும் ஐச்வர்யம் நிறைந்தவருமான ஸத் குருகளுமான ஸ்ரீ ராகவேந்திர யதீந்திரர் நமக்குச் சாசுவதமான மங்களங் களை வழங்கியருளட்டும் என்பது தாத்பர்யம்.

ரங்கோத்துங்க தரங்கமங்களகர ஸ்ரீதுங்கபத்ரா தடே |
ப்ரத்யஸ்த த்விஜ புங்க வாலயலஸன் மந்த்ராலயா
க்யேபுரே ||
நவ்யேந்த்ரோ பல நீலபவ்யகர ஸத்வ்ருந்தாவனாந்
தர்கத: |
ஸ்ரீமத் ஸத்குரு ராகவேந்த்ர யதிராட் குர்யாத் த்ருவம்
மங்களம் || 4 ||

தாத்பர்யம்: வண்ணவண்ணமான அலைகளுடன் சோபிக்கும் மங்களகரமான காந்தியுடன்கூடிய துங்கபத்திரை நதியின் கரையிலமைந்துள்ள பிராம்மணர்களின் வீடுகளினால் சோபிக்கும் மந்த்ராலயக்ஷேத்ரமென்னும் புரத்தில் புதுமையான இந்த்ர நீலமணியைப் போல உயர்ந்த ச்ரேஷ்ட ப்ருந்தாவனத்தில் உள்ளிருந்து கொண்டுக் காணுகின்ற ஒளிமயமான, ஐச்வர்யம் நிறைந்துள்ளவரும், உத்தம குருகளுமான ஸ்ரீராகவேந்திர யதிபுங்கவர் நமக்குச் சாஸ்வதமான மங்களங்களை உண்டாக்கட்டும் என்பது அபிப்ராயம். |

வித்வத்ராஜஸிர: கிரீட கசிதானர்க்யோருரத்ன ப்ரபா |
ராகாகௌகஹ பாதுக த்வயசர: பத்மாக்ஷமாலாதர: ||
பாஸ்வத் தண்ட கமண்டலூஜ்வலகர:ரக்தாம்பராடம்பர: |
ஸ்ரீமத்ஸத் குரு ராகவேந்த்ர யதிராட் குர்யாத் த்ருவம்
மங்களம் || 5 ||

தாத்பர்யம்: பண்டிதோத்தமரும் ராஜாதிராஜர்களின் சிரஸில் சோபிக்கின்ற கிரீடங்களில் பதித்துள்ள அமூல்யமான (விலைமதிக்கவொண்ணாத) உத்தமமான ரத்தினங்களின் சிவப்பு ஒளியினால் தெரிவிக்கப்பட்ட ராக-த்வேஷங்களென்னும் (கோபம்-வெறுப்பு) முதலிய பாப சமூகங்களைப் பரிகாரம் செய்யும் சக்தி வாய்ந்த பாதுகைகளை மிதித்துச் சஞ்சரிக்கும் கமலாக்ஷமாலைகளை அணிந்தவரும், ஒளிவீசுகின்ற தண்டம் மற்றும் கமண்டலங்களுடன் காணப்படும் கைகளுடன் கூடியவராய், காஷாய வஸ்திரத்தினால் அலங்கரிக்கப்பட்டுள்ள காந்தியுடன் கூடியவம், ஐச்வர்யம் நிறைந்தவருமான ச்ரேஷ்ட குருகளுமான ராகவேந்திர

யதிஸார்வபௌமர் நமக்கு சாச்வதமான மங்களங்களை அருளட்டும்.

யத்வ்ருந்தாவன ஸப்ரதக்ஷிண நமஸ்காராபிஷேகஸ்துதி |
த்யானாராதன ம்ருத்விலேபன முகானேகோபசாரான்
ஸதா ||
காரங்காரமபி ப்ரயாந்தி சதுரோ லோகா: புமர்த்தான்
ஸதா ||
ஸ்ரீமத்ஸத்குரு ராகவேந்திர யதிராட் குர்யாத் த்ருவம்
மங்களம் || 6 ||

தாத்பர்யம் :—

எந்த குருகளின் ப்ருந்தாவனத்திற்கும் ப்ரதக்ஷிணையுடன் நமஸ்காரம் செய்வது, பஞ்சாம்ருதம் முதலிய அபிஷேகம், ஸ்தோத்ர படனம், த்யானம், பூஜை, ப்ருந்தாவனத்திலுள்ள ம்ருத்திகையை தேஹத்திற்குப் பூசிக்கொள்வது முதலான அநேக பூஜோபசாரங்களை எப்பொழுதும் செய்கின்ற எல்லோரும் ஸகல புருஷார்த்தங்களை அடைகிறார்களோ அப்பேர்ப்பட்ட காந்தியுடன் விளங்கும், ஐச்வர்யத்துடன் கூடியவரும், ஸத்குருகளுமான ஸ்ரீராகவேந்திர குருச்ரேஷ்டர் நமக்கு எப்பொழுதும் சாச்வதமான மங்களங்களை அருளட்டும்.

வேதவ்யாஸ முனீச மத்வயதிராட் டீகார்ய வாக்யாம்
ருதம் |
க்ஞாத்வாத்வைதமதம் ஹலாஹல சமம் த்யக்த்வா
சமாக்யாப்தயே ||
ஸங்க்யாவத்ஸுகதாம் தசோபநிஷதாம் வ்யாக்யான்
ஸமாக்யான் முதா |
ஸ்ரீமத் ஸத்குரு ராகவேந்த்ர யதிராட் குர்யாத் த்ருவம்
மங்களம் || 7 ||

தாத்பர்யம் :—

ஸ்ரீவேதவ்யாஸ தேவரு (முனிச்ரேஷ்டர்), யதிவர்யரான ஸ்ரீமத்வாசார்யர், ஸ்ரீஜயதீர்த்தர் முதலான மஹான்களின் வசனாம்ருதத்தை அறிந்து, ஸமாக்யாரூப ப்ராமாணியத்திற்காக வேண்டி பண்டிதர்களுக்குச் சுகமளிக்கும்.

தசோபனிஷத்துகளுக்குச் சந்தோஷத்துடன் வ்யாக்யானம் செய்துள்ள காந்தியுடன் கூடிய வரும், ஐச்வர்யத்துடன் கூடியவரும், உத்தம குருகளுமான ஸ்ரீ ராகவேந்திர யதிபுங்கவர் நமக்கு சாச்வதமான மங்களங்களை அருளட்டும்.

சாச்வத சுகம்பெற வேண்டுமானால் பகவத் ப்ரஸாதம் முக்கியம். அது அபரோக்ஷ க்ஞானிகளினால் முடியும். அபரோக்ஷக் ஞானமாக வேண்டுமானால் ஸத்-சாஸ்திரங் களின் அத்யயனம், ச்ரவணம், மனனம், நிதித்யாஸனங்களி னால், பகவத் பக்தியினால் மாத்ரம் முடியும். ஆகையால் ஸத்-சாஸ்திர அத்யயனம் மிகமுக்யம். அப்பேர்ப்பட்ட ஸத்-சாஸ்திரம் அதாவது ஸ்ரீ ப்ரம்ம மீமாம்ஸா சாஸ்திரம். அதை இயற்றியவர் ஸ்ரீ வேதவ்யாஸ பகவான். அதற்கு ப்ரம்ம ஸூத்ரங்களுக்கு ஸ்ரீ பாதராயணருக்குச் சம்மதமான முறையில் பாஷ்யத்தை எழுதியவர் ஸ்ரீமன்மத்வாசார்யர். அதற்கு வ்யாக்யானம் (டீகா) எழுதியவர் ஜயதீர்த்தர். அவர் வ்யாக்யானம் எழுதி தத்வக்ஞான அத்யயனத்திற்கு உதவிசெய்தவர். மேற்கண்ட ஸூத்ரகாரர், பாஷ்யகாரர், டீகாகாரரென்னும் மூன்று மஹான்களின் வசனாம்ருதத்தை நன்றாகப்புரிந்துகொண்டு அவர்கள் போதித்த ஸத்-க்ஞானத் திற்கு ஸமாக்யாரூபமாக ஸூத்ரம்-பாஷ்யம் — டீகாகளுக்கு "டிப்பணியை" பண்டிதருக்குச் சுகமாய் (அனுகூலமாய்) உபநிஷத்தின் அர்த்தங்களைத் தெரிந்து கொள்வதற்காக தசோப நிஷத்துகளுக்கு (பத்து உபநிஷத்துகளுக்கு) (கண்டார்த்தம்) என்னும் டிப்பணிகளை ஆனந்தத்தினால் இயற்றிய ஸ்ரீ குரு ராகவேந்த்ர குரு ஸார்வபௌமர் நமக்கு சாச்வதமான மங்களத்தை உண்டாக்கட்டுமென்று கவிகள் விரும்புகிறார்.

ஸ்ரீ மத்வைஷ்ணவலோகஜாலககுரு: ஸ்ரீ மத்பரிவ்ராட் பகு: |
சாஸ்த்ர தேவகுரு: ச்ரிதாமரதரு : ப்ரத்யூஹ கோத்ரவரு: |
சேதோதீதாசரு: ததாஜிதவரு:ஸத்ஸௌக்யஸம்பத்கரு: |
ஸ்ரீமத் ஸத்குரு ராகவேந்த்ர யதிராட் குர்யாத் த்ருவம்
மங்களம் ‖ 8 ‖

தாத்பர்யம் :— காந்தியுடன் கூடியவரான, ஸாத்விக ஸம்பத்தினால் நிறைந்த வைஷ்ணவ ஸஜ்ஜனர்களின் சமூகத்திற்கு குருகளான வேத ப்ரதிபாத்ய பரமஹம்ஸ குல சக்ரவர்த்திகளான, சாஸ்த்ர விஷயத்தில் தேவ குருகளான ப்ருஹஸ்பத்யாசார்யரைப் போலுள்ள, சரணாகத பக்த ஜனங்களுக்கு தேவவ்ருக்ஷமான, விக்னங்கள் (இடையூறுகள்) என்னும் மலைகளுக்கு இந்திரனின் வஜ்ராயுதத்தைப் போலுள்ள மனதிற்கு அதீதமான அதாவது காமத்தை வென்றுள்ள மற்றும் ப்ருஹஸ்பத்யாசார்யரை வென்றுள்ள உண்மையானதும் சரியானதுமான சுகம் மற்றும் ஸம்பத்து களை கருணை கூர்ந்து அளிக்கும் காந்தியுடன் கூடியவரும் ஐச்வர்யத்துடன் கூடியவருமான ஸத்குருகளுமான ராக வேந்த்ர யதி ஸார்வபௌமர் நமக்கு சாச்வதமான ஸன்மங்களங்களை அருளட்டும்.

யஸ்ஸந்த்யாஸ்வநிசம் குரோர்வ்ரதிபதே : ஸன்
மங்களஸ்யாஷ்டகம் |
ஸத்ய : பாபஹரம் த்வஸேவி விதுஷாம் பக்த்யைவ
பாபாஷிதம் ||
பக்த்யா வக்தி ஸுஸம்பதம் சுபபதம் தீர்க்காயு
ராரோக்யகம் |
கீர்த்திம் புத்ரகளத்ர பாந்தவ ஸுஹ்ருன்மூர்த்தி :
ப்ரயாதி த்ருவம் || 9 ||

தாத்பர்யம் :

ஒவ்வொரு நாளும் மூன்று வேளைகளிலும் பக்தியுடன் சொல்லப்பட்ட ஆராதக பக்தரின், பண்டிதரின் பாபங்களை அந்த நொடியிலேயே நீக்கும், யதிச்ரேஷ்டரான ஸ்ரீ ராக வேந்த்ர குருகளின் இந்த யதார்த்தமான, உசிதமான மங்களாஷ்டகத்தை யார் பக்தியுடன் பாராயணம் செய் வார்களோ அப்படிப்பட்டவர் ஸாத்விக சம்பத்து, சுபஸ்தான (பதவி), தீர்க்காயுள், ஆரோக்ய பாக்யம், கீர்த்திகளையும், பத்னி, புத்திரர்கள், பாந்தவர்கள் மற்றும் மித்திரர்களை அடைந்து சுகம் பெறுவர் என்று கருத்து.

ஸ்ரீ ராகவேந்திர மங்களாஷ்டகம் முற்றிற்று

"ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து"

ஸ்ரீ ராகவேந்திர ஸ்தோத்திரமும் மங்களாஷ்டகமும் வாசகர்களுக்குப் பாராயணம் செய்வதற்கு அனுகூலமாகும். ஸ்தோத்திரத்தின் மஹிமை, பலன்கள் ஸ்வாமிகள் சரித்திரத்திலும் ஸ்தோத்திரத்தின் அர்த்தத்தின் மூலம் தெரிந்து கொண்டு ஸ்ரீ ராகவேந்திர ப்ரபுவ்வை தாங்களே கதி என்று பயபக்தியுடன் ஜபித்தால் கண்டிப்பாக அவர் அருள் கிடைக்கும். எத்தனையோ பேர்களுக்கு அனுக்ரஹமாகி யுள்ளது, ஆகிக்கொண்டிருக்கிறது. அவர் அதற்காகவே ப்ருந்தாவனத்தில் தன் யோக சக்தியினால் சரீரத்துடன் இருந்து கொண்டு பக்தர்களை ரக்ஷிக்கிறேன் என்று சொல்லி அருளி இருக்கிறார். அவர் சரித்திரத்தைப் படித்தால் அவர் இவ்வாறு சொல்லியதைக் காணலாம்.

இத்துடன் ராகவேந்திர ஸ்வாமிகளின் கன்னட சுப்ர பாதமும் அனைவரும் தமிழ் எழுத்துக்களில் எழுதப் பட்டுள்ளன. கன்னடம் பேசும் அனைவரும் அதைப்படித்து ஆனந்திக்கலாம். இந்த சுப்ரபாதத்தில் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகளின் சரித்திரம் முழுவதுமே சுருக்கமாக வந்துள்ளது. கவிஞர் வெகு அழகாக இதை இயற்றிப் பேருபகாரம் செய்துள்ளார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆசிரியன்

# கன்னட ஸ்ரீ ராகவேந்த்ர சுப்ரபாதம்

பூஜ்யாய ராகவேந்த்ராய ஸத்யதர்ம ரதாயச |
பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே ||

துஷ்டவாதிகளெம்ப மத்தகலெய நிளமணிகெ |
சிஷ்ட வைஷ்ணவ குமுதவரளிஸுவ சந்த்ரமகெ
ச்ரேஷ்டயதி எனிஸி ராகவேந்த்ர குருவர்யரிகெ
நிஷ்டெயிந்த நமிபெ அதி தயாசீலரிகெ ||

---

ச்ருங்கார தரவாத்ய மேளகளு மொளகுதிவே |
ஸங்கீத நர்த்தனதி துதிஸுதிதே தாஸகண
ஸாங்கவேதார்த்தகளு படிஸுவரு பண்டிதரு,
மங்களவு கருணிஸலு எத்தேளு குருராஜ || 1 ||

ஸ்ரீமத்வமத ஜலதி பூர்ணேந்து எத்தேளு
ராமபாதாஸக்த யோகீந்த்ர எத்தேளு |
கனமஹிம எத்தேளு கவிவினுத எத்தேளு
முனிகுலலோத்தம ராகவேந்த்ர எத்தேளு || 2 ||

அம்பரதி ஹொங்கிரண மூடுதிஹனெத்தேளு
கம்பதிம் பந்தவன ஸேவெகெத்தேளு |
அங்கிவினி பருதிப்ப பகுதவ்ருந்தவ பொரெது
மங்களவு கருணிஸலு எத்தேளு குருவே | || 3 ||

சுப்ரபாதவு வேத சாஸ்த்ராப்தி சந்த்ர
சுப்ரபாதவு மத்வராஸ்தான தேவேந்த்ர |
சுப்ரபாதவு தீந்த்ர ஸகல ஸத்குண ஸாந்த்ர
சுப்ரபாதவு நினகெ ஸ்ரீராகவேந்த்ர || 4 ||

பாலநேத்ரகெ பந்த விஷபயவ தப்பிஸிதெ
நால்மோகன கரகமல ஸம்பூஜ்யநாதெ |
சீல கோவித மத்வராஸ்தான பதி ஸேவ்ய
மூலராமனே ! நினகெ மங்களத பெளகாகலி || 5 ||

தசருபஹரிலஸித ரஜத பீடதி நின்ன
வஸூதீசனுத மத்வ தா ரசிஸி பூஜிஸித |
தசமதிய ஸிஷ்யததிகதி விஜய நீடுதிஹ
ஸ்ரீச திக்விஜயராம! மங்களத பௌகாகலி ‖ ‖ 6 ‖

ஸூஜன வந்தித நம்ம மத்வமுனி க்ருதிகளிகெ
விஜயவியுவ திவ்ய டீகெ ரசிஸித நம்ம |
ஸ்ரீஜயார்யர கரதி அர்ச்சனெய கைகொண்ட
அஜவினுத ஜயராம! மங்களத பௌகாகலி ‖ ‖ 7 ‖

அந்தரங்கதி ஒலிது மைதோர்த நின்ன நா
மந்த்ராலயாதீச ரசிஸி ஸம்பூஜிஸித |
மந்தான தாம கர ஸந்தான கிருஷ்ணனே
ஸந்தஸவ கொடலமகெ, மங்களத பௌகாகலி ‖ 8 ‖

வெங்கடாசலதொளகெ கோபம்ம திம்மணரு.
பங்கஜாக்ஷன ஸேவே மாடி ஒலிஸூத ஜவதி |
வெங்கடேசன வரதி அவதரிஸிதாசார்ய |
வெங்கடாபித! நினகெ மங்களத பௌகாகலி ‖ 9 ‖

மரளினொளு ஓங்கார பரெது நிம்மபிதனு
தரள, இதனோம் எந்து படிஸி பரயெனலு |
ஸருவ குணபூர்ண ஹரி எம்புதே ரேகெயிந்
தரிவுதெந்தெந்த குரு! மங்களத பௌகாகலி ‖ 10 ‖

ஸூப்ரபாதவு நினகெ ஸ்ரீ ராகவேந்த்ர ‖
தேவகிரி கிருஷ்ண ஸாந்திபனி யோளரி தந்தே
பாவ நரஸிம்ஹரொளு ஸகல வித்யெ யனரிதெ |
ஆவகுலகுருவிந்த ஷட் சாஸ்த்ர கள கலிதெ
தேவ குரு ஸம! நினகெ மங்களத பௌகாகலி ‖ 11 ‖

ஓங்காரார்த்தவனு சிசுதனதி ஸாரி, சுப
ஸூக்தார்த்த வேதகள பாஷ்யகள ரசிஸி |
ஸகல சாஸ்த்ரகளர்த்த ஜக கித்த யதிவர்ய
முகுதி பத தோரய்ய, மங்களத பௌகாகலி ‖ 12 ‖

ஸங்கீதஸாஹித்ய ஸௌந்தர்ய குணகளிம்
கங்கொளிஸி. சாரதெய ப்ரதிருபளெனிஸிதா |
ஸங்காதி ஸரஸதிய கரபிடிது, லகுமீச
மகன படெதாசார்ய! மங்களத பௌகாகலி ॥ 13 ॥

ஸம்ஸாரதொளு அமித தாரித்ரய து:ககள
ஹிம்ஸேயாதரு இனிது சிந்திஸதே ஸந்தஸதி |
கம்ஸாரி இச்செயிந் தனுபவிஸி தாசார்ய
ஸம்ஸார பய ஹரிஸே, மங்களத பௌகாகலி ॥ 14 ॥

ராஜமன்னார்குடி ஸிரி க்ருஷ்ணனாலயதி
ஸொஜகதி சைவ ஸந்யாஸிகள கெலிது |
ராஜிஸிதே ஆ மஹா பாஷ்யார்ய பிருதினிந்
ஸ்ரீ ஜகதி யதி ராஜ! மங்களத பௌகாகலி ॥ 15 ॥

ரஞ்ஜிஸிதெ காகதாலிய வாக்யார்த்ததா
பஞ்ஜரதி பந்திஸிதெ வாதிகள முததி |
தஞ்ஜபுரதீச ரகுநாதநத கண்டு, பத
கஞ்ஜஸேவக நாத், மங்களத பௌகாகலி ॥ 16 ॥

ஸுப்ரபாதவு நினகெ ஸ்ரீ ராகவேந்த்ர ॥

ஹம்ஸமத த்ருடகொளிஸி க்ருதிகளனு ரசிஸி, நீ
ஹம்ஸனாகெனகெ ஆச்ரயவ நீடெனனு |
ஹம்ஸவாஹனரஸி யாக்ஞெயனு நிர்வஹிஸி
ஹம்ஸ பீடதி மெரெதே! மங்களத பௌகாகலி ॥ 17 ॥

ஸ்ரீஸுதீந்த்ரரு நினகெ யத்யாச்ரமவனித்து
ஹம்ஸவம்சத மத்வஸாம்ராஜ்ய தீசனே |
கோஷிஸலு ஸ்ரீராகவேந்த்ர நாமதி மெரெதே
விச்வகுரு! நினகிக மங்களத பௌகாகலி ॥ 18 ॥

விஜயராகவ நினகெ ரதுனமாலெய நீடெ
நீஜவதொளத னக்நி தேவகர்ப்பிஸி, மத்தெ
ராஜ து:கிஸே அக்நியிம் படெது தோரிஸுத
முஜகதி பெஸரெத்தெ, மங்களத பௌகாகலி ॥ 19 ॥

வெங்ஙுமினொரு ராஜனால்தானதொரு, வாத
மல்ல பைரவ பட்ட வீரபத்ரர ஜயிஸி ।
வல்லபன கரதிந்த ச்வேதச் சத்ரவ படெது
எல்லெம் துதிகொள்டெ மங்களத பெளகாகலி ॥ 20 ॥

விஜயபுர தாலி ஆதிக்ஷஹனு சரணாகெ
ராஜ்பகந்தொதகிர்த க்ஷாமவனு களெது ।
ஸ்ரீ ஜகத்குரு பிருது படெது ஸர்வர பொரெத
ஸஜ்ஜனோத் ஜீவகனே ! மங்களத பெளகாகலி ॥ 21 ॥

ஸுப்ரபாதவு நினகெ ஸ்ரீ ராகவேந்த்ர ॥

வேதாப நிஷதமல ஸூத்ர, பகவத்கீதெ
ஹார்த்ரகள போதிஸுவ வ்யாக்யேகள ரசிஸி ।
மோதமுனி வரபாஷ்ய ஜயமுனிய டீகெகள
மோததிம் விவரிஸிதெ, மங்களதபெளகாகலி ॥ 22 ॥

ராமக்ருஷ்ண சரித்ரெ நீ ரசிஸி ஸுகமுனிய
ஆ மஹாநிர்ணயவ ஸங்க்ரஹிஸி ஜனகித்தெ ।
காமாதிகள கெத்த பதிஸார்வ பௌமனே
ப்ரேமதிம் ஸலஹுப்ப, மங்களத பெளகாகலி ॥ 23 ॥

ஷட்தர்சனாசார்ய: வித்யே கதிராஜ நீ
தத்வஷ்ணவோத் பலகெ சாரதெய ஸுதாம்ச ।
அத்வைத கத்தலெகெ தினமணியு நீனய்யா ।
ஸாது ஜன ஸம்லேவ்ய, மங்களத பெளகாகலி ॥ 24 ॥

மரளு காடலி தருணி நீருதொரனில்லதெடெ
தரளம் ப்ரஸவிஸனு ப்ருத்ய சரணாகெ ।
தொரளு நீருணித்து தாயிமக்கள காய்தெ
கருணாப்தி குருராஜ! மங்களத பெளகாகலி ॥ 25 ॥

நிஜ தண்ட தாடனதி ஜலவ நிர்மிஸிதெ
த்விஜ னொர்வனிகெ மத்தெ ஜீவனவ தந்தித்தெ ।
நிஜஸதிய ப்ரேதத்வ களெது ஸத்கதி யித்தெ
பஜகஜன ஸாரதருவே! மங்களத பெளகாகலி ॥ 26 ॥

ஞுத பவரஸ தொளகெ பூத முஞுகலுளிகெ
க்பாத தேசாபி தா நிம்மடிகெ சரணாகி |
வீத சோகன மாடி ம்ருதி பீதி பரிஹரிஸி
சேதனவ கருணிஸிதெ, மங்களத பெளகாகலி ॥ 27 ॥

ஸிரஸங்கி தேசாபி வேதமந்த்ரவ ஜரிது
கொரட சிகுரிஸி தோரிரெந்தெனலு நகுமுகதி |
ஹருஷதிந்தொளகெயலு சிகுரிஸித மஹவீய
வரமந்த்ரஸித்த குரு! மங்களத பெளகாகலி ॥ 28 ॥

கனகதாஸரு ஹீனயோனி பொளகவதரிஸி
ஆனமிஸி பகுதியிம் ஸாஸுவெய தினகெயெ |
த்யானதித்தரிதவர யோக்யதெய கதிபித்தெ
தீனவத்ஸல! நினகெ மங்களத பெளகாகலி ॥ 29 ॥

தந்த்ரதிம் யவனேச மத்ய மாம்ஸவ முச்சி
மந்த்ரவேத்யகெ தன்ன உபஹாரவெந்தெனலு |
மந்த்ரஜலதிந்ததனு பலபுஷ்பகள கைது
மந்த்ராலயவ படெதெ, மங்களத பெளகாகலி ॥ 30 ॥
ஸுப்ரபாதவு நினகெ ஸ்ரீ ராகவேந்த்ர ॥

அந்தரிகெ கண்ணித்து மூகரிகெ பாயித்து
நொந்தவர ரோககள தயதிந்த பரிஹரிஸி |
கந்த, ஸுததி, பாக்ய, வித்யெ, புத்திகளன்னித்து
சந்ததிம் பொரெவ குரு! மங்களத பெளகாகலி ॥ 31 ॥

ஸந்தாப து:க தாரித்ர்ய ரோககளகளிஸி
ஸந்தான ஸம்பத்து, சாந்தி, ஸுக, மங்களவ |
ஸந்தோஷ வைபவகளித்து சரணர காய்வ
மந்த்ராலயாதிச! மங்களத பெளகாகலி ॥ 32 ॥

மனுகுலத ஹிதகாகி தரணியொளு அவதரிஸி
தீன தலிதர ஸலஹி பூஸுரர ரக்ஷிஸிதெ |
க்ஞானி-ஹீன-குலீன-படவ-பல்லிதரெனதே
முன்ன எல்லர பொரெவே, மங்களத பெளகாகலி ॥ 33 ॥

பத்மயோனிகெ நித்ய பூஜெகளி மாடுதலி
பத்மநாபன பாத பத்மகள பூஜிஸுவ |
பத்மஜன கிங்கரனே! சங்கு கர்ணாபிதனே
பத்மவதனனே! நினகெ மங்களத பௌளாகலி || 34 ||

மங்களப்ரத நாரஸிம்ஹ பக்தனே, தைத்ய—
பங்க பதுபங்களவ பாத லேவகனே |
ஸங்க ரக்ஷிதனே! க்ருஷ்ணராயனக பஞ்ஜகனே!
ராகவேந்த்ரனே! நினகெ மங்களத பௌளாகலி || 35 ||

பஞ்சபாணன கெலிது ஸஞ்சிதகளனு களெது
வாஞ்சிதகளீடாடி மஞ்சாலெயொளு நெலெஸி |
பஞ்சரூபிய ஹ்ருதய மஞ்சதொளு பஜிஸுதிஹ
அஞ்சே நாயக! நினகெ மங்களத பௌளாகலி || 36 ||
ஸுப்ரபாதவு நினகெ ஸ்ரீராகவேந்த்ர ||

ஹரிய ஸங்கல்பவனு அரிது ஸசரீரதிம் |
வர ப்ருந்த மந்திரவ லேரி, யோகத பலதி ||
சரணாகி பக்தவர எரடைது சத வருஷ
பொரெவ அபய வனித்தெ, மங்களத பௌளாகலி || 37 ||

துங்கபத்ரெய தடதி, மந்த்ராலயதி யக்ஞ-
ரங்கதொளு ப்ருந்த மந்திரதி நெலெ நிந்து |
ஸாங்க வேதைக ஸம்வேத்யனம் பஜிஸுதிஹ
ராகவேந்த்ரனே! நினகெ மங்களத பௌளாகலி || 38 ||

வரமந்த்ர ஸதனவனு மூலஸம்ஸ்தானவனு
பரிபரிய விததிந்த அபிவ்ருத்தி கொளிஸுத்த |
குருதின்ன கருணெயா கந்தரெம் பஸரெத்த
விபு ஸுயமீயதி ப்ரிய! மங்களத பௌளாகலி || 39 ||

ஹத்து மேலிப்பத்து மூறுவர்ஷகளதிக
பக்திபிம் லேவிஸித ஸுயமீந்த்ர நடெயிஸித |
ஸப்தராத் ரோத்ஸவவ ஜூமெயிம் வொகை கொண்ட
பக்தவத்ஸல! நினகெ மங்களத பௌளாகலி || 40 ||

ஸுஜநுத ஸுயமீந்த்ர ஸுகருஜ ஸஞ்ஜாத
ஸுஜயீந்த்ர பதி வர்ய நிம்மனாராநிஸுத |
நிஜகுருகளாக்ரெயிம் மந்த்ராலயவ பெளிஸி
பஜிஸெ கீர்த்தியன்னித்தெ, மங்களத பெளகாகலி ॥ 41 ॥

யோகிவர வம்ச ஸம்ஜாத, குருராஜனனு -
ராகதிம் ரசிஸிதீ ஸுப்ரபாதவ படிஸெ |
ராகவேந்த்ரரு போக பாக்ய ஸம்பதவித்து
மங்களவ கருணிபரு பகுத ஜனகெ ॥ 42 ॥

ஸுப்ரபாதவு வேத சாஸ்த்ராப்தி சந்த்ர
ஸுப்ரபாதவு மத்வ ராஸ்தான தேவேந்த்ர |
ஸுப்ரபாதவு தீந்த்ர! ஸகல ஸத்குண ஸாந்த்ர
ஸுப்ரபாதவு நினகெ ஸ்ரீராகவேந்த்ர ॥

ஸ்ரீ ராகவேந்த்ர குருவம்ச பூஷண - வித்யாதிராஜ

**ராஜா ஸ்ரீ குருராஜாசார்யார்**

இயற்றிய

கர்நாடக ஸ்ரீ ராகவேந்த்ர சுப்ரபாதம் முற்றிற்று.

" ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பணமஸ்து "

திரைப்பட நடிகர் திலகம்

**Dr. ராஜ்குமார்**

அவர்கள் இதைப் பாடியுள்ளார்

Cassette : MASTER RECORDING CO.
SANGEETHA, MADRAS



